சிவமயம்.

# தருக்கசங்கிரகம்,

## நியாயபோதினி,

## பதகிருத்தியம்,

## —அன்னம்பட்டீயம்,

## நீலகண்டீயம்.



இவை

யாழ்ப்பாணத்துத்

தெல்லிப்பழை

**வித்துவான் சிவாநந்தையரால்**

மொழிபெயர்த்தியற்றி




கோக்குவில்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.



சாதாரண௵ ஆவணி௴.

1910.

விலை. ரூபா - ௨.

☞ யாழ்ப்பாணத்து வலிகாமம் வடக்குப்பகுதி மணியகாரராயிருந்த ம-ா-ா-ஸ்ரீ. சின்னப்பாபிள்ளை அவர்களது புத்திரரும், றேட்கொம்மிற்றி லேககரு ளொருவரும் ஆகிய தெல்லிப்பழை ம-ா-ா-ஸ்ரீ. அப்புத்துரைப்பிள்ளை அவர்களது சகாயத்தால் இப்புத்தகம அச்சிடப்பட்டது. அவ்வுபகாரம் எம்மால்மாத்திரமன்றி இதனைக் கற்போர் யாவராலும் பாராட்டப்படத்தக்கது.

# விக்கிரேயபுத்தக விஞ்ஞாபனம்.

| | ரூபா. | அணா. |
|---|---|---|
| தருக்கசங்கிரகம்; நியாயபோதினி, பதகிருத்தியம், அன்னம்பட்டீயம், நீலகண்டீயம் ... ... | ௨ | 0 |
| அகப்பொருள்விளக்கவுரை... ... ... ... ... | ௧ | 0 |
| ஈச்சுரநிச்சயம் ... ... ... ... ... ... ... | ௧ | 0 |
| விதானமாலை (சோதிடம்) ... .. ... ... | ௧ | 0 |
| சரசோதிமாலை ,, ... ... ... ... | 0 | ௧௨ |
| சந்தானதீபிகை ,, ... ... ... ... | 0 | ௮ |
| செகராசசேகரமாலை ,, ... ... ... ... | 0 | ௪ |
| பரிதம் ... ,, ... ... ... ... | 0 | ௪ |
| நகுலமலைக்குறவஞ்சி ... ... ... ... ... | 0 | ௫ |
| ஆத்திசூடிவெண்பா (கதைகளோடு) ... ... | 0 | ௬ |
| நீதிநெறிவிளக்கவுரை ... ... ... ... | 0 | ௩ |
| நீதிவெண்பாவுரை ... ... ... ... ... | 0 | ௪ |
| சூடாமணி நிகண்டு ௧-வது சொற்பொருள்விளக்கவுரையுடன் ... ... ... ... ... | 0 | ௬ |
| சூடாமணி நிகண்டு ௨-வது சொற்பொருள்விளக்கவுரையுடன் ... ... ... ... ... | 0 | ௫ |
| உரிச்சொல் நிகண்டு ௧௨-தொகுதியும் உரையுடன் | 0 | ௩ |
| இலங்கைப் பூமிசாஸ்திரம்... ... ... ... ... | 0 | ௬ |
| நவக்கிரககவசம் ... ... ... ... ... | 0 | ௧ |
| சனிதுதி ... ... ... ... ... ... | 0 | ௯ |

# இனிப் பதிப்பிக்கப்படுவன.

புலியூர்ப்புராணம். (மொழிபெயர்ப்பு.)
தசகாரியம்.
ஞானாமிர்தவுரை.
சந்திராலோகவுரை. (மொழிபெயர்ப்பு.)
சிவஞானபத்ததி. (மொழிபெயர்ப்பு.)
சிவானுபூதி. (மொழிபெயர்ப்பு.)
விரதசூடாமணி. (மொழிபெயர்ப்பு.)
விபூதிமான்மியம்.
உருத்திராக்ஷமான்மியம்.
உவமானமஞ்சரி.
தண்டியலங்காரவுரை.
திருக்குறள் முதலதிகாரவிருத்தியுரை.
திருக்குறள் முதலதிகாரப்பதிற்றுப்பத்து.
கோயிலந்தாதி.

சென்னை புரசைபாக்கம் கந்தப்பமுதலிதெரு: ஸ்ரீ. சோமசுந்தரமுதலியாரிடத்திலும், ஒத்தவாடைத்தெரு: ஸ்ரீ. மு. செல்லப்பாபிள்ளையிடத்திலும், சிதம்பரம்: தேவாரபாடசாலை உபாத்தியாயர் ஸ்ரீ. நடராஜ ஓதுவாரிடத்திலும், திருநெல்வேலி: மேலச்செவ்வல் ஸ்ரீ. கவிராஜ காந்திமதிநாதபிள்ளையிடத்திலும், சேற்றூர்: ஸ்ரீ. சி. தெக்ஷிணாமூர்த்தி தேசிகரிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.

# முகவுரை.

பூமண்டலத்துள் எவ்வுயிர்க்கும் பெறுதற்கரியது மானுடசரீரம். கூன் குருடு செவிடு முதலிய குற்றங்களினீங்கி, குடிப்பிறப்பு கல்வி செல்வமுதலிய குணங்களோடு கூடப்பெறுதல் அதனினுமரிது.

அம்மானுடசரீரம் எடுத்தோர் பெறும்பயன் உண்மைநூல்களைக் கற்றுத்தெளிந்து பிறப்புப் பிணி மூப்பு இறப்பு இல்லாதவராகிய சிவபெருமானது திருவடிகளையடைந்து நிரதிசயவின்பமுறுத லொன்றேயாம். சொல்லும் பொருளுமெனப் பிரபஞ்ச மிருவகைப்படுதலின் நிரதிசயவின்பமெனப்படும் அப்பெரும்பேற்றினைத்தரும் அந்நூல்களும் சொல்லினையுணர்த்துவனவும் பொருளினையுணர்த்துவனவும் என இருவகைப்படும். அவற்றை யுணர்தற்குக் கருவியும் இலக்கணமுந் தருக்கமுமென இருவகைப்படும். இவ்விரண்டும் ஏனை நூல்களெல்லாவற்றினுஞ் சிறந்தனவாகலின் அவயவங்களுட் சிறந்த கண்போல மக்களுயிர்க்குச் சிறந்தனவெனச் சான்றோர் யாவரானும் பாராட்டப்படுவனவாயின. "எண்ணென்பவேனையெழுத்தென்பவிவ்

விரண்டுங், கண்ணென்பவாழுமுயிர்க்கு" எ-ம், "எண்ணுமெழுத்துங் கண்ணிவையாய்ந் திந்நாற்பயனைக், கண்ணுககாண்பார்நற்கதி" எ-ம், "எண்ணுமெழுத்துங்கண்ணெனத்தகும்" எ-ம் தெய்வப்புலமைத்திருவள்ளுவர் முதலியோராற் பாராட்டப்படுதலறிக.

இவற்றுள் எண்ணென்பதனைக் கணிதமெனங் கொள்வாருமுளராலோவெனின்:— உடனெண்ணப்பட்ட எழுத்தென்பதனை அக்கரமென உரைப்போர் எண்ணென்பதனைக் கணிதமெனவும்; இலக்கணமெனவுரைப்போர் தருக்கமெனவு முரைப்பர். எண்ணுதல் அலகிடுதல், நினைத்த லிரண்டற்கும் பெயராதலின் அலகிட்டறியுங் கணிதத்திற்கும் நினைத்தறியுந் தருக்கத்திற்கும் பெயராயிற்று. "காண்டலனுமானங்கருத்தருத்தாபத்தியிவை, யீண்டிசைத்தவெண்ணெனவேயெண்" எ-ம், "ஏரணங்காணென்பரெண்ணர்" எ-ம் வருவனவற்றால் எண்ணென்பது தருக்கநூற்குப் பெயராதல் வெளிப்படை. இவ்வாறன்றி எழுத்தென்பதற்கு இலக்கணமென வுரைத்து எண்ணென்பதற்குக் கணிதமென வுரைத்தலும், எண்ணென்பதற்குத் தருக்கமெனவுரைத்து எழுத்தென்பதற்கு அக்கரமெனவுரைத்தலும் போலியுரையேயாம். பரிமேலழகரும் "எண்ணென்பவேனையெழுத்தென்பவிவ்விரண்டுங், கண்ணென்பவாழுமுயிர்க்கு" என்னுந் திருக்குறளுள் எண்ணென்பதனைக் கணிதமெனவும் எழுத்தென்பதனை அக்கரமெனவும பொருள்கூறுவர்.

உலகத்துக் கண்ணில்லாதார் கோலால் வழிநடந்து தடுமாறுதலோடொக்கும், இவ்விரண்டுநூலுங் கல்லாதார் ஏனைநூல்கள் கற்கப்புகுந்து தடுமாறுதல். "இல்லான்கண்கோலால்வழியியங்கல்போலுமே, கல்லானூலாயுங்கருத்து" என்பர் பரமததிமிரபானுவுடையாரும். இவ்விரண்டு நூல்களுமின்றி ஏனை வைதிகநூல்களொன்றுமறியப்படா. இக்கருத்துப்பற்றியே சிவஞானசித்தியார்முதலிய நூலாசிரியர் சிலர் முன்னர் அளவை இயல்பெடுத்துணர்த்தி நூல்செய்யப்புகுவர்.

அத்தருக்கம் நியாயம் வைசேடிகமென இருவகைப்படும். அவற்றுள் நியாயம் கௌதமமுனிவரானும் வைசேடிகங் கணாதமுனிவரானுஞ் செய்யப்பட்டன.

நியாயநூலுள் திரவியம், குணம், கருமம், சாமானியம், சமவாயம், அபாவமெனப்படும் பதார்த்தங்கள் ஆறுமுரைக்கப்படும். வைசேடிகநூலுள் அவ்வாறுபதார்த்தங்களோடும் விசேடமென்னும் பதார்த்தமுங் கூட்டிப் பதார்த்தங்கள் ஏழென்று கூறப்படும். விசேடமென்னும் பதார்த்தங் கோடலானே அந்நூல் வைசேடிகமெனப்படுவதாயிற்று. இவ்விரண்டற்குமுரிய அந்தரங்கவேறுபாடு நீலகண்டீயத்துள் ௫௮-ம் ௫௯-ம் பக்கங்களுட் கூறப்பட்டுள்ளது.

அவ்விருநூல்களையும் நன்கு கற்றுணர்ந்த அன்னம்பட்டர் என்பவர் இற்றைக்குச் சற்றேறக்குறைய

# முகவுரை.

இருநூற்றைம்பது வருடங்களுக்கு முன் அவை விரிவுடைமையின் சிறுவர்க்குப் பயன்படும் பொருட்டு அவற்றைச் சுருக்கித் தருக்கசங்கிரகமெனப் பெயரிட்டு ஒருநூலும் அந்நூற் கருத்தை நன்குவிளக்கித் தருக்கசங்கிரகதீபிகையெனப் பெயரிட்டு ஒருரையுஞ் செய்தனர்.

விரிந்த நூல்களைக் கற்றுணரும் விருப்புடையோர் அவற்றைச் சுருங்க அறிந்துகொண்டு கற்றுணர்தலே முறையாகலின் அந்நூலும் உரையுமே தருக்கநூல் கற்கப் புகுவோர் யாவராலும் முன்னர்க் கற்றுணரப் படுவனவாயின. அவ்வுரை நூலாசிரியர்பெயரால் அன்னம்பட்டீயமென வழங்கப்படுகின்றது.

வடநாட்டினுந் தென்னாட்டினும் மாணாக்கருக்கு நூல்பயிற்றலே தொழிலாகக்கொண்ட சாஸ்திரிகள் பலரும் தருக்கநூல் கேட்கப்புகும் மாணாக்கருக்கு இந்நூல் உரை இரண்டனையுமே முன்னர்க் கற்பிப்பது பெருவழக்காயிற்று. அவ்விரண்டனுள் மூல மொழித்து ஏனை உரை சிறுவர் கற்றுணர்தற்கு அரியதெனவும் தத்தங் கருத்தோடு மாறுபட்ட கோட்பாடுடையதெனவுங்கொண்டு நூற்கு வேறுரைசெய்வாரும் உரைக்கு உரைசெய்வாருமாயினர்.

தருக்கசங்கிரகத்திற்கு, தருக்கசங்கிரகதீபிகையொழித்து நியாயபோதினி, நிருத்தி, சித்தாந்தசந்திரோத

யும், தருக்கசங்கிரகசந்திரிகை, பதகிருத்தியம், தருக்கசங்கிரகோபநியாசம் என ஆறுரைகளுள்ளன.

தருக்கசங்கிரகதீபிகைக்கு அநுமதீயம், நீலகண்டீயம், முகுந்தபட்டீயம், தீபிகாப்பிரகாசிகை, தீபிகாவியாக்கியானம் என ஐந்துரைகளுள்ளன. அவற்றுள் நீலகண்டீயத்திற்கு இராமருத்திரீயம், பாற்கரோதயை என இரண்டுரைகளுள்ளன.

வடமொழிக்கணன்றித் தருக்கநூல் தென்மொழிக்கணில்லை. முதலில் தருக்கநூலொன்றை தமிழில் மொழிபெயர்த்தவர் துறைமங்கலத்துச் (நல்லாற்றூர்) சிவப்பிரகாசசுவாமிகள். அவர் மொழிபெயர்த்தது தருக்கபரிபாஷை. அதன்பின்னர்த் திருவாவடுதுறை ஆதீனத்துச் சிவஞானசுவாமிகளால் தருக்கசங்கிரகமும் அன்னம்பட்டீயமுந் திராவிடமாபாடியத்திற்கு அங்கமாக மொழிபெயர்க்கப்பட்டன. அவ்விரண்டும் நுண்ணறிவுடையார்க்கன்றி ஏனையோர்க்குப் புலப்படா. தென்மொழியறிவோடு சிறிது வடமொழியறிவுமுடையார்க்கே தருக்கநூல் பயன்படுவதாம்.

அவ்வன்னம்பட்டீயத்திற்கு எழுதப்பட்ட உரைகள் சிவஞானசுவாமிகள் காலத்திற்குப் பிறபட்டவை. அநுமதீயம் நீலகண்டீயம் முதலிய உரைகளைக் கற்றுணர்ந்தார்க்குச் சிவஞானசுவாமிகளது மொழிபெயர்ப்பில் தருக்கநூற்கருத்தோடு மாறுபடுதல் பலவிடத்து

துக் காணப்படும். அத்தருக்கசங்கிரகம் அன்னம்பட்டீயமென்று மிரண்டனையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தோர் வடமொழியுணர்ச்சியு முடையாரன்றித் தென்மொழியுணர்ச்சிமாத்திரையேயுடையாருட் சிலர்தாமுமரியர். அக்குறைவுபாடுகண்டு அவ்வன்னம்பட்டீயத்திற்கு உரையாகிய நீலகண்டீயத்தினையும் தருக்கசங்கிரக மூலக்கருத்தினைச் சிறுவரெளிதிற் கற்றுணர்தற்குரியனவாகிய நியாயபோதினி பதகிருத்தியமென்னும் உரை இரண்டனையும் மொழிபெயர்த்தாம். நீலகண்டீயத்தோடு மாறுபடுமிடமெல்லாம் அன்னம்பட்டீயத்துட் பலவாறு மாற்றித் திருத்திப் புதுக்கப்பட்டன. சிவஞானசுவாமிகள் காலத்து வழங்கிய தருக்கசங்கிரகதீபிகை உரைப்பிரதி இக்காலத்து வழங்கும் பிரதிகளோடுமாறுபட்டுளது. எங்ஙனமாயினும் அவை வழுவென்பதற்கு ஐயமில்லை. பதகிருத்தியம், பதப்பிரயோசனம், சொற்பயனென்பன ஒருபொருட்கிளவி. நியாயபோதினி பதகிருத்தியம் என்னு மிரண்டனுள்ளும் உரையாசிரியர்கள் கொண்ட மூலபாடம் பலவாறு வேறுபட்டுளது. பதகிருத்தியத்துட் பாடபேதங்கள் பல ஆங்காங்குக் காட்டப்பட்டன.

ஒவ்வொருபக்கத்தி னடியினும் சிவஞானசுவாமிகளது மொழிபெயர்ப்பில் வரும வழுக்களை யெடுத்துக் காட்டி விளக்குதல் நன்றாயினும் இரண்டு பிரதிகளையும் ஒப்பவைத்து நோக்குவார்க்கு அவற்றானும்பயனின்மையின் இரண்டோரிடத்து மாத்திர மெடுத்துக்

காட்டி ஒழிந்தோம். சிவஞானசுவாமிகளது மொழி பெயர்ப்புத் தென்மொழி நயமொன்றே கருதி மொழி பெயர்க்கப்பட்டது.

நீலகண்டீயத்துள் உணர்தற்கரியனவற்றிற்கு ஒரு குறிப்புரையெழுதி அநுபந்தமாக இறுதியிற்சேர்க்குங் கருத்துடையேமாயினும் தருக்கசங்கிரகம் அன்னம்பட்டீயமென்னு மிரண்டனையும் நீலகண்டீயம் அநுமதீயம் என்னுமிரண்டுரைக் கருத்துமடங்கிய குறிப்புரையோடு தனியே அச்சிடுங் கருத்துடையேமாகலின் சில வடசொற்களுக்கு ஓர் அகராதிமட்டும் இப்புத்தகத்திறுதியிற்சேர்த்துள்ளேம். கைபிழைபாடாகப் பிரதியெழுதுவோரால் நேர்ந்த வழுக்கள் சிலவுள. அவற்றுட் பெரும்பாலன பிழை திருத்தத்துள் திருத்தப்பட்டன. நிற்க.

வேதாந்தநூல்கள் சித்தாந்தநூல்களொழித்து ஏனைத் தனித் தமிழ்நூல்களுள்ளே தருக்கநூலுள் வழங்குஞ் சொற்களும் விடயங்களும் பலவிடத்துந் தழுவி நடப்பது பரிமேலழகருரை யொன்றுமேயாம். வைசேடிகமதம், நியாயமதம், அளவைமுதலிய பலவும் அவ்வுரையுட் காணப்படும். அலங்காரநூலுள் காவிய லிங்கமெனவழங்கும் அலங்காரம், அநுமான அளவையினுறுப்பாய்த் தருக்கநூலுள் வழங்கும் இலிங்கத்தினீக்குதற்குப் பிறிதினியைபுநீக்கிய விசேடணங்

கொடுத்துக் காவியத்துள் வழங்கும் இலிங்கமென்னும் பொருள்படுமாறு இட்ட பெயராம்.

"காவியலிங்கமாவது பெறப்படுதற்குரித்தாகிய பொருளினைப் பெறப்படுமாறு செய்தல்" என்பது சங்கிராலோகம். அது சொற்பொருளை ஏதுவாகக்கொண்டு வருவது எனவும், வாக்கியப்பொருளை ஏதுவாகக்கொண்டு வருவது எனவும் இருவகைப்படும். இவ்வலங்காரம் நாயனார் திருக்குறளுட் பலவிடத்துங் காணப்படும். "உண்ணாமையுள்ள துயிர்நிலை யூனுண்ண - வண்ணாத்தல்செய்யாதளறு" என்பது முதலிய செய்யுட்கள் பலவும் காவியலிங்கமென்னும் அலங்காரமாம்.

திருக்கோவையாருள் "ஆழியொன்று" என்னுங் கவியுள் திரவியம் ஒன்பது என்பது கூறப்பட்டுளது. அக்கவி வருமாறு:—

**இரவுறுதுயரத்திற்கிரங்கியுரைத்தல்.**

ஆழியொன் றீரடியும்மிலன் பாகன் முக்கட்டில்லையோ
னூழியொன் றாதனநான்குமைம்பூதமுமாறொடுங்கு
மேழியன்றாழ்கடலும்மெண்டிசையுந் திரிந்திளைத்து
வாழியன்றோவருக்கன்பெருந்தேர்வந்துவைகுவதே. (கஙக)

அயிறருகண்ணியைப்-பயிறருமிரவினுட்
டாங்குவதரிதெனப்-பாங்கிபகர்ந்தது.

(இ-ள்) ஆழி ஒன்று - கால் ஒன்று—ஈரடியும் இலன்பாகன் - இரண்டடியு முடையவனல்லன் பாகன்,

இக்குறைவுபாட்டோடு—முக்கண் தில்லையோன் ஊழி ஒன்றுதன நான்கும் ஐம்பூதமும் - மூன்றாகண்ணையுடைய தில்லையோனது ஊழிக்காலத்து நிலைபெறுதொடுங்குவனவாகிய காலம் திக்கு ஆன்மா மனமென்னு நான்கினும் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்னு மைம்பூதங்களினும்—ஆறு ஒடுங்கும் ஏழு இயன்ற ஆழ்கடலும் எண்திசையும் திரிந்து இளைத்து அன்று - ஆறாகவொடுங்கும் ஏழாக இயன்ற ஆழ்ந்தகடலினும் எண்டிசையினுந் திரிந்திளைத்தன்று—அருக்கன் பெருந் தேர் வந்து வைகுவது - அருக்கனது பெருந் தேர்வந்து தங்குவது; அதனுலிவ்விரவினுள் இவளைத் தாங்குவதரிது. எ - று.

ஊழி அசைநிலை. ஊழி ஒன்று என்பது பின்னும், ஈரடியுமிலன்பாகன் என்பது முன்னும் பொருள் சிறப்ப நின்றன. ஊழி ஒன்றுதலும் ஈரடியும் இலன் பாகனுதலும் குறைவுபாடாத லினிதுவிளங்கப் பெருந் தேரென விசேடித்தார். திரவியம் ஒன்பதனையும நித்தியம் அநித்தியம் எனப் பகுத்துக் கூறுந் தருக்க நூலோர்மதத்தை மறுத்தற்குத் தில்லையோனூழி யொன்றுதன என்றார். சிறப்புடைமைபற்றிக் கடலுந் திசையும் வேறாகப் பிரித்துக் கூறப்பட்டன. இஃது எண்ணென்னுமலங்காரம்.

இனிப் பேராசிரியர் இவ்வாறு செவ்வனே யுரைக்கவறியாது, ஐம்பூதமும் ஆறொடுங்கும் என்பதனைத்

தில்லையோனுக்கு விசேடணமாக்கி நான்கும் என்பதற்கு நான்கியாமத்தின்கண்ணும் என நலிந்து பொருள்கொண்டு இடர்ப்படுவர். அவ்வுரை எண்வகைப் பொருள்கோளுள் ஒன்றினுமடங்காமையுந் தூராந்நுவயமாதலும் சிறப்பின்மையுமறிக.

பதகிருத்தியமும் நியாயபோதினியுங் கற்றூர்க்கு அன்னம்பட்டீயத்துள்ளும் நீலகண்டீயத்துள்ளும் அறிதற்கரியவாவன ஒன்றுமில்லை. அன்னம்பட்டீயத்துள்ளும் நீலகண்டீயத்துள்ளும் விரித்துரைக்கப்பட்டனவற்றுட் பெரும்பாலன நியாயபோதினியுள்ளும் பதகிருத்தியத்துள்ளும் சுருக்கி யுரைக்கப்பட்டன.

"குணநாடிக்குற்றமுநாடியவற்றுண்
மிகைநாடிமிக்ககொளல்."

"குற்றங்களைந்துகுறைபெய்துவாசித்தல்
கற்றறிந்தமாந்தர்கடன்."

# சூசிபத்திரம்.



தருக்கசங் கிரக மெனப்பெயர் புணைந்து
தந்தனன் றரணியோர் தமக்கே.

தருக்க சங்கிரக

மூலமும்,

தருக்கசங்கிரகதீபிகை

எனப்பெயரிய

அதனுரையும்,

நீலகண்டீயம்

எனப்பெயரிய

அவ்வுரையினுரையும்

முடிந்தன.

---

உ

சிவமயம்.

# தருக்கசங்கிரகம்

## மூலமும்,

## நியாயபோதினி

### எனப்பெயரிய அதனுரையும்.



### தற்சிறப்புப்பாயிரம்.



உலகம்புரக்குமுழுமுதலையுள்ளக்கோயிலுள்ளிருத்தி
யிலகுங்கருணைக்குருவழிபாடியற்றி யிளைஞர்க்கிருண்மட
ம்போய், விலகுந்தெளிவுள்ளத்தெளிதின்விரவும்பொரு
ட்டெழுத்தமிழாற், கலவுந்தருக்கசங்கிரகங் கலைஞருவப்
பக்கட்டுரைப்பாம்.

அருமறையாதிநூலறையுங்காட்சிய
ரிருவருமறிவுறுதெங்குநின்றவ
ரொருவர்தந்திருவடியுள்ளத்துண்ணிநீஇத்
திருவருணியாயபோதினிசெயப்படும்.

உலகம் என்றது. எடுத்துக்கொண்ட நூலிடையூறின்றி
னினிதுமுடிதற்பொருட்டுச் செய்யப்படும் வழிபடுகடவுள் வண
க்கமாகிய மங்கலம் மாணுக்கர்க்கறிவுறுத்தற்பொருட்டு நூன்
முகத்து யாத்துரைத்தவாறு.



## பதார்த்தப் பாகுபாடு.

**க. திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் எனப் பதார்த்தங்கள் ஏழு.**

திரவியம் எ-து. பதார்த்தங்களைப் பகுக்கின்றது. அவற்றுள் ஏழென்றது பதார்த்தத்தன்மை திரவியமுதலிய ஏழன்கண்ணுந் தனித்தனி வியாப்பியமாமென்னும் வியாத்தி பெறுதற்பொருட்டு. அற்றேல், ஆற்றல் எட்டாம் பதார்த்தமாதலுண்மையின் ஏழென்றல் எங்ஙனம், அங்ஙனமன்றே; தீயோடுகூடிய விறகுமுதலியன உள்ளவழியும் மணியினது சையோகமுள்ளவழி, அதன் வெம்மை தோன்றாது, மற்று அஃதில்வழி அதுதோன்றும், ஆதலின் மணிபுணர்ந்து நின்றவழி அவ்வாற்றலழியும், அது பிரிந்து நின்றவழி வெம்மை தோன்றுதற்கி யைபுடைத்தாகிய ஆற்றல் தோன்றுமென்பதுகொள்ளப்படும்; ஆதலால் ஆற்றல் ஏழன்மேற்பட்ட பதார்த்தமாமெனின்;— அது பொருந்தாது, மணி தடுத்து நிற்பதாதல்பற்றி அதனபாவங் காரணமாத லுடைமையாற்றானே ஆற்றல் கொள்ளப்படும்வழி, மணியினது புணர்ச்சி அதனழிவுபாட்டபாவத்திற்குக் காரணமெனவும், பிரிவு அதன்முன்னபாவத்திற்குக் காரணம் எனவும்படுதலின் அளவிறந்த ஆற்றல் கொள்ளுதல் நியாய நூற்றுணிபன்றாகலானென்பது. ஆதலின், ஏழென்றலே துணிபாமென்க.

**உ. அவற்றுள், திரவியம் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா, மனம் என ஒன்பது வகைத்து.**

பிருதிவி எ-து. திரவியங்களைப் பகுக்கின்றது. அற்றேல், இருள் பத்தாந்திரவியமாதலுண்மையின், ஒன்பதென்றல் எங்ஙனம், அஃதாமாறு:—இருள் கரிது, இயங்குகின்றது என்னுமுணர்ச்சியுண்மையின், கரிய உருவத்திற்கும் வினைக்கும் பற்றுக்கோடாகலான், அது திரவியமாதல் பெறப்பட்டது; வரையறுத்தோதிய திரவிய மொன்பதனுள்ளு மடங்குதலிற் பத்தாந் திரவியமாதல் செல்லாதென்பதும் பொருந்தாது; கரிய உருவமுடைமையின் ஆகாய முதலிய ஐந்தனுள்ளும் வாயுவின்கண்ணும் அடங்காது; இருள் நாற்றமுடையதன்மையிற் பிருதிவியினும் அடங்காது; தண்மைப்பரிசமும் வெம்மைப்பரிசமுமுடைமையின், நீரினுந் தேயுவினும் அடங்காது; ஆதலின் இருள் பத்தாந் திரவியமாதல் பெறப்பட்டதெனின்;—அது பொருந்தாது; தேயுவின் அபாவத்தாற்றானே யுண்டாகலிற் பத்தாந்திரவியமாதற்கட் பிரமாணம் இன்மையினென்க. விட்டுவிலகுதலின்மையிற் றேயுவே இருளின் அபாவத்தின் சொரூபமென்றலும் பொருந்தாது; தேயுவினபாவத்தின் சொரூபமென்புழி, யாவரானும் அநுபவத்தின்வைத்துணரப்படும் வெம்மைப்பரிசத்திற்குப்பற்றுக்கோடாகிய திரவியம் வேறெனக்கோடல் மிகையாமாதலால் வெம்மைப்பரிசமாகிய குணத்திற்குப்பற்றுக்கோடாதலுண்மையிற் றேயு திரவியமென்பது பெறப்பட்டது. இருட்கண், இருள் கருவடிவிற்று என்பது முதலிய உணர்ச்சி மயக்கத்தாற்றோன்றியதேயாம்; விளக்கு அவிந்தவழியே ஆண்டுத் தோன்றுதலின்.

**௩. குணம் உருவம், இரதம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், சிநேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு,**

முயற்சி, தன்மம், அதன்மம், வாசனை என இருபத்து நான்கு வகைத்து.

௪. கருமம் எழும்பல், வீழ்தல், வளைதல், நிமிர்தல், நடத்தல் என ஐவகைத்து.

௫. சாமானியம் பரமும் அபரமுமென இருவகைத்து.

௬. நித்தியப்பொருள்களிலிருப்பனவாகிய விசேடம எண்ணிறந்தனவேயாம்.

௭. மற்றுச் சமவாயம் ஒன்றுதானே.

௮. அபாவம் முன்னபாவமும், அழிவுபாட்டபாவமும், முழுதுமபாவமும், ஒன்றிென்றபாவமுமென நான்கு வகைத்து.

## க. திரவியம்.

**௯. அவற்றுள், பிருதிவி நாற்றமுடையது. அது நித்தியமும் அநித்தியமுமென இருவகைத்து. நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் நம்மனோர்க்குள்ளது. இந்திரியம் கிராணம்; நாற்றத்தைக்கவர்வது; நாசி நுனியில் இருப்பது. விடயம் மண் கல் முதலியன.**

நாற்றமுடையது எ-து நாற்றமுடைமை பிருதிவிக்கிலக்கணம். பிருதிவி இலக்கியம். பிருதிவித்தன்மை இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வது. இலக்கியம் எவ்வியல்பான்

வரைந்துகொள்ளப்பட்டதாம், அவ்வியல்பு இலக்கியத்தன்மை யை வரைந்துகொள்வதாம் எனவும், எவ்வியல்பு எதற்குவரைந்துகொள்வதாம், அஃது அவ்வியல்பான் வரைந்துகொள்ளப்பட்டதாமெனவும் அறிந்துகொள்க. அங்ஙனமே இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வது பிருதிவித்தன்மையேயெனின் இலக்கியத்தன்மை பிருதிவித் தன்மையான் வரைந்து கொள்ளப்பட்டதாமென்க. நாற்றத்தோடு ஒருங்கிருக்கும் பொருண்மையான் வியாபிக்கப்பட்ட சாதியுடைமை பிருதிவிக்கிலக்கணம். இம்முறைபற்றித் தண்மைப்பரிசமுடைமைமுதலிய இலக்கணங்களுள்வைத்து அப்புத்தன்மை முதலியவற்றிற்கு இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதாமியல்பு அறிந்துகொள்க.

௧0 அப்புவாவது தண்மைப்பரிசமுடையது. அது நித்தியமும், அநித்தியமும் என இருவகைத்து. நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் வருணலோகத்துள்ளது. இந்திரியம் இரசனம்; சுவையைக்கவர்வது; நாக்குநுனியிலிருப்பது. விடயம் யாறு கடல் முதலியன.

௧௧. தேயுவாவது வெம்மைப்பரிசமுடையது. அஃதும் நித்தியமும், அநித்தியமும் என இருவகைத்து. நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் ஆதித்தியலோகத்துள்ளது. இந்திரியம் சட்சு; உருவத்தைக் கவர்வது; கண்ணுறை கருமணியின் நுனியிலி

ருப்பது. விடயம் மண்ணிலுள்ளதும், விண்ணிலுள்ளதும், வயிற்றிலுள்ளதும், ஆகரத்திற்றோன்றுவதும் என்னும்வேறுபாட்டால் நான்குவகைத்து. மண்ணிலுள்ளது நெருப்பு முதலியன. விண்ணிலுள்ளது மின்னல் முதலியன; அவை நீரையே இந்தனமாகவுடையன. வயிற்றிலுள்ளது உண்ட உணவு பரிணமிப்படுதற் கேதுவாயிருப்பது. ஆகரத்திற்றோன்றுவது பொன் முதலியனவாம்.

கஉ. வாயுவாவது உருவமின்றிப் பரிசமுடையது. அது நித்தியமும், அநித்தியமுமென இருவகைத்து. நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் வாயுலோகத்துள்ளது. இந்திரியம் துவக்கு; பரிசத்தைக்கவர்வது; சரீரமெங்குமிருப்பது. விடயம் மரம் முதலியன அசைதற்கேதுவாயிருப்பது. சரீரத்தினகத்துச் சஞ்சரிக்கும் வாயுப் பிராணன் எனப்படும்; அஃதும் ஒன்றாயினும் உபாதி வேறுபாட்டாற் பிராணன் அபானன் முதலிய பெயர் பெறும்.

உருவமின்றி எ-து. இங்ஙனம் பிருதிவிமுதலிய மூன்றனையுந் தெரித்துணர்த்தி வாயுவைத்தெரித்துணர்த்துகின்றது. உருவமின்றிப் பரிசமுடைமை வாயுவுக்கிலக்கணம். இன்றியென்னுங் குறிப்புவினையெச்சத்தான் விசேடிக்கப்பட்ட பொருண்மையுடைமையின் உருவமின்மையான் விசேடிக்கப்பட்ட பரிசமுடைமை வாயுவுக்கிலக்கணமெனக்கொள்க. விசேடணமின்றிப் பரிசமுடைமைமாத்திரையேயிலக்கணமெனக் கூறிற் பிருதிவிமுதலிய மூன்றன்கண்ணும் அதிவியாத்தி வரு

னாகலின், அது நீக்குதற்பொருட்டு விசேடணமும், விசேடியமின்றி விசேடண மாத்திரையேயிலக்கணமெனக் கூறின், ஆகாயமுதலியவற்றின் அதிவியாத்திவருமாகலின், அது நீக்குதற்கு விசேடியமும் புணர்த்துரைக்கப்பட்டன. அதிவியாத்தியாவது இலக்கியமல்லாததன்கண்ணும் இலக்கணமுளதாதல். எங்ஙனம், ஆவிற்குக் கொம்புடைமை யிலக்கணமெனக் கொள்ளின், இலக்கியமெனக் கொள்ளப்பட்ட ஆவின்வேறாகிய எருமைமுதலியவற்றின்கண் அதிவியாத்தி வரும், அவற்றின்கண்ணுங் கொம்புடைமையறியப்படுதலினென்க. அவ்வியாத்தியாவது இலக்கணம் இலக்கியத்தின் ஏகதேசத்தினிலதாதல். இலக்கியத்தினேகதேசமாவது இலக்கியத்தன்மையை வரைந்துகோடற்குப்பற்றுக்கோடாகிய ஒருசாரிலக்கியங்கள்; அவற்றின்கண் இலக்கணம் இன்மை அவ்வியாத்தியென்றவாறு. எங்ஙனம், ஆவிற்குக் கரியவுருவமுடைமையிலக்கணமெனக்கொள்ளின், இலக்கியத்தன்மையைவரைந்துகோடற்குப்பற்றுக்கோடாகிய வெண்ணிறமுடைய ஆவின்கண் அவ்வியாத்தி வரும், ஆண்டுக் கரியவுருவமின்மையினென்க. அசம்பவமாவது இலக்கிய மாத்திரைக்கே யாங்காயினும் இலக்கணமின்மை, எங்ஙனம், ஆவிற்கு ஒருகுளம்புடைமை, ஆவின் பொதுமைக்கு இருகுளம்புண்மையான் ஒருகுளம்புடைமை யாங்காயினு மின்மையானென்க. அதிவியாத்தி அவ்வியாத்தி அசம்பவம் என்னும் மூன்றற்குந் தெளித்துரைக்கப்படும் இலக்கணங்களாமாறு:— அதிவியாத்தியாவது இலக்கியத்தன்மையை வரைந்து கொள்வதனால் வரைந்து கொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடையதன் வேறுபாட்டோடு ஒருநிலைக்களத்துளதாதல். மற்று அவ்வியாத்தியாவது இலக்கியத்தன்மையை வரைந்து கொள்வதனோடு ஒருநிலைக்களத்துளதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாதல். மற்று அசம்பவமாவது

இலக்கியத்தன்மையை வரைந்து கொள்வதன்கண் வியாபக மாகிய அபாவத்திற்குப் பிரதியோகியாதல்.

கரு. ஆகாயமாவது சத்தகுணமுடையது. அஃதும் ஒன்றாய், விபுவாய், நித்தியமாயுள்ளது.

சத்தகுணமுடையது எ-து. ஆகாயத்தினிலக்கணங் கூறு கின்றது. சத்தமென்றொழியாது குணம் என்றது ஆகாயத் தின்கட் சத்தமே விசேடகுணமென்பது விளக்குதற்பொரு ட்டு, சமவாயமாதல்பற்றிச் சத்தமுடைமைமாத்திரையே நன் குவிளக்குதலின், மற்று அதிவியாத்தி நீக்குதற்பொருட்டன் றென்க. அஃதும் ஒன்றாய் எ-து அனேகமாதற்கட் பிரமாண மின்மையானென்பது கருத்து. விபுவாய் எ-து மூர்த்தமுடை ப்பொருள் எல்லாவற்றினுஞ் சையோகமுடைத்தாந்தன்மை விபுவாந்தன்மை. மூர்த்தமுடைமையாவது வினையுடைமை. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, மனம் என்பன மூர்த்தமுடை ப்பொருள்கள். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என் னும் ஐந்தும் பூதமென்னுஞ் சொல்லாற் கூறப்படுவனவாம். பூதத்தன்மையாவது புறவிந்திரியத்தாற்கவரப்படும் விசேட குணமுடைமை.

கச. காலமாவது இறந்தது முதலிய வழக்கிற்கு ஏது வாயது. அஃதும் ஒன்றாய், விபுவாய், நித்தியமாயுள்ளது.

இறந்தது முதலிய எ-து. காலத்தின் இலக்கணங் கூறு கின்றது. வழக்குக்கேதுவாதன்மாத்திரையே இலக்கணமெ னக்கொள்ளிற் குடம் என்னும் வழக்கிற்கு ஏதுவாகிய குடமுதலியவற்றின் அதிவியாத்தி வருமாகலின், அது நீக்கு தற்பொருட்டு இறந்தது முதலியவென விசேடணம் புணர்த் துரைக்கப்பட்டது.

**௧௫. திக்காவது கிழக்கு முதலிய வழக்கிற்கு ஏது வாயது. அஃதும் ஒன்றாய், விபுவாய், நித்தியமாயுள்ளது.**

கிழக்கு முதலிய எ-து திக்கின் இலக்கணங் கூறுகின்றது. உதயமலையினணிமைக்கணுள்ள திக்கு யாது, அது கிழக்கு. அத்தமலையினணிமைக்கணுள்ள திக்கு யாது; அது மேற்கு. மேருவினணிமைக்கணுள்ள திக்கு யாது, அது வடக்கு. மேருவினிடையீடுபட்ட திக்கு யாது, அது தெற்கு.

**௧௬. ஆன்மாவாவது ஞானத்திற்கு இடமாயுள்ளது. அது பரமான்மாவும், சீவான்மாவும் என இருவகைத்து. அவற்றுள், பரமான்மா ஈசுரன், முற்றறிவன், ஒருவனே; மற்றுச்சீவான்மா சரீரந்தோறும வேறாய், விபுவாய், நித்தியமாயுள்ளது.**

ஞானத்திற்கு எ-து ஆன்மாவைத் தெரித்துணர்த்துகின்றது. இடம் என்றது சமவாயத்தால் ஞானத்திற்குப் பற்றுக்கோடாதல் என்பது பெறுதற்பொருட்டு.

**௧௭. மனமாவது சுகம் முதலிய அநுபவத்திற்குக் கருவியாகிய இந்திரியம். அஃதும் உயிர்தோறும் நியதமாயிருத்தலின் அநேகமாய், பரமாணுரூபமாய், நித்தியமாயுள்ளது.**

சுகம் எ-து. மனத்தைத் தெரித்துணர்த்துகின்றது. அநுபவமாவது நேரேகாண்டல். ஆகவே, சுகம் துக்கம் முதலியனவற்றை நேரேகாண்டற்குக் காரணமாய இந்திரியமாதல் மனத்திற்கு இலக்கணமாமென்க. இந்திரியமாதன் மாத்திரையே இலக்கணம் எனக் கூறிற் சட்சு முதலியவற்றின் அதி

வியாத்தி வருமாகலிற் சுகமுதலியவற்றை நேரே காண்டற்குக் காரணமாதல் என்னும் விசேடணமும் விசேடிய மாத்திரையே இலக்கணம் எனக் கூறின், ஆன்மாவின்கண் அதிவியாத்தி வருமாகலானும், ஆன்மா சுகமுதலியவற்றிற்குச் சமவாயிகாரணமாதலானும் இந்திரியமாதல் எனப்படும் விசேடணமும் புணர்த்துரைக்கப்பட்டன.

## உ. குணம்.

௧அ. உருவமாவது சட்சுமாத்திரையாற் கவரப்படுங் குணம். அஃதும் வெண்மை, கருமை, பொன்மை, செம்மை, பசுமை, புகைமை, சித்திரம் என்னும் வேறுபாட்டால் எழுவகைத்து. பிருதிவி அப்புத் தேயுக்களிலுள்ளது. அவற்றுள் பிருதிவிக்கண் எழுவகையுமுள்ளது. நீரில் விளங்கா வெண்மை; தேயுவில் விளக்கமாய வெண்மை.

சட்சுமாத்திரையால் எ-து. உருவத்திற்கு இலக்கணங்கூறுகின்றது. சட்சுமாத்திரையாற் கவரப்படுதலால் விசேடிக்கப்பட்ட குணமுடைமை உருவத்திற்கு இலக்கணம். விசேடிய மாத்திரையே இலக்கணமெனக் கூறப்பட்டவழிச் சுவை முதலியவற்றின் அதிவியாத்தி வருமாதலின் சட்சுமாத்திரத்தாற் கவரப்படுதல் என்னும் விசேடணமும், விசேடண மாத்திரையே இலக்கணமெனக்கொள்ளின், உருவத்தன்மைக்கண் அதிவியாத்தி வருமாகலின், எக்குணம் எவ்விந்திரியத்தாற் கவரப்படும், அக்குணத்தின்கண் உள்ளதாகிய சாதி அவ்விந்திரியத்தாற் கவரப்படுவது என்னும் நியமமுண்மையான், அது நீக்குதற்பொருட்டு விசேடியமும் புணர்த்துரைக்கப்பட்டன. சட்சுமாத்திரையாற் கவரப்படுதலாவது, ஏனை யிந்திரியங்களாற் கவரப்படாது சட்சுவாற் கவரப்படுதல். மாத்திரை யெ

ன்பது புணர்த்துரைக்கப்படாதவழிச் சங்கை முதலியவற்றி ன்கண்ணும் சட்சுவாற் கவரப்படுதலால் விசேடிக்கப்பட்ட குணமுண்மையின், சங்கை முதலிய பொதுக்குணங்களின் அதிவியாத்தி வருமாகலின் அது நீக்குதற்பொருட்டு மாத்தி ரையென்பது புணர்த்துரைக்கப்பட்டது. சங்கை முதலியவ ற்றிற்கு சட்சுவின்வேறாகிய துவக்கிந்திரியத்தாற் கவரப்படுதலுண்மையின் சட்சுமாத்திரையாற் கவரப்படுதலின்று. இந் திரியத்திற்குப் புலனாகாத குருத்துவமுதலியவற்றி னதிவியா த்தி நீக்குதற்கு சட்சுவாற் கவரப்படுதலெனப்பட்டது. ஈண் டிலக்கணத்துட் கவரப்படுதலாவது காட்சிக்கு விடயமாதலெ னவும், கவரப்படாமையாவது அதற்கு விடயமாகாமையெனவு மறிந்துகொள்க. ஆகவே, சட்சுவின்வேறாகியவிந்திரியங்களாற் றோன்றிய காட்சிக்கு விடயமாகாது சட்சுவாற்றோன்றியகாட் சிக்கு விடயமாதலென்பது இதனாற்போந்த பொருளாமென்க.

அற்றேல், ஒளிக்குங் குடத்திற்கு முள்ள சையோகத்தின் கட் சட்சுமாத்திரையாற் கவரப்படுங் குணமுண்மையின் உரு வத்தினிலக்கணத்திற்கு அதிவியாத்திவருமாலோவெனின்;— அற்றன்று; குணமென்பது விசேடகுணமென்னும் பொ ருட்டாதலின். விசேடகுணமாதலோடு கூடிய விலக்கணத்தி ற்கு, சங்கைமுதலியவற்றி னதிவியாத்தியின்மையின் மாத்தி ரையென்னுஞ் சொல் நின்று வற்றுமெனக் கூறற்க, நீர் மா த்திரைக்கே யியல்பாகவுளதாகிய திரவத்துவ முதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு அது புணர்த்துரைக்கப்பட்டதாக லின். அல்லதூஉம் சட்சுமாத்திரையாற் கவரப்படுஞ் சாதியு டைமையாகிய குணமுடைமை யிலக்கணமாகலின், ஒளிக்குங் குடத்திற்குமுளதாகிய சையோக முதலியவற்றி னதிவியாத் தியின்றென்க, சையோகத்தன்மையாகிய சாதிக்கு சட்சுமாத் திரையாற் கவரப்படுதலின்மையானும், குடத்திற்கும் படத்தி

றகுமுளதாகிய சையோகத்திற்கு துவக்கிந்திரியத்தாற் கவரப்படுதலுண்மையின், அதன்கண்ணதாகிய சாதிக்கும் துவக்கிந்திரியத்தாற் கவரப்படுதலுண்மையானும், எக்குணமெவ்விந்திரியத்தாற் கவரப்படும் அதன்கண்ணதாகிய சாதியும் அவ்விந்திரியத்தாற் கவரப்படுதலுடைமையானுமென்க. ஈண்டுச் சாதியோடுகூடிய விலக்கணத்தின்கட் குணமென்பது புணர்த்துரைக்கப்படாதவழி, சட்சுமாத்திரையாற்கவரப்படுஞ் சாதியுடையதாகிய பொன் முதலியவற்றி னதிவியாத்தி வருமாகலின், அது நீக்குதற்பொருட்டுக் குணமென்பது புணர்த்துரைக்கப்பட்டது. இவ்வாறு இரதமுதலியவற்றின் இலக்கணத்தின்கண் விசேடணம் புணர்த்துரைக்கப்படாதவழி இலக்கியத்தின்வேறாகிய குணமுதலியவற்றினதிவியாத்தியும் விசேடியம் புணர்த்துரைக்கப்படாதவழி இலக்கியமாத்திரைக்கணுள்ளனவாகிய இரதத்தன்மை கந்தத்தன்மை முதலியவற்றி னதிவியாத்தியும் வருமாகலின், விசேடண விசேடியங்கள் புணர்த்துரைக்கப்பட்டவாறறிக.

கக. இரதம் இரசனத்தினாற் கவரப்படுங்குணம். அஃது இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, கசப்பு, கைப்பு, துவர்ப்பு என்னும் வேறுபாட்டா லறுவகைத்து. மண்ணினு நீரினுமிருப்பது. மண்ணில் ஆறுவகையும், நீரில் இனிப்பொன்றுமே.

உ0. கந்தம் கிராணத்தினாற் கவரப்படுங்குணம். அஃது நறுநாற்றமுந், தீநாற்றமுமென விருவகைத்து. பிருதிவியின் மாத்திரமிருப்பது.

உக. பரிசந் துவக்கிந்திரியமாத்திரையாற் கவரப்படுங்குணம். அஃதும் தண்மை, வெம்மை, தண்மையும் வெ

ம்மையுமில்லது என்னும் வேறுபாட்டான் மூவகைத்து. பிருதிவி அப்புத் தேயு வாயுக்களிலிருப்பது. அவற்றுள் நீரிற்றண்மையும், தேயுவில் வெம்மையும், பிருதிவியினும் வாயுவினும் வெம்மையுந் தண்மையுமில்லாத பரிசமுமுள்ளன.

துவகிந்திரிய மாத்திரையால் எ-து பரிசத்தினிலக்கணங் கூறுகின்றது. ஈண்டும் மாத்திரையென்பது சங்கை முதலிய பொதுக்குணமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற் பொருட்டு. ஏனை விசேடணத்தின்பயன் முற்கூறிய முறைமை பற்றி யறிந்துகொள்க. கவரப்படுவது என்னுஞ் சொற்பொருளும் முன்னர்க் கூறப்பட்டவாறுபோலக் காட்சிக்கு விடயமாதலெனவே யறிந்துகொள்க.

உஉ. உருவம் முதலிய நான்கும் பிருதிவியிற் பாகத்தாற் றோன்றுவனவும், அநித்தியமுமாம். ஏனையவற்றிற் பாகத்தாற் றோன்றாதனவாய் நித்தியமு மநித்தியமுமாவனவாம். நித்தியப்பொருளேயடைந்தவை நித்தியமும், அநித்தியப்பொருளேயடைந்தவை அநித்தியமுமாம்.

உருவமுதலிய நான்கும் என்றதன் மெய்ப்பொருள் விளக்கம் வருமாறு:— பாகமாவது வேற்றுச்சாதிமையுடைய தேயுவின் சையோகம். அஃதாவது பலவகைச்சாதிமையுடைய வுருவங்களைத்தோற்றுவிக்கும் வேற்றுச்சாதிமையுடையதாகிய தேயுவின் சையோகமாமென்க. அதனே நோக்க இரதத்தைத் தோற்றுவிப்பதும் வேற்றுச்சாதிமையுடையதாம். இங்ஙனங் கந்தத்தைத்தோற்றுவிப்பதும் இம்முறைமைபற்றி வேற்றுச்சாதிமையுடையதேயாம். பரிசத்தைத் தோற்றுவிப்பதும் இம்முறைமைபற்றி அவ்வாறேயாம். இவ்வாற்றால் வேறுவேறாகிய

சாதிமையுடையனவாகிய பாகமெல்லாம் காரியத்தினிலக்க ண வேறுபாடுடைமையாற் கொள்ளப்படும். எங்ஙனம், வைக்கோற்றிரளுள் வைக்கப்பட்ட மாங்காய் முதலியவற்றுள் வெம்மையெனப்படும் வேற்றுச்சாதிமையுடைத்தாகிய தேயுவின் சையோகத்தால் முன்னுள்ள பச்சைநிறவுருவங் கெட்டு வேற்றுருவமாகிய பொன்னிறவுருவமுதலியன தோன்றும்; மற்றுச் சுவைமுதலியன தோன்றா, முன்னுள்ள புளிப்புச் சுவையே யனுபவத்தாலறியக் கிடத்தலினென்க. ஒரோவழி முன்னுள்ளதாகிய பச்சைநிறவுருவமுள்ளவழியும், சுவைவேறுபாடுகாணப்படும், வேற்றுச்சாதிமையுடைத்தாகிய தேயுவின் சையோகமெனப்படும் பாகத்தால் முன்னுள்ள புளிப்புச்சுவைகெட்டு இனிப்புச்சுவைதோன்றுதல் அனுபவத்தாலறியக்கிடத்தலினென்க. ஆதலின், உருவத்தைத் தோற்றுவிப்பதனை நோக்கச் சுவையைத் தோற்றுவிப்பது இலக்கண வேறுபாடுடையது என்பது கொள்ளப்படும். இங்ஙனமே கந்தத்தினைத் தோற்றுவிப்பதும் இலக்கணவேறுபாடுடையதேயாம், உருவமுஞ் சுவையும் வேறுபடாது நின்றவழியும் முன்னுள்ள கந்தமழிந்தவழியும் வேற்றுச்சாதிமையுடைத்தாகிய பாகங் காரணமாக நறுநாற்றமுண்டாத லனுபவத்தானறியப்படுதலின். இங்ஙனம் பரிசத்தைத் தோற்றுவிப்பதும் இலக்கணவேறுபாடுடையதேயாம், பாகங்காரணமாகத் திண்மைப் பரிசமழிந்து மென்மைப்பரிசந்தோன்றுத லனுபவத்தானறியக்கிடத்தலின். ஆதலான், உருவமுதலியனவற்றைத்தோற்றுவிப்பனவாகிய பாகமெல்லாம் வேற்றுச்சாதிமையுடையனவேயாமென்க. இதனானே, பிருதிவியின் பரமாணுக்கள் ஒருசாதிமையுடையவாயவழியும் பாகவலியால் வேற்றுச்சாதிமையுடைய வேறுதிரவியங்களாதல் அனுபவத்தானறியப்படுதலுங் கொள்ளப்படும். எங்ஙனம், ஆவானுண்ணப்பட்ட புன்முதலிய பரமாணுவீருக வழிந்தவழிப்புல்லினைத் தோற்றுவிப்பனவாகிய

பரமாணுக்களின்கண் வேற்றுச்சாதிமையுடைத்தாகிய தேயுவி ன் சையோகத்தான் முன்னுள்ளனவாகியஉருவமுதலிய நான் குமழிந்தவழி, பின்னர்த் துத்தத்தின்கணெவ்வியல்பினவாகிய வுருவமுதலியனவுளவாம், அவ்வியல்பினவாகிய வுருவம் சு வை நாற்றம் பரிசமென்னு நான்கனையுந் தோற்றுவிக்குந் தேயுவின்சையோகமெல்லாமுள்ளனவாம். அதன்பின்னரவ்வி யல்பினவாகிய உருவம், சுவை முதலியன தோன்றும். அவ் வியல்பினவாகிய உருவம், சுவைமுதலியனவற்றான் விசேடிக் கப்பட்ட பரமாணுக்களால் துத்தத்தின்கணுள்ளதுவியணுகந் தோன்றும். பின்னர்த் திரியணுகமுதலிய முறைமைபற்றி மாதுத்தந்தோன்றும். இங்ஙனமே துத்தத்தைத் தோற்று விப்பனவாகிய பரமாணுக்களாற்றானே பாகவலியாற் றயிர் தோன்றும். இங்ஙனந் தயிரைத் தோற்றுவிப்பனவாகிய பர மாணுக்களாற்றானே வெண்ணெய் முதலியன தோன்றுமெ னக்கொள்க.

உங. சங்கை ஒருமைமுதலிய வழக்கிற்குக் காரணம். அஃது ஒன்பது பொருளினும் இருப்பது; ஒன்று முதற் பரார்த்தமீறாயது. ஒருமை நித்தியமும், அநித்தியமு மாம். நித்தியப்பொருளையடைந்தது நித்தியமும், அநித் தியப்பொருளையடைந்தது அநித்தியமுமாம். மற்று இரு மை முதலியன யாண்டும் அநித்தியமேயாம்.

உச. பரிமாணம் அளத்தல் வழக்கிற்குச் சிறப்புக்கார ணம். ஒன்பது பொருளினுமுள்ளது. அது நுண்மையும், பெருமையுங், குறுமையும், நெடுமையுமென நான்கு வ கைத்து.

உரு. வேற்றுமை வேறென்னும் வழக்கிற்குச் சிறப்புக் காரணம். எல்லாப்பொருளினுமுள்ளது.

உசா. சையோகம் கூடியது என்னும் வழக்கிற்குக் காரணம். எல்லாப்பொருளினுமுள்ளது.

உஎ. விபாகம் சையோகத்தினை யழிக்குங்குணம். எல்லாப்பொருளினுமுள்ளது.

சையோகம் எ-து விபாகத்தினிலக்கணங் கூறுகின்றது. சையோகத்தினை யழிப்பதாந்தன்மையான் விசேடிக்கப்பட்ட குணமுடைமை விபாகத்திற்கிலக்கணம். விசேடணமாத்திரையே புணர்த்துரைக்கப்பட்டவழித் தொழிற்குஞ் சையோகத்தினையழிபதாந்தன்மையுண்மையின் ஆண்டு அதிவியாத்திவருமாகலி னதுநீக்குதற்குக் குணமுடைமையென விசேடியம் புணர்த்துரைக்கப்பட்டது.

உஅ. பரத்துவம் முன்னென்னும் வழக்கிற்குச் சிறப்புக் காரணம்.

உகூ. அபரத்துவம் பின்னென்னும் வழக்கிற்குச் சிறப்புக் காரணம்.

௩O. அவ்விரண்டும் பிருதிவி முதலிய நான்கினும் மனத்தினும் உள்ளன: அவை திக்கினாற் செய்யப்படுவனவுங், காலத்தினாற் செய்யப்படுவனவும் எனஇருவகைப்படும். அவற்றுள், திக்கினாற் செய்யப்படும் பரத்துவம் சேய்மைக்கணுள்ளது; திக்கினாற் செய்யப்படும் அபரத்துவம் அணிமைக்கணுள்ளது; காலத்தினாற்செய்யப்படும்

உ

சிவமயம்.

# தருக்கசங்கிரகம்

## மூலமும்,

## நியாய போதினி

எனப்பெயரிய அதனுரையும்.



### தற்சிறப்புப் பாயிரம்.



உலகம்புரக்குமுழுமுதலையுள்ளக்கோயிலுள்ளிருத்தி யிலகுங்கருணைக்குருவழிபாடியற்றி யிளைஞர்க்கிருண்மடம்போய், விலகுந்தெளிவுள்ளத்தெளிதின்விரவும்பொருட்டுவிழுத்தமிழாற், கலவுந்தருக்கசங்கிரகங் கலைஞருவப்பக்கட்டுரைப்பாம்.

அருமறையாதிநூலறையுங்காட்சிய
ரிருவருமறிவுறுதெங்குநின்றவ
ரொருவர்தந்திருவடியுள்ளத்துண்ணிநீ இத்
திருவருநியாயபோதினிசெயப்படும்.

உலகம் என்றது. எடுத்துக்கொண்ட நூலிடையூறின்றி யினிதுமுடிதற்பொருட்டுச் செய்யப்படும் வழிபடுகடவுள் வணக்கமாகிய மங்கலம் மாணாக்கர்க்கறிவுறுத்தற்பொருட்டு நூன்முகத்து யாத்துரைத்தவாறு.

## பதார்த்தப் பாகுபாடு.

**க. திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் எனப் பதார்த்தங்கள் ஏழு.**

திரவியம் எ-து. பதார்த்தங்களைப் பகுக்கின்றது. அவற்றுள் ஏழென்றது பதார்த்தத்தன்மை திரவியமுதலிய ஏழன்கண்ணுந் தனித்தனி வியாப்பியமாமென்னும் வியாத்தி பெறுதற்பொருட்டு. அற்றேல், ஆற்றல் எட்டாம் பதார்த்தமாதலுண்மையின் ஏழென்றல் எங்ஙனம், அங்ஙனமன்றே, தீயோடுகூடிய விறகுமுதலியன உள்ளவழியும் மணியினது சையோகமுள்ளவழி, அதன் வெம்மை தோன்றாது, மற்று அஃதில்வழி அதுதோன்றும், ஆதலின் மணிபுணர்ந்து நின்றவழி அவ்வாற்றலழியும், அது பிரிந்து நின்றவழி வெம்மை தோன்றுதற்கியைபுடைத்தாகிய ஆற்றல் தோன்றுமென்பதுகொள்ளப்படும்; ஆதலால் ஆற்றல் ஏழன்மேற்பட்ட பதார்த்தமாமெனின்;— அது பொருந்தாது, மணி தடுத்து நிற்பதாதல்பற்றி அதனபாவங் காரணமாதலுடைமையாற்றானே ஆற்றல் கொள்ளப்படும்வழி, மணியினது புணர்ச்சி அதனழிவுபாட்டபாவத்திற்குக் காரணமெனவும், பிரிவு அதன்முன்னபாவத்திற்குக் காரணம் எனவும்படுதலின் அளவிறந்த ஆற்றல் கொள்ளுதல் நியாயநூற்றுணிபன்றாகலானென்பது. ஆதலின், ஏழென்றலே துணிபாமென்க.

**உ. அவற்றுள், திரவியம் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா, மனம் என ஒன்பது வகைத்து.**

பிருதிவி எ-து. திரவியங்களைப் பகுக்கின்றது. அற்றேல், இருள் பத்தாந்திரவியமாதலுண்மையின், ஒன்பதென்றல் எங்ஙனம், அஃதாமாறு:—இருள் கரிது, இயங்குகின்றது என்னுமுணர்ச்சியுண்மையின், கரிய உருவத்திற்கும் வினைக்கும் பற்றுக்கோடாகலான், அது திரவியமாதல் பெறப்பட்டது; வரையறுத்தோதிய திரவிய மொன்பதனுள்ளு மடங்குதலிற் பத்தாந் திரவியமாதல் செல்லாதென்பதும் பொருந்தாது; கரிய உருவமுடைமையின் ஆகாய முதலிய ஐந்தனுள்ளும் வாயுவின்கண்ணும் அடங்காது; இருள் நாற்றமுடையதன்மையிற் பிருதிவியினும் அடங்காது; தண்மைப்பரிசமும் வெம்மைப்பரிசமுமுடைமையின், நீரினுந் தேயுவினும் அடங்காது; ஆதலின் இருள் பத்தாந் திரவியமாதல் பெறப்பட்டதெனின்;—அது பொருந்தாது; தேயுவின் அபாவத்தாற்றானே யுண்டாகலிற் பத்தாந்திரவியமாதற்கட் பிரமாணம் இன்மையினென்க. விட்டுவிலகுதலின்மையிற் றேயுவே இருளின் அபாவத்தின் சொரூபமென்றலும் பொருந்தாது; தேயுவினபாவத்தின் சொரூபமென்புழி, யாவரானும் அநுபவத்தின்வைத்துணரப்படும் வெம்மைப்பரிசத்திற்குப்பற்றுக்கோடாகிய திரவியம் வேறெனக்கோடல் மிகையாமாதலால் வெம்மைப் பரிசமாகிய குணத்திற்குப்பற்றுக்கோடாதலுண்மையிற் றேயு திரவியமென்பது பெறப்பட்டது. இருட்கண், இருள் கருவடிவிற்று என்பது முதலிய உணர்ச்சி மயக்கத்தாற்றோன்றியதேயாம்; விளக்கு அவிந்தவழியே ஆண்டுத் தோன்றுதலின்.

**௩. குணம் உருவம், இரதம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், சிநேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு,**

முயற்சி, தன்மம், அதன்மம், வாசனை என இருபத்து நான்கு வகைத்து.

ச. கருமம் எழும்பல், வீழ்தல், வளைதல், நிமிர்தல், நடத்தல் என ஐவகைத்து.

ரு. சாமானியம் பரமும் அபரமுமெனஇருவகைத்து.

சு. நித்தியப்பொருள்களிலிருப்பனவாகிய விசேடம் எண்ணிறந்தனவேயாம்.

எ. மற்றுச் சமவாயம் ஒன்றுதானே.

அ. அபாவம் முன்னபாவமும், அழிவுபாட்டபாவமும், முழுதுமபாவமும், ஒன்றினென்றபாவமு மென நான்கு வகைத்து.

## க. திரவியம்.

கூ. அவற்றுள், பிருதிவி நாற்றமுடையது. அது நித்தியமும் அநித்தியமுமென இருவகைத்து. நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் நம்மனோர்க்குள்ளது. இந்திரியம் கிராணம்; நாற்றத்தைக்கவர்வது; நாசி நுனியில் இருப்பது. விடயம் மண் கல் முதலியன.

நாற்றமுடையது எ-து நாற்றமுடைமை பிருதிவிக்கிலக்கணம். பிருதிவி இலக்கியம். பிருதிவித்தன்மை இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வது. இலக்கியம் எவ்வியல்பான்

வரைந்துகொள்ளப்பட்டதாம், அவ்வியல்பு இலக்கியத்தன்மை யை வரைந்துகொள்வதாம் எனவும், எவ்வியல்பு எதற்குவரை ந்துகொள்வதாம், அஃது அவ்வியல்பான் வரைந்துகொள்ளப்ப ட்டதாமெனவும் அறிந்துகொள்க. அங்ஙனமே இலக்கியத்தன் மையை வரைந்துகொள்வது பிருதிவித்தன்மையேயெனின் இலக்கியத்தன்மை பிருதிவித் தன்மையான் வரைந்து கொள் ளப்பட்டதாமென்க. நாற்றத்தோடு ஒருங்கிருக்கும் பொரு ண்மையான் வியாபிக்கப்பட்ட சாதியுடைமை பிருதிவிக்கிலக் கணம். இம்முறைபற்றித் தண்மைப்பரிசமுடைமைமுதலிய இலக்கணங்களுள்வைத்து அப்புத்தன்மை முதலியவற்றிற்கு இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதாமியல்பு அறிந்து கொள்க.

க0 **அப்புவாவது தண்மைப்பரிசமுடையது.** அது நித்தியமும், அநித்தியமும் என இருவகைத்து. நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் வருணலோகத்துள்ளது. இந்திரியம் இரசனம்; சுவை யைக்கவர்வது; நாக்குநுனியிலிருப்பது. விடயம் யாறு கடல் முதலியன.

கக. **தேயுவாவது வெம்மைப்பரிசமுடையது.** அஃ தும் நித்தியமும், அநித்தியமும் என இருவகைத்து. நித் தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந் திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் ஆதித்தியலோகத்துள்ளது. இந்திரியம் சட்சு; உரு வத்தைக் கவர்வது; கண்ணுறை கருமணியின் நுனியிலி

ருப்பது. விடயம் மண்ணிலுள்ளதும், விண்ணிலுள்ளதும், வயிற்றிலுள்ளதும், ஆகரத்திற்றோன்றுவதும் என்னும்வேறுபாட்டால் நான்குவகைத்து. மண்ணிலுள்ளது நெருப்பு முதலியன. விண்ணிலுள்ளது மின்னல் முதலியன; அவை நீரையே இந்தனமாகவுடையன. வயிற்றிலுள்ளது உண்ட உணவு பரிணமைப்படுதற் கேதுவாயிருப்பது. ஆகரத்திற்றோன்றுவது பொன் முதலியனவாம்.

௧௨. வாயுவாவது உருவமின்றிப் பரிசமுடையது. அது நித்தியமும், அநித்தியமுமென இருவகைத்து. நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் வாயுலோகத்துள்ளது. இந்திரியம் துவக்கு; பரிசத்தைக்கவர்வது; சரீரமெங்குமிருப்பது. விடயம் மரம் முதலியன அசைதற்கேதுவாயிருப்பது. சரீரத்தினகத்துச் சஞ்சரிக்கும் வாயுப் பிராணன் எனப்படும்; அஃதும் ஒன்றாயினும் உபாதி வேறுபாட்டாற் பிராணன் அபானன் முதலிய பெயர் பெறும்.

உருவமின்றி எ-து. இங்ஙனம் பிருதிவிமுதலிய மூன்றனையுந் தெரித்துணர்த்தி வாயுவைத்தெரித்துணர்த்துகின்றது. உருவமின்றிப் பரிசமுடைமை வாயுவுக்கிலக்கணம். இன்றியென்னுங் குறிப்புவினையெச்சத்தான் விசேடிக்கப்பட்ட பொருண்மையுடைமையின் உருவமின்மையான் விசேடிக்கப்பட்ட பரிசமுடைமை வாயுவுக்கிலக்கணமெனக்கொள்க. விசேடணமின்றிப் பரிசமுடைமைமாத்திரையேயிலக்கணமெனக் கூறிற் பிருதிவிமுதலிய மூன்றன்கண்ணும் அதிவியாத்தி வரு

மாகலின், அது நீக்குதற்பொருட்டு விசேடணமும், விசேடியமின்றி விசேடண மாத்திரையேயிலக்கணமெனக் கூறின், ஆகாயமுதலியவற்றின் அதிவியாத்திவருமாகலின், அது நீக்குதற்கு விசேடியமும் புணர்த்துரைக்கப்பட்டன. அதிவியாத்தியாவது இலக்கியமல்லாததன்கண்ணும் இலக்கணமுளதாதல். எங்ஙனம், ஆவிற்குக் கொம்புடைமை யிலக்கணமெனக் கொள்ளின், இலக்கியமெனக் கொள்ளப்பட்ட ஆவின்வேறாகிய எருமைமுதலியவற்றின்கண் அதிவியாத்தி வரும், அவற்றின்கண்ணுங் கொம்புடைமையறியப்படுதலினென்க. அவ்வியாத்தியாவது இலக்கணம் இலக்கியத்தின் ஏகதேசத்தினிலதாதல். இலக்கியத்தினேகதேசமாவது இலக்கியத்தன்மையை வரைந்துகோடற்குப்பற்றுக்கோடாகிய ஒருசாரிலக்கியங்கள்; அவற்றின்கண் இலக்கணம் இன்மை அவ்வியாத்தியென்றவாறு. எங்ஙனம், ஆவிற்குக் கரியவுருவமுடைமையிலக்கணமெனக்கொள்ளின், இலக்கியத்தன்மையைவரைந்துகோடற்குப்பற்றுக்கோடாகிய வெண்ணிறமுடைய ஆவின்கண் அவ்வியாத்தி வரும், ஆண்டுக் கரியவுருவமின்மையினென்க. அசம்பவமாவது இலக்கிய மாத்திரைக்கே யாங்காயினும் இலக்கணமின்மை, எங்ஙனம், ஆவிற்கு ஒருகுளம்புடைமை, ஆவின் பொதுமைக்கு இருகுளம்புண்மையான் ஒருகுளம்புடைமை யாங்காயினு மின்மையானென்க. அதிவியாத்தி அவ்வியாத்தி அசம்பவம் என்னும் மூன்றற்குந் தெளித்துரைக்கப்படும் இலக்கணங்களாமாறு:— அதிவியாத்தியாவது இலக்கியத்தன்மையை வரைந்து கொள்வதனுல் வரைந்து கொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடையதன் வேறுபாட்டோடு ஒருநிலைக்களத்துளதாதல். மற்று அவ்வியாத்தியாவது இலக்கியத்தன்மையை வரைந்து கொள்வதனேடு ஒருநிலைக்களத்துளதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாதல். மற்று அசம்பவமாவது

இலக்கியத்தன்மையை வரைந்து கொள்வதன்கண் வியாபகமாகிய அபாவத்திற்குப் பிரதியோகியாதல்.

**கரு. ஆகாயமாவது சத்தகுணமுடையது. அஃதும் ஒன்றாய், விபுவாய், நித்தியமாயுள்ளது.**

சத்தகுணமுடையது எ-து. ஆகாயத்தினிலக்கணங் கூறுகின்றது. சத்தமென்றொழியாது குணம் என்றது ஆகாயத்தின்கட் சத்தமே விசேடகுணமென்பது விளக்குதற்பொருட்டு, சமவாயமாதல்பற்றிச் சத்தமுடைமைமாத்திரையே நன்குவிளக்குதலின், மற்று அதிவியாத்தி நீக்குதற்பொருட்டன்றென்க. அஃதும் ஒன்றாய் எ-து அனேகமாதற்கட் பிரமாணமின்மையானென்பது கருத்து. விபுவாய் எ-து மூர்த்தமுடைப்பொருள் எல்லாவற்றினுஞ் சையோகமுடைத்தாந்தன்மை விபுவாந்தன்மை. மூர்த்தமுடைமையாவது வினையுடைமை. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, மனம் என்பன மூர்த்தமுடைப்பொருள்கள். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்தும் பூதமென்னுஞ் சொல்லாற் கூறப்படுவனவாம். பூதத்தன்மையாவது புறவிந்திரியத்தாற்கவரப்படும் விசேடகுணமுடைமை.

**கசு. காலமாவது இறந்தது முதலிய வழக்கிற்கு ஏதுவாயது. அஃதும் ஒன்றாய், விபுவாய், நித்தியமாயுள்ளது.**

இறந்தது முதலிய எ-து. காலத்தின் இலக்கணங் கூறுகின்றது. வழக்குக்கேதுவாதன்மாத்திரையே இலக்கணமெனக்கொள்ளிற் குடம் என்னும் வழக்கிற்கு ஏதுவாகிய குடமுதலியவற்றின் அதிவியாத்தி வருமாகலின், அது நீக்குதற்பொருட்டு இறந்தது முதலியவென விசேடணம் புணர்த்துரைக்கப்பட்டது.

**௧௫. திக்காவது கிழக்கு முதலிய வழக்கிற்கு ஏது வாயது. அஃதும் ஒன்றாய், விபுவாய், நித்தியமாயுள்ளது.**

கிழக்கு முதலிய எ-து திக்கின் இலக்கணங் கூறுகின்றது. உதயமலையினணிமைக்கணுள்ள திக்கு யாது, அது கிழக்கு. அத்தமலையினணிமைக்கணுள்ள திக்கு யாது, அது மேற்கு. மேருவினணிமைக்கணுள்ள திக்கு யாது, அது வடக்கு. மேருவினிடையீடுபட்ட திக்கு யாது, அது தெற்கு.

**௧௬. ஆன்மாவாவது ஞானத்திற்கு இடமாயுள்ளது. அது பரமான்மாவும், சீவான்மாவும் என இருவகைத்து. அவற்றுள், பரமான்மா ஈசுரன், முற்றறிவன், ஒருவனே; மற்றுச்சீவான்மா சரீரந்தோறும வேறாய், விபுவாய், நித்தியமாயுள்ளது.**

ஞானத்திற்கு எ-து ஆன்மாவைத் தெரித்துணர்த்துகின்றது. இடம் என்றது சமவாயத்தால் ஞானத்திற்குப் பற்றுக்கோடாதல் என்பது பெறுதற்பொருட்டு.

**௧௭. மனமாவது சுகம் முதலிய அநுபவத்திற்குக் கருவியாகிய இந்திரியம். அஃதும் உயிர்தோறும் நியதமாயிருத்தலின் அநேகமாய், பரமாணுரூபமாய், நித்தியமாயுள்ளது.**

சுகம் எ-து. மனத்தைத் தெரித்துணர்த்துகின்றது. அநுபவமாவது நேரேகாண்டல். ஆகவே, சுகம் துக்கம் முதலியனவற்றை நேரேகாண்டற்குக் காரணமாய இந்திரியமாதல் மனத்திற்கு இலக்கணமாமென்க. இந்திரியமாதன்மாத்திரையே இலக்கணம் எனக் கூறிற் சட்சு முதலியவற்றின் அதி

வியாத்தி வருமாகலிற் சுகமுதலியவற்றை நேரே காண்டற்குக் காரணமாதல் என்னும் விசேடணமும் விசேடிய மாத்திரையே இலக்கணம் எனக் கூறின், ஆன்மாவின்கண் அதிவியாத்தி வருமாகலானும், ஆன்மா சுகமுதலியவற்றிற்குச் சமவாயிகாரணமாதலானும் இந்திரியமாதல் எனப்படும் விசேடணமும் புணர்த்துரைக்கப்பட்டன.

## உ. குணம்.

கஅ. உருவமாவது சட்சுமாத்திரையாற் கவரப்படுங் குணம். அஃதும் வெண்மை, கருமை, பொன்மை, செம்மை, பசுமை, புகைமை, சித்திரம் என்னும் வேறுபாட்டால் எழுவகைத்து. பிருதிவி அப்புத்தேயுக்களிலுள்ளது. அவற்றுள் பிருதிவிக்கண் எழுவகையுமுள்ளது. நீரில் விளங்கா வெண்மை; தேயுவில் விளக்கமாய வெண்மை.

சட்சுமாத்திரையால் எ-து. உருவத்திற்கு இலக்கணங்கூறுகின்றது. சட்சுமாத்திரையாற் கவரப்படுதலால் விசேடிக்கப்பட்ட குணமுடைமை உருவத்திற்கு இலக்கணம். விசேடிய மாத்திரையே இலக்கணமெனக் கூறப்பட்டவழிச் சுவை முதலியவற்றின் அதிவியாத்தி வருமாதலின் சட்சுமாத்திரத்தாற் கவரப்படுதல் என்னும் விசேடணமும், விசேடண மாத்திரையே இலக்கணமெனக்கொள்ளின், உருவத்தன்மைக்கண் அதிவியாத்தி வருமாகலின், எக்குணம் எவ்விந்திரியத்தாற் கவரப்படும், அக்குணத்தின்கண் உள்ளதாகிய சாதி அவ்விந்திரியத்தாற் கவரப்படுவது என்னும் நியமமுண்மையான், அது நீக்குதற்பொருட்டு விசேடியமும் புணர்த்துரைக்கப்பட்டன. சட்சுமாத்திரையாற் கவரப்படுதலாவது, ஏனை யிந்திரியங்களாற் கவரப்படாது சட்சுவாற் கவரப்படுதல். மாத்திரை யெ

ன்பது புணர்த்துரைக்கப்படாதவழிச் சங்கை முதலியவற்றி ன்கண்ணும் சட்சுவாற் கவரப்படுதலால் விசேடிக்கப்பட்ட குணமுண்மையின், சங்கை முதலிய பொதுக்குணங்களின் அதிவியாத்தி வருமாகலின் அது நீக்குதற்பொருட்டு மாத்திரையென்பது புணர்த்துரைக்கப்பட்டது. சங்கை முதலியவற்றிற்கு சட்சுவின்வேறாகிய துவக்கிந்திரியத்தாற் கவரப்படுதலுண்மையின் சட்சுமாத்திரையாற் கவரப்படுதலின்று. இந்திரியத்திற்குப் புலனாகாத குருத்துவமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு சட்சுவாற் கவரப்படுதலெனப்பட்டது. ஈண்டிலக்கணத்துட் கவரப்படுதலாவது காட்சிக்கு விடயமாதலெனவும், கவரப்படாமையாவது அதற்கு விடயமாகாமையெனவுமறிந்துகொள்க. ஆகவே, சட்சுவின்வேறாகியவிந்திரியங்களாற் றோன்றிய காட்சிக்கு விடயமாகாது சட்சுவாற்றோன்றியகாட்சிக்கு விடயமாதலென்பது இதனாற்போந்த பொருளாமென்க.

அற்றேல், ஒளிக்குங் குடத்திற்கு முள்ள சையோகத்தின்கட் சட்சுமாத்திரையாற் கவரப்படுங் குணமுண்மையின் உருவத்தினிலக்கணத்திற்கு அதிவியாத்திவருமாலோவெனின்;— அற்றன்று; குணமென்பது விசேடகுணமென்னும் பொருட்டாதலின். விசேடகுணமாதலோடு கூடிய விலக்கணத்திற்கு, சங்கைமுதலியவற்றி னதிவியாத்தியின்மையின் மாத்திரையென்னுஞ் சொல் நின்று வற்றுமெனக் கூறற்க, நீர் மாத்திரைக்கே யியல்பாகவுளதாகிய திரவத்துவ முதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு அது புணர்த்துரைக்கப்பட்டதாகலின். அல்லதூஉம் சட்சுமாத்திரையாற் கவரப்படுஞ் சாதியுடைமையாகிய குணமுடைமை யிலக்கணமாகலின், ஒளிக்குங் குடத்திற்குமுளதாகிய சையோக முதலியவற்றி னதிவியாத்தியின்றென்க, சையோகத்தன்மையாகிய சாதிக்கு சட்சுமாத்திரையாற் கவரப்படுதலின்மையானும், குடத்திற்கும் படத்தி

றகுமுளதாகிய சையோகத்திற்கு துவக்கிந்திரியத்தாற் கவரப்படுதலுண்மையின், அதன்கண்ணதாகிய சாதிக்கும் துவக்கிந்திரியத்தாற் கவரப்படுதலுண்மையானும், எக்குண மெவ்விந்திரியத்தாற் கவரப்படும் அதன்கண்ணதாகிய சாதியும் அவ்விந்திரியத்தாற் கவரப்படுத லுடைமையானுமென்க. ஈண்டுச் சாதியோடுகூடிய விலக்கணத்தின்கட் குணமென்பது புணர்த்துரைக்கப்படாதவழி, சட்சுமாத்திரையாற்கவரப்படுஞ் சாதியுடையதாகிய பொன் முதலியவற்றி னதிவியாத்தி வருமாகலின், அது நீக்குதற்பொருட்டுக் குணமென்பது புணர்த்துரைக்கப்பட்டது. இவ்வாறு இரதமுதலியவற்றின் இலக்கணத்தின்கண் விசேடணம் புணர்த்துரைக்கப்படாதவழி இலக்கியத்தின்வேறாகிய குணமுதலியவற்றினதிவியாத்தியும் விசேடியம் புணர்த்துரைக்கப்படாதவழி இலக்கியமாத்திரைக்கணுள்ளனவாகிய இரதத்தன்மை கந்தத்தன்மை முதலியவற்றி னதிவியாத்தியும் வருமாகலின், விசேடண விசேடியங்கள் புணர்த்துரைக்கப்பட்டவாறறிக.

கக. இரதம் இரசனத்திறைற் கவரப்படுங்குணம். அஃதும் இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, காழ்ப்பு, கைப்பு, துவர்ப்பு என்னும் வேறுபாட்டா லறுவகைத்து. மண்ணினு நீரினுமிருப்பது. மண்ணில் ஆறுவகையும், நீரில் இனிப்பொன்றுமே.

உ0. கந்தம் கிராணத்திறைற் கவரப்படுங்குணம். அஃதும் நறுநாற்றமுந், தீநாற்றமுமென விருவகைத்து. பிருதிவியின் மாத்திரமிருப்பது.

உக. பரிசந் துவக்கிந்திரியமாத்திரையாற் கவரப்படுங் குணம். அஃதும் தண்மை, வெம்மை, தண்மையும் வெ

ம்மையுமில்லது என்னும் வேறுபாட்டான் மூவகைத்து. பிருதிவி அப்புத் தேயு வாயுக்களிலிருப்பது. அவற்றுள் நீரிற்றண்மையும், தேயுவில் வெம்மையும், பிருதிவியினும் வாயுவினும் வெம்மையுந் தண்மையுமில்லாத பரிசமுமுள்ளன.

துவகிந்திரிய மாத்திரையால் எ-து பரிசத்தினிலக்கணங் கூறுகின்றது. ஈண்டும் மாத்திரையென்பது சங்கை முதலிய பொதுக்குணமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற் பொருட்டு. ஏனை விசேடணத்தின்பயன் முற்கூறிய முறைமை பற்றி யறிந்துகொள்க. கவரப்படுவது என்னுஞ் சொற்பொருளும் முன்னர்க் கூறப்பட்டவாறுபோலக் காட்சிக்கு விடயமாதலெனவே யறிந்துகொள்க.

உஉ. உருவம் முதலிய நான்கும் பிருதிவியிற் பாகத்தாற் றோன்றுவனவும், அநித்தியமுமாம். ஏனையவற்றிற் பாகத்தாற் றோன்றாதனவாய் நித்தியமு மநித்தியமுமாவனவாம். நித்தியப்பொருளையடைந்தவை நித்தியமும், அநித்தியப்பொருளையடைந்தவை அநித்தியமுமாம்.

உருவமுதலிய நான்கும் என்றதன் மெய்ப்பொருள் விளக்கம் வருமாறு:— பாகமாவது வேற்றுச்சாதிமையுடைய தேயுவின் சையோகம். அஃதாவது பலவகைச்சாதிமையுடைய வுருவங்களைத்தோற்றுவிக்கும் வேற்றுச்சாதிமையுடையதாகிய தேயுவின் சையோகமாமென்க. அதனை நோக்க இரதத்தைத் தோற்றுவிப்பதும் வேற்றுச்சாதிமையுடையதாம். இங்ஙனங் கந்தத்தைத்தோற்றுவிப்பதும் இம்முறைமைபற்றி வேற்றுச்சாதிமையுடையதேயாம். பரிசத்தைத் தோற்றுவிப்பதும் இம்முறைமைபற்றி அவ்வாறேயாம். இவ்வாற்றால் வேறு வேறாகிய

சாதிமையுடையனவாகிய பாகமெல்லாம் காரியத்தினிலக்கண வேறுபாடுடைமையாற் கொள்ளப்படும். எங்ஙனம், வைக்கோற்றிரளுள் வைக்கப்பட்ட மாங்காய் முதலியவற்றுள் வெம்மையெனப்படும் வேற்றுச்சாதிமையுடைத்தாகிய தேயுவின் சையோகத்தால் முன்னுள்ள பச்சைநிறவுருவங் கெட்டு வேற்றுருவமாகிய பொன்னிறவுருவமுதலியன தோன்றும்; மற்றுச் சுவைமுதலியன தோன்றா, முன்னுள்ள புளிப்புச் சுவையே யனுபவத்தாலறியக் கிடத்தலினென்க. ஒரோவழி முன்னுள்ளதாகிய பச்சைநிறவுருவமுள்ளவழியும், சுவைவேறுபாடுகாணப்படும், வேற்றுச்சாதிமையுடைத்தாகிய தேயுவின் சையோகமெனப்படும் பாகத்தால் முன்னுள்ள புளிப்புச்சுவைகெட்டு இனிப்புச்சுவைதோன்றுதல் அனுபவத்தாலறியக்கிடத்தலினென்க. ஆதலின், உருவத்தைத் தோற்றுவிப்பதனை நோக்கச் சுவையைத் தோற்றுவிப்பது இலக்கண வேறுபாடுடையது என்பது கொள்ளப்படும். இங்ஙனமே கந்தத்தினைத் தோற்றுவிப்பதும் இலக்கணவேறுபாடுடைய தேயாம், உருவமுஞ் சுவையும் வேறுபடாது நின்றவழியும் முன்னுள்ள கந்தமழிந்தவழியும் வேற்றுச்சாதிமையுடைத்தாகிய பாகங் காரணமாக நறுநாற்றமுண்டாத லனுபவத்தானறியப்படுதலின். இங்ஙனம் பரிசத்தைத் தோற்றுவிப்பதும் இலக்கணவேறுபாடுடையதேயாம், பாகங்காரணமாகத் திண்மைப் பரிசமழிந்து மென்மைப்பரிசந்தோன்றுத லனுபவத்தானறியக்கிடத்தலின். ஆதலான், உருவமுதலியனவற்றைத்தோற்றுவிப்பனவாகிய பாகமெல்லாம் வேற்றுச்சாதிமையுடையனவேயாமென்க. இதனானே, பிருதிவியின் பரமாணுக்கள் ஒருசாதிமையுடையவாயவழியும் பாகவலியால் வேற்றுச்சாதிமையுடைய வேறுதிரவியங்களாதல் அனுபவத்தானறியப்படுதலுங் கொள்ளப்படும். எங்ஙனம், ஆவானுண்ணப்பட்ட புன்முதலிய பரமாணுவீருக வழிந்தவழிப்புல்லினைத் தோற்றுவிப்பனவாகிய

பரமாணுக்களின்கண் வேற்றுச்சாதிமையுடைத்தாகிய தேயுவி ன் சையோகத்தான் முன்னுள்ளனவாகியஉருவமுதலிய நான் குமழிந்தவழி, பின்னர்த் துத்தத்தின்கணெவ்வியல்பினவாகிய வுருவமுதலியனவுளவாம், அவ்வியல்பினவாகிய வுருவம் சுவை நாற்றம் பரிசமென்னு நான்கனையுந் தோற்றுவிக்குந் தேயுவின்சையோகமெல்லாமுள்ளனவாம். அதன்பின்னரவ்வி யல்பினவாகிய உருவம், சுவை முதலியன தோன்றும். அவ் வியல்பினவாகிய உருவம், சுவைமுதலியனவற்றான் விசேடிக் கப்பட்ட பரமாணுக்களால் துத்தத்தின்கணுள்ளதுவியணுகந் தோன்றும். பின்னர்த் திரியணுகமுதலிய முறைமைபற்றி மாதுத்தந்தோன்றும். இங்ஙனமே துத்தத்தைத் தோற்று விப்பனவாகிய பரமாணுக்களாற்றானே பாகவலியாற் றயிர் தோன்றும். இங்ஙனந் தயிரைத் தோற்றுவிப்பனவாகிய பர மாணுக்களாற்றானே வெண்ணெய் முதலியன தோன்றுமெ னக் கொள்க.

**உ௩. சங்கை ஒருமைமுதலிய வழக்கிற்குக் காரணம். அஃது ஒன்பது பொருளினும் இருப்பது; ஒன்று முதற் பரார்த்தமீறாயது. ஒருமை நித்தியமும், அநித்தியமு மாம். நித்தியப்பொருளையடைந்தது நித்தியமும், அநித் தியப்பொருளையடைந்தது அநித்தியமுமாம். மற்று இரு மை முதலியன யாண்டும் அநித்தியமேயாம்.**

**உ௪. பரிமாணம் அளத்தல் வழக்கிற்குச் சிறப்புக்கார ணம். ஒன்பது பொருளினுமுள்ளது. அது நுண்மையும், பெருமையுங், குறுமையும், நெடுமையுமென நான்கு வ கைத்து.**

உரு. வேற்றுமை வேறென்னும் வழக்கிற்குச் சிறப்புக் காரணம். எல்லாப்பொருளினுமுள்ளது.

உசு. சையோகம் கூடியது என்னும் வழக்கிற்குக் காரணம். எல்லாப்பொருளினுமுள்ளது.

உஎ. விபாகம் சையோகத்தினை யழிக்குங்குணம். எல்லாப்பொருளினுமுள்ளது.

சையோகம் எ-து விபாகத்தினிலக்கணங் கூறுகின்றது. சையோகத்தினை யழிப்பதாந்தன்மையான் விசேடிக்கப்பட்ட குணமுடைமை விபாகத்திற்கிலக்கணம். விசேடணமாத்திரையே புணர்த்துரைக்கப்பட்டவழித் தொழிற்குஞ் சையோகத்தினையழிபதாந்தன்மையுண்மையின் ஆண்டு அதிவியாத்திவருமாகலி னதுநீக்குதற்குக் குணமுடைமையென விசேடியம் புணர்த்துரைக்கப்பட்டது.

உஅ. பரத்துவம் முன்னென்னும் வழக்கிற்குச் சிறப்புக் காரணம்.

உகூ. அபரத்துவம் பின்னென்னும் வழக்கிற்குச் சிறப்புக் காரணம்.

௩0. அவ்விரண்டும் பிருதிவி முதலிய நான்கினும் மனத்தினும் உள்ளன: அவை திக்கினாற் செய்யப்படுவனவுங், காலத்தினாற் செய்யப்படுவனவும் எனஇருவகைப்படும். அவற்றுள், திக்கினாற் செய்யப்படும் பரத்துவம் சேய்மைக்கணுள்ளது; திக்கினாற் செய்யப்படும் அபரத்துவம் அணிமைக்கணுள்ளது; காலத்தினாற்செய்யப்படும்

பரத்துவம் மூத்தோன்கணுள்ளது: காலத்தினாற்செய்யப்படும் அபரத்துவம் இளையோன்கணுள்ளது.

௩க. குருத்துவம் ஆதியில் வீழ்ச்சிக்கு அசமவாயிகாரணம்: பிருதிவியினும் நீரினும் உள்ளது.

ஆதியில் எ-து. குருத்துவத்திற் கிலக்கணங்கூறுகின்றது. இரண்டாவதாகிய வீழ்தற்றொழிற்கு வேகம் அசமவாயிகாரணமாதலுடைமையின் ஆண்டு அதிவியாத்திவருமாகலின், அது நீக்குதற்கு ஆதியில் என்பது புணர்த்துரைக்கப்பட்டது. முன்னர் ஒழுகுதற்கு விசேடணமாகவுரைக்கப்படும் ஆதியில் என்னும் விசேடணத்திற்கும் இவ்வாறுரைத்துக்கொள்க.

௩உ. திரவத்துவம் ஆதியில் ஒழுகுவதற்கு அசமவாயிகாரணம்: பிருதி அப்புத் தேயுக்களில் உள்ளது; அஃது இயல்பாயுள்ளதும், நிமித்தத்தாலாவதும் என இருவகைத்து. நீரின் இயல்பாயுள்ளது: பிருதிவி தேயுக்களின் நிமித்தத்தாலாவது. பிருதிவிக்கண் நெய்முதலியவற்றின் நெருப்புக்கூடுவதால் தோன்று நெகிழ்ச்சி; தேயுவிற் பொன் முதலியவற்றிற்றோன்றுவது.

௩௩. சிநேகம் பொடிமுதலியன திரளுவதற்கு ஏதுவாயகுணம்: நீர்மாத்திரைக்கேயுள்ளது.

பொடிமுதலியன எ-து. சிநேகத்திற்கிலக்கணங் கூறுகின்றது. பொடிமுதலியன திரளுவதற்கேதுவாய குணமாதல் சிநேகத்திற்கிலக்கணம். திரளுதலாவது பொடிமுதலியன ஒருங்குசேர்ந்து நிற்றற்கேதுவாகிய இலக்கணவேறுபாடுடைய சையோகம். அவ்வியல்பிற்றாகிய சையோகத்திற்குக்

சிநேகமே அசமவாயிகாரணமாம்; மற்று நீர்முதலியவற்றின் கணுள்ள நெகிழ்ச்சியன்றென்க; ஆமெனக்கொள்ளின் நெகிழ்ந்தோடுவதாகிய பொன்முதலியவற்றின் சையோகத்தால், பொடிமுதலியன திரளுமெனல் வேண்டும்; ஆகலிற் சிநேகமே சிறப்புக்காரணமாம். விசேடண மாத்திரையே புணர்த்துரைக்கப்பட்டவழி, காலமுதலியவற்றினதிவியாத்திவருமாகலின் அது நீக்குதற்கு விசேடியம் புணர்த்துரைக்கப்பட்டது. சிநேகம் பொடி முதலியன திரளுதற்குக் காரணமாதற்கட் பிரமாணமின்மையின் ஒழுகுவதாகிய நீரின் சையோகமே யதற்குக் காரணமாமென்பது இதனுண்மை. நீருக்கு ஒழுகுவது என்னும் விசேடணத்தாற் கரக முதலியவற்றினின்றுங் கீழ்வீழ்தல் கொள்க.

௩௪. சத்தம் சோத்திரத்தாற் கவரப்படுவதாகிய குணம்: ஆகாயமாத்திரைக்கேயுள்ளது: அஃது ஒலிவடிவும் எழுத்துவடிவும் எனஇருவகைத்து: அவற்றுள், ஒலிவடிவு முரசுமுதலியவற்றிற்றோன்றுவது. எழுத்துவடிவு வடமொழிமுதலிய பாடைவடிவாயுள்ளது.

சோத்திரத்தால் எ-து. சத்தத்தினிலக்கணங்கூறுகின்றது. சத்தத்தன்மைக்கண் அதிவியாத்திநீக்குதற்குக் குணமெனவும், உருவமுதலியவற்றின் அதிவியாத்திநீக்குதற்குச் சோத்திரத்தாலெனவுங் கூறப்பட்டன. அது கூட்டத்தாற்றோன்றுவதும், பிரிவாற்றோன்றுவதும், ஒலியாற்றோன்றுவதுமென மூவகைப்படும். எங்ஙனம், முரசுங் குணிலுங் கூடிய கூட்டத்தாற்றோன்றுவது பாங்காரமுதலியவொலி. கையாலடிக்கப்படுவதாகிய கூட்டத்தாற் றோன்றுவது மிருதங்க முதலியவற்றினொலி. பிளவுபடுவதாகிய மூங்கிலிற் பிளவிரண்டன்பிரிவாற்றோன்றுவது சடசடவொலி. ஒலி தான்றோற்றுமிடத்தி

னின்று செவிகாறும் வீசிதரங்கநியாயத்தானாக, கதம்பமுகிள நியாயத்தானாக நிமித்தமாய் நீங்குதலால் ஒலித்தாரை தோன்றும், ஆண்டுப் பின்பினுள்ளவொலிக்கு முன்முனுள்ளவொலி காரணமாம்.

**௩௫. புத்தியாவது எல்லாவழக்கிற்குங் காரணமாகிய குணம் எனப்படும் அறிவு. அது நினைவும் அநுபவமும் என இருவகைத்து.**

எல்லாவழக்கிற்கும் எ-து. புத்தியினிலக்கணங் கூறுகின்றது. வழக்காவது சொற்பிரயோகம். அறிவின்றிச் சொற்பிரயோகமின்றாதலின், சொற்பிரயோகமெனப்படும் வழக்கிற்கேதுவாதல் அறிவிற்கிலக்கணம். அது எ-து. புத்தியைப்பகுக்கின்றது.

**௩௬. நினைவு வாசனைமாத்திரையாற்றோன்றும் ஞானம். அநுபவம் அதனின் வேறாய ஞானம். அது மெய்யநுபவமும் பொய்யநுபவமுமெனவிருவகைத்து.**

வாசனையால் எ-து. நினைவினிலக்கணங் கூறுகின்றது. வாசனையாற்றோன்றியதாதலான் விசேடிக்கப்பட்ட ஞானமாதல் நினைவிற்கிலக்கணம். விசேடணம் புணர்க்கப்படாதவழிக் காட்சியநுபவத்தின் அதிவியாத்தி வருமாகலின் அது நீக்குதற்கு விசேடணம் புணர்த்துரைக்கப்பட்டது. வாசனையினழிவுபாட்டின்கண் அதிவியாத்தி நீக்குதற்கு விசேடியம் புணர்த்துரைக்கப்பட்டது, அழிவுபாட்டிற்குப் பிரதியோகி காரணமாதலானும், வாசனையினழிவுபாட்டின்கண்ணும் வாசனையாற்றோன்றுந்தன்மையுண்மையானுமென்க. முன்னறிந்ததனுணர்வின் அதிவியாத்தி நீக்குதற்கு மாத்திரையெனப்பட்டது.

அதனின் வேருய எ-து. அநுபவத்திற்கிலக்கணங் கூறுகின்றது. அதனின் வேருதலாவது நினைவின் வேருதல். நினைவின் வேருதலான் விசேடிக்கப்பட்ட ஞானமாதலனுபவத்திற்கிலக்கணம். ஆண்டு விசேடணம் புணர்த்துரைக்கப்படாதவழி நினைவின்கணதிவியாத்தியும் விசேடியம் புணர்த்துரைக்கப்படாதவழிக் குடமுதலியவற்றினதிவியாத்தியும் வருமாகலின் அவற்றினீக்குதற்கு விசேடணவிசேடியமிரண்டும் புணர்த்துரைக்கப்பட்டன. அது எ-து. அநுபவத்தைப்பகுக்கின்றது.

௩எ. அஃதுடைப்பொருளின்கண் அது விசேடணமாக நிகழும் அநுபவம் மெய்யநுபவம். அதுவே பிரமையென் றுரைக்கப்படும். அஃதில்பொருளின்கண் அது விசேடணமாக நிகழும் அநுபவம் பொய்யநுபவம்.

அஃதுடைப்பொருள் எ-து. மெய்யநுபவத்தினிலக்கணங் கூறுகின்றது. அஃதுடைப்பொருளின்கண் என்புழி ஏழாம் வேற்றுமைப்பொருளால் விசேடியமாதலும் அது என்றதனுல் விசேடணமாதலாகியவியல்புங் கொள்ளத்தகும்; ஆதலின் அஃதுடையது விசேடியமாக அதனியல்புபற்றி நிகழுமநுபவமாதல் மெய்யநுபவத்திற்கிலக்கணம். உதாரணம்:— வெள்ளியின்கண் இது வெள்ளியென்னு ஞானம். வெள்ளித்தன்மையுடையது விசேடியமாயவழி வெள்ளித்தன்மையாகிய வியல்புபற்றி நிகழுஞானமென்க. அஃதுடைப்பொருளின்கண்ணதாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டதாய அதன்கணுள்ள விசேடணத்தன்மையுடைத்தாதலென்பது தேற்றம். அங்ஙனமன்றேல், இடக்கைமுறைமைபற்றி வங்க வெள்ளிகளின்கண் இவைவங்கவெள்ளிகளெனப்படுங் கூட்டம் பற்றிநிகழும் பிறழ்ச்சியுணர்வின்கணதிவியாத்திவரும், ஆண்

டும் வெள்ளித்தன்மையுடைத்தாகிய விசேடியமாதலுடைமையும், வெள்ளித்தன்மையாகிய விசேடணமுடைத்தாதலும், வங்கத்தன்மையுடையதாகிய விசேடியமாதலும், வங்கத்தன்மையாகிய விசேடணமுடைத்தாதலுமுண்மையாமெனன்க. வெள்ளித்தன்மையாகிய விசேடணமுடைமைக்கு வெள்ளித்தன்மையுடையதாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்படுதலின்மையானும், இங்ஙனம் வங்கத்தன்மையாகிய விசேடணத்தன்மைக்கு வங்கத்தன்மையுடையதாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்படுதலின்மையானும், மற்று கூட்டம்பற்றி நிகழும் பிறழ்ச்சியுணர்விற்கு வங்கத்தின்கண் வெள்ளித்தன்மைபொருந்தி நிற்றலால் வெள்ளித்தன்மையாகியவிசேடணத்தன்மைக்கு வங்கத்தன்மையுடையதாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்படுத லுண்மையானும், இங்ஙனம் வெள்ளியின்கண் வங்கத்தன்மை பொருந்தி நிற்றலால் வங்கத்தன்மையாகிய விசேடணத்தன்மைக்கு வெள்ளித்தன்மையுடையதாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்படுதலுண்மையானும், மற்று ஈண்டெடுத்துரைக்கப்பட்ட தேற்றத்தின்கண் அதிவியாத்தியின்மையறிக. பலவகையாகிய சிறப்புடைய விசேடியத்தன்மையோடு கூடியொன்றுபட்டு நடக்குஞானங் கூட்டம்பற்றி நிகழ்வதென்க.

அஃதில்பொருளின்கண் எ-து. பொய்யநுபவத்திற் கிலக்கணங் கூறுகின்றது. ஈண்டும் முன்போல அஃதில்லதன்கண்ணதாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டதாய அதன்கண்ணதாகிய விசேடணத்தன்மையோடுகூடிய ஞானமாதலென்பது தேற்றமாமெனவுரைத்தல் வேண்டப்படும். அங்ஙனமன்றேல், வங்கவெள்ளிகளின்கண் இவை வங்கவெள்ளிகளெனப்படுங் கூட்டம்பற்றி நிகழு மெய்யனுபவத்தின்கண் அதிவியாத்தி வரும். இக்கூட்டம்பற்றி நிகழு

மெய்யனுபவத்திற்கு வங்கமும் வெள்ளியுமாகிய விரண்டும் விசேடியமாதலுடைமையானும், வங்கத்தன்மையும் வெள்ளித்தன்மையுமாகியவிரண்டும் விசேடணமாதலுடைமையானும், வெள்ளித்தன்மையில்லதன்கண் வங்கமாகிய விசேடியமும் வெள்ளித்தன்மையாகிய விசேடணமுமாதலும்; வங்கத்தன்மையில்லதன்கண் வெள்ளித்தன்மையாகியவிசேடியமும்வங்கத்தன்மையாகிய விசேடணமுமாத லுமுண்மையானு'மென்க. வெள்ளியின்கண் வெள்ளித்தன்மை பொருந்தி நிற்றலானும், வங்கத்தின்கண் வங்கத்தன்மை பொருந்திநிற்றலானும் வெள்ளித்தன்மையாகிய விசேடணத்திற்கு வெள்ளித்தன்மையிலதாய வங்கமாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டமையின்மையானும், இங்ஙனமே வங்கத்தன்மையாகிய விசேடணத்தன்மைக்கு வங்கத்தன்மையிலதாகிய வெள்ளியாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டமையின்மையானும், மற்றுத் தேற்றத்தின்கண் அதிவியாத்தியின்மையுணர்க. உதாரணம்:—இப்பியின்கண் இதுவெள்ளியென்பது.

**ரு௮. மெய்யநுபவம் காட்சி, அனுமிதி, உபமிதி, சாத்தம் என்னும் வேறுபாட்டால் நான்குவகைத்து. அதன்கரணமும் காண்டல், அனுமானம், உபமானம், சத்தம் என்னும் வேறுபாட்டால் நான்குவகைத்து.**

நான்குவகைத்து எ-து. மெய்யநுபவத்தைப் பகுக்கின்றது. அதன்கரணமும் எ-து. பலமாகிய காட்சி முதலியவற்றின் கரணம் நால்வகைத்தென்றவாறு. காட்சிமுதலிய நால்வகைப் பிரமாணங்களுக்கும் பிரமைக்குக் கரணமாதல் பொதுவிலக்கணம். மற்றுத் தனித்தனியேயெடுத்துரைக்குஞ் சிறப்பிலக்கணங் காட்சியறிவென்றற்றொடக்கத்தனவற்றாற் கூறப்படும்.

௯௯. கரணமாவது சிறப்புக்காரணம்.

சிறப்புக்காரணம் எ-து. கரணத்தினிலக்கணங் கூறுகின்றது. வியாபாரமுடைத்தாகிய சிறப்புக்காரணங் கரணமென்றவாறு. சிறப்பாதலாவது காரியமாதலின் மேற்பட்டவியல்பால் வரைந்துகொள்ளப்பட்ட காரியத்தன்மையாற்றெரித்துணர்த்தப்பட்ட காரணத்தன்மையுடைத்தாதலென்றவாறு. எங்ஙனம், தண்டமுதலியவற்றிற்குக் குடமுதலியனவற்றைக்குறித்துச் சிறப்புக்காரணமாதல். காரியமாதலின் மேற்பட்ட இயல்பு குடத்தன்மை முதலியனவெனவும், அதனால் வரைந்துகொள்ளப்பட்ட காரியத்தன்மை குடத்தின்கணுள்ளதெனவும், அதனாற்றெரித்துணர்த்தப்படுங் காரணத்தன்மை தண்டத்தின்கணுள்ளதெனவு மறிந்துகொள்க. ஆதலிற் குடத்தைக்குறித்துத் தண்டஞ் சிறப்புக்காரணமாம். சுழலுதன்முதலியனவாகக் கூறப்படும் வியாபாரமுடைத்தாதலானுங் கரணமாம். பொதுவாதலாவது காரியத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட காரியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட காரணத்தன்மையுடைத்தாதல். ஈசுரனும் ஊழ்முதலியன காரியத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதனைக்குறித்தே காரணமாதலுடைமையின் அவை பொதுக்காரணமாவனவாம்.

௧00. காரணங் காரியத்திற்கு நியதமாய் முன்னுள்ளது.

காரியத்திற்கு நியதமாய எ-து. காரணத்திற்கிலக்கணங் கூறுகின்றது. காரியத்தைக் குறித்து நியதமாய் முன்னுளதாவதென்க. நியதமாய் என்னும் விசேடணம் புணர்த்துரைக்கப்படாதவழி முன்னுள்ளனவாகிய கழுதை முதலியனவற்றிற்குங் குடமுதலியவற்றிற்குக் காரணமாதல் வருமாதலின் நியதமாய் என்னும் விசேடணம் புணர்த்துரைக்கப்பட்டது.

நியதமாய் முன்னுள்ளனவாகிய தண்டவுருவமுதலியனவற்றிற்குங் குடத்திற்குக் காரணமாதல் வருமாதலின் வேறோராற்றாற் பெறப்படாததாயென்பதுங் காரணத்தினிலக்கணத்துட்பெய்துரைத்துக்கொள்க, மற்றுத்தண்டவுருவமுதலியனவற்றிற்கு வேறோராற்றாற் பெறப்படுதலுண்மையானென்க.

## சுக. காரியம் முன்னபாவத்திற்குப் பிரதியோகி.

காரியம் எ-து. காரியத்தினிலக்கணங் கூறுகின்றது. முன்னபாவத்திற்குப் பிரதியோகியாதல் காரியத்திற்கிலக்கணம். காரியத்தோற்றத்திற்குமுன் ஈண்டுக் குடமாகும் என்னுமுணர்ச்சிதோன்றும். இவ்வுணர்ச்சிக்கு விடயமாகிய எவ்வபாவம் முன்னபாவம் அதற்குப்பிரதியோகியாவன குடமுதலியகாரியமென்க.

**சஉ. காரணம் சமவாயி, அசமவாயி, நிமித்தம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்து.** எதன்கட் சமவேதமாய்க்காரியந்தோன்றும், அது சமவாயிகாரணம். எங்ஙனம், நூல்கள் ஆடைக்கு, ஆடையுந் தன்னையடைந்த உருவமுதலியனவற்றிற்கு. காரியத்தோடாகக் காரணத்தோடாகக் கூடி ஒருபொருளின்கட் சமவேதப்பட்டுக் காரணமாவது அசமவாயிகாரணம். எங்ஙனம், நூலின் சையோகம் ஆடைக்கும் நூலினுருவம் ஆடையுருவத்திற்கும் அசமவாயிகாரணமாம். அவ்விரண்டின்வேறாய காரணம் நிமித்தகாரணம். எங்ஙனம், ஆடைக்கு நாடா, வேமாமுதலியன. இங்ஙனங்கூறிய மூவகைக்காரணங்களுள் யாது சிறப்புக்காரணம், அதுவே கரணம் எனப்படும்.

காரணம் எ-து. காரணத்தைப் பகுக்கின்றது. சமவாயிகாரணமும் அசமவாயிகாரணமும் நிமித்தகாரணமுமென விரித்துரைக்க.

எதன்கட்சமவேதமாய் எ-து. சமவாயிகாரணத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. எதன்கட் சமவாயத்தாற் சம்பந்தப்பட்டுக் காரியந்தோன்றும், அது சமவாயிகாரணமென்றவாறு. எங்ஙனம், நூல்கள் எ-து. உதாரணம். நூல்களின்கட் சமவாயத்தாற் சம்பந்தப்பட்டு ஆடையாகிய காரியந்தோன்றுமன்றே, அந்நூல்கள் சமவாயிகாரணமென்றவாறு. மற்றுப் பொதுவிலக்கணமாமாறு:— சமவாயசம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்டது காரியத்தன்மை; அதனுற்றெரித்துணர்த்தப்பட்டது தாதான்மியசம்பந்தம்; அதனுன் வரைந்துகொள்ளப்பட்ட காரணமாதல் சமவாயிகாரணமாமென்க. சமவாயசம்பந்தத்தாற் குடத்தின்கணுள்ள அவயவமுதலியவற்றின்கண் அவை தாதான்மியசம்பந்தத்தாற்றுனே காரணமாதலுடைமையானும், சமவாயசம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்டது குடத்தன்மையும் அதனுன்வரைந்துகொள்ளப்பட்டது காரியத்தன்மையும் அதனுற் றெரித்துணர்த்தப்பட்டது தாதான்மிய சம்பந்தமுமாதலின் அதனுன் வரைந்துகொள்ளப்பட்ட காரணமாதல் அவ்வவயவமுதலியவற்றின்கணுண்மையானும் இலக்கணமியையுமாறறிக. தோற்றுவிக்கப்பட்டதாகிய உள்பொருட்டன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதனைக்குறித்துத் தாதான்மியசம்பந்தத்தாற் றிரவியமே காரணமாதலின் தோற்றுவிக்கப்பட்டனவாகிய உள்பொருள்களெனப்படுந் திரவியம், குணம், கருமம் என்னும்மூன்றன்கண்ணுந் திரவியமே சமவாயிகாரணமாம், மற்றுத்திரவியத்தின்கணதனவயவங்கள் சமவாயிகாரணமாம்; ஆதலிற் குணமுதலியவற்றின்கண்ணுந்

திரவியமே சமவாயிகாரணமென்னுங்கருத்தால் ஆடையுந்தன்னையடைந்த உருவமுதலியவற்றிற்கெனப்பட்டது. சமவாயிகாரணமென்பது வந்தியையும்.

காரியத்தோடு எ-து. அசமவாயிகாரணத்திற்கு இலக்கணங்கூறுகின்றது. காரியத்தோடுகூடி ஒருபொருளின்கட் சமவேதப்பட்டுக் காரணமாவது யாது, அது அசமவாயிகாரணமெனவுங் காரணத்தோடுகூடி ஒருபொருளின்கட் சமவேதப்பட்டுக் காரணமாவது யாது, அஃது அசமவாயிகாரணமெனவுமியைத்துக்கொள்க. ஈண்டுக்காரணத்தோடென்பதற்குத் தனதுகாரியத்தின் அசமவாயிகாரணத்தோடு என்பது பொருள். எங்ஙனம் நூலின்சையோகம் ஆடைக்கு எ-து. தோற்றுவிக்கப்பட்ட திரவியமாத்திரைக்கு அவயவத்தினியையே அசமவாயிகாரணமாதலின் ஆடையாகிய காரியத்திற்கு அதனவயவமாகிய நூலினியையே அசமவாயிகாரணமென்பது காட்டுகின்றது. காரியத்தோடுகூடியென்பதற்கு ஆடையாகிய காரியத்தோடுகூடியெனவும் ஒருபொருளின்கண் என்பதற்கு நூலின்கண் எனவும் சமவேதப்பட்டு என்பதற்கு சமவாயசம்பந்தத்தானுளதாயெனவுமுரைத்துக் காரணமென்பதற்கு ஆடையாகிய காரியத்தைக்குறித்து நூலியையு எனப்படும் அசமவாயிகாரணமெனவுமுரைத்துக்கொள்க.

நூலுருவம் எ-து. இரண்டாவதாகிய அசமவாயிகாரணங் காரணத்தோடு என்பதுமுதலியவற்றால் முன்னர்க்கூறப்பட்டது; அதற்குதாரணங்கூறுகின்றது. காரணத்தோடு கூடியென்பதற்கு ஆடையுருவத்திற்குச் சமவாயிகாரணமாகிய ஆடையோடுகூடியெனவும், ஒருபொருளின்கண்என்பதற்கு நூலுருவமாகியபொருளின்கண் எனவும், சமவேதப்பட்டு என்பதற்குச் சமவாயசம்பந்தத்தானுள்ளதாயெனவும், காரணம் என்ப

தற்கு நூலுருவம் ஆடையடைந்த உருவத்திற்குஅசமவாயிகார ணமெனவுமுரைத்துக்கொள்க. அங்ஙனமாதலின், நூலுருவம் ஆடையடைந்த உருவத்திற்கு அசமவாயிகாரணமாம். மற்றுப் பொதுவிலக்கணமாமாறு:— சமவாயசம்பந்தத்தான் வரைந்து கொள்ளப்பட்ட காரியத்தன்மையாற்றெரித்துணர்த்தப்பட்ட து சமவாயமாதல் தனது சமவாயியோடு சமவேதமாதல் என் னுமிரண்டனுளொன்றாகியசம்பந்தத்தான் வரைந்துகொள்ளப் பட்ட காரணத்தன்மையெனப்படும்; அதற்குப்பற்றுக்கோடா வது அசமவாயிகாரணமாமென்க. மற்றுத்திரவியத்தின் அசம வாயிகாரணமாகிய அவயவங்களினியைபுமுதலியவற்றின்கண் சமவாயசம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்டது குடத்தன் மை; அதனான் வரைந்துகொள்ளப்பட்டது காரியத்தன்மை; அதனாற்றெரித்துணர்த்தப்பட்டது சமவாயசம்பந்தம்; அதனால் வரைந்துகொள்ளப்பட்டது அவயவமிரண்டனதியைபு; அதன் கண்ணதாகிய காரணத்தன்மை அவயவமிரண்டனியைபின்க ணுளதாம். இங்ஙனம் ஆதியில்வீழ்ச்சியாகியதொழிற்கண்ணும் ஆதியிலொழுகுதலாகியதொழிற்கண்ணுங் குருத்துவமுந் திர வத்துவமும் அசமவாயிகாரணமாம், ஆதியில்வீழ்ச்சியாகியதொ ழிலைக்குறித்தும்ஆதியிலொழுகுதலாகிய தொழிலைக்குறித்துஞ் சமவாயசம்பந்தத்தானே அவைகாரணமாதலின். மற்று அவ யவியினது குணமுதலியவற்றின்கண் அவயவத்தினது குண முதலியவற்றிற்குத் தனது சமவாயிகாரணத்தோடு சமவேதப் படுதலாகிய சம்பந்தத்தாற்றானே காரணமாதலுண்மையான், அச்சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட காரணத்தன்மை க்குப் பற்றுக்கோடாதல் அவயவத்தினது குணமுதலியவற்றி ன்கணுளதாம், அவயவத்தினது குணமாகிய குடத்தினவய வம், நூல்முதலியனவற்றினுருவமுதலியன தனதென்றதனாற் கூறப்படுங் குடத்தினவயவத்தினுருவம் நூலினுருவம் என்

பனவற்றின் சமவாயியாகிய குடத்தினவயவம், நூல் என்ப னவற்றோடு சமவேதப்பட்டுநிற்றலாகிய சம்பந்தத்தாற் குடம் ஆடைமுதலியவற்றினுண்மையானென்க.

அவ்விரண்டின்வேறாய எ-து. நிமித்தகாரணத்தினிலக்க ணங்கூறுகின்றது. சமவாயிகாரணம் அசமவாயிகாரணமென் பனவற்றின் வேறாயகாரணமாதல் நிமித்தகாரணத்திற்கிலக் கணமென்றவாறு. இங்ஙனங்கூறிய மூவகைக்காரணங்கள் எ-து. வியாபாரமுடையதாயெனவுங் கூட்டியுரைத்துக்கொ ள்க. அங்ஙனமன்றேல் நூல், குடத்தினவயவமென்பனவற் றினியைபின்கண் அதிவியாத்திவரும். நூல், குடத்தினவயவ மென்பனவற்றினியைபின்கண்ணும், காரியத்தன்மையின்மே ற்பட்டனவாகிய ஆடைத்தன்மை குடத்தன்மை முதலியவற் றான் வரைந்துகொள்ளப்பட்டதனைக்குறித்துக் காரணமாத லுண்மையின், சிறப்பாதலுண்டாமாகலின், ஆண்டுக்கரண மாதலினீக்குதற்கு வியாபாரமுடைத்தாயெனக் கரணத்தினி லக்கணத்திற்கு அடைகொடுக்கற்பாற்று. வியாபாரமாதல் அதனிற்றோன்றி அதனிற்றோன்றற்பாலதனைத் தோற்று வித்தலுடைமை. தண்டத்தாற்றோற்றுவிக்கப்பட்டுத் தண் டத்தாற்றோற்றுவிக்கப்படுங் குடமுதலியவற்றைத் தோற்று வித்தலாற் சுழற்சிமுதலியன தண்டத்தின்வியாபாரமாமன் றோ; இங்ஙனங் குடத்தினவயவம் நூல் என்பனவற்றின் இயைபு முதலியனவற்றிற்குக் குடத்தினவயவம் நூல் என்ப னவற்றின் வியாபாரமாதல், குடத்தினவயவம் நூல் என்பன வற்றாற்றோன்றிக் குடத்தினவயவம் நூல் என்பனவற்றாற் றோன்றற்பாலனவாகிய குடம் ஆடையென்பனவற்றைத்தோ ற்றுவித்தலுடைமையானென்க. கரணத்தி னிலக்கணத்தின் கட் சிறப்பென்னும் விசேடணம்புணர்த்துரைக்கப்படாதவழி, ஈசுரன், ஊழ்முதலியவற்றின்கண்ணும் வியாபாரமுடைத்தா

கிய காரணமாதலுண்மையின், ஆண்டு அதிவியாத்தி நீக்குத ற்குச சிறப்பெனவிசேடணம் புணர்த்துரைக்கப்பட்டது.

## பிரத்தியக்ஷப்பிரமாணம்.

௬௩. 'அவற்றுள், காண்டலாவது காட்சியறிவிற்குக் கரணம். அறிவிற்குக் கரணமாகாத அறிவு காட்சி. காட்சி இந்திரியவிடயசம்பந்தத்தாற்றோன்று ஞானம். அது நிருவிகற்பகமும், சவிகற்பகமும் எனஇருவகைத்து. அவற்றுள், நிருவிகற்பகம் விசேடணமின்றித்தோன்றும் ஞானம். சவிகற்பகம் விசேடணத்தோடுதோன்றும் ஞானம; எங்ஙனம், இவன்சாத்தன், இவன்பார்ப்பான், இவன்கரியன் என்பன.

அவற்றுள் எ-து. அறுவகையிந்திரியங்களாகிய காட்சியளவைக்கிலக்கணங்கூறுகின்றது. பிரமையாயவற்றுள், காட்சியெனப்படும் சட்சுவாற்கவரப்படுவதுமுதலிய காண்டலறிவு யாது. அதனைக்குறித்து வியாபாரமுடைத்தாகிய சிறப்புக்காரணமிந்திரியமாம்; ஆதலின் காட்சியறிவிற்குக்கரணமாதல் காண்டற்கிலக்கணம். முதற்கணுளதாகிய சம்பந்தத்தின்மேற்பட்ட நால்வகைச்சம்பந்தங்கட்குச் சமவாயத்தால் இந்திரியத்தாற் றோற்றுவிக்கப்படுதலின்மையின், வியாபாரமின்றாகலான் இந்திரியத்திற்கும் மனத்திற்குமுள்ளகூட்டமே, தோற்றுவிக்கப்படுவதாகிய புறத்துநிகழுங்காட்சிக்கண் இந்திரிய வியாபாரமாதலும், மற்று அகத்துநிகழும் மானதக்காட்சிதோன்றுதற்கண் ஆன்மாவிற்கும் மனத்திற்குமுள்ள சையோகமே வியாபாரமாதலுமறிந்துகொள்க.

அறிவிற்குக்கரணமாகாத எ-து. காட்சியளவையினிலக்க ணங்கூறிக் காட்சிப்பிரமையினிலக்கணங்கூறுகின்றது. இது மெய்துரைக்கப்படுமிலக்கணம். அறிவு, வியாத்தியறிவும் ஒப் புமையறிவுஞ் சொல்லறிவுமாம்; அஃது எவற்றிற்குக்கரண மாம், அவை அறிவிற்குக்கரணம் எனப்படுவனவாகிய அநுமிதி உவமிதி சாத்தமென்பனவாம். அவ்வறிவிற்குக்கரணமாகாமை யினறிவிற்குக்கரணமாகாத எனப்பட்டது; அஃதுடைமை கா ட்சியளவைக்கிலக்கணம். காட்சியளவைக்கு இந்திரியங்களே கரணமாம்; மற்று அறிவுகரணமாகாது. இஃது ஈசுரனதுகா ட்சிக்குப் பொதுவிலக்கணமாம், ஈசுரனதுகாட்சியளவை தோ ற்றுவிக்கப்படுவதன்றாகலினென்க. ஆதலின், தோற்றப்படுவ தாகிய காட்சியளவையையே இலக்கியமாகவெடுத்துக்கொண் டு இந்திரியவிடயசம்பந்தமென இலக்கணங்கூறப்பட்டது. தோற்றுவிக்கப்பட்ட காட்சியளவையே இலக்கியமாமென்னு ங்கருத்தால் இவ்விலக்கணங்கூறப்பட்டவாறறிக. நிருவிகற்ப கம் எ-து. காட்சியளவையைப்பகுக்கின்றது. அவற்றுள் நிருவி கற்பகம் எ-து. அதற்கிலக்கணங்கூறுகின்றது. விசேடணத்த ன்மையின்மையோடுகூடிய ஞானமாதலே நிருவிகற்பகமாமெ ன்றவாறு. நிருவிகற்பகத்தின்கண் நான்காவதாகிய விடயத் தன்மை கொள்ளப்படும்; மற்று மூவகைவிடயத்தன்மைகளுள் ஆண்டு யாதுமின்றென்க; ஆதலின்விசேடியத்தன்மையின்மை யோடுகூடிய ஞானமாதலெனப்படுஞ் சமூசர்க்கத்தன்மையின் மையோடுகூடியஞானமாதலும் இலக்கணமாம். விசேடணத் தோடுகூடிய எ-து. சவிகற்பகத்திற்கிலக்கணங்கூறுகின்றது. விடயத்தன்மை ஞானத்தாற்றெரிந்துணர்த்தப்படுவதாதலின், ஞானம் விடயத்தன்மையைத் தெரிந்துணர்த்து மியல்புடை மையான் விசேடணத்தன்மையைத்தெரிந்துணர்த்துஞானமா தல் சவிகற்பகத்திற்கிலக்கணம். இங்ஙனமே, விசேடியத்த ன்மையைத் தெரிந்துணர்த்து ஞானமாதலும் சமூசர்க்கத்தன்

மையைத்தெரித்துணர்த்து ஞானமாதலும் இலக்கணமாம். எங்ஙனம் எ-து. உதாரணம். இவனுந்தன்மையான்வரைந்து கொள்ளப்பட்டதாகிய விசேடியத்தன்மையாற்றெரித்துணர்த் தப்பட்ட சாத்தனுகியவிசேடணத்தன்மையுடையவறிவும், பார்ப்பனத்தன்மையாகிய விசேடணத்தன்மையுடையவறிவுஞ் சவிகற்பகமாமென்றவாறு.

சச. • காண்டலறிவிற்கு ஏதுவாகிய இந்திரியத்திற்கும் பொருட்குமுளதாய சம்பந்தம் சையோகமும், சையுத்தசமவாயமும், சையுத்தசமவேதசமவாயமும், சமவாயமும், சமவேதசமவாயமும், விசேடண விசேடியத்தன்மையும் என அறுவகைப்படும். சட்சுவாற் குடக்காட்சி தோன்றும்வழிச் சையோகஞ் சம்பந்தமாம்; குடவுருவக்காட்சி தோன்றும்வழிச் சையுத்தசமவாயஞ் சம்பந்தமாம்; சட்சு சையுத்தமாய குடத்தின்கண் உருவம் சமவாயப்பட்டுநிற்றலானென்க. உருவத்தன்மைப்பொதுமைக்காட்சி தோன்றுமவழிச் சையுத்தசமவேதசமவாயம் சம்பந்தமாம், சட்சு சையுத்தமான குடத்தின்கண்உருவம் சமவேதமும் அதன்கண் உருவத்தன்மை சமவாயமுமாதலானென்க. சோத்திரத்தாற் சத்தத்தினைநேரேகாணும் வழிச் சமவாயஞ் சம்பந்தமாம்; செவித்துளையிலிருக்கும் ஆகாயம் சோத்திரமாகலின், சத்தம் ஆகாயகுணமாதலின், குணமுங் குணியும் சமவாயமாதலானென்க. சத்தத்தன்மையினை நேரேகாணும்வழிச் சமவேதசமவாயஞ் சம்பந்தமாம், சோத்திரத்தின்கட் சமவேதமாய சத்தத்தின்கண் சத்தத்தன்மை சமவாயமாதலானென்க. அபாவக்காட்சிக்கண் விசேடண விசேடியத்தன்மை சம்பந்த

மாம், குடத்தினபாவத்தையுடையது பூதலம் என்புழிச் சட்சு சையுத்தமான பூதலத்தின்கண் குடத்தினபாவம் விசேடணமாதலானென்க. இவ்வாறுகூறிய அறுவகைச் சம்பந்தத்தானுந் தோன்றிய அறிவு காண்டலெனப்படும்; அதற்குக்காரணம் இந்திரியம்; அதனால் இந்திரியம காண்டலளவையென்பது பெறப்பட்டது.

சையோகம் எ-து. கண்ணாற்காண்டன்முதலிய அறுவகைக் காட்சியளவைக்குங் காரணமாகிய அறுவகைச் சம்பந்தங்களையும் பகுக்கின்றது. திரவியத்தின்கணுளதாகிய உலகம்பற்றிநிகழும் விடயத்தன்மைச்சம்பந்தத்தாற் சட்சுவாற்காணப்படுந்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதற்குச் சட்சுவினது சையோகங்காரணம். திரவியத்தினது சமவேதத்தின்கணுளதாகிய உலகம் பற்றிநிகழும் விடயத்தன்மைச் சம்பந்தத்தாற் சட்சுவாற்காணப்படுந்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதற்குச் சட்சுவினது சையுத்தசமவாயங்காரணம், திரவியத்தினது சமவேத சமவேதத்தின்கணுளதாய உலகம்பற்றி நிகழும் விடயத்தன்மைச்சம்பந்தத்தாற் சட்சுவாற்காணப்படுந் தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதற்குச் சட்சுவினது சையுத்தசமவேதசமவாயங்காரணம். திரவியத்தைக்கவரும் இந்திரியங்கள் சட்சு, துவக்கு, மனமென்னுமூன்றுமேயாம். ஏனைக்கிராணம், இரசனம், சோத்திரமென்பன குணத்தைக் கவர்வனவாம்; ஆதலின் துவக்கிந்திரியத்தின்கண் திரவியத்தின்கணுளதாகிய உலகம்பற்றிநிகழும் விடயத்தன்மைச் சம்பந்தத்தாற் றுவக்கிந்திரியத்தாற் காணப்படுந் தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதற்குத் துவக்கிந்திரியத்தினது சையோகங்காரணமாம். இங்ஙனமே திரவியத்தின்கட் சமவேதப்பட்டு நிற்பனவற்றைத் துவக்கிந்திரியத்தாற் காணுந்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதற்குத் துவக்கிந்திரி

யத்தினது சையுத்தசமவாயங்காரணம். திரவியத்தின்கட் சமவேதசமவேதமாகிய வெம்மைத்தன்மை தண்மைத்தன்மை முதலியனவாகிய சாதியையுற்றறியுங்காட்சிக்கட் டுவக்கிந்திரியத்தினது சையுத்தசமவேதசமவாயங்காரணம். இங்ஙனமே ஆன்மாவினை மனங் காண்டற்கண் மனத்தினது சையோகங்காரணமாம். ஆன்மாவின்கட் சமவேதப்பட்டுநிற்பனவாகிய சுக முதலியனவற்றை மனங்காண்டற்கண் மனத்தினது சையுத்தசமவாயங்காரணம். ஆன்மாவின்கட் சமவேதசமவேதமாகிய சுகத்தன்மைமுதலியவற்றை மனங்காண்டற்கண் அதன்கட் சையுத்தசமவேதசமவாயங் காரணம். மற்று இரசனம் கிராணமென்னுமிரண்டுஞ் சுவை நாற்றங்களையுமவற்றின் சாதியையுங் கவர்வனவாகலின் இரண்டாவதும் மூன்றாவதுமாகிய சம்பந்தங்களே ஆண்டுக்காரணமாகக்கூறப்படும். சோத்திரமென்னுமிந்திரியம் ஆகாயவடிவுடைமையானுஞ், சத்தம் ஆகாயகுணமாகலானுஞ், சோத்திரமென்னு மிந்திரியத்தோடொப்பச் சத்தத்தினது சமவாயஞ் சம்பந்தமாம். சத்தத்தின்கணுளதாகிய சத்தத்தன்மையுடைமை, ஆகாயத்தன்மை முதலிய சாதியை விடயமாகக்கொண்டு சோத்திரத்தாற் காண்டற்கட் சமவேதசமவாயங்காரணமாம்.

அபாவக்காட்சிக்கண் விசேடணவிசேடியத்தன்மையாவது விசேடணத்தன்மைச்சம்பந்தம். ஐவகைச்சம்பந்தங்களின் மேல் விசேடணத்தன்மைச்சம்பந்தங் கூட்டியுரைக்கப்படும்; அஃதாமாறு:— திரவியத்தின்கணுளதாகிய அபாவத்தினைக் காண்டற்கண் இந்திரியசையுத்தம் விசேடணத்தன்மையாம். திரவியத்தின்கட் சமவேதப்பட்டு நிற்பனவற்றின்கணுளதாகிய அபாவத்தினைக் காண்டற்கண் இந்திரிய சையுத்தசமவேதம் விசேடணத்தன்மையாம். திரவியத்தினது சமவேதசமவேதத்தின்கண்ணதாகிய அபாவத்தினைக் காண்டற்கண் இந்திரிய

சையுத்தசமவேதசமவேதம் விசேடணத்தன்மை. சையோகத்தின்கட் சையுத்தத்தன்மையென்பதனைக்கூட்டிச் சமவாயத்தின்கட் சமவேதமென்பதனைக்கூட்டி அபாவக்காட்சிக்கட் கொண்டுகொள்க. எங்ஙனம், குடமாகிய திரவியத்தின்கட் சமவேதப்பட்டு நிற்பன குடத்தன்மையும், பிருதிவித்தன்மை முதலியனவும், உருவமுதலியனவுமாம். ஆண்டுக்கருமைமுதலியனவற்றின்கட் பொன்மைமுதலியவற்றி னபாவமும், குடத்தன்மை முதலிய சாதிக்கட் படத்தன்மை முதலியவற்றினபாவமுமுள்ளனவாமன்றே; அவ்வபாவம் சையுத்தசமவேதமாகிய விசேடணத்தன்மைச்சம்பந்தத்தாற் கவரப்படும். இங்ஙனமே கருமைத்தன்மைமுதலியசாதிக்கட் பொன்மையினபாவமும் இந்திரியசையுத்த சமவேதசமவேதமாகிய விசேடணத்தன்மைச்சம்பந்தத்தாற்கவரப்படும். குடத்தின்கட் சமவேதமாயது கருமை; அதன்கட்சமவேதமாயது கருமைத்தன்மை; அதன் விசேடணத்தன்மை பொன்மையினபாவத்தின்கணுளதாமென்றவாறாயிற்று.

## அநுமானப்பிரமாணம்.

௩௫. அநுமானமாவது அநுமிதிக்குக்காரணம்: அநுமிதியாவது ஆராய்ச்சியாற்றோன்றுஞானம்: ஆராய்ச்சியாவது வியாத்தியான் விசேடிக்கப்பட்ட பக்கதருமத்தன்மைஞானம்: எங்ஙனம், தீயின்வியாப்பியமாகிய புகையுடையது இம்மலை என்னுஞானம் ஆராய்ச்சி: அதனாற்றோன்றுவதாகிய மலை புகையுடைத்து என்னுஞானம் அநுமிதியென்க: வியாத்தியாவது யாண்டு யாண்டுப் புகை,

ஆண்டுத்தீ என்னும் உடனிகழ்ச்சிநியமம்: பக்கதருமத்த ன்மையாவது வியாப்பியம் மலைமுதலியவற்றினுளதாதல்

அநுமிதி எ-து. அநுமானத்தினிலக்கணங் கூறுகின்றது. அநுமிதிக்கண் வியாத்தி ஞானங் கரணமும், ஆராய்ச்சி வியாபாரமும், அநுமிதி பலமெனப்படுங் காரியமுமென்றவாறு. ஆராய்ச்சி வியாத்திஞானத்தாற்றோன்றுவதாகலின் வியாத்தி ஞானத்தாற்றோன்றற்பாலதாகிய அநுமிதியைத் தோற்றுவிப்பதாகலின் அதனிற்றோன்றி யதனிற்றோன்றற்பாலதனைத் தோற்றுவிப்பதெனப்படும்வியாபாரமாதல் பொருந்துமென்க. அநுமிதிக்குக் கரணமாதலநுமானத்திற்கிலக்கணம். அநுமானம் வியாத்தி ஞானம். இஃது ஆராய்ச்சியெனப்படும் வியாபாரத்தின்வழியாலநுமிதிக்குச் சிறப்புக்காரணமாதலின் அநுமிதிக்குக் கரணமாதல் பொருந்துமென்க.

ஆராய்ச்சியாற்றோன்றுவது எ-து. ஆராய்ச்சியாற்றோன்றியதன்மையான் விசேடிக்கப்பட்ட ஞானமாதல் அனுமிதிக்கிலக்கணம். ஈண்டு ஞானமாதன் மாத்திரையே புணர்த்துரைக்கப்பட்டவழிக் காட்சியளவைமுதலியவற்றி னதிவியாத்திவருமாகலின் அது நீக்குதற்கு ஆராய்ச்சியாற்றோன்றுவது என்னும் விசேடணமும், ஆராய்ச்சியாற்றோன்றுவது என்பது மாத்திரையே கூறப்பட்டவழி ஆராய்ச்சியினழிவின்கணதிவியாத்திவருமாகலின் அது நீக்குதற்கு ஞானமாதலென்னும் விசேடியமும் புணர்த்துரைக்கப்பட்டன.

வியாத்தியான் விசேடிக்கப்பட்ட எ-து. அநுமிதியிலக்கணத்துட்பட்டதாகிய ஆராய்ச்சியினிலக்கணங் கூறுகின்றது. வியாத்தியான் விசேடிக்கப்பட்டதும், விசேடிக்கப்பட்ட பக்கதருமத்தன்மையறிவுமென விரிக்கப்படுதலிற் பண்புத்தொகைக்கண் விசேடிக்கப்பட்ட தென்பதற்கு விசேடணத்தன்மை

யைத் தெரித்துணர்த்துவதென்பது பொருளாகலானும், பக்ஷ தருமத்தன்மையறிவென்புழி, ஆறும்வேற்றுமைத்தொகையான் விடயமாதலறியப்படுதலானுந், தருமத்தன்மையென்பது சம்பந்தமென்னும் பொருளுடைத்தாகலானும், பண்புத்தொகைக்கட் டொகுக்கப்படுஞ் சொற்கும் பொருட்கும் வேறுபாடின்மையாகிய சமுசர்க்கம் பெறப்படுமாகலின் வியாத்தியாகிய விசேடணத்தின் வேறாகாது பக்கசம்பந்தத்தினை விடயமாகவுடைய வறிவு யாது, அது ஆராய்ச்சியென்பது பெறப்படும். அது பெறப்பட்டவழிப் புகை வன்னியின் வியாப்பியமாயது, ஒளியுடையது மலை எனப்படுங் கூட்டம்பற்றி நிகழ்வதன்கண் ஆராய்ச்சியினிலக்கணமுளதாகலின் அதிவியாத்தி வரும். அது நீக்குதற்குப் பக்கத்தின்கண்ணதாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டதும் எதுவின்கண்ணதுமாகிய விசேடணத்தன்மை யாது, அதனாற்றெரித்துணர்த்தப்பட்டதும் வியாத்தியின்கண்ணதுமாகிய விசேடணத் தன்மை யாது, அதனையுடைய வறிவு ஆராய்ச்சியென்பது தேற்றம். இவ்வியல்பிற்றாகிய வாராய்ச்சியாற்றோன்றிய ஞானமாதல் அநுமிதிக்கிலக்கணம். அநுமிதி ஆராய்ச்சியென்னுமிரண்டும் விசேடித்துக் காரிய காரணத்தன்மையுடையவாதல் வருமாறு:—மலைத்தன்மையான்வரைந்துகொள்ளப்பட்ட பொதுவகையாற் கூறப்படுந்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டதும், சையோகசம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட வன்னித்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதுமாகிய விதந்து கூறப்படுந் தன்மையுடைத்தாகிய அநுமிதித்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதற்கு, வன்னிக்கண் வியாத்தியாதலாகியவிசேடணத்தன்மையாற்றெரித்துணர்த்தப்பட்டதும்புகைத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதுமாகிய விசேடணத்தன்மை யாது, அதனாற்றெரித்துணர்த்தப்பட்டதும், மலைத்

தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதுமாயது, விசேடியத்த ன்மை; அதனையுடைத்தாகிய விளக்கஙகாரணமாம். அவ்விள க்கம் வன்னியின் வியாப்பியமாகிய புகையுடைத்து இம்மலை யென்பதாதலறிந்துகொள்க.

யாண்டு யாண்டு எ-து. யாண்டென்னுஞ் சொல்லடுக்காற் புகைநிலைக்களமெஙகும் வன்னியுடைத்தாந்தன்மை பெறப் படுதலின், எங்குமென்னுஞ் சொல்வலியால் வன்னியின்கட் புகை வியாபகமாதல் பெறப்பட்டது. உடனிகழ்ச்சிநியமம் எ-து. அதனையே விளக்குகின்றது. நியதமாயொருங்குநிகழ் தல் வியாத்தியென்பது உடனிகழ்ச்சி யென்பதன்பொருள். நியதமாதல் வியாபகமாதல். உடனிகழ்ச்சியாவது ஒரு நிலை க்களத்துளதாதல். ஆகவே, புகை நியதமாய் வன்னியோ டொருநிலைக்களத்துளதாதல் வியாத்தியென்றவாறு. ஈண்டு வன்னிக்கட் புகை வியாபகமாதலாவது புகையோடொரு நிலைக்களத்துளதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாந் தன்மையை வரைந்துகொள்வதாகாத வியல்புடைமை: அங ஙனமன்றே, புகையின் நிலைக்களமாகிய மலைவிடர் அடுக் களைமுதலியவற்றின்கணுள்ளது எவ்வபாவம், அது குடத்தன் மை முதலியவற்றான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித் தன்மையுடையதனபாவமாம். மற்று, வன்னித்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடையதனபா வமன்று, என்னை? மலை முதலியவற்றின்கண் வன்னியுண் மையானென்க. இஙஙனமாயவழிப் புகையினிலைக்களமாகிய மலைவிடர் முதலியவற்றின்கணுளதாகிய குடமுதலியவற்றி னபாவத்திற்குப் பிரதியோகியாந்தன்மையை வரைந்துகொள் வதும், குடத்தன்மை முதலியவற்றை வரைந்துகொள்ளாததது மாகிய வன்னித்தன்மை வன்னியின்கணுளதாம். ஆதலின், புகை வியாபகமாதல் வன்னியின்கணுளதேயென்க. இவ்வுந்

நுவயவியாத்தி சித்தாந்தபக்கம்பற்றிக் கூறப்பட்டது. மற்றுப் பூருவபக்கவியாத்தியாவது:-துணிபொருளின்மையுடைய தன்கணிலதாதல். துணிபொருட்டன்மையாகியவரைந்துகொள்வதன் சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்டதுந், துணிபொருட்டன்மையாகிய வரைந்துகொள்வதனான்வரைந்துகொள்ளப்பட்டதுமாகியபிரதியோகித்தன்மையுடையது பிரதியோகித்தன்மை; அப்பிரதியோகித்தன்மையாகிய வரைந்துகொள்வதன் சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையாகிய வரைந்து கொள்வதனான் வரைந்துகொள்ளப்பட்ட வேற்று நிலைக்களத்துளதாதலான் வரைந்து கொள்ளப்பட்டது அபாவமுடையது; அவ்வபாவமுடையதனாற் றெரித்துணர்த்தப்பட்ட ஏதுத்தன்மையாகிய வரைந்து கொள்வதன் சம்பந்தத்தான் வரைந்து கொள்ளப்பட்டது உண்மைத்தன்மையின் றன்மை; அவ்வுண்மைத்தன்மையின் றன்மையான் வரைந்து கொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடையதன பாவமென்பதுதேற்றம். அதுதான் கேவலாந்நுவயிக்கண்வியாபியாதது என்பது சித்தாந்தக் கோட்பாடு.

௪௬. அநுமானம் தன்பொருட்டநுமானமும், பிறன்பொருட்டநுமானமும் என இருவகைப்படும்.

தன்பொருட்டு எ-து. அநுமானத்தைப் பகுக்கின்றது.

**௪௭. தன்பொருட்டநுமானமாவது தனது அநுமிதிக்குக்காரணம்: அங்ஙனமன்றே, தானேயடுத்தடுத்துக் காண்டலான் யாண்டு யாண்டுப்புகை, ஆண்டு ஆண்டுத்தீ என அடுக்களை முதலியவற்றின்கண் வியாத்தியைக் கவர்ந்துகொண்டு மலையினணிமைக்கட்சென்றான்; ஆண்டுச்சென்றுழித் தீயின்கண் ஐயமுற்று மலையின்கட் புகை**

யைக்கண்டு யாண்டு யாண்டுப்புகை, ஆண்டு ஆண்டுத்தீ என வியாத்தியை நினைகின்றான். அதன்பின்னர்த் தீயின் வியாப்பியமாகிய புகையுடையது இம்மலை என்னுஞானந்தோன்றும். அதுவே இலிங்கபராமரிசம் எனக்கூறப்படும். அதனால் மலை புகையுடைத்தென்னும் அநுமிதி ஞானந்தோன்றும். இது தன்பொருட்டநுமானமெனக.

தன்பொருட்டு எ-து. தன்பொருட்டநுமானமாவது நியாயத்தின்கண் எடுத்தாளப்படாத அநுமானம்.

௪அ. தான் புகையால் தீயை அநுமித்துணர்ந்து பிறனுக்குணர்த்தும்பொருட்டு ஐவகையுறுப்புக்களையுடைய வாக்கியம் எடுத்தாளப்படுவது யாது, அது பிறன்பொருட்டநுமானமாம். எங்ஙனம், மலை தீயுடைத்து, புகையுடையதாதலால்; யாது யாது புகையுடைத்து, அது அது தீயுடைத்து அடுக்களைபோல, இஃதும் அங்ஙனம், ஆதலின் இங்ஙனம் என்பது. இதனாற்கூறப்பட்ட இலிங்கத்தால் பிறனுந் தீயுண்டென உணர்ந்துகொள்வன்.

தான் எ-து. பிறன்பொருட்டநுமானமாவது நியாயத்துளெடுத்தாளப்படுமநுமானம். நியாயமாவது மேற்கோள் முதலிய வைவகையுறுப்புக்களின் கூட்டம். உறுப்பின்றன்மை மேற்கோள் முதலியவற்றுளொன்றாதல்.

௪௯. ஐவகை உறுப்புக்களாவன பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என்பன. இதனுள் மலை தீயுடைத்து என்பது பிரதிஞ்ஞை; புகையுடைமையால்

என்பது ஏது; யாது யாது புகையுடைத்து, அது அது தீயுடைத்துஎன்பது உதாரணம்; இம்மலையும் அங்ஙனம் என்பது உபநயம்; ஆதலின் இங்ஙனம் என்பது நிகமனம்.

ரு௦. தன்பொருட்டநுமிதி பிறன்பொருட்டநுமிதியென்னுமிரண்டற்கும் இலிங்காராய்ச்சியே கரணம். அதனால் இலிங்கவாராய்ச்சி அநுமானமாம்.

ருக. இலிங்கம் அந்நுவயவெதிரேகியும், கேவலாந்நுவயியும், கேவலவெதிரேகியுமென மூவகைத்து.

ருஉ. அந்நுவயத்தானும் வெதிரேகத்தானும் வியாத்தியுடையது அந்நுவயவெதிரேகி. எங்ஙனம், தீயாகிய துணிபொருளின்கட் புகையுடைமை, யாண்டுப்புகை ஆண்டுத்தீ அடுக்களைபோல என அந்நுவயவியாத்தியும், யாண்டுத்தீயில்லை ஆண்டுப்புகையுமில்லை மடுப்போல என வெதிரேகவியாத்தியுமுண்மையின்.

அந்நுவயத்தானும் எ-து. வியாபகத்தோடொருநிலைக்களத்துளதாதலெனப்படும் வியாத்தியுடையதென்றவாறு. வெதிரேகத்தானும் எ-து. வெதிரேகமாவது அபாவம். ஆகவே, துணிபொருளினபாவத்தின்கண்ணும் ஏதுவினபாவத்தின்கண்ணும் வியாபித்தல் வெதிரேகவியாத்தியாம். இவ்வியாத்தி யாண்டு யாண்டுத்தீயில்லை ஆண்டாண்டுப் புகையில்லையெனவரும். யாண்டென்னுமடுக்கால் தீயினபாவமெங்கும் புகையினபாவங் கவரப்படுதலின், எங்குமென்பது வியாபகமாய் நிற்றலென்னும் பொருட்டாகலின் புகையினபாவத்தின்கட் டீயினபாவம் வியாபகமாதல் பெறப்படும். இங்ங

னமே தீயினபாவத்தின்கண்ணதாகிய வியாப்பியத்தன்மை தன்னைப்பற்றி நிற்பதாகிய தீயினபாவத்தின்கண் வியாபித்து நிற்பதாகிய அபாவத்திற்குப் பிரதியோகியாந்தன்மை சசம்பாதத்தானும், புகையின்கணுளதாந்தன்மையாற் கவாப்பட்ட வெதிரேகவியாத்தியுடைத்தாந்தன்மையானும், வெதிரேகியாந்தன்மையானும், புகையின் வியாபகமாகிய தீயோடொருங்கிலக்களத்துளதாதலெனப்படும் அந்நுவயவியாத்தியுடைத்தாந்தன்மையானும், அந்நுவயித்தன்மையானுங் கவரப்படும். மற்று வெதிரேகவாராய்ச்சி தீயினபாவத்தின்கண் வியாபகமாகிய அபாவத்தின் பிரதியோகியாகிய புகையுடையது மலையெனக்கண்டுகொள்க.

ருங. அந்நுவயத்தின் மாத்திரமே வியாத்தியுடையது கேவலாந்நுவயி. எங்ஙனம், குடம் அபிதேயம், பிரமேயத்தன்மையால், ஆடைபோல எனவரும். ஈண்டுப் பிரமேயத்தன்மை அபிதேயத்தன்மைகட்கு வெதிரேகவியாத்தியின்று, எல்லாப்பொருளும் பிரமேயமும் அபிதேயமுமாகலானென்க.

அந்நுவயத்தின் எ-து. கேவலாந்நுவயிக்கிலக்கணங் கூறுகின்றது. கேவலாந்நுவயியாற் றுணியப்படுதலுடைத்தாதல் ஏதுவிற்குக் கேவலாந்நுவயித்தன்மை. துணிபொருளின்கட் கேவலாந்நுவயித்தன்மையாவது முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாகாமை. ஆகவே, அபாவத்தின் பிரதியோகியல்லாததனாற் றுணியப்படுதலுடைத்தாதல் கேவலாந்நுவயியாகிய வேதுவிற்கிலக்கணமென்க. இவ்விலக்கணம் ஏது வெதிரேகியாயவழியு நன்குபோதரும். துணிபொருளினது கேவலாந்நுவயித்தன்மையானே வெதிரேகவியாத்தியின்மை

யின் அந்நுவயமாத்திரைக்கண் வியாத்தியுடையது கேவலாந்நுவயியென ஆசிரியர் கூறியவிலக்கணம் பொருந்தும். முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாகாமையெனப்படுங் கேவலாந்நுவயித்தன்மை ஆகாயத்தினபாவத்தின்கண்ணுஞ், ஸம்யோகத்தினபாவத்தின்கண்ணும் வியாத்தியுடைத்தன்றெனக் கூறற்க, தனது மறுதலைக்கணுள்ளதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாகாமை என்பதே யதன்பொருளாகலின். ஒரு சாதிமையுடையதன் சம்பந்தத்தா லெங்குமறியப்படுவதாந்தன்மை கேவலாந்நுவயித்தன்மையென்பர் நவீனர்.

ருச. கேவலவெதிரேகி வெதிரேகத்தின் மாத்திரமே வியாத்தியுடையது. எங்ஙனம், பிருதிவி ஏனையவற்றின் வேறு, நாற்றமுடைத்தாதலால், யாது ஏனையவற்றின் வேறன்று, அது நாற்றமுடையதன்று, அப்புப்போல, இஃது அங்ஙனமன்று, ஆகலின் இங்ஙனமன்று என வரும். ஈண்டு யாது நாற்றமுடைத்து, அது ஏனையவற்றின் வேறு என அந்நுவயதிருட்டாந்தமில்லை, பிருதிவி முழுதும் பக்கமாகலின்.

வெதிரேகத்தின் எ-து. கேவலவெதிரேகியினிலக்கணங் கூறுகின்றது. கேவலவெதிரேகித்தன்மையாவது அந்நுவயவியாத்தியின்றி வெதிரேகவியாத்தியுடைத்தாதல். எங்ஙனம் பிருதிவி எ-து. ஈண்டுப் பிருதிவித்தன்மையான் வரைந்து கொள்ளப்பட்டது பக்கம். பிருதிவியின்வேறாகிய நீர்முதலிய வெண்வகைப்பொருள்களுந் துணிபொருள்கள். நாற்றமுடைத்தாதல் ஏது, ஈண்டு யாது நாற்றமுடைத்து அஃது ஏனையவற்றின் வேறெனஅந்நுவயதிருட்டாந்தமின்மையின் நாற்றம் வியாபகமாகிய வேனையவற்றின் வேறுபாட்டோடொரு

நிலேக்களத்துளதாதலெனப்படும் அந்நுவயவியாத்திகவரப்படுத லின்மையின். மற்று யாண்டுயாண்டுப்பிருதிவி ஏனையவற்றின் வேறுதலின்று, ஆண்டு ஆண்டு நாற்றமின்று எங்ஙனம் அப்பு முதலியனவெனவெதிரேக திருட்டாந்தமாகிய அப்புமுதலிய வற்றின்கண்ணேனையவற்றின் வேறுதலின்மையெனப்படுந் துணிபொருளின்மை வியாபகமாதல் நாற்றமின்மைக்கட்கவரப்படும். இக்கருத்தால் யாது ஏனையவற்றின் வேறன்று அது நாற்றமுடைத்தன்று, அப்புப்போல என்பதனுல் ஆசிரியர் வெதிரேகவியாத்தியையே காட்டினர். இம்முறைமைபற்றி வெதிரேகவியாத்தி கவரப்பட்டபின்னர், ஏனையவற்றின் வேறுதலின்மை வியாபகமாகிய அபாவத்தின் பிரதியோகியாகிய நாற்றத்தினையுடையது பிருதிவியெனப்படும் வெதிரேகவாராய்ச்சியாற் பிருதிவித்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதாகிய உத்தேசிக்கப்பட்டதன்றன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட வேனையவற்றின் வேறுந்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட விதந்துகூறப்படுந்தன்மையுடைத்தாகிய பிருதிவி ஏனையவற்றின் வேறெனப்படும் அநுமிதி தோன்றுமென்பதே உண்மைப்பொருளாகக்கொள்க. கிடக்கை முறைமைபற்றியுரைக்கும் பொருளாமாறு;— அப்புப்போல எ-து. அப்பு ஏனையவற்றின் வேறுதலின்மையுடையதும் ஏனையவற்றின் வேறுதலின்மை வியாபகமாகிய நாற்றமின்மையுடையதுமாம். ஆதலின் நாற்றமின்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட வியாப்பியத்தன்மை யேனையவற்றின் வேறுதலின்மைக்கட் கவரப்படுமென்றவாறு. இஃது அங்ஙனமன்று எ-து. இப்பிருதிவி அங்ஙனம் ஏனையவற்றின் வேறுதலின்மை வியாபகமாகிய நாற்றமின்மையுடைத்து; மற்று அதனின்மையெனப்படும் நாற்றமுடைத்தன்று. ஆதலின் இங்ஙனமன்று எ-து. அது என்றதனுல் நாற்றத்தினின்மையினின்மையெனப்படும் நாற்றத்தினு

ராய்ச்சியாலென்பதூஉம் ஆதலினென வைந்தாம்வேற்றுமை யாற்கூறப்படுதலின் நாற்றத்தினின்மையினின்மையையுடைத் தாதலாலென்பதூஉமறிந்துகொள்ளப்படும். இங்ஙனம் எ-து. ஏனையவற்றின் வேறாதலில்லதென்னும்பொருட்டு. அன்று எ-து. இதனின்மை; ஆகவேயேனையவற்றின் வேறாதலின்மையினின்மையுடையது ஏனையவற்றின் வேறாதலுடையதென்றவாறு.

**௫௫. பக்கம் ஐயுற்றுத்துணியும் பொருளுக்கிடம்: எங்ஙனம், புகையுடைமையாகிய ஏதுவின்கண் மலை. சபக்கம் துணிந்தபொருளுக்கிடம்: எங்ஙனம், அவ்வேதுவின்கண் அடுக்களை. துணிந்த பொருளில்லாதவிடம் விபக்கம்: எங்ஙனம், ஆண்டே மடு.**

ஐயுற்று எ-து. பக்கத்தினிலக்கணங்கூறுகின்றது. பக்கத் தன்மையாவது துணிபொருளினியல்பாகிய ஐயத்தான் விசேடிக்கப்பட்டதாதல். இவ்விலக்கணம் அனுமிதிக்குமுன்னர்த் துணிபொருளினையுறவு ஒருதலையாகத் தோன்றுமென்னுங் கருத்தாற் பிராசீனராற் கூறப்பட்டது. ஆகாயமாகிய விசேடியத்தினையுடைய மேகமாகிய விசேடணத்தின்கணையுறவில்லாதவழியுமில்லகத்திருப்போன் மேகமுழக்கங்கேட்டுழி ஆகாயம் மேகமுடைத்தென்னுமாகாயத்தன்மையான்வரைந்துகொள்ளப்பட்டதாகிய பொதுவகையாற் கூறப்படுந் தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட மேகத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட விதந்துகூறப்படுந்தன்மையுடையதனு லநுமிதிதோன்றுதல் காணப்படுதலிற் பிராசீனர் கூறுமிலக்கணத்தினை நீக்கி நவீனரா லநுமிதி பொதுவகையாகக் கூறப்படுதல் பக்கத்தன்மையென்னுமிலக்கணம் வலியுறுத்தப்பட்டது.

துணிந்த எ-து. சபக்கத்தினிலக்கணங்கூறுகின்றது. சபக்கமாவது துணிந்தபொருளாகிய விசேடணத்தையுடைய துணிவான் விசேடிக்கப்பட்டதாதல். துணிவாவது அடுக்களைதியுடைத்து என்பது.

துணிந்தபொருளில்லாத எ-து. விபக்கத்தினிலக்கணங்கூறுகின்றது. விபக்கத்தன்மையாவது துணிபொருளின்மையாகிய விசேடணத்தையுடைய துணிவின் விசேடியமாவது. துணிவுதான் மடுத் தீயில்லது என்பது.

**ருசா. ஏதுப்போலி சவ்வியபிசாரம், விருத்தம், சற்பிரதிபக்கம், அசித்தம், பாதிதம் என ஐவகைத்து.**

சவ்வியபிசாரம் எ-து. இங்ஙனம் உண்மையேதுவைத்தெரித்துணர்த்தி ஏதுப்போலிகளைத் தெரித்துணர்த்துகின்றது. ஏதுப்போறலுடைமையான் ஏதுப்போலி, குற்றமுடைய ஏதுவென்றவாறு. குற்றங்களாவன வியபிசாரம், விரோதம், சற்பிரதிபக்கம், அசித்தி, பாதமென்பன. இவற்றுள் விசேடிக்கப்பட்ட ஏதுக்கள் குற்றமுடைய வேதுக்களாமென்றவாறு. எவ்விடயத்தன்மையால் அறிவு அநுமிதியு மதன்கரணமுமாகிய விரண்டனுளொன்றன்கட் டடைப்பாடுடையதாம், அதனையுடைமை குற்றப்பொதுமைக்கிலக்கணம். ஏதுவின்கட் குற்றமறியப்பட்டவழி அநுமிதிக்குத்தடையாதல் வியாத்தியறிவிற்குத்தடையாதல்தோன்றும்; ஆதலின், வாதியைத்தோல்விப்படுத்தும்பொருட்டு அவனெடுத்துக்காட்டப்பட்டவேதுவின்கட் குற்றமெடுத்துக் காட்டும்பொருட்டுக் குற்றமுடைய வேது தெரித்துணர்த்தப்பட்டதென்றவாறு. மலைதீயுடைத்துப் பிரமேயமாதலால் என்றவழிப் பிரமேயமாதலாகிய வேதுவின்கட்டீயில்லாவிடத்து முளதாதலெனப்படும் வியபிசாரமறியப்பட்டவழித் தீயில்லதன்கணிலதாதலெனப்படும் வியாத்தியறிவின்றடைப்பாடு பலம்.

ருஎ. அவற்றுள் சவ்வியபிசாரம், அநைகாந்திகம், அது பொதுவும், சிறப்பும், முடிவுபெறுததும் என மூவகைத்து.

ருஅ. அவற்றுள் பொதுவநைகாந்திகம் துணிபொருளில்லாவிடத்து மிருப்பது. எங்ஙனம், மலை தீயுடைத்து பிரமேயமாதலால் என்பது; பிரமேயமாந்தன்மை தீயில்லாவிடமாகிய மடுவின்கண் இருத்தல் அறியப்படுதலி னென்க.

ருக. சிறப்பநைகாந்திகம் சபக்க விபக்கங்களெல்லாவற்றினும் இல்லாதது. எங்ஙனம், சத்தம் நித்தியம் சத்தத்தன்மையுடைமையான் என்பது. சத்தத்தன்மை நித்தியப்பொருள் அநித்தியப்பொருள் யாவற்றினுமின்றிச் சத்தத்தின்மாத்திரமிருப்பது.

சிறப்பு எ-து. சபக்க மெல்லாவற்றினு மிலதாதலாவது துணியப்பட்ட துணிபொருளுள்ளதன்கணிலதாதல். துணிபொருளுள்ளதன்கணிலதாதலாவது துணிபொருளோடொருநிலைக்களத்துளதாகாமை. எது துணிபொருளோடொருநிலைக்களத்துளதாதறுணியப்பட்டவழித் துணிபொருளோடொருநிலைக்களத்துண்மையெனப்படும் வியாத்தியறிவின் றடைப்பாடு பலம்.

சுo. முடிவுபெறுதது அந்நுவய திருட்டாந்தமும் வெதிரேகதிருட்டாந்தமும் இல்லாதது; எங்ஙனம், எல்லாம் அநித்தியம் பிரமேயமாதலால் என்பது. ஈண்டு எல்லாம் பக்கமாதலின் திருட்டாந்தமில்லை.

அந்நுவயம் எ-து. முடிவுபெறாததற்கிலக்கணங்கூறுகின்றது. ஈரிடத்துந் திருட்டாந்தமின்மையால் அந்நுவயவியாத்தியறிவும் வெதிரேகவியாத்தியறிவுமென்னு மிரண்டற்குங் கருவியில்லையென்றவாறு. எல்லாம் பக்கமாதலிற் பக்கத்தின் மேற்பட்டதறியப்படாமையினென்பது கருத்து.

**சுக. துணிபொருளில்லாவிடத்து வியாபித்திருக்கும் ஏது விருத்தம்; எங்ஙனம், சத்தம் நித்தியம் காரியப்பாட்டால் என்பது. காரியப்பாடு நித்தியத்தன்மையல்லாததாகிய அநித்தியத்தன்மையான் வியாபிக்கப்பட்டது.**

துணிபொருளில்லாவிடத்து வியாபித்திருக்கும் எ-து. விருத்தத்திற்கிலக்கணங்கூறுகின்றது. துணிபொருளில்லா விடத்தில் வியாபித்தலாவது துணிபொருளின்மையாற்றெரித்துணர்த்தப்பட்ட வெதிரேகவியாத்தியெனப்படுந் துணிபொருட்கண் வியாபகமாகிய வின்மைக்குப் பிரதியோகியாதல். ஆகவே பக்கமாகிய விசேடியத்தினையுடைய துணிபொருளின்மையால் வியாபிக்கப்பட்ட வேதுவாகிய விசேடணவறிவாற் பக்கமாகிய விசேடியத்தினையுடைய துணிபொருளெனப்படும் விசேடணம்பற்றி நிகழுமநுமிதிக்குத் தடையாதல் பலமாம். இங்ஙனஞ் சற்பிரதிபக்கத்துங்கொள்க. மற்று விருத்தஞ் சற்பிரதிபக்கமென்னுமிரண்டற்கும்வேறுபாடு விருத்தத்திற்கேது ஒன்றாதலானும், சற்பிரதிபக்கத்திற்கேது இரண்டாதலானுமறியப்படும். சற்பிரதிபக்கத்தின்கண் ஏது இரண்டெனவும் விருத்தத்தின்கண் ஏது ஒன்றெனவுமறிக. துணிபொருளினின்மையைச்சாதிப்பதாகிய வேது துணிபொருளைச்சாதித்தலுடைமையானொருங்குகூறப்பட்ட தாதாவின் ஒருபொருண்மேல் வாராமையுமறிக.

௬உ. துணிபொருளின் மறுதலையைச் சாதிக்கும் வேற்றேதுவையுடையது யாது, அது சற்பிரதிபக்கமாம்; எங்ஙனம், சத்தம் நித்தியம், கேட்கப்படுதலால், சத்தத்தன்மைபோல; சத்தம் அநித்தியம், காரியப்பாட்டால், குடம் போல என வரும்.

௬௩. அசித்தம் சார்பசித்தமும் சொரூபாசித்தமும் வியாப்பியத்தன்மை யசித்தமும் என மூவகைப்படும்.

௬௪. சார்பசித்தம் எங்ஙனம் ஆகாயத்தாமரை நறுநாற்றமுடைத்து, தாமரைத்தன்மையால், பொய்கைத் தாமரைபோல என வரும். ஈண்டு ஆகாயத்தாமரை சார்பு; அதுவே இல்லை.

சார்பசித்தம் எ-து. சார்பசித்தியாவது பக்கத்தன்மையை வரைந்துகொள்வதனுல் விசேடிக்கப்பட்ட பக்கத்தினது வழக்கின்மை, எங்ஙனம் எ-து. ஈண்டுத் தாமரையினது ஆகாயத்தின்கணுளதாதலின்மை துணியப்பட்டவழி ஆகாயத்தினுளதாதலான் விசேடிக்கப்பட்ட தாமரைக்கண் நறுநாற்றமுடைமையாகிய வநுமிதியின் றடைப்பாடுபலம்.

௬௫. சொரூபாசித்தம் எங்ஙனம், சத்தம் குணம், சட்சுவிற்குப்புலனுதலின், உருவம் போல என வரும். ஈண்டும் சட்சுவிற்குப்புலனுதல் சத்தத்திற்கின்று, சத்தம் சோத்திரத்திற்குப் புலனுவதாதலின்.

சொரூபாசித்தம் எ-து. சொரூபாசித்தியாவது பக்கத்தின்கண் ஏதுவின்மை; ஆகவே ஏதுவின்மையான் விசேடிக்

கப்பட்ட பக்கஞானத்தாற் பக்கமாகிய விசேடியத்தினையு டையவேதுவினியல்பினாராய்ச்சி பொருந்தாமையான் ஆராய்ச்சியின்றடைப்பாடுபலமாம்.

சுசு. வியாப்பியத்தன்மையசித்தமாவது உபாதியோடுகூடிய ஏது; உபாதி சாத்தியத்தின்வியாபித்து ஏதுவின்கண் வியாபியாதது. சாத்தியத்தில் வியாபித்தல் சாத்தியத்தோடொருங்கிலைக்களத்துளதாகிய முழுதுமபாவத்திற்கு பிரதியோகியாகாமை. ஏதுவின்வியாபியாமை ஏதுவின்கண்ணதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாதல். மலை புகையுடைத்து, தீயுடைமையால் என்புழி ஈரவிறகின்கூட்டம் உபாதி, யாண்டுப்புகையுண்டு, ஆண்டு ஈரவிறகின்கூட்டமுண்டு எனச் சாத்தியத்தில் வியாபகமாயும் யாண்டுத்தீயுண்டு ஆண்டு ஈரவிறகின் கூட்டமின்று, ஒழுகக்காய்ச்சிய இரும்பில் ஈரவிறகின்கூட்டமின்மையின் என ஏதுவின்கண் வியாபகமாதலின்றியுமிருத்தலினென்க. இங்ஙனமாதலின், சாத்தியத்தின் வியாபகமாய் ஏதுவின்கண் வியாபகமின்றியிருத்தலின், ஈரவிறகின்கூட்டம் உபாதியாம். உபாதியுடைமையால் தீயுடைத்தாதல் வியாப்பியத்தன்மையசித்தம்.

வியாப்பியத்தன்மையசித்தம் எ-து. முதற்கண்ணதாகிய புகையின்கண் வியாபித்தல் ஈரவிறகின்கூட்டத்தின்கட் கவரப்பட்டதெனிற் புகையின்கண் ஈரவிறகின்கூட்டம் வியாபிக்கப்பட்டமை கவரப்படும். இங்ஙனந் தீவியாபகமாதல் ஈரவிறகின் கூட்டத்தின்கட் கவரப்பட்டதாயின், தீயின்கண் அது வியாபிக்கப்படாமை கவரப்பட்டதாம். அதுவே முறை

பிறழ்ச்சியெனப்படும். ஆகவே, உபாதியின் முறைபிறழ்ச்சி ஏதுவின்கட் கவரப்பட்டதாயின் உபாதியாகிய ஈரவிறகின் கூட்டத்தான் வியாபிக்கப்பட்ட புகையின் முறைபிறழ்ச்சியுங் கவரப்பட்டதேயாம். அநுமானத்தினியல்பும் முன்னுள்ளவநுமானத்தின் ஏதுவைப் பக்கமாகக்கொண்டு தீ புகையான் முறைபிறழ்வது புகையான் வியாபிக்கப்பட்ட ஈரவிறகின் கூட்டத்தின் முறைபிறழ்தலின்மையால், குடத்தன்மைமுதலியனபோல. எவை எச்சாத்தியத்தின்கண் வியாபகமாதற்கண் முறைபிறழ்வனவாம், அவைமுழுதுஞ் சாத்தியத்தின்கண் முறை பிறழ்வனவேயாமெனவறிக. இம்முறைமையால் முதற்கண்ணதாகிய வநுமானத்தினேதுவாகிய பக்கத்தின்கட் டுணிபொருட்கண் முறைபிறழ்ச்சியை நிலைநிறுத்துவதாந்தன்மையாற் குற்றமுடைத்தாதல் உபாதிக்குப்பலமாம். அங்ஙனமே புகையில்லாதவிடத்து உளதாதலெனப்படும் புகையின் முறைபிறழ்ச்சி கவரப்பட்ட தீயின்கண் புகையில்லாதவிடத்து இலதாதலெனப்படும் வியாத்தியறிவின்றடைப்பாடுபலமாம்.

**௬எ. எதனது துணிபொருளின்மை வேறுபிரமாணத்தாற் றுணியப்படும், அது பாதிதமாம்; எங்ஙனம், வன்னி வெம்மையில்லது, திரவியமாதலின், எனவரும். ஈண்டு வெம்மைத்தன்மையின்மை துணிபொருள் அதனபாவமாகிய வெம்மைத்தன்மை துவக்கிந்திரியக்காட்சியாற் கவரப்படுமாதலின் இது பாதிதமாயிற்று.**

எதனது எ-து. எவ்வேதுவினது துணிபொருட்கு அபாவமுளதாம், அவ்வபாவந் துணிபொருளபாவம்; அதுவும் வேறுபிரமாணமாகிய காட்சிப்பிரமாணத்தாற் றுணியப்பட்டதாம் அது பாதிதமென்றவாறு. ஆகவே, காட்சியளவையானறியப்

பமே துணிபொருளினபாவத்தினது துணிவுதோன்றியவழித் துணிபொருளின நமிதிக்குந் தடையாதல் பலமாம். பாதித்தைத் துணிதலுடைமையாற் பாதிதவேதுவெனப்படும்.

## உபமானப்பிரமாணம்.

சுஅ. உவமானம் உவமிதியறிவிற்குக்காரணம். உவமிதி பெயர்க்கும் பெயருடையதற்குமுளதாகியசம்பந்தவறிவு. அதற்குக்காரணம் ஒப்புமையறிவு. அங்ஙனமன்றே, ஆமா என்னுஞ் சொற்குப் பொருளறியாதானொருவன் யாங்காயினுங் காட்டகத்துள்ளானாகிய வோரானமகனால் ஆவினையொக்கும் ஆமா எனக்கூறக்கேட்டுக் காட்டிட்சென்று அவன்கூறிய தொடர்மொழிப் பொருளை நினைந்து ஆவொப்புமையுடைய பிண்டத்தைக் காண்கின்றான். அதன் பின்னர் இது ஆமா என்னுஞ் சொற்பொருள் என உவமிதியறிவு தோன்றுமென்க.

உவமிதியறிவிற்குக்காரணம் எ-து. உவமானத்திற்கிலக்கணங்கூறுகின்றது. பெயர்க்கும் பெயருடையதற்கும் எ-து. உவமிதிக்கிலக்கணங் கூறுகின்றது. பெயராவது சொல். பெயருடையதாவதுபொருள். அவ்விரண்டன்சம்பந்தமாவது ஆற்றல். ஆகவே, சொற்குஞ் சொற்பொருட்குமுளதாகிய சம்பந்தவறிவு உவமிதியென்றவாறு. உவமானமாவது மாட்டேற்றுவாக்கியத்தின் பொருளறிவு. மாட்டேற்றுவாக்கியப் பொருளின் நினைவு வியாபாரம். உவமிதி பலமாம். ஆவொப்புமையுடையது ஆமாவென்னுஞ்சொல்லாற் கூறப்படுவதா

மெனப்படும் வாக்கியத்தால் ஆவொப்புமையான் வரைந்து கொள்ளப்பட்ட விசேடியமாதலுடைய ஆமா என்னுஞ்சொல்லாற் கூறப்படுந்தன்மையெனப்படு மெவ்வறிவுதோன்றும் அதுவே கரணமெனப்படும்.

## ஆகமப்பிரமாணம்.

**௬௬. சத்தமாவது ஆத்தன் வாக்கியம். ஆத்தன் உள்ளது கூறுவோன். வாக்கியம் பதங்களின்கூட்டம்; எங்ஙனம், ஆவைக்கொணு என்பது. ஆற்றலுடையது பதம். ஆற்றல் இப்பதத்தால் இப்பொருளுணர்த்துக என்னும் இறைவனிச்சையாகிய சங்கேதம்.**

ஆத்தன் எ-து. சத்தத்திற்கிலக்கணங்கூறுகின்றது. ஆத்தனாற்கூறப்பட்ட வாக்கியமாதல் சத்தத்திற்கிலக்கணம். பிரமாணமாகிய சத்தமாதல் இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வது. வாக்கியமாதன்மாத்திரையே கூறப்பட்டவழி, ஆத்தனல்லோனாற்கூறப்பட்ட வாக்கியத்தின்கணதிவியாத்தி வருமாதலின் அது நீக்குதற்கு ஆத்தனாற்கூறப்பட்டவெனவும்; விசேடணமாத்திரையே கூறப்பட்டவழி, க ச ட த ப ற முதலியவற்றினதிவியாத்தி வருமாதலின் அது நீக்குதற்கு வாக்கியமாதலெனவுங்கூறியவாறு. ஆத்தன்றன்மை எடுத்தாளுதற்குக்காரணமாகியவுண்மையறிவுடைமை. ஆகவே, எடுத்தாளுதற்கேதுவாகிய வுண்மையறிவாற்றோன்றிய சத்தமாதலென்பது முடிந்தபொருளாயிற்று. உண்மையானேக்கிற் பதவறிவுகரணம். விருத்தியறிவோடுகூடிய சொல்லறிவாற்றோன்றிய சொற்பொருளியைந்துநிற்றல் வியாபாரம். தொடர்

மொழிப்பொருளறிவாகிய சாத்தவறிவு பலம். விருத்தியாவது ஆற்றல் இலக்கணையென்னுமிரண்டனுளொன்றாதல். ஆற்றலாவது குடமுதலிய விசேடியத்தினையுடைய குடமுதலிய சொல்லாற்றோன்றிய வறிவிற்கு விடையமாதலெனப்படுமிறைவன்சங்கேதம். இறைவன் சங்கேதமாவது இறைவனிச்சை; அதுவே யாற்றலென்றவாறு. சொல்லின்கணாற்றலுடைத்தாதலாவது ஆற்றலாற்றெரிந்துணர்த்தப்படுதல். விடயத்தன்மைச்சம்பந்தத்தா லாற்றலுடைத்தாதற் பாலதற்குப் பற்றுக்கோடாதல் ஆற்றலுடைத்தாதற்பாலதாதல்.

ஆற்றலுடைத்தாதற்பாலதாதலின் சம்பந்தம் இலக்கணை. அது குணம்பற்றிநிகழ்வதுஞ் சுத்தமுமென விருவகைப்படும். குணம்பற்றிநிகழ்வதாவது ஒப்புமையான் விசேடிக்கப்பட்டதன்கணுள்ளவிலக்கணை; எங்ஙனம், 'சிங்கம் மாணக்கன்' என்பது முதலியவற்றுட் சிங்கமென்னுஞ்சொற்குச் சிங்கத்தினொப்புமையான் விசேடிக்கப்பட்டதன்கணிலக்கணை. சுத்தமாயது விட்டவிலக்கணையும்,விடாதவிலக்கணையும், விட்டும்விடாத விலக்கணையுமென மூவகைப்படும். இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதனு லிலக்கியமாத்திரையே யறிந்துகொள்ளும் பயனைத்தருமிலக்கணை விட்டவிலக்கணை; எங்ஙனம் 'கங்கைக்கணிடைச்சேரி' என்புழிக் கங்கையென்னுஞ்சொல்லாற் கூறப்படும் நீர்ப்பெருக்கின் சம்பந்தங் கரைக்கணுளதாகலினவ்வியல்பிற்றாகிய வாற்றலுடைத்தாகற்பாலதன் சம்பந்தமெனப்படுமிலக்கணையையறிவிக்குங்கங்கையென்னுஞ்சொல்லாற் கரைபெறப்படும். இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதனால் இலக்கியமுமாற்றலுடைத்தாகற்பாலதுமாகிய விரண்டனையுமறிதலாகிய பயனைத்தருமிலக்கணை விட்டவிலக்கணை; எங்ஙனம், 'காக்கைகளினின்றுந் தயிர்காக்கப்படுக' என்

புழிக் காக்கையென்னுஞ்சொற்குத் தயிரையழிப்பனவற்றின் கணிலக்கணை. இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வது தயிரையழிப்பதாதல். அதனாற் காக்கை, பூனை, கோழி, நாய் முதலியனவாகிய தயிரையழிப்பனயாவும் ஆற்றலுடைத்தா தற்பாலதனிலக்கியமெல்லா முணர்த்தப்படுமாகலின். ஆற் றலுடைத்தாகற்பாலதன்றன்மையை வரைந்துகொள்வதை விடுதலினால் வடிவுமாத்திரையேயுணர்த்துவதாகிய பயனைத் தருமிலக்கணை விட்டும்விடாதவிலக்கணை; எங்ஙனம், அது நீயாகின்றாய் என்புழிமுற்றறிவுடையனுதலையுஞ் சிற்றறிவு டையனுதலையும் விடுதலான் வடிவுமாத்திரையே யறிவித்து நிற்றலின்; இது சீவனுக்கும் பிரமத்துக்கு மைக்கியங்கூறும் வேதாந்திகளது மதத்திற் கொள்ளப்படுவது.

**௭0. வாக்கியப்பொருளறிவிற்குக் காரணம் அவாய் நிலையுந் தகுதியும் அண்மையுமாம்.**

**௭௧. அவாய்நிலை ஒருபதம் வேறொருபதமின்மையா லுளதாயவியைபு உணரப்படாமையுடைத்தாதல். தகுதி பொருட்குப்பாதமின்மை அண்மை பதங்களை ஒரு தொடராக விரையக்கூறுதல்.**

ஒருபதம் எ-து. அவாய்நிலைக்கிலக்கணங்கூறுகின்றது. விசேடியமாகிய ஒருபதமிடையீடின்றிப் பின்றொடர்ந்து நிற் றன்முதலிய சம்பந்தத்தான் விசேடணமாகிய வேறொருபத த்தினின்மையானுளதாவது எவ்வியல்பிற்றாகிய சொல்லறி வினபாவமாம், அவ்வியல்பிற்றாகிய சொல்லறிவினையுடைய வப்பதத்தின்கண் அப்பதமுடைத்தாதல் அவாய்நிலை; எங்ங னம், தொல்காப்பியம் என்பது முதலியவற்றின்கணிடையீ டின்றிப் பின்றொடர்ந்து நிற்றன்முதலிய சம்பந்தத்தான்

அம் என்னும் பதந் தொல்காப்பியமென்னும் பதத்தையுடை யது எனப்படும் அம் என்னும் பதமாகிய விசேடியத்தினை யுடைய தொல்காப்பியமென்னும் விசேடணவறிவு உளதாய வழித் தொல்காப்பியஞ் செயப்படுபொருண்மையுடைத்தென் னுமறிவுதோன்றும். மற்று 'அம் தொல்காப்பியன்' என மா றிக்கூறி னவ்வியல்பிற்றாகிய சாத்தவறிவு தோன்றாது; ஆத லின், அவ்வியல்பிற்றாகிய அவாய்நிலையறிவு சொல்லறிவிற் குக் காரணமாம். பொருட்குப்பாதம் எ-து. பாதமின்மை தகுதியென்றவாறு. 'தீயால் நனை'யென்புழி நனைத்தற்குக் காரணமாகிய நீர்முதலியவற்றினியல்பு தீயின்கட் பாதமென் பது துணியப்பட்டுளதாகலி னவ்வியல்பிற்றாகிய தொடர் மொழியாற் சொல்லறிவின்றாம். பதங்களை எ-து. அண் மைநிலையைத் தெரித்துணர்த்துகின்றது.

எஉ. ஆகவே, அவாய்நிலைமுதலிய மூன்றுமில்லாத வாக்கியம் பிரமாணமன்று. ஆ குதிரை ஆண்மகன் யானை என்பது அவாய்நிலையின்மையாற் பிரமாணமன்று. ஆ வைக்கொணு என்பது முதலியன ஒரு தொடராகக் கூறாது யாமத்துக்கொன்றாகக்கூறின் அண்மையின் மையாற் பிரமாணமன்று.

ஆகவே எ-து. யாமத்துக்கு ஒன்றாகக்கூறுதல் தாழ்த் துக்கூறுதல்.

எங. தொடர்மொழி வேதசம்பந்தமுடையதும்,உல கசம்பந்தமுடையதும் என இருவகைப்படும். வேதசம் பந்தமுடையது ஈசுரனாற் கூறப்பட்டமையான் முழுவ துமே பிரமாணம். மற்று உலகசம்பந்தமுடையதனுள்

ஆத்தனாற் கூறப்பட்டது பிரமாணம். ஏனையது பிரமாணமன்று.

வேதசம்பந்தம் எ-து. வேதவாக்கியமென்றவாறு. இஃது பலக்கணம்; வேதத்தின் வழிநூலாகிய மிருதிமுதலியனவுங்கொள்ளப்படும்; மற்று, உலகசம்பந்தமுடையது எ-து. வேதவாக்கியத்தின் வேறாயதென்றவாறு. ஆத்தனாந்தன்மையாவது எடுத்தாளுவதற் கேதுவாகிய வுண்மையறிவுடையனாதல்.

௭௪. வாக்கியப்பொருளுணர்ச்சி சத்தத்தினாலாயவுணர்ச்சி. அதற்குக் காரணம் சத்தம்.

௭௫. பொய்யநுபவம் ஐயம், திரிவு, தருக்கம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்து.

௭௬. ஐயமாவது ஒரு தருமியின்கண் மாறுபட்ட பலதருமங்களால் விசேடிக்கப்பட்டமையோடு பற்றிநிற்கும் உணர்வு: எங்ஙனம், 'குற்றியோ மகனோ'வென்பது.

ஐயமாவது எ-து. உண்மையனுபவத்தைத் தெரித்துணர்த்திப் பொய்யனுபவத்தைத் தெரித்துணர்த்துகின்றது. ஒரு தருமியின்கண் எ-து. ஒரு தருமத்தான் வரைந்துகொள்ளப்பட்ட விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட வுண்மையின்மையாகிய விசேடணம்பற்றி நிகழுமறிவு ஐயமென்றவாறு. உண்மையிரண்டன்கண் ஐயநிகழக் காணாமையின், 'குற்றியோ மகனோ'வென்புழிக் குற்றியாதலுங், குற்றியன்மையும், மகனாதலும், மகனன்மையுமாகிய வபாவத்தின்கண்ணதே ஐயமாம்.

௭௭. திரிவு மித்தையறிவு; எங்ஙனம், 'இப்பியின்கண் வெள்ளி'யென்பது.

மித்தையறிவு எ-து. பொய்யறிவென்றவாறு. திரிவாவது பிறழ்ச்சியுணர்வு.

௭௮. தருக்கமாவது வியாப்பியத்தை ஆரோபிப்பதால் வியாபகத்தை ஆரோபிப்பது; எங்ஙனம், 'தீயில்லையெனிற் புகையுமில்லை'யென்பது

வியாப்பியத்தினை ஆரோபித்தலான் எ-து. தருக்கத்தின்கண் வியாப்பியத்திற்கும் வியாபகத்திற்கும் பாதம் நிச்சயப்படுதல் காரணம். அங்ஙனமன்றேல், பாதம் நிச்சயமின்மையாகிய விரும்பியதுபெறுதலென்னுங் குற்றத்தால் தருக்கந் தோன்றுமையினென்பது.

௭௯. நினைவு மெய்யும், பொய்யும் என இருவகைத்து. மெய்யநுபவத்தாற் றோன்றியது மெய். பொய்யநுபவத்தாற் றோன்றியது பொய்.

௮0. சுகம் எல்லார்க்கும் ஏற்புடைத்தாக உணரப்படுவது.

எல்லார்க்கும் எ-து. சுகத்தைத் தெரித்துணர்த்துகின்றது. ஏனையோரிச்சைக்கு வசப்படாத விச்சைக்கு விடயமாதலென்பது தேற்றம். ஏற்புடைத்தாகிய விசேடணத்தினையுடைய அறியப்படுவது என்னும் விசேடியத்திற்குக் குடமேற்றது எனப்படுமறிவு நிகழ்வுழி ஏற்புடைத்தாதலாகிய விசேடணஞானத்தினையுடைய விசேடியமாதல் குடமுதலியவற்றின்கண்ணுமுண்மையி னவற்றின்க ணதிவியாத்தி நீக்கு

தற்குத் தேற்றமாகிய இலக்கணங் கூறப்பட்டது. உண்டல் முதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு ஏனையவற்றி னிச்சைக்கு வசப்படாதவென்னும் விசேடணம் புணர்த்துரைக்கப்பட்டது, சுகத்தினிச்சை சுகமாதலாகிய விசேடண ஞான மாத்திரையாற் றோன்றுவதாகலின்.

அக. துக்கம் ஏற்புடைத்தன்ருக அறியப்படுவது.

ஏற்புடைத்தன்ருக எ-து. துக்கத்தைத் தெரித்துணர்த்துகின்றது. ஈண்டும் வேறொன்றன் வெறுப்பிற்கு வசப்படாத வெறுப்பிற்கு விடயமாதலென்பது தேற்றமாகிய இலக்கணம். வெறுப்பிற்கு விடயமாதன்மாத்திரையே கூறப்படின் பாம்புமுதலியவற்றின்கண்ணும் வெறுப்பிற்கு விடயமாதலுண்மையின் அதிவியாத்திவரும், அது நீக்குதற்கு வேறொன்றன் வெறுப்பிற்கு வசப்படாதவென வெறுப்பிற்கு விசேடணம் புணர்த்துரைக்கப்பட்டது. பாம்பாற்றோன்றிய துக்க முதலியவற்றின்கண் வெறுப்புண்டாகலாற் பாம்பின்கண்ணும் வெறுப்புண்டாமாகலிற் பாம்பின்வெறுப்பிற்குப் பாம்பாற்றோன்றிய துக்கத்தின் வெறுப்பாற்றோற்றுவிக்கப்படுதலுண்மையான் வேறு வெறுப்பாற் றோற்றுவிக்கப்படாத வெறுப்பிற்கு விடயமாதலெனப்படுந் துக்கத்தினிலக்கணத்திற்குப் பாம்புமுதலியவற்றின்க ணதிவியாத்தியின்மையுணர்க. பலத்தின் விருப்பு உபாயத்தின் விருப்பிற்குக் காரணம். ஆதலிற் பலத்தின் விருப்பால் உபாயவிருப்புத்தோன்றும்; இங்ஙனம் பலத்தின்கண் வெறுப்பால் உபாயத்தின்கண் வெறுப்புத்தோன்றும்.

அஉ இச்சை காமம்.

அரு. வெறுப்பு வெகுளி.

அச. முயற்சி தொழிற்பாடு.

அரு. தன்மம் விதிக்கப்பட்ட வினையாற்றோன்றியது.

விதிக்கப்பட்ட எ-து. தருமத்தைத் தெரிந்துணர்த்துகின்றது; வேதத்தான் விதிக்கப்பட்டதென்றவாறு.

அசா அதன்மம் விலக்கப்பட்ட வினையாற்றோன்றியது.

விலக்கப்பட்ட எ-து. அதன்மத்தைத் தெரித்துணர்த்துகின்றது; வேதத்தால் விலக்கப்பட்டதென்றவாறு.

அஎ. புத்தி முதலிய எட்டும் ஆன்மா மாத்திரைக்கே உரிய விசேடகுணங்கள். புத்தி, இச்சை, முயற்சி என்னும் மூன்றும் நித்தியமும், அநித்தியமுமாம். ஈசுரனது புத்திமுதலிய மூன்றும் நித்தியம்; உயிரது புத்திமுதலிய மூன்றும அநித்தியம்.

புத்திமுதலிய எட்டும் எ-து. புத்தி, சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு, முயற்சி, தன்மம், அதன்மம் என்னும் எட்டுமென்றவாறு.

அஅ. வாசனை வேகமும் பாவனையும் நிலைபெறுத்துவதும் என மூவகைத்து.

வாசனை எ-து. வாசனையைப் பகுக்கின்றது.

அகூ. வேகம் பிருதிவிமுதலிய நான்கினும் மனத்தினும் இருக்கும்.

௯0. பாவனை அநுபவத்தினது காரியமாய் நினைவிற்குக் காரணமாயது ஆன்மா மாத்திரைக்கேயுள்ளது.

அநுபவத்தினது எ-து. பாவனைக்கிலக்கணங் கூறுகின்றது. அநுபவத்தாற்றோன்றி நினைவிற்குக் காரணமாதல் பாவனைக்கிலக்கணம். ஈண்டநுபவத்தாற் றோன்றியென விசேடணம்புணர்த்துரைககப்படாதவழி ஆன்மாவிற்கும் மனத்திற்குமுளதாகிய சையோகத்தின்கண் அதிவியாத்திவரும் அது நீக்குதற்பொருட்டு அவ்விசேடணம் புணர்த்துரைக்கப்பட்டது. ஆன்மாவிற்கும் மனத்திற்குமுளதாகிய சையோகம் அநுபவத்தாற்றோன்றியதன்மையின் அதிவியாத்தியின்மையுணர்க. விசேடணமாத்திரையே புணர்த்துரைக்கப்பட்டவழி அழிவுபாட்டிற்குப் பிரதியோகி காரணமாதல்பற்றியநுபவத்தினழிவு மநுபவத்தாற்றோன்றியதா மாகலின் அநுபவத்தி னழிவுபாட்டின்க ணதிவியாத்தி வரும், ஆதலின் நினைவிற்கேதுவாதலெனப்படும் விசேடியம் புணர்த்துரைக்கப்பட்டது. அநுபவத்தி னழிவுபாடு நினைவிற்குக் காரணமன்மையின் அதிவியாத்தியின்மையறிக.

அற்றேல், ஈண்டு விசேடிக்கப்பட்ட புத்திக்கு விசேடணஞானங் காரணமாதல் தாந்திரிகமதமெல்லாவற்றிற்குமுடம்பாடேயாம். எங்ஙனம், குழையென்பதனன் விசேடிக்கப்பட்டவறிவிற்குக் குழையென்னுமறிவு காரணம். குழையென்பதனன் விசேடிக்கப்பட்ட வறிவாவது குழையிருந்தவாறுபற்றி நிகழுமறிவு. ஆகவே, குழையென்பதனல் விசேடிக்கப்பட்ட வறிவான் வரைந்துகொள்ளப்பட்டதற்குக் குழையென்னுமறிவாந்தன்மையுண்மையாற் காரணமாதல் போதரும். குழையிருந்தவாறுபற்றி நிகழுமறிவு குழையனிவன் எனப்படு

றிவு. ஆண்டுக்குழையென்பதனறிவு காரணமாம். குழையினையறிந்த ஆண்மகன் குழையணிவனெனவறிவனன்றே. இங்ஙனம் யாண்டு இது குழையெனக் காட்சிதோன்றிற்று அதன்பின் குழையணிவனெனப்படுங் காட்சியறிவுதோன்றும். ஆண்டுக்குழையணிவனெனப்படுங் காட்சியறிவின்கணதிவியாத்தி வரும். அது தனக்கிடையீடில்லாத முதற்கணத்துத் தோன்றிய குழையென்னுமறிவெனப்படு மநுபவத்தாற் றோன்றியதுந் தோன்றுவதாகிய குழையணிவனெனப்படுமறிவிற்குக் காரணமாவதுமன்றே, நினைவிற்கு அநுபவங்காரணமாதலின். ஆகவே, அநுபவத்தாற்றோன்றி நினைவிற்குக்காரணமாதலெனப்படும் பாவனையினிலக்கண மீண்டுரைக்கப்பட்ட குழையணிவனென்னுமநுபவத்தின்கண் வைத்தறியப்படுதலான் அதிவியாத்தியாமெனின்:— ஈண்டுக்கூறுதும். அநுபவத்தாற்றோன்றுதல் அநுபவத்தின்கணதாகிய காரணத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட காரியத்தன்மைக்குப் பற்றுக்கோடாதல்; அக்காரணத்தன்மைக்கண் அநுபவத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதாந் தன்மை கூட்டியுரைக்கப்படும். ஆகவே, அநுபவத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட காரணத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட காரியத்தன்மைக்குப் பற்றுக்கோடாதலநுபவத்தாற் றோற்றுவிக்கப்படுதலென்பது போந்தபொருளாம். ஆதலின் அதிவியாத்திக் குற்றமின்று. அங்ஙனமன்றே, குழையிருந்தவாறுபற்றி நிகழுமறிவான் வரைந்துகொள்ளப்பட்டது காரியத்தன்மை; அதனாற்றெரித்துணர்த்தப்பட்டது குழையென்னுமறிவு; அதன்கண்ணதாகிய காரணத்தன்மைக்கட் குழையினது அநுபவத்தன்மை வரைந்துகொள்வதன்று; குழையினது அநுபவத்தாற்போலக் குழையினினைவானுங் குழையிருந்தவாறுபற்றி நிகழுமறிவுண்டாமாகலின்.

ஆகலிற் குழையிருந்தவாறுபற்றி நிகழுமறிவான் வரைந்து கொள்ளப்பட்டதற்கு அநுபவத்திற்கும் நினைவிற்கும் பொதுவாகிய குழையென்னு ஞானத்தன்மையாற்றானே குழையென்னுமறிவு காரணமாந்தன்மையாற் கொள்ளப்படுதலிற் குழையென்னுமறிவிற்கே யதனை வரைந்துகொள்வதாந் தன்மை யுண்மையானென்க. ஆகவே, அநுபவத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட காரணத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட காரியத்தன்மைக்குப் பற்றுக்கோடாதல் உரைக்கப்பட்ட காட்சியளவைக்கணின்மையின் அதிவியாத்தியின்றென்க, மற்றுப்பாவனைக்க ணிவ்விலக்கணமுளதேயாம். அங்ஙனமன்றே, அனுபவத்தாற்றானே பாவனையெனப்பெயரிய வாசனை தோன்றுதலிற் பாவனைத்தன்மையான் வரைந்து கொள்ளப்பட்டதற்கு அநுபவம் அநுபவத்தன்மையாற்றானே காரணமாதலிற் பாவனைத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட காரியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட வநுபவத்தின்கண்ணதாகிய காரணத்தன்மைக்கண் அநுபவத்தன்மை வரைந்துகொள்வதாம். ஆதலின் அநுபவத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட காரணத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட காரியத்தன்மைக்குப் பற்றுக்கோடாதல் பாவனைக்கணுள்ளதென்பது அசம்பவமன்று.

அற்றேல், இங்ஙனம் நினைவிற்கேதுவாதலென்னும் விசேடணம் நின்றுபயனின்மையென்னுங் குற்றத்திற்கிடமாம். அஃது அநுபவத்தி னழிவுபாட்டின்க ணதிவியாத்தி நீக்குதற்கு முன்னர்ப் புணர்த்துரைக்கப்பட்டது. ஈண்டெடுத்துரைக்கப்பட்ட வநுபவத்தாற் றோன்றியதென்பது கூறப்பட்டதற்க ணநுபவத்தி னழிவுபாட்டின்க ணதிவியாத்தி வருமன்றே. அங்ஙனமன்றே, அழிவுபாடாந்தன்மையான்

வரைந்துகொள்ளப்பட்டதற்குப் பிரதியோகி காரணமாதலும் பிரதியோகித்தன்மை யுடைமையால் அவ்வழிவுபாடாந்தன் மையான் வரைந்துகொள்ளப்பட்டதற்கு அவ்வப்பிரதியோகியின்வடிவு அவ்வடிவுத்தன்மையானுங் காரணமாமென்னு மிம்முறைமைபற்றி யழிவுபாட்டிற்கும் பிரதியோகிக்குங் காரிய காரணத்தன்மையுண்டாம். ஆகவே, யழிவுபாட்டின்கண்ணதாகிய காரியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டது அநுபவத்தின்கண்ணதாகிய காரணத்தன்மை. அதன்கட் பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வதும் அவ்வவ்வடிவுடைமையுமாம்; மற்று அநுபவத்தன்மையு மன்றென்பது சித்தாந்தம். இங்ஙன மநுபவத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட காரணத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட காரியத்தன்மைக்குப் பற்றுக்கோடாதலெனப்படு மநுபவத்தாற் றோன்றுந்தன்மை யின்மையாற்றானே யதிவியாத்தி நீக்குதலுளதாமாகலின் நினைவிற்கேதுவாதலென்னும் விசேடணஞ் செய்யப்பட்டதெனின்;— அற்றன்று, நினைவின்கணதிவியாத்தி நீக்குதற்கே யவ்விசேடணம் புணர்த்துரைக்கப்பட்டதாகலின். அங்ஙனமன்றே, நினைவிற்கு அநுபவமே காரணம். மற்று நினைவுங் காரணமாகாது. ஆதலின் குடத்தினது நினைவுத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதற்குக் குடத்தினநுபவங் குடத்தினநுபவத்தன்மையாற்றானே காரணமாம். மற்றுக் குடவறிவாதலாற் காரணமன்று. ஆகவே குடநினைவின்கண்ணதாகிய காரியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டது குடத்தி னநுபவத்தின்கண்ணதாகிய காரணத்தன்மை. அதன்கட் குடத்தி னநுபவத்தன்மை வரைந்துகொள்வதாம். அதனால் அநுபவத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட காரணத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட காரியத்தன்மைக்குப் பற்றுக்கோடாதல் நினைவின்க

ணறியப்படுதலின். நினைவு நினைவிற்குக் காரணமன்று. ஆண்டதிவியாத்தியுமின்றென்க. இனியமையும்.

௯௧. நிலைபெறுத்துவது வேறுவிதமாகச் செய்யப்பட்டதனை மீட்டும் அந்நிலையேயாக்குவது. அது பாய் முதலிய பிருதிவியினுள்ளது.

## ௩. கருமம்.

௯௨. கருமம் புடைபெயர்ச்சி. எழும்பல் மேலிடத்துக் கூடுதற்கு ஏது. வீழ்தல் கீழிடத்துக் கூடுதற்கு ஏது. வளைதல் உடல்வளைந்து கூடுதற்கு ஏது. நிமிர்தல் நிமிர்ந்து கூடுதற்கு ஏது. ஏனையவனைத்தும் நடத்தலெனப்படும்.

## ௪. சாமானியம்.

௯௩. சாமானியமாவது நித்தியமாய் ஒன்றாய்ப் பலவற்றி னொருங்கு சேறலையுடையது; திரவியத்தினுங் குணத்தினுங் கருமத்தினுமுள்ளது. உண்மைத்தன்மை பரம்; திரவியத்தன்மை முதலியன அபரம்.

நித்தியமாய் எ-து. சாமானியத்தினைத் தெரித்துணர்த்துகின்றது. நித்தியமாய்ப் பலவற்றினுஞ் சமவேதப்பட்டுநிற்றல் சாமானியத்திற்கிலக்கணம். நித்தியமென்னும் விசேடணங் கூட்டியுரைக்கப்படாதவழிப் பலவற்றின்கட் சமவேதப்பட்டு நிற்றல் சையோகமுதலியவற்றின்கண்ணுமுளதாகலின் ஆண்டதிவியாத்திவரும், அதுநீக்குதற்கு நித்தியமாயென்னும்விசேடணமும், பலவற்றின்கட் சமவேதப்பட்டு நிற்றலென்பதனைக் கூட்டியுரையாது நித்தியமாதன் மாத்திரையே கூட்

டியுரைக்கப்பட்டவழி ஆகாயமுதலியவற்றின்க ணதிவியாத்தி வரும், அது நீக்குதற்குப் பலவற்றின்கட் சமவேதப்பட்டு நிற்றலென்பதுங் கூட்டியுரைக்கப்பட்டன. பலவற்றின்கட் சமவேதப்பட்டு நிற்றலென்பது கூட்டியுரையாது நித்தியத் தன்மையான் விசேடிக்கப்பட்ட சமவேதப்பட்டு நிற்றன்மா த்திரையே யுரைக்கப்பட்டவழி நீர்ப்பரமாணுவையடைந்த வுருவமுதலியவற்றின்கண்ணும், ஆகாயத்தையடைந்த வொருமையாகிய பரிமாணத்தின்கண்ணும், நித்தியமாதலுஞ் சமவேதப்பட்டு நிற்றலுமுளவாமாகலி னவ்விரண்டன்கண்ணு மதிவியாத்திவருமாகலிற் பலவற்றின்கண்ணென, சமவேதப் பட்டு நிற்றற்கு விசேடணங் கூட்டியுரைக்கப்பட்டது.

## ரு. விசேடம்.

கச. விசேடம் நித்தியப்பொருள்களிலிருப்பனவாய் அவை வேறு வேறாய் நிற்றலைத் தெரிப்பனவாம்.

## சா. சமவாயம்.

கரு. சமவாயமாவது நித்தியமாயசம்பந்தம். அது நீக்கமின்றி இயல்பாக வுள்ளனவற்றின்கணுள்ளது. யாவை இரண்டனுள் ஒன்று அழிவின்றி நிற்பதாய் ஏனையதனைப்பற்றிநிற்கும், அவை நீக்கமின்றியிருப்பன. எங்ஙனம், சினையும் முதலும், குணமுங் குணியும், வினையும் வினைமுதலும், சாதியும் வடிவும், விசேடமும், நித்தியப்பொருள்களும் என்பன.

நித்தியம் எ-து. சமவாயத்தினைத் தெரித்துணர்த்துகின்றது. சம்பந்தமாதலாவது விசேடிக்கப்பட்ட வுணர்ச்சிக்கு

நியாமகமாதல். அது மாத்திரையே யுரைக்கப்பட்டவழிச் சை யோகத்தின்க ணதிவியாத்தி வருமாகலின், அது நீக்குதற்கு நித்தியம் என்னும் விசேடணம் புணர்த்துரைக்கப்பட்டது. யாவை இரண்டனுள் எ-து. எநன்கண்ணதாகிய காலத்தாற் றெரித்துணர்த்தப்பட்ட வாதேயத்தன்மைச் சாமானியம் எத ஞன் வரைந்துகொள்ளப்பட்டது, அவ்விரண்டனுளொன்ரு தல் நீக்கமின்றி இயல்பாயுளதாதலென்றவாறு.

## எ. அபாவம்.

கசு. முன்னபாவம் தோற்றமின்றி அழிவுடையது; காரியத்தோற்றத்திற்கு முன்னுள்ளது.

கஎ. அழிவுபாட்டபாவம் தோற்றமுடைத்தாய அழிவின்றி இருப்பது; காரியத்தோற்றத்தின் பின்னுள். ளது.

கஅ. முழுதுமபாவம் முக்காலத்தினுமுளதாய சமு சர்க்கத்தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்த ன்மையுடையது. எங்ஙனம், பூதலத்திற் குடம் இல்லை என்பது.

முக்காலத்தினும் எ-து. முழுதுமபாவத்தினைத் தெரித் துணர்த்துகின்றது. முன்னபாவம் அழிவுபாட்டபாவமென் பனவற்றின் பிரதியோகித்தன்மையுடைத்தாய் ஒன்றினென் றபாவத்தின் வேருய் அபாவமாதல் முழுதுமபாவத்திற்கில க்கணம். அழிவுபாட்டபாவம், முன்னபாவம், ஒன்றினென் றபாவம், ஆகாயமுதலியவற்றி னீக்குதற்கு முறையே விசே

டணங் கூட்டியுரைக்கப்பட்டது. உண்மையானேக்கிற் சமு சர்க்காபாவத்தன்மை தாதான்மியத்தின் வேறாய சம்பந்தத் தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடை யதனபாவமென்க. அழிவுபாட்டபாவம் முன்னபாவம் என் னுமிரண்டற்குஞ் சமுசர்க்கத்தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடைமை யின்மையின் அதனேற்றனே அவை நீக்கப்படுதலின், முக்காலத்தினுமுளதாய வென்பது சொரூபங்கூறியவாறுதலறிக.

கூகூ. ஒன்றினென்றபாவம் தாதான்மியசம்பந்தத்தா ன் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையு டையது. எங்ஙனம், குடம் ஆடையன்று என்பது:

தாதான்மியம் எ-து. ஒன்றினென்றபாவத்தினைத் தெரி த்துணர்த்துகின்றது.

கoo எல்லாப்பதார்த்தங்களும் முறையானே கூறிய வற்றுள் அடங்குதலிற் பதார்த்தங்கள் ஏழே என்பது பெறப்பட்டது.

எல்லாப்பதார்த்தங்களும் எ-து. "பிரமாணம், பிரமேயம் ஐயம், பிரயோசனம், திருட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தருக்கம், நிண்ணயம், வாதம், செற்பம், விதண்டை, ஏதுப் போலி, சலம், சாதி, தோல்வித்தானம் என்பனவற்றின் உண் மையறிவால் வீடடைதலுளதா"மென நியாயநூலின் முதற்சூ த்திரத்துட் கூறப்பட்ட பிரமாணம், பிரமேயமுதலிய வெல் லாப்பதார்த்தங்களுமென்றவாறு. இவற்றின் விரிவெல்லாம் ஏனைநூல்களுட் கண்டுகொள்க.

திருக்கிளர் நியாயத் திறமுதல் லறிஞர்
தெளியும்வை சேடிகத் திறமுஞ்
சுருக்கமா விளங்க முறைப்பட நிறுவித்
தொகுத்தன்னம் பட்டனுந் தூயோ
னெருங்கிய வுள்ளத் திளைஞர்கற் றெளிதி
னுளங்கொண்டு பயின்று நன்குய்யத்
தருக்கசங் கிரக மெனப்பெயர் புனைந்து
தந்தனன் றரணியோர் தமக்கே.

தருக்கசங்கிரக

மூலமும்,

நியாயபோதினி

எனப் பெயரிய

அதனுரையும்

முடிந்தன.



உ

சிவமயம்.

# தருக்கசங்கிரகம்

## மூலமும்,

## பதகிருத்தியம்

## எனப்பெயரிய அதனுரையும்.



## தற்சிறப்புப்பாயிரம்.



உலகம்புரக்குமுழுமுதலையுள்ளக் கோயிலுள்ளிருத்தி யிலகுங்கருணைக்குருவழிபாடியற்றியிளைஞர்க்கிருண்மடம்போய், விலகுந்தெளிவுள்ளத்தெளிதின்விரவும்பொருட்டுவிழுத்தமிழாற், கலவுந்தருக்கசங்கிரகங் கலை பக்கட்டுரைப்பாம்.

## தற்சிறப்புப்பாயிரம்.

மதகயத்திருமுகத்தவன்றிருவடிவணங்கி
யிதயபங்கயத்தம்பிகைபாகனையிறைஞ்சி
நிதமுவப்பொடுசிறுவர்கற்றுணர்தருநெறியாற்
பதகிருத்தியமெனப்பெயரியவுரைபகர்வாம்.

## அவையடக்கம்.

சிறுவர்கற்றெளிதிருண்மடமகன்றுளங்தெளியு
முறுதிநாடியானிவ்வுரையியற்றுவானுறலா
லறுதியாகநன்றெனமகிழ்ந்துரைப்பதையன்றி
யிறுதியில்வழுவாயினுமறிஞர்மற்றிகழார்.

உலகம் என்றது. குருவழிபாடும் இயற்றியென இறந்தது தழீஇய உம்மை விரித்துரைக்க. இளைஞர்க்கு எ-து. ஈண்டுப் பாலராவார் இலக்கணமுங் காவியமு நிகண்டுங்கற்று நியாயநூல் கல்லாதவர். வியாசர்முதலியோர்க ணதிவியாத்தி நீக்குதற்கு நியாயநூல் கல்லாதவரெனவும், குழவிப்பருவத் தோர்கட்சேறலை நீக்குதற்கு இலக்கணமுதலியனகற்று எ-ம் கூறியவாறு. தெளிவு எ-து. பதார்த்தங்களது தத்துவஞானம் எ-று. எளிதின் எ-து. வருத்தமின்றி எ-று. தருக்க சங்கிரகம் எ-து. தருக்கித்தல் பிரமிதிக்கு விடயமாக்குதல்; தருக்கித்துக் காட்டப்படுவன தருக்கம்; அவை திரவியமுதலிய பதார்த்தங்கள்; அவற்றினை உத்தேசமும் இலக்கணமும் ஆராய்ச்சியுமாகவைத்துத் தொகுத்துச்செய்தநூல் எ-று. உத்தேசமாவது பெயர்மாத்திரையாற் பொருள்களையெடுத்துக் கூறுதல்; எங்ஙனம்; திரவியம் குணம் என்பன. இலக்கணமாவது சிறப்பியல்பு; எங்ஙனம், பிருதிவிக்கு நாற்றமுடைமை. ஆராய்ச்சியாவது இலக்கணங் கூறப்பட்டதன்கண் அவ்விலக்கணமுண்டோ, இன்றோவென வாராய்தல். இவற்றுள் உத்தேசத்திற்குப் பக்கவறிவும், இலக்கணத்திற்கு ஏனையவற்றின் வேறுதலறிதலும், ஆராய்ச்சிக்கு இலக்கணத்தின்கட் குற்றநீக்கலும் பலமாமெனவறிக.

**க. திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் எனப் பதார்த்தங்கள் ஏழு.**

௨. அவற்றுள், திரவியம் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா, மனம் என ஒன்பது வகைத்து.

அவற்றுள் எ-து. பதார்த்தம் ஏழனுள் எ-று. திரவியம் ஒன்பதுவகைத்தெனவியையும். இங்ஙனமே அவற்றுள் என்பது குணம் இருபத்துநான்கு என்பது முதலியவற்றோடு மியையும். பொருண்மைச்சாதியுடைமையாதல், குணமுடைமையாதல், சமவாயிகாரணமாதலாதல் திரவியத்திற்குப் பொதுவிலக்கணமெனக்கொள்க.

௩. குணம் உருவம், இரதம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், சிநேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு, முயற்சி, தன்மம், அதன்மம், வாசனை என இருபத்துநான்கு வகைத்து.

௪. கருமம் எழும்பல், வீழ்தல், வளைதல், நிமிர்தல், நடத்தல் என ஐவகைத்து.

௫. சாமானியம் பரமும், அபரமும் என இருவகைத்து.

பரமும் அபரமும் எ-து. பரசாமானியமும் அபரசாமானியமும் எ-று. பரத்தன்மை அதிகமாயவிடத்திருப்பது. அபரத்தன்மை குறைவாகிய விடத்திருப்பது.

௬. நித்தியப்பொருள்களிலிருப்பனவாகிய விசேடம் எண்ணிறந்தனவேயாம்.

௭. சமவாயம் ஒன்றுதானே.

௮. அபாவம் முன்னபாவம், அழிவுபாட்டபாவம், முழுதுமபாவம், ஒன்றினொன்றபாவம் என நான்குவகைத்து.

## ௧. திரவியம்.

௯. அவற்றுள், பிருதிவி நாற்றமுடையது. அது நித்தியமும் அநித்தியமுமென இருவகைத்து, நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந்திரிய விடயவேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் நம்மனோர்க்குள்ளது. இந்திரியம் கிராணம்; நாற்றத்தைக்கவர்வது; நாசி நுனியில் இருப்பது. விடயம் மண், கல் முதலியன

அவ்வியாத்தி அதிவியாத்தி அசம்பவமெனப்படும் முக்குற்றமுமில்லது யாது, அதுவே யிலக்கணமெனப்படும். எங்ஙனம், ஆவிற்குத் தாடிமுதலியனவுடைமை. அவ்வியாத்தியாவது இலக்கியத்தினேகதேசத்திலதாதல்; ஆதலின் ஆவிற்குக் கபிலநிறமுடைமை யிலக்கணமன்று, அதற்கு அவ்வியாத்திக் குற்றமுண்மையின். அதிவியாத்தியாவது இலக்கியத்திலுளதாதன் மாத்திரையேயன்றி யிலக்கியமல்லாததினுமுளதாதல்; ஆதலின், ஆவிற்குக்கொம்புடைமை இலக்கணமன்று, அதற்கு அதிவியாத்திக்குற்றமுண்மையின். அச

ம்பவமாவது இலக்கியமாத்திரைக்கேயிலதாதல். எஙஙனம, ஆவிற்கு ஒருகுளம்புடைமை இலக்கணமன்று, அதற்கு அசம்பவக்குற்றமுண்மையின். நித்தியமும் எ-து. நித்தியத்தன்மையாவது அழிவுபாட்டின்வேறாய் அழிவுபாட்டிற்குப் பிரதியோகியாகாமை. அழிவுபாட்டி னதிவியாத்தி நீக்குதற்கு அழிவுபாட்டின்வேறாயென்னும் விசேடணமுங், குடமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு விசேடியமுங் கூட்டியுரைக்கப்பட்டன. அழிவுபாட்டிற்குப் பிரதியோகியாதலாவது முன்னபாவத்திற்குப் பிரதியோகியாதலாவது அநித்தியத்தன்மையெனக்கொள்க. போகத்திற்குக் கருவி யாது, அது சரீரம்; சேட்டைக்குப் பற்றுக்கோடெனினுமாம். இந்திரியம் எ-து. சட்சுமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு நாற்றத்தைக்கவர்வது எ-ம். காலமுதலியவற்றிற்சேறலை நீக்குதற்கு இந்திரியம் எ-ம் கூறியவாறு. விடயம் எ-து. விடயம் சரீரம் இந்திரியம் என்பனவற்றின் வேறாய் உபபோகத்திற்குக்கருவியாவது. சரீரமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு வேறாயென்பதும் பரமாணுமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு விசேடியமுங் கூட்டியுரைக்கப்பட்டன. காலமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குத் தோற்றமுடைத்தாயென்னும் விசேடணமும் வேண்டப்படுமோறறிக.

**கo. அப்புவாவது தண்மைப்பரிசமுடையது: அது நித்தியமும் அநித்தியமும் என இருவகைத்து: நித்தியம் பரமாணுரூபம்: அநித்தியம் காரியரூபம்: சரீர இந்திரிய விடய வேபாட்டால் மறுவலும் மூவகைப்படும் சரீரம் வருணலோகத்துள்ளது: இந்திரியம் இரசனம்; சுவையைக்கவர்வது; நாக்கு நுனியிலிருப்பது: விடயம் யாறு கடல் முதலியன.**

தண்மை எ-து. தேயுமுதலியவற்றி னதிவியாத்தி நீக்கு தற்குத் தண்மையெனவும் அவாய்நிலையினீக்குதற்குப் பரிச மெனவுங்கூறியவாறு. காலமுதலியவற்றிற்சேறலை நீக்குதற் குச் சமவாயசம்பந்தத்தாலென்னும் அடைகொடுக்கற்பாற்று. இந்திரியம் எ-து. துவக்கிந்திரியமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குச் சுவையைக்கவர்வது எ-ம் இரசனமென்னு மிந்திரியத்திற்குச் சுவையோடுளதாகிய சம்பந்தமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு இந்திரியம் எ-ம் கூறியவாறு. யாறு எ-து. முதலியனவென்றதனால், தடாகம் இமகரகமுத லியன கொள்ளப்படும்.

கக. தேயுவாவது வெம்மைப்பரிசமுடையது: அஃ தும் நித்தியமும், அநித்தியமும் என இருவகைத்து: நித் தியம் பரமாணுரூபம்: அநித்தியம் காரியரூபம்: சரீரஇந் திரிய விடயவேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும்: சரீரம்ஆதித்தியலோகத்துள்ளது: இந்திரியம் சட்சு; உரு வத்தைக்கவர்வது; கண்ணுறை கருமணியின் நுனியிலி ருப்பது: விடயம் மண்ணிலுள்ளதும், விண்ணிலுள்ள தும், வயிற்றிலுள்ளதும், ஆகரத்திற்றோன்றுவதும் என் னும்வேறுபாட்டால்நான்குவகைத்து; மண்ணிலுள்ளது நெருப்பு முதலியன; விண்ணிலுள்ளது மின்னல் முதலி யன; அவை நீரையே இந்தனமாகவுடையன; வயிற்றிலு ள்ளது உண்ட உணவு பரிணமப்படுதற் கேதுவாயிருப் பது; ஆகரத்திற்றோன்றுவது பொன் முதலியனவாம.

வெம்மை எ-து. நீர்முதலியவற்றி னதிவியாத்தி நீக்கு தற்கு வெம்மையெனப்பட்டது. காலமுதலியவற்றிற்சேறலை

நீக்குதற்குச் சமவாயசம்பந்தத்தால் என்னும் பதங்கொடுக்கற்பாற்று. இந்திரியம் எ-து. கிராணமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு உருவத்தைக்கவர்வது எ-ம், காலமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு இந்திரியம் எ-ம் கூறியவாறு. வேறுபாட்டால் என்னும் பதம் ஒவ்வொன்றோடுஞ் சென்றியையும். மண்ணிலுள்ளது எ-து. ஆதியென்றதனால் தன்விளக்கத்தாற்போதருந் தேயுமுதலியன கொள்ளப்படும். மின்னல் முதலியன எ-து. முதலியனவென்றதனால் ஞாயிறு திங்கள்முதலியன கொள்ளப்படும். உண்ட உணவு எ-து. உண்ணப்பட்ட சோறுமுதலியனவற்றிற்கும் பருகப்பட்ட நீர்க்கும் பரிணாமமாவது சீரணமாதல்; அதற்குக்காரணம் வயிற்றிலுள்ளது எ-று. பொன். எ-து. முதலியவென்றதனால் வெள்ளிமுதலியன கொள்ளப்படும்.

கஉ. வாயுவாவது உருவமின்றிப் பரிசமுடையது: அது நித்தியமும் அநித்தியமுமென இருவகைத்து; நித்தியம் பரமாணுரூபம்; அநித்தியம் காரியரூபம; சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவகையும் மூவகைப்படும; சரீரம் வாயுலோகத்துள்ளது: இந்திரியம் துவக்கு; பரிசத்தைக்கவர்வது; சரீரமெங்குமிருப்பது. விடயம மரமுதலியன அசைதற்கேதுவாயிருப்பது. சரீரத்தினகத்துச் சஞ்சரிக்கும் வாயுப் பிராணன் எனப்படும்; அஃது ஒன்றாயினும் உபாதி வேறுபாட்டாற் பிராணன் அபானன் முதலிய பெயர் பெறும்.

வாயுவாவது எ-து. குடமுதலியவற்றினீக்குதற்கு விசேடணமும் ஆகாயமுதலியவற்றி னீக்குதற்கு விசேடியமுங் கூறப்

பட்டன. இந்திரியம் எ-து. சட்சுமுதலியவற்றி னீக்குதற்குப் பரிசத்தைக்கவர்வது எ-ம், காலமுதலியனவற்றி னதிவியாத்திநீக்குதற்கு இந்திரியம் எ-ம் கூறியவாறு. மரம் எ-து. ஆதியென்றதனுல் நீர்முதலியன கொள்ளப்படும். சரீரத்தினகத்து எ-து. மகாவாயுவி னதிவியாத்தி நீக்குதற்கு விசேடணமும், மனமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு விசேடியமுங் கூட்டப்பட்டன. தனஞ்சயனென்னும் வாயுவினீக்குதற்குச் சஞ்சரிக்குமெனப்பட்டது. உபாதி எ-து. வாயானும், மூக்கானும் புறத்துவருதலும் உட்புகுதலுமுடைமையாற் பிராணன் எ-ம், நீர்முதலியவற்றைக் கீழ்நோக்கச்செய்தலால் அபானன் எ-ம், உண்டவுணவு பரிணமைப்படுதற்கு வயிற்றிலுள்ள தேயுவை மேனோக்கச்செய்தலாற் சமானன் எ-ம், அன்னமுதலியவற்றை மேனோக்கச்செய்தலால் உதானன் எ-ம், நாடிமுகத்துப்பரவுதலால் வியானன் எ-ம் படுதலின் அவ்வத்தொழிலாகிய உபாதி வேறுபாட்டால் அவ்வாறு வழங்கப்படுவனவாம் எ-று.

**கங. ஆகாயமாவது சத்தகுணமுடையது. அஃது ஒன்றாய் விபுவாய் நித்தியமாயுள்ளது.**

சத்தம் எ-து. சத்தமெதற்குக் குணம், அது சத்தகுணமுடையது. அசம்பவத்தினீக்குதற்குச் சத்தம் எ-ம், குணம் எ-ம் கூறப்பட்டது. விபு எ-து. மூர்த்தமுடைப்பொருளெல்லாவற்றினுஞ் சையோகமுடைத்தாந்தன்மை விபுத்தன்மை.

**கச. காலமாவது இறந்தது முதலிய வழக்கிற்கு ஏதுவாயது. அஃதும் ஒன்றாய் விபுவாய் நித்தியமாயுள்ளது.**

இறந்தது எ-து. இறந்ததுமுதலிய வழக்காவது இறப்பு நிகழ்வு எதிர்வு எனப்படும் வழக்கு. அதற்குச் சிறப்புக்கார

ணோங் காலம் எ-று; அற்றேல், ஈண்டுக் காரணமென்னும் பதத்தால் நிமித்தகாரணமே கூறுதல் கருத்தாகலின், இவ்வாறு கண்டம் நாக்கு முதலியவற்றின்கண் அடிபடுதற்கண் அதிவியாத்தி வருமென்னற்க, விபுவாந்தன்மையுங் கூட்டப்படல் வேண்டுமாகலின்.

**கரு. திக்காவது கிழக்கு முதலிய வழக்கிற்கு ஏதுவாயது. அஃதும் ஒன்றாய், விபுவாய், நித்தியமாயுள்ளது**

கிழக்குமுதலிய எ-து. இது குணாது, குடாது, வடாது, தெனாது என்பன முதலிய வழக்கிற்குச் சிறப்புக்காரணந் திக்கு எ-று. திக்கு ஏதுவாயது எனப்படின், பரமாணுமுதலியவற்றி னதிவியாத்தி வருமாகலின், அது நீக்குதற்குக் கிழக்குமுதலிய வழக்கிற்கேதுவாயது எனப்பட்டது. ஆகாய முதலியவற்றினீக்குதற்குச் சிறப்புக்காரணமெனல் வேண்டுமென்பதுமறிக.

**கசு. ஆன்மாவாவது ஞானத்திற்கு இடமாயுள்ளது. அது பரமான்மா, சீவான்மா என இருவகைத்து. அவற்றுள், பரமான்மா ஈசுரன், முற்றறிவன், ஒருவனே; மற்றுச்சீவான்மா சரீரந்தோறும் வேறாய், விபுவாய், நித்தியமாயுள்ளது.**

ஞானத்திற்கு எ-து. நிலமுதலியவற்றி னீக்குதற்கு ஞானமெனப்பட்டது. காலமுதலியவற்றினீக்குதற்குச் சமவாயத்தாலென்னும் பதமுங் கொடுக்கற்பாற்று. ஈசுரன் எ-து. சமவாயசம்பந்தத்தால் நித்தியமாய ஞானமுடையோன் ஈசுரன். சீவான்மா எ-து. சுகமுதலியவற்றிற்குச் சமவாயிகாரணஞ் சீவான்மா எ-று.

௧எ. மனமாவது சுகம் முதலிய அநுபவத்திற்குக் கருவியாகிய இந்திரியம். அஃதும் உயிர்தோறும் நியதமாயிருத்தலின் அநந்தமாய், பரமாணுரூபமாய், நித்தியமாயுள்ளது.

சுகம் எ-து. ஆன்மாவிற்கும் மனத்திற்குமுளதாகிய சையோகமுதலிறவற்றி னீக்குதற்கு இந்திரியம் எ-ம், சட்சுமுதலியவற்றி னீக்குதற்குச் சுகம் எ-ம் கூறியவாறு.

## ௨. குணம்.

௧௮. உருவமாவது சட்சுமாத்திரையாற் கவரப்படுங் குணம். வெண்மை, கருமை, பொன்மை, செம்மை, பசுமை, புகைமை, சித்திரம் என்னும் வேறுபாட்டால் எழுவகைத்து. பிருதிவி அப்புத் தேயுக்களிலுள்ளது. அவற்றுள் பிருதிவிக்கண் எழுவகையுமுள்ளது. நீரில் விளங்கா வெண்மை; தேயுவில் விளக்கமாய வெண்மை.

சட்சு எ-து. உருவத்தன்மை முதலியவற்றி னீக்குதற்குக் குணம் எ-ம், சுவைமுதலியவற்றி னீக்குதற்குச் சட்சுவாற் கவரப்படுவது எ-ம், சங்கைமுதலியவற்றி னீக்குதற்கு மாத்திரை எ-ம் கூறியவாறு. ஒளிக்கும் பித்திகைக்குமுளதாய சையோகத்தி னீக்குதற்குக் குணமென்றதனால் விசேடகுணமென்பது கூறுதல் கருத்தாகலின், சங்கைமுதலியவற்றி னீக்கத்தானே யுளதாமாகலின் மாத்திரையென்பது நின்று வற்றுமெனினும் இயல்பாகவுளதாகிய திரவத்துவமுதலியவற்றி னீக்குதற்கு அது ஒருதலையான் வேண்டப்படுமென்க. பரமாணு உருவத்தின்க ணதிவியாத்தி னீக்குதற்குச் சட்சுமாத்

திரையாற் கவரப்படுஞ் சாதியுடையதென்பது கூறுதல் கருத்தாகலின் விசேடம் என்னும் பதங் கொடுக்கற்பாற்றன்று. மற்றுத் திரியணுகமுதலியவற்றி னீக்குதற்குக் குணமென்னும் பதங் கொடுக்கற்பாற்று. எழுவகைத்து எ-து. உருவமென்றது வருவித்துரைக்கப்படும்.

கக. இரதம் இரசனத்தினாற் கவரப்படுங் குணம். இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, காழ்ப்பு, கைப்பு, துவர்ப்பு என்னும் வேறுபாட்டா லறுவகைத்து. மண்ணினு நீரினுமிருப்பது. மண்ணில் ஆறுவகையும், நீரில் இனிப்பொன்றுமே.

இரசனத்தினால் எ-து. இரதத்தன்மை முதலியவற்றி னீக்குதற்குக் குணம் எ-ம், உருவமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு இரசனத்தினால் எ-ம் கூறியவாறு. அவற்றுள் எ-து. மண், நீர் என்பனவற்றுள் எ-று. அறுவகைத்து எ-து. ஈண்டு இரதமென்பது வந்தியையும்.

உ0. கந்தம் கிராணத்தினாற் கவரப்படுங்குணம். அஃது நறுநாற்றமுந், தீநாற்றமுமென விருவகைத்து. பிருதிவியின் மாத்திரமிருப்பது.

கிராணத்தினால் எ-து. கந்தத்தன்மைமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம், உருவமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குக் கிராணத்தினாற் கவரப்படுவது எ-ம் கூறியவாறு. பிருதிவியின் எ-து. பிருதிவியின் சம்பந்தமுடைத்தாயவழி நாற்றம் புலப்படுதலுளதாம். அதன்சம்பந்தமில்வழி நாற்றம் புலப்படுதலின்றுமெனு உடன்பாட்டானும், எதிர்மறையானும் பிருதிவியின் நாற்றமே நீரின்

கட் புலப்படுதலறிந்துகொள்க. இது வாயுவின்கண்ணுமொ க்கும்; அற்றேல், ஓரிடத்துள்ளனவாகிய மான்மதம், பூ என் பனவற்றின் சம்பந்தமுடைத்தாகிய வாயுப் பிறிதோரிடத்து வீசியவழி ஆண்டு அச்சம்பந்தமின்மையின் நாற்றம் புலப்ப டுதல் பொருந்தாது; அவ்வாயுவாற் கொணரப்பட்ட திரிய ணுகமுதலியவற்றின் சம்பந்த மாண்டுளதாமென்னற்க, மா ன்மதத்திற்குக்குறைவும், பூவின்கட்டுலேயுமுளவாகல்வேண்டு மாகலினெனின்;— அற்றன்று, அதனை நுகர்வோனது அதி ட்டவிசேடத்தால் முன்போல வேறு திரியணுகந்தோன்று மாகலின்; மற்றுக் கற்பூரமுதலியவற்றின்கண் அஃதின்மை யின் அவ்வாறுதலின்றென்க.

**உகூ. பரிசந் துவக்கிந்திரியமாத்திரையாற் கவரப்படுங் குணம்: அஃதும் தண்மை, வெம்மை, தண்மையும் வெ ம்மையுமில்லது என்னும் வேறுபாட்டான் மூவகைத்து; பிருதிவி அப்புத் தேயு வாயுக்களினிருப்பது; அவற்றுள் நீரிற்றண்மையும், தேயுவில் வெம்மையும், பிருதிவியினும் வாயுவினும் வெம்மையுந் தண்மையுமில்லாத பரிசமு முள்ளன.**

பரிசத்தன்மை முதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம், உருவமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற் குத் துவக்கிந்திரியம் எ-ம் கூறியவாறு. சங்கைமுதலியவற்றி னீக்குதற்கு மாத்திரையென்னும் பதங் கொடுக்கப்பட்டது. அவற்றுள் எ-து. பிருதிவிமுதலிய நான்கனுள் எ-று. தண் மை எ-து. தண்மைப்பரிசம். வெம்மை எ-து. வெம்மைப் பரிசம்.

உ௨. உருவம் முதலிய நான்கும் பிருதிவியிற் பாகத் தாற் றோன்றுவனவும், அநித்தியமுமாம். ஏனையவற்றிற் பாகத்தாற் றோன்றுதனவாய் நித்தியமு மநித்தியமுமா வனவாம். நித்தியப்பொருளையடைந்தவை நித்தியமும், அநித்தியப்பொருளையடைந்தவை அநித்தியமுமாம்.

உ௩. சங்கை ஒருமைமுதலிய வழக்கிற்குக்காரணம். அஃது ஒன்பது பொருளினும் இருப்பது; ஒன்று முதற் பரார்த்தமீறுபது. ஒருமை நித்தியமும், அநித்தியமு மாம். நித்தியப்பொருளையடைந்தது நித்தியமும், அநித் தியப்பொருளையடைந்தது அநித்தியமுமாம். மற்று இருமை முதலியன யாண்டும் அநித்தியமேயாம்.

ஒருமைமுதலிய எ-து. ஒன்று இரண்டு முதலியவற்றினை யுடைய வழக்குயாது, அதற்கு ஏது சங்கை எ-று. குடமுத லியவற்றி னீக்குதற்கு ஒருமைமுதலிய வெனப்பட்டது. காலமுதலியவற்றி னீக்குதற்குச் சிறப்பென்னுமடையுங்கொ டுக்கற்பாற்று. ஒன்றுமுதல் எ-து. அற்றேல், சங்கைக்கு எல்லையுண்டோ, வில்லையோவென்னுமையப்பாடு நீக்குகின் றது. அங்ஙனமே "ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், அயுதம், இலக்கம், நியுதம், கோடி, அர்ப்புதம், விருந்தம், கருவம், நிகரு வம், சங்கம், பதுமம், சமுத்திரம், அந்தியம், மத்தியம், பரார் த்தமென்னும் பதினெட்டும் முறையே பத்தானுறழ்தலான் வரு" மெனச்சான்றோர்கூறுதலிற் பரார்த்தமிறுதியாயது சங்கை எ-று.

உ௪. பரிமாணம் அளத்தல் வழக்கிற்குச்சிறப்புக்கா ரணம். ஒன்பதுபொருளினுமுள்ளது. அது நுண்மையும்,

பெருமையுங், குறுமையும் நெடுமையுமென நான்கு வகைத்து.

அளத்தல் எ-து. அளத்தல் பரிமிதி. இது பெரிது, இது நுண்ணிது என்பது முதலியவற்றினையுடைத்தாகிய அதன் வழக்கு யாது, அதற்குக் காரணம் பரிமாணம் எ-று. தண்ட முதலியவற்றி னீக்குதற்கு அளத்தல் எ-ம், காலமுதலியவற்றி னீக்குதற்குச் சிறப்பு எ-ம், சத்தத்தன்மையினீக்குதற்குக் காரணம் எ-ம் கூறியவாறு. ஒன்பது பொருளினும் எ-து. நால்வகையும் பெரிதும், இடைப்பட்டதுமென்னும் வேறுபாட்டால் இருவகைப்படும்; அவற்றுட் பெரிதாகிய நுண்மையுங் குறுமையும் பரமாணுவினும் மனத்தினுமுள்ளன; இடைப்பட்டதாகிய நுண்மையுங் குறுமையுந் துவியணுகத்தின்கணுள்ளன; பெரிதாகிய பெருமையும் நெடுமையும் ஆகாயமுதலியவற்றினுள்ளன; இடைப்பட்ட பெருமையும் நெடுமையுங் குடமுதலியவற்றினுள்ளன. 'அம்முத்தினளவினும் இம்முத்தினளவு நுண்மை' யென்னும் வழக்கு ஒருங்குநில்லாத பெருமைபற்றிநிகழ்தலிற் குணம்பற்றிநிகழ்தலாதலறிந்துகொள்க. இங்ஙனமே 'கொடியினு மிலச்சினை குறுமை' யென்புழியு மொருங்குநிற்கு நெடுமைபற்றிநிகழ்தலிற் குணம்பற்றிநிகழ்வதேயாம்.

உரு. **வேற்றுமை வேறென்னும் வழக்கிற்குச் சிறப்புக் காரணம். எல்லாப்பொருளினுமுள்ளது**

வேறு எ-து. இஃது இதனின் வேறு என்னும் வழக்கு யாது அதற்குக் காரணம் வேற்றுமை எ-று. தண்டமுதலியவற்றி னீக்குதற்கு வேறென்பது முதலியனவும், காலமுதலியவற்றி னீக்குதற்குச் சிறப்பு எ-ம், வேறென்னும் வழக்கின் தன்மையினீக்குதற்குக் காரணம் எ-ம் கூறியவாறு.

**உசு. சையோகம் கூடியது என்னும் வழக்கிற்குக் காரணம். எல்லாப்பொருளினுமுள்ளது.**

கூடியது எ-து. இவ்விரண்டுங் கூடியவை யென்னும் வழக்கியாது, அதற்குக் காரணஞ் சையோகம் எ-று. தண்ட முதலியவற்றி னீக்குதற்குக் கூடியது என்னும் வழக்கிற்கு எனப்பட்டது. காலமுதலியவற்றி னீக்குதற்குச் சிறப்பென் பதுங் கொடுக்கற்பாற்று. கூடியது என்னும் வழக்கின் றன் மையிற்சேறலினீக்குதற்குக் காரணமெனப்பட்டது. ஈண்டுக் காட்டப்பட்ட விலக்கணநான்கன்கண்ணுஞ் சிறப்பென்னும் பதங் கொடுக்கற்பாற்று. பரிமாணம் வேற்றுமையென்பன வற்றினிலக்கணத்தின்கண் ஈசுரனிச்சை முதலியவற்றினீக் குதற்குச் சிறப்பென்னும் பாடமுமுண்டு; அது பின்னுள் ளோராற் சேர்க்கப்பட்டதென்பதறிக.

**உஎ. விபாகம் சையோகத்தினை யழிக்குங் குணம்; எல்லாப்பொருளினுமுள்ளது.**

சையோகம் எ-து. சையோகத்தினழிவைத் தோற்றுவிப் பது எ-று. காலத்தின்கட்சேறலி னீக்குதற்குக் குணமென் னும் பதங் கொடுக்கப்பட்டது. ஈசுரனிச்சை முதலியவற்றி னீக்குதற்குச் சிறப்பென்பதும் வேண்டப்படுமோ றறிக. அற் றேல், சிறப்பென்பது கூட்டியுரைக்கப்படும்வழிச் சிறப்பெ ன்பது நின்று வற்றுமெனின்;— அற்றன்று தொழிற்கண் ணுஞ் சேறலி னீக்குதற்கு அஃதொருதலையான் வேண்டப் படுமாகலினென்பது.

**உஅ. பரத்துவம் முன்னென்னும் வழக்கிற்குச் சிறப்புக் காரணம். அபரத்துவம் பின்னென்னும் வழக்கிற் குச் சிறப்புக் காரணம்.**

முன் எ-து. முன்னென்னும் வழக்கிற்குச் சிறப்புக்காரணம் பரத்துவம்; பின்னென்னும் வழக்கிற்குச் சிறப்புக்காரணம் அபரத்துவம் எ-று. தண்டமுதலியவற்றி னீக்குதற்கு முன்னென்னும் வழக்கிற்கு எ-ம், காலமுதலியவற்றி னீக்குதற்குச் சிறப்பு எ-ம், முன்னென்னும் வழக்கின்றன்மையினீக்குதற்குக்காரணம் எ-ம் கூறியவாறு. இங்ஙனமே இரண்டாவதன்கண்ணுமறிந்துகொள்க.

உகூ. அவ்விரண்டும் பிருதிவி முதலிய நான்கினும் மனத்தினும் உள்ளன. அவை திக்கினாற் செய்யப்படுவனவுங் காலத்தினாற் செய்யப்படுவனவும் என இருவகைப்படும். அவற்றுள், திக்கினாற் செய்யப்படும் பரத்துவம் சேய்மைக்கணுள்ளது. திக்கினாற் செய்யப்படும் அபரத்துவம் அணிமைக்கணுள்ளது. காலத்தினாற்செய்யப்படும் பரத்துவம் மூத்தோன்கணுள்ளது. காலத்தினாற்செய்யப்படும் அபரத்துவம் இளையோன்கணுள்ளது.

௩௦. குருத்துவம் ஆதியில் வீழ்ச்சிக்கு அசமவாயி காரணம்: பிருதிவியினும் நீரினும் உள்ளது.

ஆதியில் எ-து. தண்டமுதலியவற்றி னீக்குதற்கு அசமவாயி எ-ம், உருவமுதலியவற்றி னீக்குதற்கு வீழ்ச்சி எ-ம், வேகத்தினதிவியாத்தி நீக்குதற்கு ஆதியில் எ-ம் கூறியவாறு.

௩க. திரவத்துவம் ஆதியில் ஒழுகுவதற்கு அசமவாயிகாரணம்: பிருதிவி அப்புத் தேயுக்களில் உள்ளது, அஃ

து இயல்பாயுள்ளதும், நிமித்தத்தாலாவதும என இருவகைத்து. நீரின் இயல்பாயுள்ளது: பிருதிவி தேயுக்களில் நிமித்தத்தாலாவது, பிருதிவிக்கண் நெய்முதலியவற்றின் நெருப்புக்கூடுவதால் தோன்று நெகிழ்ச்சி; தேயுவிற் பொன் முதலியவற்றிற்றோன்றுவது.

*தண்டமுதலியவற்றி னீக்குதற்கு அசமவாயி எ-ம், சுவை முதலியவற்றி னீக்குதற்கு ஒழுகுவது எ-ம் கூறியவாறு.*

௬௨. சிநேகம் பொடிமுதலியன திரளுவதற்கு ஏதுவாயகுணம்: நீர்மாத்திரைக்கேயுள்ளது.

*பொடிமுதலியன எ-து. பொடி இடிக்கப்பட்ட மண்முதலியன. திரளுதலாவது சையோகவிசேடம்; அதற்கு நிமித்தகாரணம் சிநேகம் எ-று. காலமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம், உருவமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குத் திரளுவது எ-ம் கூறியவாறு. பொடி எ-து, விளங்குதற்பொருட்டு.*

௬௩. சத்தம் சோத்திரத்தாற் கவரப்படுவதாகியகுணம்: ஆகாயமாத்திரைக்கேயுள்ளது: அஃது ஒலிவடிவும் எழுத்துவடிவும் என இருவகைத்து. அவற்றுள், ஒலிவடிவு முரசுமுதலியவற்றிற்றோன்றுவது; எழுத்துவடிவு வடமொழிமுதலிய பாடைவடிவாயுள்ளது.

*சோத்திரத்தால் எ-து. சத்தத்தன்மைக்கண் அதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம், உருவமுதலியவற்றி னீக்குதற்குச் சோத்திரத்தாற் கவரப்படுவது எ-ம் கூறியவாறு. சோத்திரத்திற்றோன்றிய சத்தமே சோத்திரத்தாற் கவரப்*

படுவதாகலின் அதனின் வேறாயதன்கண் அதிவியாத்தி நீக்குதற்குச் சோத்திரத்தாற் கவரப்படுஞ் சாதியுடைத்தாதலென்பது கருத்தாகலிற் குணமென்னும் பதங்கூட்டி யுரைக்கற்பாற்றன்றென்பதே யிதனுண்மையாதலறிக.

**௩௪. புத்தியாவது எல்லாவழக்கிற்குங் காரணமாகிய குணம் எனப்படும் அறிவு. அது நினைவும் அநுபவமும் என இருவகைத்து.**

எல்லாம் எ-து. புத்திக்கிலக்கணங் கூறுகின்றது. ஆகாரம் விகாரமுதலிய வழக்கெனப்படுபவை யாவை அவற்றிற்குக் காரணம் புத்தி எ-று. தண்டமுதலியவற்றி னீக்குதற்கு எல்லாவழக்கிற்கும் எனப்பட்டது. காலமுதலியவற்றி னீக்குதற்குச் சிறப்பென்னுமடையுங் கொடுக்கற்பாற்று.

**௩௫. நினைவு வாசனைமாத்திரையாற்றோன்றும் ஞானம். அநுபவம் அதனின் வேறாய ஞானம். அது மெய்யநுபவமும் பொய்யநுபவமுமென விருவகைத்து.**

வாசனைமாத்திரையால் எ-து. வாசனையி னழிவுபாட்டின்கண் அதிவியாத்தி நீக்குதற்கு ஞானம் எ-ம், அநுபவத்தின் அதிவியாத்தி நீக்குதற்கு வாசனையாற்றோன்றுவது எ-ம் கூறியவாறு. அங்ஙனமாயினும் முன்னறிந்ததனுணர்வின்கண் அதிவியாத்தி நீக்குதற்கு வாசனைமாத்திரையாற் றோன்றுமெனல்வேண்டும். வாசனையாற்றோன்றும் என்றும்பாடம். இங்ஙனமாயவழி இஃதசம்பவமாகாது, வாசனையாற்றோன்றுமென்பது இந்திரியத்திற்கும் பொருட்குமுளதாய சம்பந்தத்தாற் றோன்றாததென்னும் பொருட்டாகலின். அது எ-து. நினைவுத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதனின் வேறு

யது எ-று. இவ்வாறுரைக்கப்பட்டவழி நினைவின் வேறாந் தன்மை நினைவின்கட் சிறிதுள்ளவழியுங் குற்றமின்றென்க. குடமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு ஞானம் எ-ம், நினைவினீக்குதற்கு அதனின் வேறாய எ-ம் கூறியவாறு.

௩௪. அஃதுடைப்பொருளின்கண் அது விசேடண மாக நிகழும் அநுபவம் மெய்யநுபவம். அதுவே பிர மையென்றுரைக்கப்படும். அஃதில் பொருளின்கண் அது விசேடணமாகநிகழும் அநுபவம் பொய்யநுபவம்.

அஃதுடைப்பொருளின்கண் எ-து. அஃதுடைப்பொரு ளாகிய விசேடியத்தின்கண் விசேடணமாவது எ-று. நினை வினீக்குதற்கு அநுபவமும் எ-ம், பொய்யநுபவத்தி னீக்கு தற்கு அஃதுடைப்பொருள் எ-ம், நிருவிகற்பகத்தின்க ணதிவியாத்தி நீக்குதற்கு அது விசேடணமாக எ-ம் கூறிய வாறு. அஃதில்பொருளின்கண் எ-து. அதனின்மையையு டையதாகிய விசேடியத்தின்கண் அது விசேடணமாக நிக ழுமநுபவம் பொய்யநுபவம் எ-று. எங்ஙனம், இப்பியின் கண் இது வெள்ளியென்னும் அறிவு. நினைவினீக்குதற்கு அநுபவம் எ-ம், மெய்யநுபவத்தி னதிவியாத்தி நீக்குதற்கு அஃதில்பொருளின்கண் எ-ம், நிருவிகற்பகத்தி னதிவியா த்தி நீக்குதற்கு அது விசேடணமாக எ-ம் கூறியவாறு.

௩௭. மெய்யநுபவம் காட்சி, அநுமிதி, உபமிதி சா த்தம் என்னும வேறுபாட்டால் நான்குவகைத்து. அத ன்கரணமும் காண்டல், அநுமானம், உபமானம், சத் தம் என்னும் வேறுபாட்டால் நான்குவகைத்து.

மெய்யநுபவம எ-து. மெய்யநுபவங் காட்சியேயெனச் சார்வாகமதத்தோரும், அதனோடு அநுமிதியுமெனக் கணாத மதத்தோரும், பௌத்தமதத்தோரும், அவற்றோடு உவமிதியு மெனா நையாயிகருட்சிலரும், அவற்றோடு சாத்தமுமென நையாயிகரும், அவற்றோடு அருத்தாபத்தியுமெனப் பிரபாக ரமதத்தோரும், அவற்றோடு அநுபலத்தியுமெனப் பாட்ட மதத்தோரும், வேதாந்தமதத்தோரும், அவற்றோடு சம்பவ மும் ஐதிகமுமெனப் பௌராணிகமதத்தோரும், அவற்றோடு சேட்டையுமெனத் தாந்திரிகமதத்தோருங் கூறுவர். அவர் மதமெல்லா மினிதன்றென்னுங் கருத்தால் அது நால்வ கைத்தெனக் காட்டப்பட்டது. அது எ-து மெய்யநுபவமா கிய பிரமைக்குக் கரணம் எ-று.

௩௮. கரணமாவது சிறப்புக்காரணம்.

சிறப்பு எ-து. காலமுதலியவற்றி னீக்குதற்குச் சிறப் பெனப்பட்டது. வியாபாரத்தின்க ணதிவியாத்தி னீக்குத ற்கு வியாபாரமுடையதென்னு மடையுங் கொடுக்கற்பாற்று. வியாபாரம் திரவியத்தின் வேறாய் அதனிற்றோன்றி யத னிற்றோன்றற்பாலதனைத் தோற்றுவிப்பது. ஈசுரனிச்சை முதலியவற்றி னீக்குதற்கு அதனிற்றோன்றியெனப்பட்டது. குயவனாற்றோற்றுவிக்கப்பட்ட குடமுதலியனவற்றைத் தோ ற்றுவிப்பதாந்தன்மை குயவன்மகனுக்கு முண்டாமாகலின் ஆண்டு அதிவியாத்தி நீக்குதற்கு அதனிற்றோன்றியெனப் பட்டது. தண்டவுருவமுதலியவற்றி னீக்குதற்கு அதனிற் றோன்றற்பாலதனைத் தோற்றுவிப்பதெனப்பட்டது.

௩௯. காரணங் காரியத்திற்கு நியதமாய் முன்னுள் ளது.

காரியத்திற்கு எ-து. காரியத்திற்கு நியதமாயென்பதற்குக் காரியத்திற்கு ஒருதலையான் வேண்டப்பட்டு எ-ம், முன்னுள்ளது என்பதற்கு முதற்கணத்துள்ளது எ-ம் உரைக்க. நியதமல்லாத கழுதைமுதலியவற்றி னீக்குதற்கு நியதம் எ-ம், காரியத்தினீக்குதற்கு முன் எ-ம் கூறியவாறு. தண்டத்தன்மைமுதலியவற்றி னீக்குதற்கு வேறோராற்றாற் பெறப்படாததாயென்னும் விசேடண மொருதலையான் வேண்டப்படுமாதலின் அதனானே கழுதை முதலியவற்றினீக்கும் நியதமென்னும் பதம் பயனில் கூற்றேயாம். இங்ஙனமாகலின் வேறோராற்றாற் பெறப்படாதத்தாய்க் காரியத்திற்கு முன்னிற்பது காரணமென்றவாறாயிற்று. வேறோராற்றாற் பெறப்படாமை வேறோராற்றாற் பெறப்படுதலின்மை. வேறோராற்றாற் பெறப்படுதல் ஒருதலையாற் றுணியப்பட்ட நியதமாய் முன்னிற்பதனோற்றானே காரியமுண்டாகும்வழி அதனோடு கூடநிற்றல். ஒருதலையாற் றுணியப்பட்ட நியதமாய் முன்னிற்பனவாகிய தண்டமுதலியவற்றாற்றானே குடமாகிய காரியந்தோன்றுழி அதனோடு கூடநிற்றல் தண்டத்தன்மை முதலியவற்றின்கணுளதாமன்றே, அது வேறோராற்றாற் பெறப்பட்டது.

## சய0. காரியம் முன்னபாவத்திற்குப் பிரதியோகி.

முன்னபாவம் எ-து. காலமுதலியவற்றி னீக்குதற்கு முன் எ-ம், அசம்பவத்தி னீக்குதற்குப் பிரதியோகி எ-ம் கூறியவாறு.

**சக. காரணம் சமவாயி, அசமவாயி, நிமித்தம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்து. எதன்கட் சமவே**

தமாய்க் காரியந்தோன்றும், அது சமவாயிகாரணம். எங்ஙனம், நூல்கள் ஆடைக்கு, ஆடையுந் தன்னையடைந்த உருவமுதலியனவற்றிற்கு. காரியத்தோடாகக் காரணத்தோடாகக் கூடி ஒருபொருளின்கட் சமவேதப்பட்டுக் காரணமாவது அசமவாயிகாரணம். எங்ஙனம், நூலின் சையோகம் ஆடைக்கும் நூலினுருவம் ஆடையுருவத்திற்கும் அசமவாயிகாரணமாம். அவ்விரண்டின்வேறாய காரணம் நிமித்தகாரணம். எங்ஙனம், ஆடைக்கு நாடா, வேமாமுதலியன. இங்ஙனங்கூறிய மூவகைக் காரணங்களுள் யாது சிறப்புக்காரணம், அதுவே கரணம் எனப்படும்.

எது எ-து. எதன்கட் சமவாய சம்பந்தத்தாற் காரியமுளதாம், அது எ-று. சக்கரமுதலியவற்றி னீக்குதற்குச் சமவேதமெனப்பட்டது. காரியத்தோடு எ-து. காரியத்தோடாகக் காரணத்தோடாக வொருபொருளின்கட் சமவேதமாய் ஆன்மாவின் விசேடகுணங்களின் வேறாய் யாது காரணமாம் அது அசமவாயிகாரணம். நூலின் சையோகமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குக் காரியத்தோடு எ-ம், நூலுருவமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குக் காரணத்தோடு எ-ம், ஆன்மாவினது விசேடகுணத்தி னதிவியாத்தி நீக்குதற்கு ஆன்மாவினது விசேடகுணத்தின் வேறாய் எ-ம், விசேடத்தி னீக்குதற்குக் காரணம் எ-ம் கூறியவாறு. அவ்விரண்டின் வேறாய காரணம் நிமித்தகாரணம் எ-து. சமவாயி அசமவாயியென்னு மிரண்டினீக்குதற்கு அவ்விரண்டின் வேறாய் எ-ம், விசேடமுதலியவற்றி னீக்குதற்குக் காரணம் எ-ம் கூறியவாறு.

இங்ஙனங்கூறிய எ-து. எக்காரணத்தாற் கரணத்தன்மையோடுகூடியகாரணம்மேற்காட்டப்பட்டது, அக்காரணத்தாலிங்ஙனங்கூறிய மூவகைச் சாதகங்களுள் யாது, சிறப்புச் சாதகம், அதுவே கரணமென்பது கருத்து. கரணம் விரித்துரைக்கப்பட்டது.

## பிரத்தியக்ஷப்பிரமாணம்.

௬௨. அவற்றுள், காண்டலாவது காட்சியறிவிற்குக் கரணம். அறிவிற்குக் கரணமாகாத அறிவு காட்சி. காட்சி இந்திரிய விடயசம்பந்தத்தாற் றோன்றுஞானம். அது நிருவிகற்பகமும், சவிகற்பகமும் என இருவகைத்து. அவற்றுள், நிருவிகற்பகம் விசேடணமின்றித்தோன்றும் ஞானம். சவிகற்பகம் விசேடணத்தோடு தோன்றும் ஞானம்; எங்ஙனம், இவன்சாத்தன், இவன்பார்ப்பான், இவன்கரியன் என்பன.

நான்கனுள் எ-து. பிரமாணம் நான்கனுள் எ-று. தண்டமுதலியவற்றி னீக்குதற்கு ஞானம் எ-ம், அநுமானமுதலியவற்றி னீக்குதற்குக் காட்சி எ-ம் கூறியவாறு.

இந்திரியத்திற்கும் பொருட்கும் எ-து. இந்திரியம் சட்சுமுதலியன; பொருள் குடமுதலியன; அவற்றின் சம்பந்தம் சையோகமுதலியன; அவற்றாற்றோன்றிய அறிவு காட்சி எ-று. சம்பந்தத்தி னழிவுபாட்டி னீக்குதற்கு ஞானம் எ-ம், அநுமிதிமுதலியவற்றி னீக்குதற்கு இந்திரியத்திற்கும் பொருட்குமுளதாகிய சம்பந்தம் எ-ம் கூறியவாறு. அற்றேல்,

படலத்தான் மறைக்கப்பட்ட கண்ணாற் பொருள்கவரப்படு தலெங்ஙனம், கண் படலத்தான் மறைக்கப்படுதலின் பொருளோடு சம்பந்தப்படுதலின்மையால். அல்லதூஉம் தூயதாகிய கங்கைநீராற் சூழப்பட்ட மீன் முதலியவற்றின் கண்ணாற் கவரப்படுத லெங்ஙனமெனின்:— அற்றன்று. தூயதாகிய திரவியம் ஒளியைத்தடுப்பதன்றாகலின் அதனுட் சட்சு புகுதலுளதாமென்பது. ஈசுரனது காட்சிக்கணதிவியாத்தி வருமென்னற்க, ஈண்டுத் தோற்றுவிக்கப்பட்ட காட்சியே இலக்கியமாகக் கொள்ளப்படுதலின்.

அவற்றுள் விசேடணமின்றி எ-து. சவிகற்பகத்தினதிவியாத்தி நீக்குதற்கு விசேடணமின்றி எ-ம், விசேடணத்தினீக்குதற்கு ஞானம் எ-ம் கூறியவாறு. விசேடணத்தோடு எ-து. குடமுதலியவற்றி னீக்குதற்கு ஞானம் எ-ம், நிருவிகற்பகத்தி னீக்குதற்கு விசேடணத்தோடு எ-ம் கூறியவாறு.

சஅ. காண்டலறிவிற்கு ஏதுவாகிய இந்திரியத்திற்கும் பொருட்குமுளதாயசம்பந்தம் சையோகமும், சையுத்தசமவாயமும், சையுக்தசமவேதசமவாயமும், சமவாயமும், சமவேதசமவாயமும், விசேடண விசேடியத்தன்மையும் என அறுவகைப்படும். சட்சுவாற் குடக்காட்சி தோன்றும்வழிச் சையோகஞ் சம்பந்தமாம்; குடவுருவக்காட்சி தோன்றும்வழிச் சையுத்தசமவாயஞ் சம்பந்தமாம்; சட்சு சையுத்தமாய குடத்தின்கண் உருவும் சமவாயப்பட்டு நிற்றலானென்க. உருவத்தன்மைப் பொதுமைக்காட்சி தோன்றும்வழிச் சையுத்தசமவேத சமவாயம் சம்பந்தமாம்; சட்சு சையுத்தமான குடத்

தின்கண் உருவம் சமவேதமும் அதன்கண் உருவத்த ன்மை சமவாயமுமாதலானென்க. சோத்திரத்தாற் சத் தத்தினை நேரேகாணும்வழிச் சமவாயஞ் சம்பந்தமாம்; செவித்துளையிலிருக்கும் ஆகாயம் சோத்திரமாகலின், சத்தம் ஆகாயகுணமாதலின், குணமுங் குணியும் சம வாயமாதலானென்க. சத்தத்தன்மையினை நேரேகா ணும்வழிச் சமவேதசமவாயஞ் சம்பந்தமாம், சோத்தி ரத்தின்கட் சமவேதமாய சத்தத்தின்கண் சத்தத்தன் மை சமவாயமாதலானென்க. அபாவக்காட்சிக்கண் விசேடண விசேடியத்தன்மை சம்பந்தமாம் குடத்தின பாவத்தையுடையது பூதலம் என்புழிச் சட்சு சையுத் தமான பூதலத்தின்கண குடத்தினபாவம் விசேடண மாதலானென்க. இவ்வாறுகூறிய அறுவகைச் சம்பந் தத்தானுந் தோன்றிய அறிவு காண்டலெனப்படும்; அத ற்குக்காரணம் இந்திரியம்; அதனால் இந்திரியம் காண்ட லளவையென்பது பெறப்பட்டது.

காண்டலறிவிற்கு எ-து. அக்காண்டலறிவும் கிராணத் தினாற்றோன்றுவதும், இரசனத்தினாற் றோன்றுவதும், சட்சு வினாற் றோன்றுவதும், சோத்திரத்தினாற் றோன்றுவதும், துவக்கினாற்றோன்றுவதும், மனத்தினாற் றோன்றுவதுமென் னும் வேறுபாட்டால் அறுவகைத்து. அற்றேல், காண்டல றிவிற்குக் காரணமாகிய இந்திரியத்தின்கணுள்ள காட்சியோ டொருநிலைக்களத்துளதாதலோடுகூடிய சம்பந்தம் யாது என் அவாவப்படுமாகலின் அதனைப் பகுத்துக்காட்டுகின்றது. உல கம்பற்றி நிகழுங் காட்சி எ-று.

சட்சுவினால் எ-து. சையோகத்திற்கு உதாரணங்கூறுகின்றது. ஆகவே, திரவியத்தைச் சட்சுவினாற் காண்டலும், துவக்கிந்திரியத்தினாற்காண்டலும், மனத்தினாற் காண்டலுமென்னு மூன்றன்கண்ணுஞ் சையோகமே சம்பந்தமாமென்பது கருத்து.

குடவுருவத்தினை எ-து. சட்சுவினாலென்பது வந்தியையும். ஆகவே, திரவியத்தின்கட் சமவேதப்பட்டனவற்றைச் சட்சு, துவக்கு, மனம், இரசனம், கிராணமென்பனவற்றாற் றோன்றுவனவற்றின்கட் சையுத்த சமவாயமே சம்பந்தம் எ-று.

உருவத்தன்மை எ-து. உருவத்தன்மையுடைத்தாகிய பொதுமை யாது, அதனைக் காண்டற்கண் எ-று. ஈண்டுஞ் சட்சுவினாலென்பது வந்தியையும். ஆகவே, திரவியத்தின்கட் சமவேதப்பட்டு நிற்பனவற்றின்கட் சமவேதப்பட்டு நிற்பனவற்றைச் சட்சு இரசனங் கிராணம் துவக்கு மனமென்பனவற்றாற் றோன்றுவனவற்றின்கட் சையுத்த சமவேத சமவாயமே சம்பந்தமாமென்பது கருத்து. இங்ஙனமாயின் திரவியத்தின்கட் சமவேதப்பட்டனவற்றைக் காண்டற்கண்ணுஞ் சையுத்த சமவேத சமவாயமே சம்பந்தமாய் முடியுமெனின்;— அற்றன்று ஈசுரன் ஆன்மாமுதலியோர் சான்றோரல்லரெனல் வேண்டுமாகலினென்பது.

சோத்திரத்தால் எ-து. சமவாயசம்பந்தத்திற்கு உதாரணங் கூறுகின்றது. தோற்றுவிக்கப்பட்டவென்பது எஞ்சி நின்றது. செவி எ-து. அற்றேல், சோத்திரத்திற்குஞ் சத்தத்திற்குஞ் சமவாயமெங்ஙனமெனை அவாவப்படுவதனைக்குறித்து அதனைப் பொருந்துமாற்றாற் காட்டுகின்றது. இவ்வாறாயிற் சமவாயம் நித்தியமாகலின் சத்தக்காட்சிக்கண் வியா

யாரம் யாதெனின்;—சத்தமாக சோத்திரத்திற்கும் மனத்திற்குமுளதாய சையோகமாக வியாபாரமெனக்கொள்க. சத்தத்தன்மை எ-து. சோத்திரத்தால் என்பது வருவித்துரைக்கப்படும். தோற்றுவிக்கப்பட்டதென்பது சொல்லெச்சம்.

விசேடணம் எ-து. விசேடணபாவமும் விசேடியபாவமுமென வறிந்துகொள்க. அவை இந்திரியத்தோடு சம்பந்தப்பட்ட விசேடணத்தன்மையும் இந்திரியத்தோடு சம்பந்தப்பட்ட விசேடியத்தன்மையுமாம். குடத்தினபாவத்தையுடையது எ-து. விசேடணத்தன்மைச் சம்பந்தத்தினைப் பொருந்துமாற்றாற் காட்டுகின்றது. 'இப்பூதலத்தின்கட் குடமில்லை' யென்பது முதலியவற்றின்கண் விசேடியத்தன்மைச் சம்பந்தந் துணியப்படும், ஏழாம்வேற்றுமையீற்று விசேடணமாகலானென்பது.

இங்ஙனம் எ-து. காட்சிப்பிரமையின் முடிபு கூறுகின்றது; மேற்காட்டப்பட்ட முறையால் எ-று.

அதன்கரணம் எ-து. அற்றேல், சித்தாந்தத்தின்கட் காண்டலறிவிற்குக் கரணம் இந்திரியத்திற்கும் பொருட்குமுளதாய சம்பந்தமென்பது ஆகாதது என்னையென்னுங் கடாவிற்கு விடைகூறுகின்றது.

அதனால் எ-து. காட்சியளவைக்கு நிகமனங்கூறுகின்றது. காட்சிப்பிரமைக்குக் கரணமாகலான் எ-று.

பெறப்பட்டது எ-து. நியாயசித்தாந்தத்துட் பெறப்பட்டது எ-று.

## அநுமானப்பிரமாணம்.

௪௪. அநுமானமாவது அநுமிதிக்குக்கரணம்: அநுமிதியாவது ஆராய்ச்சியாற்றோன்றுஞானம்: ஆராய்ச்சியாவது வியாத்தியான் விசேடிக்கப்பட்ட பக்கதருமத்தன்மைஞானம்: எங்ஙனம், தீயின் வியாப்பியமாகிய புகையுடையது இம்மலை என்னுஞானம் ஆராய்ச்சி: அதனாற்றோன்றுவதாகிய மலை புகையுடைத்து என்னுஞானம் அநுமிதியென்க. வியாத்தியாவது யாண்டு யாண்டுப்புகை, ஆண்டுத்தீ என்னும் உடனிகழ்ச்சிநியமம்: பக்கதருமத்தன்மையாவது வியாப்பியம மலைமுதலியவற்றினுளதாதல்.

அநுமிதிக்கு எ-து. காட்சிக்கும் அநுமானத்திற்குங் காரிய காரணத்தன்மை நன்குபோதருமாகலின் காட்சியளவையின் பின் அநுமானத்தைத் தெரித்துணர்த்துகின்றது. அநுமிதிக்குக் கரணம் அநுமானம் எ-று. அஃதும் இலிங்கபராமரிசமேயென்பது முன்னருணர்த்தப்படும். குடாரமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு அநுமிதி எ-ம், காட்சியளவை முதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு அநு எ-ம், கூறியவாறு.

ஆராய்ச்சி எ-து. அற்றேல், அநுமிதி தெரிந்துணர்ந்து கோடற்கரிதாகலின் அதனோடுகூடிய வநுமானமுந் தெரிந்துணர்ந்து கோடற்கரிதென்னு மாசங்கை நீக்குகின்றது. காட்சியளவை முதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு ஆராய்ச்சியாற்றோன்றிய எ-ம், ஆராய்ச்சியினழிவுபாட்டி னீக்குதற்கு ஞானம் எ-ம் கூறியவாறு. ஆராய்ச்சியாற்

றேன்றுங் காட்சியளவையி னீக்குதற்கு ஏதுவை விடயமாகக் கொள்ளாதது என்பது மறிந்துகொள்க.

வியாத்தியான் விசேடிக்கப்பட்ட எ-து. விடயமுடைத் தாந்தன்மைச் சம்பந்தத்தால் வியாத்தியான் விசேடிக்கப் பட்ட பக்கதருமத்தன்மை ஞானம் பராமரிசம் எ-று. குட முதலியவற்றினீக்குதற்குப் பக்கதருமத்தன்மை எ-ம், 'புகையுடைத்து மலை' யென்பதுமுதலிய ஞானத்தி னீக்குதற்கு வியாத்தியான் விசேடிக்கப்பட்ட எ-ம் கூறியவாறு. அது எ-து. பராமரிசத்தாற் றோன்றியது எ-று. யாண்டு யாண்டு எ-து. 'யாண்டு யாண்டெப்புகை ஆண்டாண்டுத்தீ' என வியாத்தியை வெளிப்படக்காட்டியவாறு. ஆண்டு உடனிகழ்ச்சி நியமமென்பது இலக்கணம். உடனிகழ்ச்சி ஒருநிலைக்களத் துளதாதல். அதன் நியமம் வியாத்தி எ-று. அது பிறழ்ச்சிப்படாமை எ-ம், பிறழ்ச்சிப்படாமை பிறழ்ச்சியின்மை எ-ம், பிறழ்ச்சி துணிபொருளில்லதன்கணுளதாதல் எ-ம் படுமாகலின் துணிபொருளில்லதன்கணிலதாதல் வியாத்தியென முடிந்தவாறறிக. 'அடுக்களை தீயுடைத்து புகையால்' என்பது முதலியவற்றுள் துணிபொருள் தீ; அஃதில்லது மடு முதலியன; அதன்கணுளதாதல் தெப்பம் முதலியவற்றினிலதாதல்; முதற்கண் ஏதுவாகிய புகைக்கண் எனக் கொண்டு இலக்கணம் பொருந்துமாறறிக. 'புகையுடைத்துத் தீயுடைமையால்' என்பது முதலியவற்றுள் துணிபொருள் புகை; அஃதில்லது ஒழுகக்காய்ந்த இரும்பு; அதன்கணுளதாதல் வன்னிமுதலியவற்றின்கணுதலின் அதிவியாத்தியின்றென்க.

வியாப்பியம் எ-து. அற்றேல், அறிவோன் இவ்வியாத்தி பக்கதருமத்தன்மை ஞானமெய்யுழிப் பக்கதருமத்தன்மையாவது யாது என அவாவுமாகலின் அவனுக்கு அதன்

சொரூபந் தெரித்துணர்த்துகின்றது. வியாப்பியமாவது வியாத்திக்குப் பற்றுக்கோடு. அஃதும் புகை முதலியனவேயாம். அது மலைமுதலியவற்றினுளதாதல் பக்கதருமத்தன்மை எ-று.

சஙு. அநுமானம் தன்பொருட்டநுமானமும், பிறன் பொருட்டநுமானமும் என இருவகைப்படும்.

அநுமானம் எ-து. அநுமானம் அநுமிதிக்குக் கரணமாதலெவ்வாறு எ-ம், அதனால் அநுமிதி தோற்றுவதெவ்வாறு எ-ம், அறிதல் வேட்கையுற்றானுக்கு நொய்தி னவ்வநுமானத்தைப் பகுத்துக்காட்டு முகத்தானுணர்த்துங் கருத்தால் அநுமானத்தினைப் பகுக்கின்றது.

தன்பொருட்டநுமானம் எ-து. இருவகையாதலைக் காட்டுகின்றது.

௩௬. தன்பொருட்டநுமானமாவது தனது அநுமிதிக்குக்காரணம். அங்ஙனமன்றே, தானேயடுத்தடுத்துக் கண்டலான் யாண்டுயாண்டுப்புகை, ஆண்டு ஆண்டுத்தீ என அடுக்களை முதலியவற்றின்கண் வியாத்தியைக் கவர்ந்துகொண்டு மலையினணிமைக்கட்சென்றான்; ஆண்டுச் சென்றுழித் தீயின்கண் ஐயமுற்று மலையின்கட் புகையைக்கண்டு யாண்டு யாண்டுப்புகை, ஆண்டு ஆண்டுத்தீ என வியாத்தியை நினைகின்றான். அதன்பின்னர்த் தீயின் வியாப்பியமாகிய புகையுடையது இம்மலை என்னுஞானந்தோன்றும். அதுவே இலிங்கபராமரிசம் எனக் கூறப்படும். அதனால் மலை புகையுடைத்தென்னும் அநுமிதிஞானந்தோன்றும். இது தன்பொருட்டநுமானமென்க.

தன்பொருட்டு எ-து. எதனுற்றனக்குப் பயனுண்டாம், அது தன்பொருட்டெனத் தொகைமொழியாதலறிக. தனக்குப் பயன் தனது அநுமேயவுணர்ச்சி. பிறன்பொருட்டென்புழியு மிவ்வாறே கொள்க.

அது எ-து. வியாத்திவலியால் ஒடுங்கிய பொருளை வருவிப்பதாதலின் இலிங்கமெனப் பெயர்பெறும்; அஃதும் புகை முதலியன; அதனுராய்ச்சி ஞானவிசேடம் எ-று. அதனுல் எ-து. இலிங்கபராமரிசத்தால் எ-று. இது எ-து. தன்பொருட்டநுமானத்தை முடித்துரைக்கின்றது. எதனுலிது தன்னுணர்ச்சிக்கு ஏதுவாம், அதனுல் இது தன்பொருட்டநுமானம் எ-று.

௬எ. தான் புகையால் தீயை அநுமித்துணர்ந்து பிறனுக் குணர்த்தும்பொருட்டு ஐவகையுறுப்புக்களையுடைய வாக்கியம் எடுத்தாளப்படுவது யாது, அது பிறன் பொருட்டநுமானமாம். எங்ஙனம், மலை தீயுடைத்து, புகையுடையதாதலால், யாது யாது புகையுடைத்து, அது அது தீயுடைத்து, அடுக்களைபோல, இஃதும் அங்ஙனம், ஆதலின் இங்ஙனம்என்பது. இதனுற்கூறப்பட்ட இலிங்கத்தால் பிறனுந் தீயுண்டென வுணர்ந்து கொள்வன்.

தான் எ-து. முறையானே பிறன்பொருட்டநுமானத்தினைக்கூறுகின்றது. எதன்கண் ஐவகையுறுப்புக்களையுடைய தொடர்மொழியெடுத்தாளப்படும்,அது பிறன்பொருட்டநுமானமெனை வியைக்க. ஐவகையுறுப்புக்கள் எ-து. உறுப்பு திரவியத்தின் சமவாயிகாரணம்; பிரதிஞ்ஞை முதலியவற்றுளஃதின்மையின் இவை யெவ்வாறுறுப்பாமெனின்:— அநுமா

னவாக்கியத்தி னேகதேசமாகலின் உறுப்பென வுபசரித்துக் கூறப்படுமெனக்கொள்க. அற்றேல், அங்ஙனமாயினும் ஐவகையுறுப்புக்களையுடைய வாக்கியத்திற்கு அநுமானமாதலுண்டென்பது ஆராய்ச்சிக்குரியதன்று, அதற்கு இலிங்கபராமரிசத்தன்மையின்மையினெனின்:— அற்றன்று, இலிங்கபராமரிசத்தைப் பயப்பதாய விலிங்கத்தை யுணர்த்துவதாதலான் அநுமானமென வுபசரித்துக் கூறப்படுதன்மாத்திரையே பொருளாகலினென்பது. எங்ஙனம் எ-து. அதற்கு உதாரணங்கூறுகின்றது. இஃதும் அங்ஙனம் எ-து. இம்மலையுமங்ஙனமே தீயின் வியாப்பியமாகிய புகையுடைத்து எ-று. ஆதலின் இங்ஙனம் எ-து. தீயின் வியாப்பியமாகிய புகையுடைமையாற் றீயுடைத்து எ-று. இதனால் எ-து. இவ்வைவகையுறுப்புக்களையுடைய தொடர்மொழியால் எ-று.

௪அ. ஐவகை உறுப்புக்களாவன பிரதிஞ்ஞை, ஏது உதாரணம், உபநயம், நிகமனம் என்பன. இதனுள் மலை தீயுடைத்து என்பது பிரதிஞ்ஞை; புகையுடைமையால் என்பது ஏது; யாது யாது புகையுடைத்து, அது அது தீயுடைத்து என்பது உதாரணம்; இஃதும் அங்ஙனம் என்பது உபநயம்; ஆகலின் இங்ஙனம் என்பது நிகமனம்.

பிரதிஞ்ஞை எ-து. அற்றேல், ஐவகையுறுப்புக்களையுடைய தொடர்மொழியென்புழி அவ்வைவகையுறுப்புக்கள் யாவையென ஆசங்கைநிகழுமாதலின் அவற்றைக்காட்டுகின்றது. உறுப்பாவது பிரதிஞ்ஞை முதலியவற்றினொன்று. மேற்கோளாவது துணிபொருளான் விசேடிக்கப்பட்ட பக்கத்தினையுணர்த்துந் தொடர்மொழி. ஐந்தாம்வேற்றுமையீற்

ருகை மூன்றும்வேற்றுமையீற்றாகை விலிங்கத்தினையெடுத்துக்கூறுதல் ஏது. வியாத்தியையுணர்த்துந் திருட்டாந்தத்தைக்கூறுவதுஉதாரணம். உதாரணங்கூறப்பட்ட வியாத்தியான் விசேடிக்கப்பட்டமையால் ஏதுப்பக்கதருமத்தன்மையையுணர்த்துதலைக்கூறுவது உபநயம். பக்கத்தின்கட் டுணிபொருள் பாதமில்லதாந்தன்மையை யுணர்த்துதலைக்கூறுவது நிகமநம். இவ்விலக்கணங்களையுட்கொண்டு பிரதிஞ்ஞைமுதலியவற்றை மலை புகையுடைத்து என்பது முதலியவற்றான் விசேடித்துக் காட்டியவாறு.

௬௪. தன்பொருட்டநுமிதி பிறன்பொருட்டநுமிதியென்னுமிரண்டற்கும் இலிங்கவாராய்ச்சியே கரணம் அதனால் இலிங்கவாராய்ச்சி அநுமானமாம்.

இலிங்கம் எ-து. இலிங்க வாராய்ச்சியே எ-து. அறியப்படுவதாகியவிலிங்கமே யநுமிதிக்குக் கரணமெனச் சான்றோராற்கூறப்பட்டது பொருந்தாது 'இவ்யாகசாலை தீயுடைத்து அறியப்படாத புகையுடைமையால்' என்பது முதலியவற்றுள் இலிங்கமில்வழியும் அநுமிதி நிகழக்காண்டலின் என்னுங் கருத்தால் இலிங்கபராமரிசமே கருவியென்பது கூறுகின்றது. அதனால் எ-து. அநுமானத்தை முடித்துரைக்கின்றது; அநுமிதிக்குக் கரணமாகலின் எ-று. இதுவே மூன்றாவதாகிய ஞானமெனக்கூறப்படும். அங்ஙனமன்றே, அடுக்களை முதலியவற்றின்கட் கவரப்படுவதாகிய புகை, தீ என்பனவற்றின் வியாத்திக்கட் புகையினுணர்வு யாது, அது முதலாவது. பக்கத்தின்கட் புகையினறிவு யாது அஃது இரண்டாவது. ஈண்டே தீயின்கண் வியாப்பியமாகலாற்றோன்றும் புகையறிவு யாது, அது மூன்றாவது. இதுவே இலிங்கபராமரிசமெனக் கூறப்படும். அநுமானம் எ-து. வியாபார

முடைத்தாகிய காரணங் கரணமென்னுமதத்தின்கண் வியாத்திஞானமே அநுமானமாயும் இலிங்கபராமரிசமே வியாபாரமாயும் முடியும்.

௫௦. இலிங்கம் அந்நுவயவெதிரேகியுங் கேவலாந்நுவயியும், கேவலவெதிரேகியுமென மூவகைத்து.

௫௧. அந்நுவயத்தானும் வெதிரேகத்தானும் வியாத்தியுடையது அந்நுவயவெதிரேகி. எங்ஙனம் தீயாகிய துணிபொருளின்கட் புகையுடைமை,யாண்டுப்புகை ஆண்டுத்தீ, அடுக்களைபோல என அந்நுவயவியாத்தியும், யாண்டுத்தீயில்லை ஆண்டுப்புகையுமில்லை மடுப்போல என வெதிரேகவியாத்தியுமுண்மையின்.

அந்நுவயம் எ-து. அந்நுவயவெதிரேகிக்கிலக்கணங் கூறுகின்றது. மூன்றுவதற்குப் பயப்பாடு பொருள். துணிபொருள், ஏது என்பனவற்றி னுடனிகழ்ச்சி அந்நுவயம். அவ்விரண்டினபாவங்களது உடனிகழ்ச்சி வெதிரேகம். ஆகவே, அந்நுவயமாகிய பயப்பாடுடைய வியாத்தியையுடையதும்,வெதிரேகமாகிய பயப்பாடுடைய வியாத்தியையுடையதும் அந்நுவயவெதிரேகி எ-று. கேவலவெதிரேகியின்க ணதிவியாத்தி நீக்குதற்கு அந்நுவயத்தானும் எ-ம், கேவலாந்நுவயிக்கண் முறைபிறழ்ச்சி நீக்குதற்கு வெதிரேகத்தானும் எ-ம் கூறியவாறு. இங்ஙனமாகவே, அந்நுவயவியாத்தி மேற்காட்டப்பட்டதேயாம். வெதிரேகவியாத்தியாவது துணிபொருளின்மைக்கண் வியாபகமாகிய அபாவத்திற்குப் பிரதியோகியாதல் எ-று. அது "வியாப்பியவியாபகங்களது தன்மைபாவத்தின்கண் எவ்வியல்பிற்றாகக் கொள்ளப்படும், அவற்றினபா

யத்தின்கண் அவ்வியல்பின் மறுதலைக்கண்வைத்து உணரப் படும்: அந்நுவயத்தின்கண் ஏது வியாப்பியமும், துணிபொருள் வியாபகமுமாம் அதன் மறுதலைக்கட் டுணிபொருளினபாவம் வியாப்பியமும், ஏதுவினபாவம் வியாபகமுமாம்" எனக்கூறப்பட்டது.

ருஉ. அந்நுவயத்தின் மாத்திரமே வியாத்தியுடையது கேவலாந்நுவயி, எங்ஙனம், குடம் அபிதேயம், பிரமேயத்தன்மையால், ஆடைபோல எனவரும். ஈண்டுப் பிரமேயத்தன்மை அபிதேயத்தன்மைகட்கு வெதிரேக வியாத்தியின்று, எல்லாப்பொருளும் பிரமேயமும் அபிதேயமுமாகலானென்க.

அந்நுவயம் எ-து. கேவலாந்நுவயிக்கிலக்கணங் கூறுகின்றது. அந்நுவயத்தானே எதன்கண் வியாத்தியுளதாம் அது கேவலாந்நுவயி எ-று. ஈண்டு எ-து. பிரமேயத்தன்மை அபிதேயத்தன்மையென்பனவெதிரேகவியாத்தியாதலைமறுத்துக்கூறுகின்றது. அபிதேயத்தன்மையைச் சாதிப்பதாய வநுமானம் எ-று. எல்லாம் எ-து. அற்றேல், அதனைமறுக்கும் ஏது யாது என்னுங் கடாவினை யாசங்கித்து அதற்கு ஏதுக்கூறுகின்றது. எல்லாப்பொருளும் எ-று. ஆகவே பதங்களெல்லாவற்றானும் பெயரிட்டு வழங்கற்பாலதாந்தன்மை ஈசுரனது பிரமைக்கு விடயமாந்தன்மையென்னு மிரண்டனது முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாகாமையெனப் படுங் கேவலாந்நுவயித்தன்மையால் அதனபாவமறியப்படாமையின் அதனோடுகூடிய வெதிரேகவியாத்தி யுண்டாகாதென்பதே கருத்து.

௫௩. கேவலவெதிரேகி வெதிரேகத்தின்மாத்திரமே வியாத்தியுடையது. எங்ஙனம், பிருதிவி ஏனையவற்றின் வேறு, நாற்றமுடைத்தாதலால், யாது ஏனையவற்றின் வேறன்று, அது நாற்றமுடையதன்று, அப்புப்போல, இஃது அங்ஙனமன்று, ஆதலின் இங்ஙனமன்று என வரும். ஈண்டு யாது நாற்றமுடைத்து, அது ஏனையவற்றின் வேறு என அந்நுவயதிருட்டாந்தமில்லை, பிருதிவி முழுதும் பக்கமாகலின்.

வெதிரேகம் எ-து. கேவலவெதிரேகிக்கிலக்கணங் கூறுகின்றது. வெதிரேகத்தாற்றானே வியாத்தி எதன்கணுளதாம் அது கேவலவெதிரேகி எ-று. அந்நுவயவெதிரேகியின்கணதிவியாத்தி நீக்குதற்கு மாத்திரையெனக் கூறியவாறு. இதுவும் அங்ஙனமன்று எ-து. இதுவும் என்பதற்கு இப்பிருதிவி எ-ம், அங்ஙனமன்று என்பதற்கு நாற்றமின்மையுடையதன்று எ-ம் உரைக்க. ஈண்டு எ-து. அற்றேல், ஈண்டு அந்நுவயவியாத்தியின்றென்பது என்னையென ஆசங்கித்துப் பரிகரிக்கின்றது; ஏனையவற்றின் வேறுதலைச் சாதிப்பதாகிய வநுமானம் எ-று. இஃதுபலக்கணம். வாழுமுடம்பு ஆன்மாவையுடையது, பிராணன் முதலியனவுடைமையால், யாது இங்ஙனமன்று, அஃது இங்ஙனமன்று, எங்ஙனம் குடம் எ-ம் காட்சிமுதலியன பிரமாணம் எனவழங்கப்படும், பிரமைக்குக் கரணமாதலின், யாது இங்ஙனமன்று அஃது இங்ஙனமன்று, எங்ஙனம், காட்சிப்போலி எ-ம், விவாதத்துக்கிடம் ஆகாயம் என வழங்கப்படும், சத்தமுடைத்தாந்தன்மையால் எ-ம் வருவனவெல்லாம் கேவலவெதிரேகியெனக் காட்டற்பாலன.

ருச. பக்கம் ஐயுற்றுத்துணியும்பொருளுக்கிடம்: எங்ஙனம், புகையுடைமையாகிய ஏதுவின்கண் மலை. சபக்கம்துணிந்தபொருளுக்கிடம்: எங்ஙனம், அவ்வேதுவின்கண் அடுக்களை. துணிந்த பொருளில்லாதவிடம் விபக்கம்: எங்ஙனம், ஆண்டே மடு.

ஐயுற்று எ-து. இனிப்'பிருதிவிமுழுவதும் பக்கமாகலின்' என்புழிப் பக்கத்தன்மை யாது என்னும் அவாய்நிலையுளதாமாகலின் அதற்கு நிருத்தி கூறுகின்றது. சபக்கத்தினீக்குதற்கு ஐயுற்று எனக் கூறியவாறு. துணியப்பட்ட எ-து. பக்கத்தின்கணதிவியாத்தி நீக்குதற்குத் துணியப்பட்டவெனக்கூறியவாறு. ஆண்டே எ-து. புகையுடைமையாகிய வேதுவின்கண் எ-று. துணியப்பட்ட எ-து. சபக்கத்தின்கணதிவியாத்தி நீக்குதற்குத் துணிபொருள் எ-ம், பக்கத்தின்கணதிவியாத்தி நீக்குதற்குத் துணியப்பட்ட எ-ம் கூறியவாறு. ஆண்டேயென்பதற்குப் புகையுடைமைக்கண் எனவுரைக்க.

ருரு. ஏதுப்போலி சவ்வியபிசாரம், விருத்தம், சற்பிரதிபக்கம், அசித்தம், பாதிதம் என ஐவகைத்து.

சவ்வியபிசாரம் எ-து. ஏதுக்களைத் தெரித்துணர்த்தி அதன் பின்னொருதலையானுணர்த்தற்பாலனவாகிய ஏதுப்போலிகளைத் தெரித்துணர்த்துகின்றது. அந்நுவயவெதிரேகி உருவமைந்தனையும் பொருந்தித் தன்னாற் சாதிக்கப்படும் பொருளைச்சாதித்தற்கு வல்லதாமன்றே, அவையாவையெனிற்கூறு-தும்: பக்கதருமத்தன்மை, சபக்கத்துண்மை, விபக்கத்தின்மை அபாதிதத்திற்கு விடயமாந்தன்மை, அசற்பிரதிபக்கத்தன்மை

என்னுமைந்து மைவகை உருவமெனப்படும். பாதிதமல்லா ததாகிய சாதிக்கப்படும் விடயமுடையது யாது, அது அபா திதத்திற்கு விடயமாம்; அதன்றன்மை அபாதிதத்திற்கு விட யமாந்தன்மை. இங்ஙனமே சாதிக்கப்படும் பொருளது அபா வத்தினைச் சாதிக்கும் வேற்றேதுவினையுடையது யாது, அது சற்பிரதிபக்கமெனப்படும்; அஃதில்லது யாது, அஃது அசற் பிரதிபக்கமெனப்படும்; அதன்றன்மை அசற்பிரதிபக்கத்தன் மையெனவறிக. மற்றுக் கேவலாந்நுவயி உருவம் நான்கோ டும் பொருந்தியே தன்றாற் சாதிக்கப்படும்பொருளைச் சாதி க்கவல்லதாம், அது விபக்கத்திற் றிரிபுண்டமையான் அத ன்கணிலதாதலினுந் திரிபுடைத்தாமாகலின், கேவலவெ திரேகியு மங்ஙனமேயாம். அது சபக்கத்திற் றிரிபுண்டமை யால் அதன்கணுளதாதலினுந் திரிபுடைத்தாமாகலின். இவ் வாறெடுத்துக்காட்டப்பட்ட வுருவங்களுட் சிலவுருவம் பொ ருந்திநிற்றலால் ஏதுப்போலுமாகலின் ஏதுப்போலியெனப் படும். அதன்றன்மை அநுமிதியும் அதன் கரணமுமென்னு மிரண்டனுளொன்றனைத் தடைசெய்து நிற்குமுண்மை ஞா னத்திற்கு விடயமாந்தன்மை. பாதத்தின்கண் தீ வெம்மை யில்லது என்னு மநுமிதியைத் தடைசெய்து நிற்பதாகிய எவ்வறிவு வெம்மையுடையதாகிய தீயின்கண் வெம்மையின் மையைச சாதிக்குந் திரவியத்தன்மையெனப்படும், அதன் விடயத்தன்மை விடயததன்மைச சம்பந்தத்தால் திரவி யத்தன்மையெனப்படு மேதுப்போலிக்கண்ணுளதாகலி னில க்கணம் பொருந்துமாறறிக. உண்மையேதுவி*னீக்குதற்கு உண்மை எ-ம், குடமுதலியவற்றி னீக்குதற்கு அநுமிதிக்கு மதன்கரணத்திற்குந் தடைசெய்வது எ-ம், முறைபிறழ்வத ன்க ணவ்வியாத்தி நீக்குதற்கு அவ்விரண்டனு ளொன்ற ற்கு எ-ம் கூறியவாறு.

௫௬. அவற்றுள் சவ்வியபிசாரம், அநைகாந்திகம் அது பொதுவும், சிறப்பும், முடிவுபெறாததும் என மூவகைத்து.

௫௭. அவற்றுள் பொதுவநைகாந்திகம் துணிபொருளில்லாவிடத்து மிருப்பது. எங்ஙனம், மலை தீயுடைத்து பிரமேயமாதலால் என்பது; பிரமேயமாந்தன்மை தீயில்லாவிடமாகிய மடுவின்கண் இருத்தல் அறியப்படுதலி னென்க.

அவற்றுள் எ-து. பொதுமுதலிய மூன்றனுள் எ-று. விருத்தத்திற் செல்லுமெனக் கொள்ளற்க, சபக்கத்துண்மையுங் கூட்டியுரைக்கப்படுமாகலின்; இங்ஙனஞ் சொரூபாசித்தத்துங் குற்றமுண்டெனக் கொள்ளற்க, பக்கத்துண்மையுங் கூட்டியுரைக்கப்படுமாகலின்.

௫௮. சிறப்பநைகாந்திகம் சபக்க விபக்கங்களெல்லாவற்றினும் இலாதது. எங்ஙனம், சத்தம் நித்தியம, சத்தத்தன்மையுடைமையான் என்பது. சத்தத்தன்மை நித்தியப்பொருள் அநித்தியப்பொருள் யாவற்றினுமின்றிச் சத்தத்தின்மாத்திரமிருப்பது.

பக்கத்தின்மாத்திரம் எ-து. கேவலவெதிரேகியினீக்குதற்கு அதனின் வேறுயென்னுமடையுங் கொடுக்கற்பாற்று.

௫௯. முடிவுபெறாதது அந்துவய திருட்டாந்தமும் வெதிரேகதிருட்டாந்தமும் இல்லாதது; எங்ஙனம், எல்லாம் அநித்தியம், பிரமேயமாதலால என்பது. ஈண்டு எல்லாம் பக்கமாதலின் திருட்டாந்தமில்லை.

அந்நுவயம் எ-து. கேவலாந்நுவயிக்க ணதிவியாத்தி னீக்குதற்கு அந்நுவயம் எ-ம், கேவலவெதிரேகிக்க ணதிவியாத்தி நீக்குதற்கு வெதிரேகம், கூறியவாறு. ஈண்டு எ-து. மேற்காட்டப்பட்ட வநுமானத்தின்கண் எ-று.

**கூO. துணிபொருளில்லாவிடத்து வியாபித்திருக்கும் ஏது விருத்தம்; எங்ஙனம், சத்தம் நித்தியம் காரியப்பாட்டால் என்பது. காரியப்பாடு நித்தியத்தன்மையல்லாததாகிய அநித்தியத்தன்மையான் வியாபிக்கப்பட்டது.**

துணிபொருள் எ-து. விருத்தத்திற்கிலக்கணங்கூறுகின்றது. உண்மையேதுவி னீக்குதற்குத் துணிபொருளினபாவத்தின் வியாபித்திருக்கும் எனப்பட்டது. சற்பிரதிபக்கத்தி னீக்குதற்குச் சற்பிரதிபக்கத்தின் வேறுயவென்னுமடையுங் கொடுக்கற்பாற்று. காரியப்பாட்டால் எ-து. காரியத்தன்மையால் எ-று. அநித்தியத்தன்மையால் வியாபிக்கப்பட்ட எ-து. யாது காரியப்பாடுடையது, அஃது அநித்தியமாமென்னும் வியாத்தியுளதாமன்றே, அஃதுளதாதலான் எ-று.

**கூக. துணிபொருளின் மறுதலையைச் சாதிக்கும் வேற்றேதுவையுடையது யாது, அது சற்பிரதிபக்கமாம்; எங்ஙனம், சத்தம் நித்தியம், கேட்கப்படுதலால், சத்தத்தன்மைபோல. சத்தம் அநித்தியம், காரியப்பாட்டால், குடம்போல எனவரும்.**

துணிபொருள் எ-து. சற்பிரதிபக்கத்தினிலக்கணங்கூறுகின்றது. துணிபொருளினபாவத்தை யநுமிப்பதற்குக் காரண

ணமாகிய வேறோரேதுவெனப்படும் பிரதிபக்கத்தினையுடைய வேது எதன்கணுண்டாம், அவ்வேது சற்பிரதிபக்கம் எ-று. இதுவே பிரகரணசமமெனப்படும். விருத்தத்தி னீக்குதற்கு வேறோரேதுவினையுடையது எ-ம், தீ முதலியவற்றி னீக்குதற்குத் துணிபொருளின்மை எ-ம் கூறியவாறு.

**௬௨. அசித்தம் சார்பசித்தமும் சொரூபாசித்தமும் வியாப்பியத்தன்மை யசித்தமும என மூவகைப்படும.**

அசித்தம் எ-து. அசித்தத்தைப்பகுக்கின்றது. அசித்தத் தன்மை சார்பசித்தமுதலியவற்றுளொன்றுதல்.

**௬௩. சார்பசித்தம் எங்ஙனம், ஆகாயத்தாமரைநறு நாற்றமுடைத்து, தாமரைத்தன்மையால், பொய்கைத் தாமரைபோல என வரும். ஈண்டு ஆகாயத்தாமரை சார்பு; அதுவே இல்லை.**

சார்பசித்தம் எ-து. சார்பசித்தத்தன்மை பக்கத்தன்மையை வரைந்துகொள்வத னபாவத்தையுடையதாகிய பக்கமுடைத்தாந்தன்மை. தாமரைக்கண் ஆகாயத்தின்கணுளதாதலெனப்படும் பக்கத்தன்மையை வரைந்துகொள்வத னபாவத்தினையுடையதாகிய பக்கமுடைத்தாந்தன்மையுளதாம், தாமரையெனப்படும் பக்கத்தின்கண் ஆகாயத்தின்கணுளதாந்தன்மையின்மையினென்க. ஈண்டு எ-து. அற்றேல், தாமரைக்கண் ஆகாயத்தின்கணுளதாந்தன்மை யிலதென்றதென்னையென்னு மையநீக்குகின்றது; மேற்காட்டப்பட்ட வநுமானத்தின்கண் எ-று.

**௬௪. சொரூபாசித்தம் எங்ஙனம், சத்தம் குணம், சட்சுவிற்குப்புலனாதலின், உருவம் போல என வரும்.**

ஈண்டும் சட்சுவிற்குப்புலனாதல் சத்தத்திற்கின்று, சத்தம் சோத்திரத்திற்குப் புலனாவதாதலின்.

சொரூபாசித்தி எ-து. பக்கத்தின்கணேதுவின்மை சொரூபாசித்தி. உண்மையேதுவினபாவத்தி னதிவியாத்தி னீக்குதற்குப் பக்கத்தின்கண் எ-ம், குடமுதலியவற்றி னபாவத்தி னீக்குதற்கு ஏது எ-ம் கூறியவாறு. இச்சொரூபாசித்தம் சுத்தாசித்தம், பாகாசித்தம், விசேடணாசித்தம் விசேடியாசித்தமென்னும் வேறுபாட்டால் நால்வகைத்து. அவற்றுள் முதலாவது மேற்காட்டப்பட்டதேயாம். இரண்டாவது எங்ஙனம்; உற்பூதவுருவுடைமைமுதலிய நான்குங்குணம், உருவத்தன்மையால் என்புழி உருவத்தன்மையாகிய வேது பக்கத்தினேகதேசத்திலதாதலி னதன்பாகத்தின்கட் சொரூபாசித்தமாந்தன்மையுடைத்தாம். மூன்றாவது எங்ஙனம்; வாயுக்காட்சிப்பொருள், உருவமுடையதாய்ப் பரிசமுடைத்தாகலான் என்புழி உருவமுடைத்தாந்தன்மையாகிய விசேடணம் வாயுவின்கணின்மையினதனான் விசேடிக்கப்பட்ட பரிசமுடைத்தாந்தன்மையுமிலதாமாகலின் அது சொரூபாசித்தத்தன்மையடையும், விசேடணமில்வழி விசேடியமுமிலதாமாகலினென்பது: நான்காவது எங்ஙனம்; ஈண்டே விசேடண விசேடியங்களை மாறிக்கூறுதலினா துளதாமேது. அது சொரூபாசித்தமாவது விசேடியாபாவத்தா லாக்கப்பட்ட விசேடிக்கப்பட்டதனபாவத்தாலெனவறிந்துகொள்க.

**சூகு. வியாப்பியத்தன்மையசித்தமாவது உபாதியோடுகூடிய ஏது; உபாதி சாத்தியத்தின்வியாபித்து ஏதுவின்கண் வியாபியாதது. சாத்தியத்தில் வியாபித்தல் சாத்தியத்தோடொருநிலைக்களத்துளதாகிய முழுதுமபாவத்**

திற்குப்பிரதியோகியாகாமை. ஏதுவின்வியாபியாமை ஏதுவின்கண்ணதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாதல். மலைபுகையுடைத்து, தீயுடைமையால் என்புழி ஈரவிறகின்கூட்டம் உபாதி, யாண்டுப்புகையுண்டு, ஆண்டு ஈரவிறகின்கூட்டமுண்டு எனச் சாத்தியத்தில் வியாபகமாயும் யாண்டுத்தீயுண்டு ஆண்டு ஈரவிறகின் கூட்டமின்று, ஒழுகக்காய்ச்சிய இரும்பில் ஈரவிறகின் கூட்டமின்மையின் என ஏதுவின்கண் வியாபகமாதலின்றியுமிருத்தலினென்க. இங்ஙனமாதலின், சாத்தியத்தின் வியாபகமாய் ஏதுவின்கண் வியாபகமின்றியிருத்தலின் ஈரவிறகின்கூட்டம் உபாதியாம். உபாதியுடைமையால்தீயுடைத்தாதல் வியாப்பியத்தன்மையசித்தம்.

உபாதியோடுகூடிய எ-து. வியாப்பியத்தன்மையசித்தத்தைத் தெரித்துணர்த்துகின்றது. சாத்தியம் எ-து. அவ்வுபாதி யாதென்னு மையநீக்குகின்றது. ஏதுவின்கண் வியாபியாதது உபாதியெனிற் சத்தம் அநித்தியம் காரியப்பாட்டாலென்புழிச் சாமானியமுடைத்தாந் தன்மையுடைத்தாய் நம்மனோர்க்குள்ளதுமுதலிய புறவிந்திரியத்தாற் கவரப்படுந் தகுதியுடையது உபாதியாய் முடியுமாகலின் அங்ஙனமாகாமைப்பொருட்டுச் சாத்தியத்தில் வியாபித்து எ-ம், அதுமாத்திரையேகூறிற் சாமானியமுடைத்தாந்தன்மை முதலியவற்றால் அநித்தியத்தைச் சாதித்தற்கண் காரியப்பாடு உபாதியாய்முடியும்; அங்ஙனமாகாமைப்பொருட்டு ஏதுவின்கண் வியாபியாதது எ-ம் கூறியவாறு. உபாதி வேறுபாட்டினையெடுத்துக்கொண்டு அசம்பவத்தினீக்குதற்கு வியாபித்து என்பதினும் முழுவதுமென்னுமடையும், ஏதுவின் வேறுபாட்

டினை யெடுத்துக்கொண்டு ஏது வுபாதியாதலி னீக்குதற்கு வியாபியாதது என்பதினும் முழுவதுமென்னுமடையு மொருதலையாற் கொடுக்கற்பாலனவாம்.

ஈண்டுரைக்கப்பட்ட உபாதி தனித்துநிற்பதாகிய துணிபொருளின்கண் வியாபிப்பதும் பக்கதருமத்தான் வரைந்து கொள்ளப்பட்ட துணிபொருளின்கண் வியாபிப்பதும் ஏதுவான் வரைந்துகொள்ளப்பட்ட துணிபொருளின்கண் வியாபிப்பதுமென மூவகைப்படும். அவற்றுள் முதலாவது மேற் காட்டப்பட்டது. இங்ஙனமே 'வேள்வியகத்ததாகிய கொலை அதன்மத்தைத் தோற்றுவிப்பது, கொலைத்தன்மையால், வேள்விப்புறத்துக் கொலைபோல' என்புழி விலக்கப்பட்டமை உபாதி; அது யாண்டு அதன்மத்தைத் தோற்றுவிப்பதாந் தன்மை, ஆண்டு விலக்கப்பட்டதாந்தன்மையெனத் துணி பொருட்கண் வியாபகமாதலறிக. யாண்டுக் கொலைத்தன்மை ஆண்டு விலக்கப்பட்டதன்மை யின்றெனப்படுதலின் விலக்கப்பட்டமையாகிய உபாதி ஏதுவின்கண் வியாபித்தலுடையது, வேள்வியினகத்ததாகிய கொலைக்கு விலக்கப்பட்டமையின்மையினென்பது. 'எவ்வுயிரையுங் கொல்லற்க' வென்னும் பொதுவாக்கியத்தினும் 'பசுவான் வேட்க' என்பதுமுதலிய விசேடவாக்கியம் வலியுடைத்தாதலின் கொலைத்தன்மை அதன்மத்தினைத் தோற்றுவிப்பது ஆவது அன்று, மற்று விலக்கப்பட்டமையேயென்பது முதலியனவுங் காட்டற்பாலன.

இரண்டாவது எங்ஙனம், 'வாயுக்காட்சிப்பொருள், காட்சிக்குப்புலனாகிய பரிசத்திற்குப் பற்றுக்கோடாகலின்' என்புழி, உற்பூதவுருவமுடைமை உபாதி, அது யாண்டுக் காட்சித்தன்மை, ஆண்டு உற்பூதவுருவமுடைமையெனத் தனித்து

நிற்குந் துணிபொருளின்கண் வியாபிப்பதன்று, உருவத்தின்கண் முறைபிறழ்வதாகலினென்பது. மற்றுத் திரவியத்தன்மையாகிய இலக்கணத்தினையுடைய பக்கதருமம் யாது, அதனான் வரைந்துகொள்ளப்பட்ட புறக்காட்சித்தன்மை யாண்டுளதாம், ஆண்டு உற்பூதவுருவமுடைமையுளதாமெனப் பக்கதருமத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட துணிபொருளின்கண் வியாபிப்பதுவேயாம். ஆன்மாவின்கட் பிறழ்ச்சி நீக்குதற்குப் புறமெனப்பட்டது. 'யாண்டுக்காட்சிப்புலனாகிய பரிசத்திற்குப் பற்றுக்கோடாந்தன்மையுண்டு, ஆண்டு உற்பூதவுருவமுடைமையின்று' என ஏதுவின்கண் வியாபிப்பதன்று; வாயுவின்கண் உற்பூதவுருவமின்மையினென்பது.

மூன்றாவது எங்ஙனம், 'முன்னபாவம் அழிவுபாடுடைத்து;தோற்றுவிக்கப்படுவதாதலின்' என்புழிப் பாவத்தன்மை உபாதி. அது யாண்டு அழிவுபாடுடைத்தாந்தன்மை ஆண்டுப் பாவத்தன்மையெனத் தனித்துநிற்குந் துணிபொருளின்கண் வியாபிப்பதன்று, முன்னபாவத்தின்கட் பாவத்தன்மையின்மையின். மற்றுத் தோற்றுவிக்கப்படுவதாந்தன்மையெனப்படு மேதுவான் வரைந்துகொள்ளப்பட்ட அழிவுபாடுடைத்தாந்தன்மை யாண்டுளது, ஆண்டுப் பாவத்தன்மையுளதாமென ஏதுவான் வரைந்துகொள்ளப்பட்ட துணிபொருளின்கண் வியாபிப்பதேயாம்; யாண்டுத் தோற்றுவிக்கப்படுவதாந்தன்மையுண்டு, ஆண்டுப் பாவத்தன்மையின்று என ஏதுவின்கண் வியாபிப்பதுமன்றாம், அழிவுபாட்டின்கட் பாவத்தன்மையின்மையினென்பது. இங்ஙனமே 'அவன்கரியன் நட்டோன் புதல்வ னல்லனாகலி' னென்புழிச் சிறுகீரையின்பாகத்தாற் றோற்றுவிக்கப்பட்டமை உபாதி. கருமை கருங்குடத்தின்கண்ணுமுளதாகலிற் றனித்துநிற்குந் துணிபொருளின்கண் வியாபிப்பதன்று, மற்று ஏதுவான் வரை

ந்துகொள்ளப்பட்ட துணிபொருளின்கண்வியாபிப்பதேயாம். எட்டாமெண்ணுமுறைமைக்கண் நின்ற புதல்வன்மாட்டுச் சிறுகீரையின் பாகத்தாற் றோற்றுவிக்கப்படுந்தன்மையின் மையால் ஏதுவின்கண் வியாபிப்பது மன்று என்பது முத லியனவுங் காட்டற்பாலனவாம்.

சுசு. எதனது துணிபொருளின்மை வேறுபிரமாண த்தாற் றுணியப்படும், அது பாதிதமாம்; எங்ஙனம், வன்னி வெம்மையில்லது, திரவியமாதலின், எனவரும். ஈண்டு வெம்மைத்தன்மையின்மை துணிபொருள். அத னபாவமாகிய வெம்மைத்தன்மை துவக்கிந்திரியக்காட் சியாற் கவரப்படுமாதலின் இது பாதிதமாயிற்று.

எதனது எ-து. உண்மையேதுவினீக்குதற்கு வேறொரு பிரமாணத்தான் எ-ம், குடமுதலியவற்றினீக்குதற்குத் துணி பொருள் எ-ம் கூறியவாறு.

---

## உவமானப்பிரமாணம்.

சுஎ. உவமானம் உவமிதியறிவிற்குக் காரணம். உவ மிதி பெயர்க்கும் பெயருடையதற்குமுளதாகிய சம்பந் தவறிவு. அதற்குக் காரணம் ஒப்புமையறிவு. அங்ஙனம ன்றே, ஆமா என்னுஞ் சொற்குப் பொருளறியாதா னொருவன் யாங்காயினுங் காட்டகத்துள்ளானாகிய வோ ராண்மகனால் ஆவினையொக்கும் ஆமா எனக்கூறக்கேட் டுக் காட்டுட்சென்று அவன்கூறிய தொடர்மொழிப்

பொருளை நினைந்து ஆவொப்புமையுடைய பிண்டத்தைக் காண்கின்றான். அதன் பின்னர் இது ஆமா என்னுஞ் சொற்பொருள் என உவமிதியறிவு தோன்றுமென்க.

உவமிதி எ-து. முறையானே அநுமானவளவையுணர்த்தி உவமானவளவையைத் தெரித்துணர்த்துகின்றது. உவமிதிக்குக்கரணம் உவமானம் எ-று. குடாரமுதலியவற்றினீக்குதற்கு மிதி எ-ம், காட்சிமுதலியவற்றினீக்குதற்கு உவ எனவுங்கூறியவாறு. பெயர்க்கும் பெயருடையதற்கும் எ-து. அநுமிதிமுதலியவற்றினீக்குதற்குச் சம்பந்தம் எ-ம், சையோகமுதலியவற்றினீக்குதற்குப் பெயர்க்கும் பெயருடையதற்கும் எ-ம் கூறியவாறு. இது ஆமா எ-து. கருதப்பட்ட ஆமா ஆமா என்னுஞ் சொற்குப் பொருளாம் எ-று. அதனால் வேறோராமாவின்கண் ஆற்றல் கவரப்படுதலின்று எனல்வேண்டுமென்னுங் குற்றம் நீக்கப்பட்டது. ஆகவே ஆவொப்புமையான் விசேடிக்கப்பட்ட பிண்டத்தினறிவு காரணமும், மாட்டேற்று வாக்கியப்பொருணினைவு அவாந்தரவியாபாரமும் உவமிதி பலமுமாமென்றவாறாயிற்று. அவ்வுவமானம் ஒப்புமையான் விசேடிக்கப்பட்ட பிண்டத்தினறிவுஞ் சிறப்பியல்பான் விசேடிக்கப்பட்ட பிண்டத்தினறிவும் வேற்றியல்பான் விசேடிக்கப்பட்ட பிண்டத்தினறிவுமென மூவகைத்து. அவற்றுள் முதலாவது மேலுரைக்கப்பட்டதேயாம். இரண்டாவது எங்ஙனம், கங்கமாகிய விலங்கு என்னியல்பிற்றென வினவி மூக்கொடுவிளங்கும் ஒருகொம்பினையுடையதாகிய யானையின் வடிவிற்று என அதனையறிந்தோரால் கூறப்படக்கேட்டு வேறொருகாலத்து அவ்வியல்பிற்றாகிய பிண்டத்தினைக்கண்டு மாட்டேற்றுவாக்கியப்பொருளை

நினைந்து கங்கமாகிய விலங்கு கங்கமென்னுஞ்சொற்குப் பொருளாமென உபமிதிதோன்றும். ஈண்டு மூக்கோடுகூடிய ஒருகொம்புடைமையே சிறப்பியல்பு. மூன்றாவது எங்ஙனம், ஒட்டகம் எவ்வியல்பிற்றெனை வினவிக் குதிரைமுதலியன போல ஒத்த முதுகினையுடைத்தன்று. குறுத்த கழுத்தினையுஞ் சரீரத்தினையுமுடைத்தன்று என ஆத்தன் கூறக்கேட்டு வேறொருகாலத்து அப்பிண்டத்தினைக் காண்டலால் வேற்றியல்பான் விசேடிக்கப்பட்ட அப்பிண்டத்தினறிவும் அதனான் மாட்டேற்றுவாக்கியப் பொருணினைவும் அதனால் ஒட்டகம் ஒட்டகமென்னுஞ் சொற்குப் பொருளென்னு முபமிதியுந் தோன்றுமென்க.

---

## ஆகமப்பிரமாணம்.

**கூஅ. சத்தமாவது ஆத்தன் வாக்கியம். ஆத்தன் உள்ளது கூறுவோன். வாக்கியம் பதங்களின்கூட்டம்; எங்ஙனம், ஆவைக்கொணு என்பது. ஆற்றலுடையது பதம். ஆற்றல் இப்பதத்தால் இப்பொருளுணர்த்துக என்னும் இறைவனிச்சையாகிய சங்கேதம்.**

ஆத்தன் எ-து. முறையானே உபமானவளவையுணர்த்தி ஆகமவளவையைத் தெரித்துணர்த்துகின்றது. சத்தம் எ-து. சத்தம் பிரமாணம் எ-று. மயங்கியவனும் வஞ்சகனுமென்னுமிருவரது வாக்கியம் சத்தப்பிரமாணமாதலி னீக்குதற்கு ஆத்தன் எனப்பட்டது. ஆத்தன் எ-து. அற்றேல் அவ்வாத்தன் யார் என்னுமையநீக்குகின்றது. உண்மைப்பொருளைக் கூறுவோன் உண்மையாகிய பாதமற்றபொருளை யுபதேசிப்

பவன். வாக்கியம் எ-து. வாக்கியத்திற்கு இலக்கணங்கூறு கின்றது. குடமுதலியவற்றின் கூட்டத்தி னீக்குதற்குப் பதமெனப்பட்டது. ஆற்றலுடையது எ-து. தெரித்துணர்த் துவதன்றன்மைச் சம்பந்தத்தால் ஆற்றலான் விசேடிக்கப்பட் டது எ-று. இப்பதத்தால் எ-து. குடம் என்னும் பதத்தாற் குடம் என்னும் பொருளுணர்த்தப்படுகவென்னும் ஈசுரனிச் சையே ஆற்றல் எ-று. பொருணினைவிற்கு இயைபுடைத் தாகிய பதத்திற்கும் பதப்பொருட்குமுளதாய சம்பந்தமு டைமை அதனிலக்கணம். இலக்கணையு மவ்வாற்றல்போலப் பதத்தின்கணுளதாம். அவ்விலக்கணை ஆற்றலுடைத்தாகற் பாலதன் சம்பந்தமெனப்படும். அது விட்டதும் விடாததும் விட்டும், விடாததுமென்னும் வேறுபாட்டான் மூவகைத்து. 'கங்கைக்கணிடைச்சேரியுள்ளது' என்புழிக்கங்கையென்னுஞ் சொல்லாற்றலுடைத்தாகற்பாலதாகிய நீர்ப்பெருக்கின் சம் பந்தங் கரையாதலின் அஃது இலக்கணையெனப்படும். இலக் கணைக்குக் காரணந் தாற்பரியம்பொருந்தாமை. இதனானே நீர்ப்பெருக்கின்கண் இடைச்சேரியுள்ளதென்பதன்கண் தா ற்பரியம் பொருந்தாமையிற் கரையின்கண் என்பது இலக் கணையான் வருவதாம். 'கவிகையாளர் செல்கின்றார்' என் பது முதலியவற்றுள் இரண்டாவதும் அஃது அந்தக்குதிரை என்பது முதலியவற்றுள் மூன்றாவதுங் கண்டுகொள்க.

**சுகூ. வாக்கியப்பொருளறிவிற்குக் காரணம் அவாய் நிலையுந் தகுதியும் அண்மையுமாம்.**

**எ0. அவாய்நிலை ஒருபதம் வேறொருபதமின்மையா னுளதாயவியைபு உணரப்படாமை யுடைத்தாதல். தகு**

தி பொருட்குப்பாதமின்மை. அண்மை பதங்களை ஒரு தொடராக விரையக்கூறுதல.

அசம்பவத்தி னீக்குதற்கு வேறொரு சொல்லி னெதிர் மறையானுக்கப்பட்டு எ-ம், அதன்பின்வரும் அசம்பவத்தினீ க்குதற்கு வேறொருசொல்லின் எ-ம் கூறியவாறு. பொரு ட்கு எ-து. அவாய்நிலையி னீக்குதற்குப் பொருட்கு எ-ம் பதங்களது எ-து. ஒருங்கு கூறப்பட்டவைகளி னதிவி யாத்தி நீக்குதற்கு விரையக்கூறுதல் எ-ம், அவாய்நிலையினீ க்குதற்குப் பதங்கள் எ-ம் கூறியவாறு.

எக. ஆகவே, அவாய்நிலைமுதலிய மூன்றுமில்லாத வாக்கியம் பிரமாணமன்று. 'ஆ குதிரை ஆண்மகன் யானை' என்பது அவாய்நிலையின்மையாற் பிரமாணமன்று. ஆவைக்கொணர் என்பது முதலியன ஒரு தொடராகக் கூறாது யாமத்துக் கொன்றாகக் கூறின் அண்மையின் மையாற் பிரமாணமன்று.

ஆகவே எ-து. அவாய்நிலைமுதலியனவில்லாத வாக்கிய மீண்டுப் பிரமாணமாதலை மறுத்துரைக்கின்றது. அவாய்நி லைமுதலியன சாத்தவறிவிற் கேதுவெனப்பட்டவழி எ-று. எங்ஙனம் எ-து. அவாய்நிலை முதலியவற்றிற்கு உதாரணங் காட்டுகின்றது.

எஉ. தொடர்மொழி வேதசம்பந்தமுடையதும், உலகசம்பந்தமுடையதும் என இருவகைப்படும். வேத சம்பந்தமுடையது ஈசுரனாற் கூறப்பட்டமையான் முழு வதுமே பிரமாணம். மற்று உலகசம்பந்தமுடையதனுள் ஆத்தனாற் கூறப்பட்டது பிரமாணம். ஏனையது பிரமா ணமன்று.

**எரு. வாக்கியப்பொருளுணர்ச்சி சத்தத்தினாலாய வுணர்ச்சி. அதற்குக் காரணம் சத்தம்.**

வாக்கியப்பொருளுணர்ச்சி எ-து. அற்றேல் இத்துணை யுஞ் சாத்தஞானத்திற்குக் கருவி விரித்துரைக்கப்பட்டது. பிரமையைப் பகுத்துக்கூறுவதாகிய வாக்கியத்திற் சாத்த மும் உத்தேசமாத்திரையாற் கூறப்பட்டமையின் அது காட்டப்படாத தென்னையென்னு மையநீக்குகின்றது. சாத்தத்தன்மை சத்தத்தா னுணர்கின்றேனென்னு மனுபவத்தாற் றுணியப்படுஞ்சாதி. சாத்தபோதமுறைமையாவது:— 'சாத்தன் ஊரையடைகின்றான்' என்புழி ஊர் என்னுஞ் செயப்படுபொருளையுடைய அடைதற்கு இயையுடைத்தாகிய நிகழ்காலத்தோடுள்ள செயலுடையோன் சாத்தனென்பது சாத்தவுணர்ச்சி. இரண்டாம்வேற்றுமைக்குச் செயப்படுபொருண்மையும் வினைக்கு அடைதலும் பொருளாம். இயைபு ஒன்றுபட்டு நிற்றலான் விளங்கும். நிகழ்காலங்காட்டுமிடைநிலைக்கு முயற்சி பொருளாம். அதன் சம்பந்தம் ஒன்றுபட்டு நிற்றலான் விளங்குவதேயென்க. 'தேரியங்குகின்றது' என்புழி இயங்குதற் கியைபுடைத்தாகிய வியாபாரமுடையது தேரென்பது சாத்தவுணர்ச்சி. 'நீரின்மூழ்கிச் செல்கின்றான்' என்புழிச் சேறலின் முன்னபாவத்தான் வரைந்து கொள்ளப்பட்ட காலத்துள்ள மூழ்குதலைச்செய்தோன் சேறற்கு இயைபுடைத்தாகிய நிகழ்காலத்தையுடைய முயற்சியுடையோனென்பது சாத்தவுணர்ச்சி. இகரவிகுதிக்கு வினைமுதல் முதற்காலத்துண்மையும் பொருள். இவ்வாறு பிறுண்டும் வாக்கியப்பொருளுணர்ந்து கொள்ளற்பாற்று.

**எசு. பொய்யநுபவம் ஐயம, திரிவு, தருக்கம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்து.**

பொய்யனுபவம் எ-து. பொய்யனுபவத்தைப் பகுக்கின்றது.

**எ௫. ஐயமாவது ஒரு தருமியின்கண் மாறுபட்ட பலதருமங்களால் விசேடிக்கப்பட்டமையோடு பற்றிநிற்கும் உணர்வு: எங்ஙனம், 'குற்றியோ மகனோ'வென்பது.**

ஒருதருமியின் எ-து. ஐயத்திற்கு இலக்கணங்கூறுகின்றது. ஒருதருமியின்கண் என்பதற்கு முன்னுள்ளதாகிய ஒரு பதார்த்தத்தின்கண் எ-ம், மாறுபட்ட என்பதற்கு வேற்று நிலைக்களத்துளதாகிய எ-ம், பலதருமங்கள் என்பதற்குக் குற்றியோ மகனோ வென்பதுமுதலிய பலவியல்புகள் எ-ம், விசேடிக்கப்பட்ட வுணர்வு என்பதற்கு அவற்றான் விசேடிக்கப்பட்ட சம்பந்தத்தோடு கலந்துநிற்கும் எ-ம் உரைக்க. குடமும் படமுமெனக் கூட்டம்பற்றி நிகழுஞானத்திற்குக் குடத்தன்மையும் படத்தன்மையுமெனப்படும் மாறுபட்ட பலதருமங்களான் விசேடிக்கப்பட்ட சம்பந்தத்தோடு கலந்து நிற்றலின்மையின் அதன்கட் சேறலை நீக்குதற்கு ஒருதருமியின் எ-ம், குடம் மண்ணென்னு ஞானத்திற்கு ஒரு தருமியாகிய குடத்தின்கட் குடத்தன்மையும் மண்டன்மையுமெனப்படும் பலவகையான் விசேடிக்கப்பட்ட சம்பந்தத்தோடு கலந்து நிற்றலுண்மையின் ஆண்டுச் சேறலினீக்குதற்கு மாறுபட்ட எ-ம், படத்தன்மையின் மாறுபட்ட குடத்தன்மையுடையது படம் என்னு ஞானத்தின்கட் சேறலை நீக்குதற்குப் பல எ-ம் கூறியவாறு.

**எசு. திரிவு மித்தையறிவு: எங்ஙனம், இப்பியின்கண் வெள்ளி யென்பது.**

திரிபு எ-து. உண்மையறிவி னீக்குதற்கு மித்தையினு லாய எ-ம், பொய்மையி னீக்குதற்கு ஞானம் எ-ம் கூறி யவாறு.

எஎ. தருக்கமாவது வியாப்பியத்தினை ஆரோபிப்ப தால் வியாபகத்தை ஆரோபிப்பது: எங்ஙனம், தீயில்லை யெனிற் புகையுமில்லையென்பது.

வியாப்பியத்தினை எ-து. தருக்கத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. அசம்பவத்தின் நீக்குதற்கு வியாப்பியத்தி னை யாரோபித்தலான் எ-ம், பின்னும் அசம்பவத்தினை நீக் குதற்கு வியாபகத்தை யாரோபிப்பது எ-ம் கூறியவாறு. ஈண்டுத் தீயினபாவம் வியாப்பியம், புகையினபாவம் வியா பகம். தருக்கந் திரிபினுளடங்குமாகலின் வேறாகப் பகுத்து ரைத்தல் நன்றன்றாயினும் பிரமாணத்திற்கு உபகாரப்படு தலின் வேறாகக் கூறப்பட்டதெனவறிக. மற்றுச் சொப்ப னம் இருதயநாளத்தினகத்தாயினும் புறத்தாயினுமுள்ள சந் தியின்கண்ணாக 'இடைநாடியின்கண்ணாக மனம் நின்றவழி ஊழ் விசேடத்தானாக தாதுக்களின் குற்றத்தானாகத் தோ ன்றும்; அஃதும் மானதத்திரிபுளடங்கும்.

எஅ. நினைவு மெய்யும், பொய்யும் என இருவகை த்து. மெய்யநுபவத்தாற் றோன்றியது மெய். பொய் யநுபவத்தாற் றோன்றியது பொய்.

எகூ. சுகம் எல்லார்க்கும் ஏற்புடைத்தாக உணரப் படுவது.

எல்லார்க்கும் எ-து. சுகத்தைத் தெரிந்துணர்த்துகின் றது. எல்லாவுயிர்க்கும் ஏற்றதென்றறியப்படுவது யாது

அது சுகம் எ-று. நான் சுகியென்னு மனுபவத்தாற் பெறப்பட்ட சுகத்தன்மையாகிய சாதியுடையது, தருமமாத்திரத்திற்குச் சிறப்புக்காரணமாகிய குணமென்னு மிரண்டனுளொன்று சுகத்திற்கிலக்கணம். பகைஞன் றுக்கத்தி னீக்குதற்கு எல்லார்க்கும் எனப்பட்டது.

அ0. துக்கம் ஏற்புடைத்தன்றாக அறியப்படுவது.

ஏற்புடைத்து எ-து. துக்கத்தன்மையாகிய சாதியுடையது, அதன்மமாத்திரைக்குச் சிறப்புக்காரணமாகிய குணம் என்னு மிரண்டனுளொன்று துக்கத்திற்கு இலக்கணம். சொற்பயன் முன்போலக்கொள்க.

அக. இச்சை காமம்.

இச்சை எ-து. இச்சையைத் தெரித்துணர்த்துகின்றது. காமம் என்றது பரியாயம். இச்சைத்தன்மையாகிய சாதியுடையது இச்சை. அது பலத்திினிச்சையும் உபாயத்தினிச்சையுமென விருவகைப்படும். பலம் சுகமுதலியன. உபாயம் வேள்விமுதலியன.

அஉ. வெறுப்பு வெகுளி.

வெறுப்பு எ-து. வெறுப்பினைத் தெரித்துணர்த்துகின்றது. வெறுக்கின்றான் என்னு மனுபவத்தாற் பெறப்பட்ட வெறுப்புத்தன்மையாகிய சாதியுடையது வெறுக்கப்பட்டதற்குச் சாதனமாந்தன்மையறிவாற் றோன்றுங்குணமென்னு மிரண்டனுளொன்று வெறுப்பிற்கிலக்கணம்.

அரு. முயற்சி தொழிற்பாடு.

முயற்சி எ-து. முயற்சியைத் தெரித்துணர்த்துகின்றது. முயற்சித்தன்மையாகிய சாதியுடையது முயற்சிக்கிலக்கணம். அது தொழிற்பாடுந் தொழிற்படாமையுஞ் சீவனத்தைத் தோற்றுவிப்பதுமென்னும் வேறுபாட்டான் மூவகைத்து. இச்சையாற்றோன்றிய குணம் தொழிற்பாடு. வெறுப்பாற் றோன்றிய குணம் தொழிற்படாமை. சீவனத்திற்கேற்ற ஊழ்வகையாற் றோன்றியகுணம் சீவனத்தைத் தோற்றுவிப்பது. அதுதான் பிராணன்சஞ்சரித்தற்குக் காரணமாயது.

அ௪. தன்மம் விதிக்கப்பட்ட வினையாற்றோன்றியது.

விதிக்க எ-து. தருமத்தினைக் கூறுகின்றது; வேதத்தான் விதிக்கப்பட்ட எ-று. அதன்மத்தி னீக்குதற்கு வேதத்தான் விதிக்கப்பட்ட எ-ம், வேள்விமுதலிய தொழிலினீக்குதற்கு வினையாற்றோன்றியது எ-ம் கூறியவாறு. அது கருமத்தினழிவு, தீரினைத்தொடராமை, புகழ்ச்சி, அநுபவம், தத்துவஞானமுதலியவற்றாலழியும்.

அ௫. அதன்மம் விலக்கப்பட்ட வினையாற்றோன்றியது.

விலக்கப்பட்ட எ-து. அதன்மத்தி னிலக்கணங் கூறுகின்றது; வேதத்தான் எ-று. தருமத்தி னீக்குதற்கு வேதத்தான் விலக்கப்பட்ட எ-ம், விலக்கப்பட்ட தொழிலினீக்குதற்கு வினையாற் றோன்றிய எ-ம் கூறியவாறு. அது நுகர்ச்சி பிராயச்சித்தமுதலியவற்றானழியும். இவ்விரண்டுமே ஊழென்றுரைக்கப்படும். வாசனையாற் றோன்றுவனவும் தன்மமும் அதன்மமுமெனப்படும். வாசனை யிலக்கண வேறுபாடுடைய வாசனை.

அசு. புத்தி முதலிய எட்டும் ஆன்மா மாத்திரைக்கே உரிய விசேடகுணங்கள். புத்தி, இச்சை, முயற்சி என்னும் மூன்றும் நித்தியமும், அநித்தியமுமாம். ஈசுரனது புத்திமுதலிய மூன்றும் நித்தியம்; உயிரது புத்தி முதலிய மூன்றும் அநித்தியம்.

அஎ. வாசனை வேகமும் பாவனையும் நிலைபெறுத்துவதும் என மூவகைத்து.

வாசனை எ-து. வாசனையைப் பகுக்கின்றது. பொதுக் குணமும் ஆன்மாவின் விசேடகுணமுமென்னு மிரண்டன் கண்ணுமுளதாய குணத்தன்மைக்கண் வியாப்பியமாகிய சாதியுடைத்தாதல் வாசனைக்கிலக்கணம். குடமுதலியவற்றினீக்குதற்குக் குணத்தன்மைக்கண் வியாப்பியமாகிய எ-ம், சையோகமுதலியவற்றி னீக்குதற்கு ஆன்மாவின் விசேடகுணம் எ-ம், ஞானமுதலியவற்றி னீக்குதற்குப் பொதுக் குணம் எ-ம் கூறியவாறு.

அஅ. வேகம் பிருதிவிமுதலிய நான்கினும் மனத்தினும் இருக்கும்.

வேகம் எ-து. இரண்டாவதுமுதலிய வீழ்ச்சிக்கு அசமவாயிகாரணம் வேகம். உருவமுதலியவற்றி னீக்குதற்கு இரண்டாவதுமுதலிய வீழ்ச்சி எ-ம், காலமுதலியவற்றி னீக்குதற்கு அசமவாயி எ-ம் கூறியவாறு.

அக. பாவனை அநுபவத்தினது காரியமாய் நினைவிற்குக் காரணமாயது ஆன்மா மாத்திரைக்கேயுள்ளது.

அநுபவம் எ-து. பாவனைக்கிலக்கணங் கூறுகின்றது. ஆன்மாமுதலியவற்றி னீக்குதற்கு அனுபவத்தாற்றோன்றி எ-ம் அனுபவத்தி னழிவுபாட்டி னீக்குதற்கு நினைவிற்குக் காரணமாய் எ-ம் கூறியவாறு.

கூ0. நிலைபெறுத்துவது வேறுவிதமாகச் செய்யப்பட்டதனை மீட்டும் அந்நிலையேயாக்குவது. அது பாய் முதலிய பிருதிவியினுள்ளது. குணங் கூறப்பட்டது.

வேறுதன்மையாக எ-து. நிலைபெறுத்துகையினிலக்கணங் கூறுகின்றது. பிருதிவிமாத்திரைக்கே சமவேதமாய வாசனைத்தன்மைக்கண் வியாப்பியமாகிய சாதியுடைத்தாதல் நிலைபெறுத்துவதன்றன்மை. நாற்றமுடைத்தாந்தன்மையையெடுத்துக்கொண்டு நாற்றத்தின்க ணதிவியாத்தி நீக்குதற்கு வாசனைத்தன்மைக்கண் வியாப்பியமாகிய எ-ம், பாவனைத் தன்மையை யெடுத்துக்கொண்டு பாவனையி னீக்குதற்குப் பிருதிவியின்கட் சமவேதமாய் எ-ம், நிலைபெறுத்துவதும் உருவமுமென்னு மிரண்டனுளொன்றுதலை யெடுத்துக்கொண்டு உருவத்தி னீக்குதற்குதற்குச் சாதி எ-ம் கூறியவாறு. குணம் கூறப்பட்டது எ-து. திரவியத்தினுங் கருமத்தினும் வேறாய்ப் பொதுமையுடையது குணம். திரவியங் கருமமென்னுமிரண்டன்கண்ணுந் திரவியத்தி னீக்குதற்கு விசேடணமும் சாமானியமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு விசேடியமுங் கூட்டியுரைக்கப்பட்டன.

## ௩. கருமம்.

கக. கருமம் புடைபெயர்ச்சி. எழும்பல் மேலிடத்துக் கூடுதற்கு ஏது. வீழ்தல் கீழிடத்துக் கூடுதற்கு

ஏது. வளைதல் உடல்வளைந்து கூடுதற்கு ஏது. நிமிர்தல் நிமிர்ந்து கூடுதற்கு ஏது. ஏனையவனைத்தும நட த்தலெனப்படும்.

புடைபெயர்ச்சி எ-து. சையோகத்தின் வேறுய்ச் சையோகத்தின் அசமவாயிகாரணமாவது கருமம். கைக்கணுள்ள புத்தகத்தி னீக்குதற்குச் சையோகத்தின் வேறுய் எ-ம், குடமுதலியவற்றி னீக்குதற்குச் சையோகத்திற்கு அசமவாயி காரணம் எ-ம் கூறியவாறு. மேலிடம் எ-து. வீழ்தலி னீக்குதற்கு மேலிடமெனப்பட்டது. காலமுதலியவற்றி னீக்குதற்கு அசாதாரணமென்னு மடையுங் கொடுக்கற்பாற்று. கீழிடம் எ-து. எழும்பலி னீக்குதற்குக் கீழிடமெனப் பட்டது. காலமுதலியவற்றி னீக்குதற்கு அசாதாரணமென்னுமடையுங் கொடுக்கற்பாற்று. உடல் எ-து. நிமிர்தன்முதலியவற்றி னீக்குதற்கு உடல் வளைந்து எனப்பட்டது. காலமுதலியவற்றி னீக்குதற்குச் சிறப்பென்னுமடையுங் கொடுக்கற்பாற்று. நிமிர்ந்து எ-து. எழும்பல்முதலியவற்றி னீக்குதற்கு நிமிர்ந்து எனப்பட்டது. காலமுதலியவற்றி னீக்குதற்குச் சிறப்பென்னுமடையு மொருதலையாற் கொடுக்கற்பாற்று.

## ௪. சாமானியம்.

கஉ. சாமானியமாவது நித்தியமாய் ஒன்ருய்ப் பலவற்றி னொருங்கு சேறலையுடையது. திரவியத்தினுங் குணத்தினுங் கருமத்தினுமுள்ளது. உண்மைத்தன்மை பரம்; திரவியத்தன்மை முதலியன அபரம்.

நித்தியம் எ-து. சையோக முதலியவற்றி னீக்குதற்கு நித்தியம் எ-ம், காலமுதலிய பரிமாணத்தி னீக்குதற்குப்

பலவற்றின் எ-ம் கூறியவாறு. பலவற்றி னொருங்கு சேறல் சமவாயத்தாற்கொள்க; அதனான் முழுதுமபாவத்தி ன்க ணதிவியாத்தியின்மையுணர்க.

## ரு. விசேடம்.

கூ௩. விசேடம் நித்தியப்பொருள்களிலிருப்பனவாய் அவை வேறு வேறாய் நிற்றலைத்தெரிப்பனவாம்.

நித்தியப்பொருள்கள் எ-து. குடமுதலியவற்றி னீக்குத ற்கு நித்தியப்பொருள்களிலிருப்பனவாயெனப்பட்டது. ஆன் மாத்தன்மை மனத்தன்மைகளி னீக்குதற்கு ஆன்மாத்தன் மை மனத்தன்மைகளின் வேறாயென்னுமடையும் வேண்ட ப்படுமொறறிக.

## சா. சமவாயம்.

கூச. சமவாயமாவது நித்தியமாயசம்பந்தம். அது நீக்கமின்றி இயல்பாக வுள்ளனவற்றின்கணுள்ளது. யா வை இரண்டனுள் ஒன்று அழிவின்றி நிற்பதாய் ஏனை யதனைப்பற்றிநிற்கும், அவை நீக்கமின்றியிருப்பன. எங் ஙனம், சினையும் முதலும், குணமுங் குணியும், வினை யும் வினைமுதலும், சாதியும் வடிவும், விசேடமும், நித் தியப்பொருள்களும் என்பன.

நித்தியம் எ-து. ஆகாயமுதலியவற்றி னீக்குதற்குச் சம் பந்தம் எ-ம், சையோகத்தி னீக்குதற்கு நித்தியம் எ-ம் கூறி யவாறு. சொரூபசம்பந்தத்தி னீக்குதற்கு அதனின் வேறா யென்னுமடையும் வேண்டப்படுமொறறிக.

## எ. அபாவம்.

**கருு. முன்னபாவம் தோற்றமின்றி அழிவுடையது; காரியத்தோற்றத்திற்கு முன்னுள்ளது.**

தோற்றமின்றி எ-து. முன்னபாவத்திற்கிலக்கணங் கூறுகின்றது. குடமுதலியவற்றி னீக்குதற்குத் தோற்றமின்றி எ-ம், பரமாணுவி னீக்குதற்கு நாசமுடையது எ-ம் கூறியவாறு. காரியத்தோற்றத்திற்கு எ-து. இவ்வாறாயின் முன்னபாவம் எக்காலத்துளதென்னு மையநீக்குகின்றது. காரியத்தோற்றத்திற்குமுன் றன்து பிரதியோகியின் சமவாயி காரணத்துள்ளது. எ-று.

**கசா. அழிவுபாட்டபாவம் தோற்ற முடைத்தாய் அழிவின்றி இருப்பது; காரியத்தோற்றத்தின் பின்னுள்ளது.**

தோற்றமுடைத்தாய் எ-து. அழிவுபாட்டபாவத்திற்கிலக்கணங் கூறுகின்றது. குடமுதலியவற்றி னீக்குதற்கு அழிவின்றி எ-ம், ஆன்மாமுதலியவற்றி னீக்குதற்குத் தோற்றமுடைத்தாய் எ-ம் கூறியவாறு. காரியத்தோற்றத்தின் எ-து. தனது பிரதியோகியின் சமவாயி காரணத்துள்ளது எ-று. அது தான் அழிக்கப்பட்டது என்புழி வரும் விகுதிக்கு விடயமாவது.

**கஎ. முழுதுமபாவம் முக்காலத்தினுமுளதாய சமுசர்க்கத்தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகிதாக்ன்மையுடையது. எங்ஙனம், பூதலத்திற் குடம் இல்லை என்பது.**

மூக்காலத்தினும் எ-து. முழுதுமபாவத்திற் கிலக்கணங் கூறுகின்றது. மூக்காலத்தினுமுள்தாய சமுசர்க்கத்தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடையது மு ழுதுமபாவம். அழிவுபாட்டபாவம் முன்னபாவங்களி னீக் குதற்கு முக்காலத்தினுமுளதாய எ-ம், பேதத்தி னீக்குதற் குச் சமுசர்க்கமென்பது முதலியனவுங் கூறியவாறு.

கஅ. ஒன்றினொன்றபாவம் தாதான்மிய சம்பந்தத் தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மை யுடையது. எங்ஙனம், குடம் ஆடையன்று என்பது.

தாதான்மியசம்பந்தம் எ-து. ஒன்றினொன்றபாவத்திற் கிலக்கணங்கூறுகின்றது. முன்னபாவம் அழிவுபாட்டபாவ ங்களி னீக்குதற்குத் தாதான்மியமெனப்பட்டது. முழுது மபாவத்தி னீக்குதற்குத் தாதான்மியத்தன்மையாற் சம்பந் தம் அடையடுக்கற்பாற்று.

கக. எல்லாப்பதார்த்தங்களும் முறையானே கூறிய வற்றுள் அடங்குதலிற் பதார்த்தங்கள் ஏழே என்பது பெறப்பட்டது.

திருக்கிளர் நியாயத் திறமுநல் லறிஞர் தெளியும்வை சேடிகத் திறமுஞ், சுருக்கமா விளங்க முறைப்பட நிறு வித் தொகுத்தன்னம் பட்டனுந் தூயோ, னொருக்கிய வுள்ளத் திளைஞர்கற் றெளிதி னுளங்கொண்டு பயின்று நன்குய்யத், தருக்கசங் கிரக மெனப்பெயர் புனைந்து தந் தனன் றரணியோர் தமக்கே.

எல்லாம் எ-து. பதார்த்தவறிவிற்கு மேலாகிய பயன் முத்தியெனக்கண்டுரைப்ப. அதுதான் றுக்கமிருபத்தொன்றும் முழுவதுங்கழிதல். முழுவதாந்தன்மை தன்னோ டொருநிலைக்களத்துளதாகிய துக்கத்தினது முன்னபாவத்தோடு ஒருகாலத்துளதாதல். துக்கத்தின் கழிவு இற்றைஞான்று முளதாகலின் நம்மனோரும் முத்தராவான் சேறலினீக்குதற்குத் தன்னோடொருநிலைக்களத்துளதாகிய துக்கத்தினது முன்னபாவத்தோடு ஒருகாலத்துளதாதல் எ-ம், முத்தி எனப்படுங் துக்கத்தின் கழிவு பிறர்கண்ணதாகிய துக்கத்தின் முன்னபாவத்தோடு ஒருகாலத்துளதாமாகலின் வாமதேவன் முதலிய முத்தான்மாக்களுக்கும் முத்தரல்லராந்தன்மை வருமாகலிற் றன்னோடொருநிலைக்களத்துளதாகிய எ-ம் கூறியவாறு.

துக்கம் இருபத்தொன்றாவன:— சரீரமொன்றும் இந்திரியமாறும் விடயமாறும் புத்தியாறும் சுகமொன்றும் துக்கமொன்றுமென விவை. துக்கத்தோடு கூடிநிற்றலிற் சரீர முதலியனவுங் குணம்பற்றி நிகழ்வதாமாகலிற் றுக்கமெனப்பட்டன. ஆகவே "முந்தியவொருமையாலே மொழிந்தவை கேட்டல்கேட்ட - சிந்தனைசெய்தலுண்மை தெளிந்திடலது தானாக - வந்தவாறெய்தனிட்டை மருவுதலென்றுநான்கா - மிந்தவாறடைந்தோர் முத்தியெய்தியவியல்பினோரே" என்னுஞ் சுருதியால் ஆன்மஞானத்திற்குச் சாதனமாகிய பாவனை சிந்தித்தல் என்னுமிரண்டற்குஞ் சாதனமாதல் பதார்த்தஞானத்தின்கட் கூடிநிற்குமெனவறிக. இவ்வாறாயவழி மெய்யுணர்வினால் உடம்பு புதல்வர் முதலியவற்றின்கண் யான் எனவும் எனதெனவும் பற்றுச்செய்தலெனப்படும் பொய்யுணர்ச்சியழியும். அஃதழியக் குற்றநீங்கும்; அது நீங்கத்

தொழிற்பாடு தோன்றாது; அது தோன்றாதாக அக்காலத்துளதாகிய சரீரத்தானாக காயவியூகத்தானாக நுகர்ச்சியானும் மெய்யுணர்ச்சியானும் பிராரத்தவினையழியும்; அஃதழியப் பிறவியழியுமென்க. "சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திரமார்க்கந் தாதமார்க்க மென்று சங்கரனையடையு - நன்மார்க்க நான்கு" என்பது முதலியவற்றானும் "அவனையே யறிந்து வீட்டினையடைகின்றான்" என்னுஞ் சுருதியானும் சகுணோபாசனையும் காசிக்கணிறத்தலும் முதலியனவுந் தத்துவஞானவழியால் முத்திக்கு ஏதுவாம். இதனானே இறைவன் காசியின்கண் பிரணவஞ் செவியறிவுறுக்கு மென்றவாறாயிற்று.

சந்திர சிங்கனுந் தருக்க நூல்வலோன்
கொந்தவிழ் மலர்க்குழற் கோதை யோடமர்
சுந்தர னருட்கடற் றுளையும் வேட்கையாற்
சிந்தைகூர் பதகிருத் தியஞ்செய் தானரோ.

# தருக்கசங்கிரக

மூலமும்,

# பதகிருத்தியம்

எனப்பெயரிய

# அதனுரையும்

முடிந்தன.



# விஷயசூசி.



[நியாயபோதினி, பதகிருத்தியமென்னும் இவ்வுரை இரண்டனுள்ளும், ஆங்காங்குப்பரந்து வருவனவாகிய விஷயங்கள் மிகப்பல. ஒரோவொரு நயம்பற்றி வேறு வேறிடத்து உரையாசிரியரிருவராலும் காட்டப்பட்டுள்ளன. அவற்றுள் ஒருங்கு சேர்த்தறியினன்றி இனிது விளங்காதன பல. கற்போர்க்குப் பயன்படும்பொருட்டு இஃது ஒருவாற்றாற் சுருக்கி இயற்றப்பட்டது. எண்கள் பக்கங்களைக்காட்டுவன.]

## அ.

## அ.

விஷயம். பக்கம்.



## அ.

விஷயம். பக்கம்.



## ஆ.

## த.



## தி.



## தி.



## தீ.



## து.



## தே.



## தொ.



## தோ.

## ந.

## ப.

## ம.



## மா.



## மி.



## மு.



## மூ.



## மெ.



## யா.



## வ.



## வா.



## வி.

உ

சிவமயம்.

# தருக்கசங்கிரகம்

## மூலமும்,

## தருக்கசங்கிரகதீபிகை

எனப்பெயரிய

அதனுரையும்,

## நீலகண்டீயம்

எனப்பெயரிய

அவ்வுரையினுரையும்.



### தற்சிறப்புப்பாயிரம்.



உலகம்புரக்குமுழுமுதலையுள்ளக்கோயிலுள்ளிருத்தி யிலகுங்கருணைக்குருவழிபாடியற்றியிளைஞர்க்கிருண்மடம்போய், விலகுந்தெளிவுள்ளத்தெளிதின்விரவும்பொருட்டுவிழுத்தமிழாற், கலவுந்தருக்கசங்கிரகங்கலைஞருவப் பக்கட்டுரைப்பாம்.

## தற்சிறப்புப்பாயிரம்.

எங்கு மாய்நிறைந் தியாவையு மியற்றினு மியார்க்கும்
பங்க யப்பதந் தரவுருக் கொளுமுமை பாகத்
தங்க ணன்கலை தருங்குரு வடிமுடிக் கணிந்து
மங்கு ரூத்தருக் கதீபிகை சிறுவர்க்கு வகுப்பாம்.

திருவடி பரவும் பேதைச் சிற்றறி வினருந் தேவ
குருநிக ரறிவின் பேறு கொளத்தகுங் குருவேயாக
வருளுரு வோட டற்கல் லாணிழ லமர்ந்து வைகும்
பொருவருந் தூய ஞான பூரணன் பொற்றாள் போற்றி.

எங்குமாய் எ-து. இயற்றப்புகுந்தவுரை யிடையூறின்றி யினிது முடிதற்பொருட்டுச், சான்றோரொழுக்கத்தாற் கொள்ளப்படுங் கடவுள் வணக்கமாகிய மங்கலம் மாணாக்கர்க்கறிவுறுத்தற்பொருட்டு யாப்பினுல் யாத்து அதனுன் முடிவெய்தும்பொருளை மேற்கொண்டுரைக்கின்றது. கலைதருங்குரு என்பதற்கு வித்தைமுழுவது முணர்த்தினேனெனவுரைக்க; இஃதும் அங்கணனுக்கு விசேடணம். கலைமகள் குருவென்பது பாடமாயின் நாமகளும் வித்தியாகுருவுமெனப் பொருள்படுமாறறிந்துகொள்க. தருக்கதீபிகை எ-து. தருக்கசங்கிரகநூற்பொருளை விளக்குவது என்னும் பொருட்டு. சிறுவர்க்கு எ-து. இந்நூற்பொருள் ஏனைநூல்களாலுரைக்கப்பட்டதன்றென்பது காட்டுகின்றது.

உலகம் எ-து. எடுத்துக்கொண்டநூலிடையூறின்றியினிதுமுடிதற்பொருட்டுச் சான்றோரொழுக்கமாகியவேதுப்பற்றி அனுமானவளவையின் வைத்துணர்த்தப்படுஞ் சுரு

டியானுணர்த்தப்பட்ட செயற்பாலதாந்தன்மையினையுடைய வழிபடுகடவுள் வணக்கமெனப்படும் மஙகலம் மாணுக்கர்க்கறிவுறுத்தற்பொருட்டு யாப்பினுல் யாத்து நூனுதலியபொருளை நூன்முகத்து மேற்கொண்டுரைக்கின்றது.

எடுத்துக்கொண்ட எ-து. சான்ருேரொழுக்கத்தாற் றுணியப்படும் மங்கலத்திற்கும் அதனை யாத்துரைத்தற்கும் பலஙகாட்டுகின்றது.

அற்றேல், மங்கலம் முடிவுபேற்றிற்குக்காரணமன்று, மங்கலஞ் செய்யப்பட்டவழியுங் காதம்பரி முதலியவற்றுளிடையூறின்றி முடிவுபேறு காணப்படாமையானும், மஙகலஞ்செய்யப்படாதவழியுங கிரணுவளி முதலியவற்றுள் முடிவுபேறுகாணப்படுதலானும் உடன்பாட்டினுமெதிர்மறையினுமுறைபிறழ்தலானெனின்:— அற்றன்று, காதம்பரிமுதலியவற்றுளிடையூறுபலவாயிற்ருகலின் முடிவுபேறின்று,மற்றுக் கிரணுவளி முதலியவற்றின்கண் நூற்புறமாகவே மஙகலஞ் செய்யப்பட்டதாகலின் முறைபிறழ்ச்சியின்றென்பது.

அற்றேல் எ-து. அற்றேல் முடிவுபேற்றிற்கு மங்கலங காரணமாயின், சான்ருேரொழுக்கம் பொருத்தமுடைத்தாம்; அதுவேயில்லையென வாசங்கித்துரைக்கின்றது. முறைபிறழ்தலான் எ-து. உடன்பாட்டினுமெதிர்மறையினுமுறைபிறழ்ச்சி யறியப்படுதலெனப்படுந் தடைப்பாடுண்மையின், நியதமாகிய வுடம்பாட்டினு மெதிர்மறையினு முடனிகழ்ச்சி துணியப்படுதலெனப்படுங் காரணமின்மையாற் காரணத்தன்மையின் றுணிபின்றென்பது கருத்து. முடிவுபேறு இன்று எ-து. ஆகலின் முறைபிறழ்ச்சி யின்றென்பதனேடியையும்.

ஒன்றி லிடையூற்றின் றொகைக்குறைவுபாடுடையதாக அல்லது இடையூற்றின் வன்மை மிகுதியுடைத்தாக வரும் மங்கலம் இடையூற்றினை யழிக்குநெறியான் முடிவுபேற்றிற்குக் காரணமாகலின் அவ்வியல்பிற்றா கிய மங்கலமின்மைபற்றி யுடன்பாட்டின் முறைபிற ழ்ச்சியுண்டென்றல் பொருந்தாதென்பது கருத்து. நாற் புறமாகவே எ-து. முற்பிறப்பில் எ-று. எனவே, யாங்காயினு நூலாசிரியர் நாத்திகராயவழியுங் குற்ற மின்மையறிக. ஆகலின் எ-து. அவ்வியல்பிற்றாகிய மங்கல மிடையூற்றினை யழிக்குநெறியான் முடிவுபேற் றிற்குக் காரணமாதலுண்மையின் எதிர்மறையின் மு றைபிறழ்ச்சியின்று எ-று. இங்ஙனம் மங்கலங் காரண மென்பது பெறப்படுமென்பது கருத்து. பிறரெல் லாம் ஆகலினென்பதற்கு மேற்கூறிய வேது இரண் டானுமெனவும் முறைபிறழ்ச்சியின்று என்பதற்கு உட ன்பாட்டினு மெதிர்மறையினு முறைபிறழ்ச்சியின்றெ னவுமுரைப்ப. நவீனருளொருசாரார் மங்கலத்திற்கு இடையூற்றி னழிவுபாடே பலமெனவும் மற்று முடிவு பேறு தனது கருவியின் வயத்ததாமெனவுங் கூறுப. இவ்வுண்மையெல்லாஞ் சிந்தாமணியுரையுளுரைத்தாம்; ஆண்டுக்கண்டுகொள்க.

அற்றேல், மங்கலஞ் செயற்பாலதென்பதற்குப் பிர மாணமில்லையாலோவெனின்:— அற்றன்று, சான் றோரொழுக்கத்தான் அனுமானவளவையின் வைத்து அறிய ப்படுஞ் சுருதியும் பிரமாணமாகலானும், 'முடிவுபேற்றினை விரும்புவோன் மங்கலத்தினைக் கைக்கொண்டொழுகுக' வெ ன்பது சுருதியாதலானுமென்பது.

அற்றேல் எ-து. மங்கலம் வேதத்தானுணர்த்தப்பட்ட செயற்பாலதாந்தன்மையுடைத்தாதலே நிலைநிறுத்தும்பொருட்டு ஆசங்கித்துரைக்கின்றது. அநுமானவளவையின் வைத்து எ-து. இதன்பொருண்முடிபு வருமாறு:— சுருதிவேதத்தானுணர்த்தப்பட்ட செயற்பாலதாமியல் புடைத்தாந் தன்மையெனப்படுங் கூறப்படுதற்குரித்தாகிய விதிக்கற்பாலத னுட்பட்டதேயாயினும் அதன் கணடங்குதலான் விதிக்கற்பாலதாந் தன்மைதானே போதரும், அச்சுருதி அநுமிதிக்குமுன் பெறப்பட்டதன்றாகலினென்பது. இதனால் வன்னிமுதலிய துணிபொருளினையுடையதாகிய அநுமிதிக்கு விடயமாந்தன்மையை யெடுத்துக்கொண்டு வன்னித்தன்மை முதலியன அனுமானவளவையின் வைத்துணரப்பட்டதென்னும் வழக்கின்மையிற் சுருதியின்கண் அனுமானவளவையின் வைத்துணரப்பட்டதாந் தன்மையெனப்படும் வழக்கு யாங்ஙனமென்னு மாசங்கை நீக்கப்பட்டது, சுருதியின்கண் விதிக்கற்பாலதாந்தன்மைதானே போதருதலின் அவ்வியல்பிற்றாகிய வழக்கின்கட் குற்றமின்றாகலானென்பது. உம்மை உண்மைப்பொருட்கண் வந்தது. அதனால் 'மங்கலஞ் செயற்பாலது, முடிவுபேறாகிய பலமுடைமையி' னென வனுமானமெனப்படும் வேறு பிரமாணமுள்ளவழியுங் குற்றமின்றென்க. இதற்குப் பிறரெல்லாந் தன்னானுணர்த்தப்பட்ட செயற்பாலதாமியல்புடைத்தாந்தன்மைச் சம்பந்தத்தாற் றுணியப்படுமியல்பு சுருதிக்கே எ-ம், முன்வருந் தொடர்மொழிக்கு மிதுவே தாற்பரியம் எ-ம் கூறி இம்முறைமைபற்றிச் சுருதியனுமானவளவையின் வைத்துணரப்பட்டமை பொருந்துமெனக் கூறுப.

அங்ஙனமன்றே, 'மங்கலம் வேதத்தானுணர்த்தப்பட்ட செயற்பாலதாந்தன்மையுடைத்து, உலகநடையும் பழிக்கப்படுவதுமன்றி யுயர்ந்தோன் கைக்கொண்டொழுகுவதற்கு விடயமாகலின், வேள்விமுதலியனபோல'வென அனுமானவளவையின் வைத்துக் கண்டுகொள்க. உண்டிமுதலியவற்றின் முறைபிறழ்ச்சி நீக்குதற்கு உலகநடையன்றி எ-ம், இரவின்கட் டென்புலத்தார் கடனேம்பல் முதலியவற்றின் முறைபிறழ்ச்சி நீக்குதற்குப் பழிக்கப்படுவதன்றி எ-ம் கூறியவாறு.

**உலகநடையன்றி** எ-து. விதியின்றி இச்சைமுதலியவற்றாற் பெறப்பட்டவற்றின் வேறாயது எ-று. **பழிக்கப்படுவதன்றி** எ-து. அறநூலான் விலக்கப்பட்டது எ-று. **உயர்ந்தோன்** எ-து. வேதத்தாற் கூறப்பட்ட மெய்ப்பொருளுணர்ச்சியால் அதனுல் விதிக்கப்பட்ட கருமங்களைச் செய்வோன் எ-று. வேதத்துக் கூறப்பட்ட கொல்லாமை முதலியனவற்றைச் செய்யும் புத்தன்கணதிவியாத்தி நீக்குதற்கு மூன்றாம்வேற்றுமையீற்றாற் கூறப்பட்டது. **கைக்கொண்டொழுகுதற்கு** எ-து. ஒழுகுதல் செய்தல்; அதன் நிகழ்ச்சிக்கு நியாமகமல்லாத விடயத்தன்மைச் சம்பந்தத்தால் ஏதுவாந்தன்மை வாதத்திற்கிடமாகலின், அதற்கு விடயமாந்தன்மை ஏதுவாதறுணியப் பட்டதென்பது கருத்து. **உண்டிமுதலியவற்றின்** எ-து. கிடக்கைமுறைமைபற்றி ஏது விசேடணங்களது பயன் கூறுகின்றது.

உயர்ந்தோன் எ-து. விளக்குதற்பொருட்டு, பயனில்லன செய்யற்கவென நீரடித்தன் முதலியனவும் விலக்கப்பட்டதாகலினென்பது. தருக்கம் தருக்கித்து விள

க்கப்பட்ட திரவியமுதலிய பதார்த்தமேழும்; சங்கிரகம் அவற்றைச் சுருங்க வெடுத்துக்கொண்டு சொரூபங்கூறல் எ-று.

உயர்ந்தோன் எ-து. அற்றேல், உலகநடையும் பழிக்கப் படுவதுமல்லாத ஒழுக்கத்திற்கு விடயமாதலே காரண மாகுக, இழிந்தோரொழுக்கத்திற்கு விடயமாதல் கார ணமன்றுவதாகலின் முறைபிறழ்ச்சியின்றுமென வாச ங்கித்துப் பரிகரிக்கின்றது. செய்யற்க எ-து. நீரடித்தன் முதலியனவாகிய இழிந்தோரொழுக்கத்திற்கு விடயமாதல் காரணமாதலின்மையை விளக்குகின்றது. துறக்கப்பேறு முதலியவற்றுள் முறைபிறழ்ச்சி நீக்கு தற்குக்' கைக்கொண்டொழுகுதற்கு விடயமாத லென விதந்து 'கூறற்பாலதாந்தன்மையான் 'ஒழுக்கத்திற்கு விடயமாதலென்னும் பொருட்டென்றவாறாயிற்று. தரு க்கித்து எ-து. தருக்கமென்பது ஆரோபமெனப் பொ ருள்படாமைப்பொருட்டுத் திரவியமுதலிய பொதுத் தருக்கமாமாறு நிருத்திகூறுகின்றது. சுருங்க எ-து. உபாதானமெனப்படுஞ் சுருக்கமென்ப தின்மையின் இவ்வாறுரைக்கப்பட்டது. சொரூபங்கூறல் எ-து. சொரூபவறிவிற்கு ஏற்றவாறு கூறுதல். இதுகாறுங் கூறியவாற்றால் திரவியமுதலிய பதார்த்தம் விடயமும், பதார்த்தங்களது மெய்யுணர்ச்சி பயனும், உரைப்பது முரைக்கப்படுவதுமாகிய சம்பந்தமும், பதார்த்தங்களது மெய்ப்பொருளுணர்தல்வேட்கையுடையோர் கேட்போ ருமென இந்நூல் கேட்டலுறுவார்க்கு முயற்சிசேறற் பொருட்டுப் பாயிரநான்குங் குறிப்பாற் காட்டப்பட்டன.

தெளிவு எளிதின் விரவும்பொருட்டு எ-து. பயன் யாதென்னும் வினாவிற்குவிடைகூறுகின்றது. தெளிவு பதார்த்தவறிவு; எளிதின் விரவுதல் வருத்தமின்றித் தோன்றுதல்; அதன்பொருட்டு எ-று. சிறார்க்கு எ-து. அற்றேல், தருக்கநூல்கள் பலவுமிருப்பப் புதிதாக நூல்செய்த லெற்றுக்கென்னும் வினாவிற்குவிடைகூறுகின்றது. அவை விரிவுடைமைபற்றிச் சிறார்க்குத் தெளிவுபடா எ-று. சிறார் கோடலு முள்ளத்தமைத்தலும் வல்லோர், மற்றுக் குழவிப்பருவத்தரல்லரென்பதாம். இருத்தி எ-து. யாது செய்து யாது செய்யப்படுகின்றதென்னும் வினாவிற்குவிடை கூறுகின்றது. உலகம்புரக்குமுழுமுதலை என்பதற்கு ஐந்தொழில் செய்யுஞ் சிவபிரானை எ-ம், உள்ளக்கோயிலுள்ளிருத்தி என்பதற்கு மனக்கோயிலுள் வைத்து எ-ம் உரைக்க; இடைவிடாது நினைந்து எ-று. குரு எ-து. வித்தியாகுருவை. வழிபாடு - வணக்கம். இயற்றி - செய்து.

வருத்தமின்றி எ-து. எளிதினென்புழி இன்னுருபு உவமைப்பொருட்கட் சேறலினீக்குகின்றது. அற்றேல் எ-து. தெளிவு எளிதின் விரவுதலாகிய பயன் மற்றொன்றாற் பெறப்படுதலின் இந்நூல் செய்தல் பயனுடைத்தாகாதென்னுங் கருத்தாற் றுணிந்துரைக்கின்றது. அவை எ-து. பாடியமுதலியன.

## பதார்த்தப்பாகுபாடு.

**௧. திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் எனப் பதார்த்தங்கள் ஏழு.**

திரவியம் எ-து. பதார்த்தங்களைப் பகுக்கின்றது. பதத்திற்கு அர்த்தம் பதார்த்தமெனப்படுமாகலின் அபிதேயத்தன்மை பதார்த்தம். அற்றேல் ஈண்டுப் பாகுபாட்டாற்றானே ஏழாதல் பெறப்படுதலின் ஏழென்றல் பயனில் கூற்றாமெனின்;—அற்றன்று, அவ்வேழன் மேற்பட்ட தொகையினை நீக்குதல் பொருளாமாகலின்.

**நூலுள் பதார்த்தம் ஏழு** எ-து. திரவியமுதலியனவாகிய பதார்த்தங்களைப் பகுப்பனவாகிய வுபாதி யேழனு ளொன்றாவன பதார்த்தங்கள் எ-று. ஈண்டு ஏழாதல் அவாவிநிற்கும் புத்திக்கு விசேட விடயமாதல். இங்ஙனமே முன்வரும் வாக்கியமும் இக்கருத்துடைத்தாதலறிந்துகொள்க. **பதத்திற்கு** எ-து. அற்றேல், பொதுவியல்பினை யறியுமறிவு விசேடவறிவினை யறிதல். வேட்கைக்குக் காரணமாகலிற் பொதுவிலக்கணங் கூறப்பட்டபின் பகுத்துக்காட்டுதல் பொருந்தும், அங்ஙனமன்றி நூலுள் முதற்கட் பதார்த்தங்களைப் பகுத்துக்காட்டுத லெங்ஙனமென்னுங் குற்றத்தினைப் பரிகரிக்கின்றது. அர்த்தம் அபிதேயம். இப்பொருளால், பதத்தோடு சம்பந்தமுடைத்தாகிய வபிதைக்கு விடயமாதல் பெறப்பட்டுழியும் பதத்தோடு சம்பந்தமுடைத்தாந்தன்மையாகிய கூறு வேறுபடுப்பதாகாமையின் **அபிதேயத்தன்மை** யெனப்பட்டது; இலக்கணம் பெறப்பட்டது என்பது எஞ்சிநின்றது; ஆகவே குற்றமின்றாமென்பது கருத்து. **பாகுபாட்டால்** எ-து. பதார்த்தத்தன்மையாகிய அவாந்தரதருமங் கூறப்படுதல் பற்றித் தருமி கூறப்படுதலான் எ-று. **அவ்வேழன் மேற்பட்ட தொகையினை** எ-து. அவ்வியல்பிற்றாகிய

தொகையினை விலக்குதல் பெறப்படுதலாகிய பலமு டைத்தாகலான் எ-று.

அற்றேல் மேற்பட்டதாகிய பதார்த்தம் அளந்துரைக்கப்பட்டதோ? அன்றோ? அளந்துரைக்கப்பட்டது விலக்கப்படாமையின் முதற்கண்ணதுமன்று. பிரதியோகி யளந்துரைக்கப்படாதவழி விலக்குதல் பொருந்தாமையின் இறுதிக்கண்ணதுமன்று ,மாலோவெனின்:— அற்றன்று, பதார்த்தத்தன்மை திரவியமுதலிய வேழன்கண்ணுந் தனித்தனி வியாப்பியமாமென நீக்குதல் பொருளாமாகலின். அற்றேல் ஏழனுளொன்றுதல் ஏழின்வேறுயதின் வேறுதலேயாம், இவ்வாறுயவழி ஏழின்வேறுயது வழங்கப்படாமையின் ஏழனுளொன்றுதல் யாங்ஙனமெனின்;— அற்றன்று; திரவியமுதலிய வேழனுளொன்றுதலென்பது திரவிய முதலியவற்றின் வேறுபாடாகிய வேழாதலின் அபாவமுடைத்தாதலென்பது அதன்பொருளாகலின். இவ்வாறு முன்னருங் காட்டற்பாற்று.

பொதுவகையாற் கூறப்பட்டதன்மையை வரைந்துகொள்வதாகிய பொதுவகையாற் கூறப்படுவதனைவிதந்து கூறப்படுதலுள்ளவிடத்து விதந்துகூறப்படுதல் வியாப்பியமாதல்இயல்பாகவே விளங்குமென்னுங்கருத்தாற் பதார்த்தத்தன்மை யெனப்பட்டது. எனநீக்குதல் எ-து. இவ்வாறு கூறப்படும் நீக்குதலென்பதற்குச் சிறப்பாக விளக்குதல் பொருளாமாகலின் எ-று. ஏழின்வேறுயது எ-து. திரவியமுதலிய பதார்த்தங்கள் ஏழன்வேறுபாட்டால் விசேடிக்கப்பட்டவேறுதற்றன்மை கூறற்பாற்று எ-று திரவியமுதலியவற்றின் எ-து. தனித்தனி வழங்கப்படுவனவாகிய வேழெனப்படுங் திரவிய முதலியவற்

றின் வேறுபாடு யாண்டாயினுமின்மையானும் அவ்வி யல்பிற்றாகிய வெழுவகை வேறுபாட்டின் றன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட அபாவம் யாண்டுமுண்மையா னுங் குற்றமின்றென்பது கருத்து. பதார்த்தத்தன்மை திரவியமுதலிய வுபாதி யேழனுளொன்றாதற்கண் வி யாப்பியமாமென்பதற்குப் பதார்த்தத்தன்மை திரவியமு தலிய வுபாதி யேழனுளொன்றாதற்கண் வியாப்பியமா மென்பது இதன்மெய்ப்பொருளாக வுரைக்க. இங்ஙன முரைத்தவழி யேழனுளொன்றாதல் வழங்கற்பாடிலதா மென்னுமாசங்கையும் அதற்குவிடையுங் கூறுவதாகிய அற்றேல் ஏழனுளொன்றதல் என்னும்பாடமில்வழி யுங் குற்றமின்றாத லறிந்துகொள்க. இவ்வாறுமன்ன நும் எ-து. இம்முறைமையாற் றிரவியமென்பது முத லியவற்றுள்ளும் எ-று.

## திரவியப்பாகுபாடு.

உ. அவற்றுள், திரவியம் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா, மனம் என ஒன்பது வகைத்து.

அவற்றுள் எ-து. திரவியத்தைப்பகுக்கின்றது. அவ ற்றுள் என்பதற்குத் திரவியமுதலிய வேழனுளெ ன வுரைத்துத்திரவியங்கள் ஒன்பதேயாமென வியைத்துக் கொள்க. பிருதிவி எ-து. அவையாவை யென்னும்வினவிற்கு விடைகூறுகின்றது. அற்றேல், பத்தாந்திரவியமாகிய இருள் அறியப்படுதலுடைமையால், திரவியங்கள் ஒன்பதேயாமென்

றல்யாங்ஙனம்? காரிருள் இயங்குகின்றது என்னும் பாதமில்லாத உணர்ச்சிவலியாற் கருவடிவிற்குப் பற்றுக்கோடாகலானும், வினைக்குப் பற்றுக்கோடாகலானும், அது திரவியமாதல் பெறப்பட்டது. ஆண்டு இருள் ஆகாயமுதலியவைந்தனுள்ளு மடங்குவதன்று. உருவமுடைத்தாந்தன்மையானென்பது இதனானே வாயுவினுமன்று, பரிசமின்மையானும் இடையறு தியங்குவதன்மையானுமென்பது. தேயுவினுமன்று, விளங்கிய வுருவமின்மையானும் வெம்மைப்பரிசமின்மையானுமென்பது. நீரினுமன்று, தண்மைப்பரிசமின்மையானும் கருவடிவிற்குப் பற்றுக்கோடாகலானுமென்பது. பிருதிவியினுமன்று, நாற்றமுடைமையின்மையானும் பரிசமின்மையானுமென்பது. அதனால் இருள் பத்தாந்திரவியமாமெனின்;— அற்றன்று, இருள் தேயுவினபாவத்தின் வடிவாகலினென்பது; அங்ஙனமன்றே, இருள் வடிவுடைப்பொருளன்று, ஒளியோடுகூடாத சட்சுவாற் கவரப்படுதலுடைமையின். உருவுடைப்பொருளைச் சட்சுவினாற் காணும் பிரமைக்கு ஒளி காரணமாகலின் ஒளியி*னபாவமுடைத்தேயாம். அதனால் பேரொளியுடைத்தாகிய தேயுப் பொதுமையினபாவம் இருளாம், ஆண்டுக்காரிருள் இயங்குகின்றது

* 'அபாவமுடைத்து' என்பதற்கு 'ஸுஹாவவஸ' என்பது முதனூற்பிரதிபதம். இதனைத் திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீலஸ்ரீ சிவஞானசுவாமிகள் 'அபாவம்போலும்' என மொழிபெயர்த்தனர். 'வஸ' என்னுமவ்வியயம் ஒப்பில்போலிப் பொருள்படாமை வடநூல் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இவ்வாறே மேலும் பலவிடங்களில் வழுப்படமொழிபெயர்த்துரைப்பர்; அவற்றுள், இன்றியமையாதனசிலவற்றைமாத்திரம் ஆங்காங்குக் காட்டுகின்றாம். நியாயபோதினியுள் இருள் இன்னதென நன்குவிளக்கப்பட்டுள்ளது.

என்னுந் தெளிவு மயக்கமாம். ஆதலின் திரவியம் ஒன்ப தென்பது பெறப்பட்டது.

திரவியம் எ-து. சாதியொருமை. அற்றேல் எ-து. மீமாஞ்சகமதத்தினை மறுப்பான் ருெடங்குகின்றது. உணர்ச்சிவலியாலெ -து. காட்சியளவையானறியப்படு முணர்ச்சிவலியான் எ-று. கருவடிவிற்று எ-து. அது திரவியமாமென்றற்கு அனுமானவளவை கூறுகின்றது. சமவாயத்தாற் கருவடிவுடைத்தாந்தன்மையான் எ-று. இவ்வாறுரைப்பிற் காலசம்பந்தமுடையது முதலிய சம்பந்தத்தால் அது மிகக் கரிதாயவழியுங் குற்றமின்றென்பது. இவ்வாறு முன்னு மறிந்துகொள்க. ஆண்டு எ-து. திரவியமாதல்பெறப்பட்டவழி எ-று. இருள் எ-து. மேற்பட்டுநிற்றலை நிலைநிறுத்துதற்கு வரையறுத்துணர்த்திய திரவியங்களுள் அடங்குதலை மறுத்துரைக்கின்றது. இதனுனே எ-து. உருவமுடைத்தாந்தன்மையான் எ-று. வாயுவினுமன்று எ-து. அடங்குவது என்பது வந்தியையும். பரிசமின்மையானும் எ-து. சம்பந்த வேறுபாடு கருத்தாகக் கொண்டுரைக்கின்றது. இஃது அழிவுபாட்டபாவமும் முன்னபாவமுமாகிய நிலைக்களத்து முழுதுமபாவங் கொள்ளப்படுவதன்றென்னும் பிராசீனமதம்பற்றியுரைக்கப்பட்டது. அங்ஙனமன்றேல், சமவாயத்தான் வரைந்துகொள்ளப்பட்ட பரிசப்பொதுமையி னபாவந் தேயசம்பந்தமுடைத்தாகிய விசேடணத்தன்மையால் வாயுவினுந் தோன்றுங் காலத்தான் வரைந்துகோடலாலுளதாமாகலின் முறை பிறழ்ச்சி வருமாகலினென்பது. உண்மையானேக்கின் வரைந்துகொள்ளப்படாத தேயசம்பந்தமுடைத்தாகிய விசேடணத்தன்மையால் அஃது ஏதுவாமெனவறிந்து

கொள்க. இடையறுதியங்குவது எ-து. முறைபிறழ வியாபித்த வேதுவை யெடுத்துணர்த்திப் பிறழாது வியாபித்த வேதுவையுரைக்கின்றது. இடையறுதியங் குதல் வேற்றுச் சாதிக்கண்ணதாகிய வினை. அதனுல் எ-து. முடித்துரைக்கின்றது. வரையறுத்துணர்த்திய வற்றுளடங்காமையான் எ-று. தேயுவினபாவத்தின் என்பது பேரொளியுடைத்தாகிய தேயுவினபாவத்தி னுருவமாதல் கொள்ளப்படுமாகலின் எ-று. இவ்வாறு ரைப்பின், இருளுடைத்தாகிய தேயத்தினுந் தேயுவின் பரமாணுமுதலியன வுளவாமாகலின், தேயுப்பொது மையி னபாவமில்வழியுங் குற்றமின்றென்பது. திரி யணுகமுதலியவற்றி னீக்குதற்குப் பேரொளி எ-ம், குடமுதலியவற்றின் முறைபிறழ்ச்சி நீக்குதற்கு ஒளி யோடுகூடாத எ-ம் கூறியவாறு. சட்சுவாற்கவரப்ப டுதல் சட்சுவினுற் றோன்றிய ஞானத்தினையுடைத்தா கிய உலகசம்பந்தமுடைய விடயமாதல். அதனுல் இருள் சட்சுவுக்குப் புலனுயவழி, குடமுதலியனவணி மைக்கட் கிடைத்துழிப் புலப்படுமேனுங் குற்றமின் றென்பது. ஒளியின்றி யுருவுடைத்தாந்தன்மையால் இருளை விடயமாகக்கொண்டு சட்சுவின் றிரிபுணர்ச்சி தோன்றுமாகலிற் பிரமைக்கு எனப்பட்டது. காரண மாகலின் எ-து. அங்ஙனமன்றேல், இருளகத்ததா கிய குடமுதலியன சட்சுவிற்குப் புலனுமெனல் வே ண்டுமாகலினென்பது. ஒளியினபாவம் எ-து. விசேடா பாவத்தினைத் திருட்டாந்தமாகக்காட்டுகின்றது. ஆங்கு எ-து. அற்றேல், இருள் அவ்வியல்பிற்றாகிய தேயுவி னபாவத்தி னுருவமாயவழி, அதன்கண் உருவுடைத் தாந்தன்மையும் வினையுடைத்தாந்தன்மையு முணரப்ப

டே தெலங்ஙனம், அபாவத்தின்கண் உருவமும் வினையுமின்றாகலினென்னு மையநீக்குகின்றது. இருள் எழன்மேற்பட்டதெனக்கொள்ளும்வழி அளவிறந்த உறுப்புடைமையும் அதன்முன்னபாவமுமுதலியன கொள்ளுதன் மிகையாமாகலின், ஒருதலையான் வேண்டப்படும் அத்தேயவினபாவத்தின் வடிவுடைமை பெறப்படுமென வறிந்துகொள்க.

திரவியத்தன்மையாகிய சாதியுடைமையாதல், குணமுடைத்தாந்தன்மையாதல் திரவியத்திற்குப் பொதுவிலக்கணம். அவ்வியாத்தி இலக்கியத்தினேகதேசத்தினிலதாதல்: எங்ஙனம், ஆவிற்குக் கபிலநிறமுடைமை. அதிவியாத்தி இலக்கியமல்லாததினு முளதாதல்: எங்ஙனம், ஆவிற்குக் கோடுடைமை. அசம்பவம் இலக்கியமாத்திரைக்கேயிலதாதல்: எங்ஙனம், ஆவிற்கு ஒருகுளம்புடைமை.

**திரவியத்தன்மை** எ-து. வீடுபேற்றிற்குக் காரணமாகிய பதார்த்தங்களது மெய்யுணர்ச்சி இலக்கணவுணர்ச்சியின்றியமையாதாகலின் அதனையெடுத்துரைக்கின்றது. சையோகமுதலியனவற்றைத் தோற்றுவிப்பதன் றன்மையை வரைந்துகொள்வதனால், திரவியத்தன்மையாகிய சாதி பெறப்படுமென்றவாறாயிற்று. **குணமுடைத்தாந்தன்மை** எ-து. இலக்கணமும்; இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதும் வேறுபாடுடைத்தாமென்னுமையநீக்குகின்றது. **திரவியத்திற்கு** எ-து. இங்ஙனம் பொதுவிலக்கணங் கூறாமையாற் குறைவுபாடு மின்றென்றவாறாயிற்று. **இலக்கியத்தின்** எ-து. மூக்குற்ற நீங்கிய வியல்பாகிய இலக்கணங் கூறப்படல் வேண்டப்படுமாகலின், அதனறிவு விசேடணமாகிய மூக்குற்

றத்தினீக்கமறியப்படாதவழி யுண்டாகாது; மற்று மூக் குற்ற நீக்கத்தின் றன்மையினை யறியுமறிவு விசேடிக் குத் தன்கண்ணதாகிய வபாவத்தினை யறியுமறிவிற் குப் பிரதியோகியாந்தன்மையை வரைந்துகொள்வத னுன் விசேடிக்கப்பட்ட பிரதியோகியறிவிற்கு உபாய மாமென்னுங் கருத்தால் அம்மூக்குற்றங்களையுங் காட் டுகின்றது. இலக்கணத்தன்மையை வரைந்துகொள் வதன் றன்மையைக் கொள்ளப்படுஞ் சம்பந்தத்தால் ஒருசாரிலக்கியத்தி னிலதாயிற்று எ-று. இலக்கிய மாத்திரைக்கு எ-து. மாத்திரையென்பது தனிமையெ ன்னும்பொருட்டு; சம்பந்தவிசேடத்தான் வரைந்துகொ ள்ளப்பட்ட இலக்கியத்தினுளதாதற் பொதுமையின பாவத்தினை விளக்குவது. ஒருகுளம்பு எ-து. ஈண்டு இலக்கியமல்லாததன்க ணுளதாதலெனப்படும் அதிவி யாத்திக்குற்றமுண்மையிற் கலப்பெனக் கூறற்க, குற் றமுடையது கலந்து நிற்பதாயினுங் குற்றங் கலவா தாகலினென்பது.

இம்மூக்குற்றமு நீங்கியவியல்பு இலக்கணமெனப்ப டும்; எங்ஙனம், ஆவிற்குத் தாடிமுதலியனவுடைமை. அதுவே சிறப்பியல்பு என்றுரைக்கப்படும். சிறப்பாதல் இலக் கியத்தன்மையைவரைந்துகொள்வதனோடொப்பநியதமாதல்.

இம்மூக்குற்றமும் எ-து. கூறப்பட்ட குற்றங்களது அபா வமூன்றானும் விசேடிக்கப்பட்ட எ-று. அதுவே எ-து. அற்றேல், சிறப்பியல்பேயிலக்கணமென்பது சித்தாந் தமன்றோ, அவ்வியல்பிற்றாகியமூக்குற்றங்களினீங்கிய வியல்பேஅஃதாதலெங்ஙனமென்னும் வினாவிற்குவிடை கூறுகின்றது. உரைக்கப்படும் எ-து. அறிஞரால் என் பது எஞ்சிநின்றது;

இலக்கியத்தன்மை. எ-து. அற்றேல், பொதுத்தன்மை இலக்கியத்தின் கண்ணும் இலக்கியமல்லாததின்கண்ணுமுளதாதலெனப்படுமாகலின் அதனபாவமெனப்படுஞ் சிறப்புத்தன்மை அவ்வியாத்திமுதலிய முக்குற்றமுமுள்ள வியல்பின்கண்ணு முளதாமாகலின் முக்குற்றமு நீங்கியவியல்பே சிறப்பியல்பென் றுரைக்கப்படுமா றெங்ஙனமென்னு மாசங்கையைப் பரிகரிக்கும்பொருட்டுச் சிறப்புத்தன்மையின் வேறுரையதற்கு நிருத்தி கூறுகின்றது. இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதன்கண் வியாபகமாய இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதன்கண் வியாப்பியமாயது எ-று. அவ்வியாத்தி அசம்பவங்களி னீக்குதற்கு விசேடணமும், அதிவியாத்தியி னீக்குதற்கு விசேடியமுங் கூட்டப்பட்டன. மற்று இயல்பு என்பது இலக்கணத்தன்மையோடு கூடிய சம்பந்தத்தால் வியாபகத்தன்மைமுதலிய தாற்பரியத்தினைக் கவர்வது என்றவாறாயிற்று. அதிவியாத்தியின்கண் வியாப்பியத்தன்மையும் ஏனையவற்றின்கண் வியாபகத்தன்மையும் அழியுமாகலின் இக்குற்றங்கள் சிறப்புத்தன்மையோடு கூடாதனவாமென்பதும், மற்று இவை குற்றமுடையன வெனப்படுதற்குக் காரணம் இலக்கணத்தால் ஏனையவற்றின் வேறுபாட்டைச் சாதிக்குங்கால் அதிவியாத்தியின்கண் முறைபிறழ்தலும் ஏனையிரண்டன்கண்ணும் பாகாசித்தியுஞ் சொரூபாசித்தியு மாதலுமாமென்பதும் ஈண்டே யறிந்துகொள்க.

வேறுபடுப்பதே இலக்கணமாமெனின் வேறுபடுத்தலினு மபிதேயத்தன்மை முதலியவற்றினும் அதிவியாத்தி நீக்குதற்கு அவற்றின் வேறாயவென வியல்பிற்கு அடைகொடுக்கற்பாற்று.

வேறுபடுப்பது எ-து. அற்றேல், இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதனோடு ஒப்பநிகழ்தலே இலக்கணத்திற் கிலக்கணமாயவழி, இலக்கணத்திற்கு வேறுபடுத்தலே பயனென்னும் மதத்தின்கண் வேறுபடுப்பதே அவ்வியல்பிற்றாகிய இலக்கணத்திற்கு இலக்கியமாதலின் வேறுபடுத்தல் முதலியவற்றின்கண் அதிவியாத்தி வருமென வாசங்கை நிகழுமன்றே, அதனையம்மதம் பற்றியே மறுத்துரைக்கின்றது. ஏனையவற்றின் வேறுதலையுணர்த்தும் அநுமிதியைத் தோற்றுவிப்பதே எ-று. அஃதாவது ஏனையவற்றின் வேறுதலை விதந்து கூறுவதாகிய வநுமிதியைத் தோற்றுவிப்பதன் றன்மையை வரைந்துகொள்வதற்கு விடயமாந்தன்மையாகிய விசேடத்திற்குப் பற்றுக்கோடாவதென்க. இதனால் வழங்குவது நீக்கப்பட்டது. இலக்கணமாமெனின் எ-து. ஆ முதலியவற்றினிலக்கணமாமெனின் எ-று. அஃதாவது கூறப்பட்ட இலக்கணத்தினிலக்கணத்திற்கு இலக்கியமாதலென்க. இலக்கியமாமெனின் என்பது பாடமாயினு மிதுவே பொருளாதலறிந்துகொள்க. வேறுபடுத்தலின் எ-து. ஆ முதலியனவேனையவற்றின் வேறுதற்கண் ஆத்தன்மை முதலியனவெனப்படு மிலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதனோடொப்ப நியதமாதலும் அபிதேயத்தன்மை பிரமேயத்தன்மை முதலியவற்றின்கட் பதார்த்தத்தன்மையோடொப்ப நியதமாதலு முளவாமாகலின் அதிவியாத்தி நீக்குதற்கு வேறுபடுத்தலின் வேறுதலும் அபிதேயத்தன்மை முதலியவற்றின் வேறுதலும் இலக்கணத்தினிலக்கணத்தின்கட் பெய்துரைக்கற்பாற்று எ-று. வேறுபடுத்தற்கும் வழக்கிற்குரித்தாந்தன்மை கூறப்படுமாயினும் அதனு

னே அனைத்துஞ் சுருக்கிக் கூறப்படுமாகலின் வேறாக வெடுத்துரைத்தல் நன்றன்றாயினும், ஏதுவுந் துணிபொருளும் ஒன்றாயவழி ஏதுவுடைத்தாந்தன்மை துணியப்படுங் காலத்துத் துணிபொருளுடைத்தாந்தன்மை துணியப்படுதற்கண், துணிபொருளினையுறவெனப்படும் பக்கத்தன்மையின்றாகலின், அநுமிதியின்றாமாகலின் பிராசீனமதத்தின்கண் ஏனையவற்றின் வேறாதற்கு வேறுபடுப்பதாந்தன்மையின்மையின்மையின் ஆண்டதிவியாத்தியின்றென்க; மற்றுத் துணிதல் வேட்கையின்மையான் விசேடிக்கப்பட்ட பெறுதியின்மையே பக்கத்தன்மையாகக் கொள்ளுஞ் சித்தாந்தமதத்தின்கண் வேறுபடுத்தலும் வேறுபடுப்பதாகலின் இலக்கியமாந்தன்மையால் ஆண்டு இலக்கணம் நன்குபோதருதல் கொள்ளப்படுதலின் அதிவியாத்தியின்றென்பது உணர்த்துதற்கு வேறாகக் கூறப்பட்டதென்க.

அற்றேல், இலக்கணத்தினிலக்கணத்தினது இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வது வேறுபடுப்பதென்பது என்னை? அது பொதுவகையால் வேறுபாட்டினை யனுமானவளவையின் வைத்துணர்த்துவதன்று; வேறுபடுத்தலும் அபிதேயத்தன்மை முதலியனவுஞ் சிறிதாயினும் இரண்டாந்தன்மை முதலியவற்றான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடைத்தாகிய வேறுபாட்டினை அநுமானவளவையின் வைத்துணர்த்துவனவாகலின் இலக்கணத்தி னிலக்கணத்தினது இலக்கியமாதலின் ஆண்டு அதிவியாத்திகூறுதல் நன்கு செல்லாதாகலானும், எதிர் மறுத்தறியப்படு மியல்பெல்லாஞ் சிறிதாயினும் வேறுபடுப்பனவாமாகலிற் சிறப்பாதலின்

மையோடுகூடிய வியாபகத்தன்மை முதலியன நின்று பயனின்மைப்பாற் படுமாகலானு மென்பது. அல்லதூஉம் அது விசேடித்து அவ்வவ்வியல்பான் வரைந்து கொள்ளப்பட்ட ஏனையவற்றின் வேறுபாட்டினை யனுமானவளவையின் வைத்துணர்த்துவதூஉமன்று; அவ்வாறுயவழி ஆத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட ஏனையவற்றின் வேறுதலை யனுமானவளவையின் வைத்துணர்த்துவதாகிய தாடிமுதலியனவுடைமைக்கு ஆத்தன்மையோடொப்ப நியதமாதல் இலக்கணமென்னு முறைமைபற்றி விசேடித்து அவ்வவ்விலக்கணத்திற்குக் கூறப்படற்பாற்றாகலின் ஆத்தன்மைமுதலியன வெனப்படும் இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதாகிய அவ்வவ்வியல்போடொப்ப நியதமாதல் ஆத்தன்மைமுதலியவற்றான் வரைந்துகொள்ளப்பட்ட ஏனையவற்றின் வேறுபாடு முதலியனவெனப்படும் வேறுபடுத்தற்கணுளதாமாகலின் அதிவியாத்தியுண்டாமாயினும் அபிதேயத்தன்மை முதலியவற்றின்க ணதிவியாத்தியின்றெனல் வேண்டுதலின் அது நீக்குதற்கரிதாகலான் ஆத்தன்மை முதலியவற்றோடொப்ப நியதமாத லாண்டுளதாமாகலினெனின்;— அற்றன்று, என்னை? தாடிமுதலியன வுடைத்தாந்தன்மையைப் பக்கமாகக்கொண்டு ஆத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட ஏனையவற்றின் வேறுபாட்டினை யனுமானவளவையின் வைத்துணர்த்துவ்தாகிய துணிபொருளின்கண் விசேடவியாத்தியும் அந்நுவயதிருட்டாந்தமும் பெறப்படாமையின், யாது யாது இயல்போடொப்ப நியதமாம் அது அது இயல்பான் வரைந்துகொள்ளப்பட்ட வேறுபடுப்பதாமென்னு முறைமையாற் பொதுவகையாகிய முகவியா

த்தி பெறப்படுமாகலின் ஆண்டுத் துணிந்ததனைத் துணிதலானும் வழக்கின்மையானும் வேறுபடுத்தலில்லாதன வாகிய வேறுபடுத்தலும், அபிதேயத்தன்மையும், அவ்வவ்வியல்போடொப்ப நியதமாதலெனப்படும் முதற்கண்ணதாகியவேதுவும், ஒத்த ஏதுவும், உளவாமாகலின் முதற்கண்ணதாகிய துணிபொருளாக வதனோடொத்த துணிபொருளாகத் துணிபொருளின்றாமாகலின் முறை பிறழ்ச்சியுளதாம், ஆதலின் அக்குற்ற நீக்குதற்கு அவ்வவ்வியல்பான் வரைந்துகொள்ளப்பட்ட ஏனையவற்றின் வேறுபாடெனப்படும் வேறுபடுத்தலின் வேறாதலும் அபிதேயத்தன்மை முதலியவற்றின்வேறாதலும் அவ்வியல்பிற்றாகிய இலக்கணத்தின்கட் பெய்துரைக்கற்பாலனவென்னுங்கருத்தாலிவ்வாறு கூறப்பட்டதாகலின் மேற்காட்டிய குற்றத்திற் கிடனின்றென்பது; இதன் விரிவெல்லா மேனையநூல்களுட் கண்டுகொள்க.

மற்று வழக்கும் இலக்கணத்திற்குப் பயனாகக்கொள்ளின் கொடுக்கற்பாற்றன்று, வேறுபடுத்தலும் வழக்கிற்குக் காரணமாகலினென்பது. அற்றேல், குணமுடைத்தாந்தன்மை திரவியத்திற்குப் பொதுவிலக்கணமன்று; முதற்கணத்துத் தோன்றியதும் அழிந்ததுமாகிய திரவியத்தின்கண் அவ்வியாத்தி வருமாகலினெனின்;— அற்றன்று, குணத்தோ டொருங்குநிற்கு முண்மைத்தன்மையின்வேறாய சாதியுடைத்தாந்தன்மையென்பது கூறுதல் கருத்தாகலினென்பது.

வழக்கும் எ-து. அற்றேல், இலக்கணத்திற்கு வழங்குதலும் பயனுமன்றே, அதனால் வழக்கிற்கு விடயமாந்தன்மையை யறியுமறிவின்றி யதன்வடிவான் வரைந்து

கொள்ளப்பட்ட உணர்ச்சிக்குக் காரணமாகாத சொல்லெனப்படும் வழக்கின்மையினென்பது; இவ்வாறாய வழியும் வழக்கிற்குக் காரணமாகிய இலக்கணத்திற்கும் இலக்கியமாந்தன்மையுண்மையின் அதனின் வேறாதலாகிய அடைகொடுக்கற்பாற்றன்றென்பது கூறுகின்றது. வேறுபடுத்தலும் எ-து. அற்றேல் வேறுபடுத்தல் வழக்கிற்குக் காரணமாகாமையி னதன்க ணதிவியாத்தி நீக்குதற்கு அதனின் வேறாதலென்னு மடையொருதலையாற்கொடுக்கற்பாற்றென்னுந் திரிபுணர்ச்சி நீக்குகின்றது. உம்மையால் திருட்டாந்தம் பெறும்பொருட்டு அபிதேயத்தன்மைமுதலியனகொள்க. தோன்றியதும் அழிந்ததும் எ-து. அற்றேல் முதற்கணத்தான் வரைந்துகொள்ளப்பட்ட திரவியத்தின்கட் குணமுடைத்தாந்தன்மையில்வழியும் வேறுகாலத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அதன்கண் அஃதுண்மை துணியப்படும்; இவ்வாறாயவழியுங் குடத்திற்குப் பற்றுக்கோடாதலிலக்கணஞ் சாதிக்கப்படுமென்னு மாசங்கை நீக்குகின்றது. எவ்வியல்பிற்றாகிய திரவியத்தைத் தோற்றுவிக்குஞ் சையோகத்தினைத் தோற்றுவிப்பதாகிய வினையின்றோற்றத்திற்கு மூன்றாங்கணத்து வேறு அவயவத்தின்கண் அவ்வியல்பிற்றாகிய சையோகத்தினை யழிப்பதாகிய வினைதோன்றும், அவ்வியல்பிற்றாகிய திரவியம் எ-று. நவீனர் பின் அசமவாயிகாரணங் காரியத்தோடின்மையிற் காரணமாந்தன்மைகொண்டு தோன்றியது மழிந்ததுமாகிய திரவியங்கொள்ளார். குணமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குத் துணைத்தோடொருங்குநிற்குமெனச் சாதியடை கொடுக்கப்பட்டது. உண்மைத்தன்மையை யெடுத்துக்கொண்டு அதிவியா

த்தி நீக்குதற்கு உண்மைத்தன்மையின் வேறாய வென ப்பட்டது. திரவியங் குணமென்னு மிரண்டனுளொ ன்றாதலை யெடுத்துக்கொண்டு அதிவியாத்தி நீக்குதற் குச் சாதி யெனச் சமவாயத்தால் அவ்வியல்பிற்றாகிய வியல்புடைத்தாந்தன்மை யென்பது தாற்பரியமாகக் கொள்ளப்பட்டது; ஆதலின், காலசம்பந்தமுடையது முதலிய சம்பந்தந்தால் அஃதுடைத்தாந்தன்மையை யெடுத்துக்கொண்டு அதிவியாத்தி யின்றாமென்பது கரு த்து.

ஆற்றேல், இங்ஙனமாயினும் உருவமொன்று சுவை யான் வேறு என்னும் வழக்கினால் உருவமுதலிய வற்றின்க ணதிவியாத்தி வருமாலெனின்;— அற்றன்று, ஒருபொருளின்கட் சமவாயமாதலால் அவ்வியல்பிற்றாகிய வழக்குப் பொருந்துமாகலிற் குணத்துக்குக் குணங்கோடல் பொருந்தாமையினென்பது.

இங்ஙனமாயினும் எ-து. மேற்கூறிய கருத்துவகையால் அவ்வியாத்தியில்வழியும் எ-று. ஒருபொருளின்கட் சம வாயமாதலால் எ-து. ஒருபொருளின்கட்சமவாயத்தா லுளதாமாகலின் எ-று. குணங்கோடல் பொருந்தாமை யின் எ-து. ஆகவே வரையறுக்கப்பட்ட சமவாயத்தி னகத்ததாகிய வொருநிலைக்களத் துளதாதலாற்றானே குணத்தின்கட் குணமுடைத்தாந்தன்மையென்னும் வழ க்குப் பொருந்துமாகலின் ஆண்டு வரையறுக்கப்படாத குணமுடைத்தாந்தன்மைகோடன் மிகையாமாகலினுண் டாகாதென்பது கருத்து.

---

## குணப்பாகுபாடு.

௩. குணம் உருவம், இரதம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், சிநேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு, முயற்சி, தன்மம், அதன்மம், வாசனை என இருபத்துநான்கு வகைத்து.

உருவம் எ-து. குணத்தினைப் பகுக்கின்றது. திரவியங் கருமமென்பனவற்றின் வேறாய்ச் சாமானியமுடைத்தாவது குணம்; குணத்தன்மையாகிய சாதியுடையதெனினுமாம்.

சாமானியமுடைத்து எ-து. சாமானியமுடைத்தாந்தன்மை சமவாயத்தானறியற்பாற்று. அதனாற் காலசம்பந்தமுடையது முதலிய சம்பந்தத்தால் அஃதுடையதாகிய அழிவுபாட்டின்கணதிவியாத்தி யின்றென்பது. குணம் எ-து. இலக்கியத்தினை யெடுத்துக்காட்டியவாறு. குணத்தன்மையாகிய சாதியுடையது எ-து. நொய்திற் கூறியவாறு. இலக்கணத்திற்கும் இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதற்கும் வேறுபாடின்றாமாயினும் இலக்கணத்தால் ஏனையவற்றின் வேறுதலைச் சாதிக்கு மேதுவின்கட் டுணிபொருளொடொருநிலைக்களத்துளதாதல் துணியப்பட்டவழியும் ஏதுவினியல்பின்றன்மையை வரைந்துகொள்வதாகிய துணிபொருளின் றுணிபு நியதமன்றென்னுங் கருத்தால் இவ்வாறுரைக்கப்பட்டதென்றவாறாயிற்று, இவ்வாறு முன்னருமறிந்துகொள்க.

மேற்றுக் குணத்தன்மையாகிய சாதி பெறப்படுதல் குண மென்னும் பதத்தினது ஆற்றலுடைத்தாகற்பாலதாந் தன்மையை வரைந்துகொள்வதன் றன்மையாலெனக் குணவிளக்கத்துள் ஆசிரியரெல்லாங் கூறுவர். இங் ஙனமே விபு என்னும் பதத்தினது ஆற்றலுடைத்தாக ற்பாலதாந்தன்மையை வரைந்துகொள்வதன்றன்மை யால் விபுத்தன்மையாகிய சாதியும் பெறப்படுகவெனக் கூறற்க, பூதத்தன்மையின் கலப்பாகிய குற்றமுண் மையின் அது சாதியாதலின்றாகலானும் சாதித்தன்மை யாகக் கொள்ளப்பட்டதன் கலப்புச் சாதித்தன்மைக் குக் குற்றமாமாகலானுமென்பது. இவ்வாறு திரவிய கிரணாவளியுள் "வடிவொற்றுமை வடிவொப்புமை கலப்பு, அநவத்தை, உருவக்கேடு, சம்பந்தமின்மையெ ன்னுமைந்துஞ் சாதியைக் கெடுப்பனவாகச் சுருங்க வுரைக்கப்படும்" என உதயணாசாரியராலுங் கூறப்பட் டது. வடிவொற்றுமையாவது தன்னைப்பற்றிநிற்கும் வடிவின் ஒற்றுமை: எங்ஙனம், ஆகாயத்தன்மை முத லியன சாதித்தன்மையாதற்கட் குற்றம். வடிவொ ப்புமையாவது குறையாதனும் ஏறாததுமாகிய வடிவு டைத்தாந்தன்மை: எங்ஙனம், குடத்தன்மையுங் கலச த்தன்மையும் வேறுசாதியாதற்கட் குற்றமாம். கலப் பாவது ஒன்றுக்கொன்று முழுதுமபாவத்தோடு ஒருநி லைக்களத்துளவாகிய விரண்டனியல்புகள் ஓரிடத்துப் புகுதல்: எங்ஙனம், பூதத்தன்மையும் மூர்த்தத்தன்மையு முதலியன சாதியாதற்கட் குற்றமாம். அநவத்தையா வது சாதித்தன்மைமுதலியன சாதித்தன்மை யா தற்கட் குற்றமாம். உருவக்கேடாவது தன்னால் வழ ங்கப்படுவதாந்தன்மையாகிய உருவங்கெடுதல்;_ எங

னம், விசேடத்தன்மை சாதித்தன்மைக்கட் குற்ற மாம். சம்பந்தமின்மையாவது சமவேதப்படாமை: எங்ங னம், அபாவத்தன்மைமுதலியன சாதித்தன்மையாதற் கட் குற்றமாம். இவ்வாறு சுருங்கக் கண்டுகொள்க.

நொய்ம்மை வன்மை மென்மை முதலியனவு மறியப் படுதலிற் குணமிருபத்துநான்கென்ப தெங்ஙன மெனின்;— அற்றன்று, நொய்ம்மை திண்மையினபாவ மெனப்படுமாகலானும், வன்மை மென்மையும் அவயவக்கூ ட்ட விசேடமாகலானுமென்பது.

நொய்ம்மை எ-து. நொய்ம்மைமுதலியன அளவையாற் றுணியப்பட்டவழியும் வரைசெய்துணர்த்தியவற்று ளட ங்குதல் நியாயநூற்றுணிபென்ப துணர்த்துகின்றது.

---

## கருமப்பாகுபாடு.

ஙு. கருமம் எழும்பல், வீழ்தல், வளைதல், நிமிர்தல், நடத்தல் என ஐவகைத்து.

எழும்பல் எ-து. கருமத்தைப் பகுக்கின்றது. சையோ கத்தின்வேறாய்ச் சையோகத்திற்கு அசமவாயிகாரண மாவது கருமம், கருமத்தன்மையாகிய சாதியுடையதெனி னுமாம்.

சையோகத்தின் அசமவாயிகாரணமாகிய சையோகத்தி னதிவ்யாத்தி நீக்குதற்குச் சையோகத்தின் வேறாய் எ-ம், சையோகத்தினது சமவாயிகாரணமாகிய திர வியத்தி னதிவ்யாத்தி நீக்குதற்கு அசமவாயி எ-ம் கூறியவாறு.

அற்றேல், மேற்பட்டனவாகிய சுழலுதன் முதலிய கருமங்களுமுண்மையின் ஐந்தென்றல் பொருந்தாதாம் பிறவெனின்;—அற்றன்று, சுழற்சிமுதலியன நடத்தலுளடங்குமாகலின் ஐந்தாதற்கு விரோதமின்மையினென்பது.

சுழலுதல் முதலியவென்றதனாற் கழிதல் ஒழுகுதல் கிளர்தல் விலகுதல் முதலியனகொள்க. நடத்தலினடங்குமாகலின் எ-து. எழும்பல் முதலியனவும் நடத்தலுளடங்குமெனக் கொள்ளற்க, வினையினீங்கி விளங்கியவறிவின் முனைவன் கோட்பாடாகலிற் கொள்ளவுந் தள்ளவும்படாதாகலினென்பது.

---

## சாமானியப்பாகுபாடு.

௫. சாமானியம் பரம், அபரம், என இருவகைத்து.

பரம் எ-து. சாமானியத்தைப் பகுக்கின்றது. மிகுந்தவிடத்திருப்பது பரம்; குறைந்தவிடத்திருப்பது அபரம். சாமானியமுதலிய நான்கண்ணுஞ் சாதியின்று.

பரம் எ-து. இலக்கணம் முன்னர் ஆசிரியராற்றானே கூறப்படுதலின் ஈண்டுரையாமை குற்றமன்றென வறிந்துகொள்க. உண்மைத்தன்மை திரவியத்தன்மைமுதலியவற்றை நோக்க மிகுந்தவிடத்திருப்பதாகலின் அது பரமாமெனவும், குடத்தன்மைமுதலியன குறைந்தவிடத்திருப்பனவாகலின் அவை அபரமாமெனவும் அறிக. திரவியத்தன்மைமுதலியன உண்மைத்தன்மையினும் அபரமாமெனவும் குடத்தன்மை முதலியவற்றினும் பரமாமெனவும் நுண்ணிதினுணர்ந்துகொள்க.

---

## விசேடப்பாகுபாடு.

௬. நித்தியப்பொருள்களிலிருப்பனவாகிய விசேடம் எண்ணிறந்தனவேயாம்.

நித்தியம் எ-து. விசேடத்தினைப் பகுக்கின்றது. பிருதிவிமுதலிய நான்கன் பரமாணுக்களும் ஆகாயமுதலியவைந்தும் நித்தியப்பொருள்களாம்.

---

## சமவாயப்பாகுபாடு.

௭. சமவாயம் ஒன்றுதானே.

சமவாயம் எ-து. சமவாயத்திற்கு வேறுபாடில்லையென்கின்றது.

வேறுபாடில்லை எ-து. சமவாயத்திற்கு வேறுபாடின்றுமெனிற் பரிசமாகிய சமவாயத்தினையுடைய வாயுவின்கண் உருவமுடைத்தாந்தன்மை யறியப்படுமெனக் கொள்ளற்க, உருவத்தின் சமவாயமுள்ளவழியும் உருவமின்மையின் அவ்வாறுணரப்படுத லின்றுமாகலினென்பது.

---

## அபாவப்பாகுபாடு.

௮. அபாவம் முன்னபாவம், அழிவுபாட்டபாவம், முழுதுமபாவம், ஒன்றினொன்றபாவம், என நான்குவகைத்து.

அபாவம் எ-து. அபாவத்தைப் பகுக்கின்றது.

**௩. அவற்றுள், பிருதிவியாவது நாற்றமுடையது. அது நித்தியமும் அநித்தியமும் என இருவகைப்படும். நித்தியம் பரமாணுவடிவம்; அநித்தியம் காரியவடிவம்.**

நாற்றமுடையது எ-து. அவற்றுள் உத்தேசமுறைமை பற்றி முதற்கட் பிருதிவிக்கிலக்கணங் கூறுகின்றது. உத்தேசமாவது முதற்கட் பெயராலே பதார்த்தங்களையெடுத்துரைத்தல்; உத்தேசமுறைமைக்கு யாண்டு மிச்சைதானே காரணமாம். அற்றேல், நறுநாற்றமுந் தீநாற்றமுமாகிய உறுப்புக்களானாக்கப்பட்ட பொருட்கண் ஒன்றோடொன்று மாறுபடுதலின் நாற்றந் தோன்றாமையின் அவ்வியாத்திவரும்; ஆண்டு நாற்றம் புலப்படுதல் பொருந்தாதெனக் கூறற்க, உறுப்பாகிய நாற்றமே ஆண்டுணரப்படுதலிற் கலப்பு நாற்றங் கொள்ளப்படாதாகலினென்பது; அல்லதூஉம் தோன்றியழியுங் குடமுதலியவற்றின்கண் அவ்வியாத்தி வருமாலோவெனின்;— அற்றன்று, நாற்றத்தோடொருநிலைக்களத்துளதாகிய திரவியத்தன்மைக்கு அபரமாகிய சாதியுடைத்தாந்தன்மை கூறுதல் கருத்தாகலினென்பது. அற்றேல், நீர்முதலியவற்றின்கண்ணும் நாற்றம் புலப்படுதலின் அதிவியாத்தி வருமாலோவெனின்;— அற்றன்று, உடன்பாட்டானும் எதிர்மறையானும் பிருதிவியின் நாற்றமே ஆண்டுப் புலப்படுதல் கொள்ளப்படுமாகலினென்பது. அற்றேல், அங்ஙனமாயினுங் காலமெல்லாவற்றிற்கும் பற்றுக்கோடாமாகலின் எல்லாவிலக்கணங்கட்கு மாண்டு அதிவியாத்தி வருமெனின்;— அற்றன்று, எல்லாவற்றிற்கும் பற்

றுக்கோடாந்தன்மை யெனப்படும் பயனுடைத்தாகிய சம்பந்தத்திற்கு வேறாய சம்பந்தத்தானே இலக்கணங் கொள்ளப்பட்டதாகலின். அது எ-து. பிருதிவியைப் பகுக்கின்றது. நித்தியத்தன்மை அழிவுபாட்டிற்குப் பிரதியோகியாகாமை. அநித்தியத்தன்மை அழிவுபாட்டிற்குப் பிரதியோகியாதல்.

அவற்றுள் எ-து. பிருதிவியினிலக்கண முதற்கட் கூறப்படுதற்குக் காரணங் கூறுகின்றது. பிருதிவிமுதலியவற்றுள் எ-று. நாற்றத்திற்குச் சமவாயிகாரணமாந்தன்மையை வரைந்துகொள்வதன்றன்மையாற் பிருதிவித்தன்மையாகிய சாதி பெறப்படுமென வறிந்துகொள்க. பெயராலே எ-து. ஈண்டு மூன்றும்வேற்றுமைப்பொருளாகிய அபேதம் எடுத்துரைத்தலென்னுஞ் சொற்குப் பொருளாகிய கூறுவது என்னுஞ் சொல்லோடியையும்; ஆகவே பொருளைக்கூறுவதாகிய பெயர்மாத்திரையே உத்தேசமாமென்பது இலக்கணமாகமுடியும்; 'ஈண்டுக் குடம்' என்னும் உலகசம்பந்தமுடைத்தாகிய சொல்லின்கண் அதிவியாத்தி நீக்குதற்குப் பொருளென்பதற்கு இலக்கணங் கூறற்பாற்றாகிய பொருளெனப் பொருளுரைக்க. இலக்கணங் கூறற்பாலனவாகிய பிருதிவி முதலியனவற்றிற்குப் பொதுவகையாகக் கூறுவதாகிய பிரமேயமென்னுஞ் சொற்கண் அதிவியாத்தி நீக்குதற்குப் பெயரென்னுஞ்சொற்கு இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வதனான் வரைந்துகொள்ளப்பட்டது என்பது பொருளாகக்கொள்க. இலக்கணத்தினையுரைக்குந்தொடர்மொழிக்கட் பெயரென்பதனைதாகலின் அதிவியாத்தி வருமாகலின் மாத்திரையென்னும் பதஞ் சேர்க்கப்பட்டது. அக்கப்பட்ட எ-து. தோற்

றுவிக்கப்பட்ட எ-று. ஒன்றேடொன்றுமாறுபடுதலின் எ-து. நறுநாற்றத்திற்குத் தீநாற்றமும் தீநாற்றத்திற்கு நறுநாற்றமுந் தடைசெய்து நிற்பனவாகலான் எ-று. புலப்படுதல் பொருந்தாது எ-து. ஆகலின் தடைசெய்து நில்லாததாகிய கலப்பு நாற்றமே கொள்ளற்பாற்றென்பது கருத்து. உறுப்பாகிய நாற்றம் எ-து. தனது பற்றுக்கோட்டோடு சமவேதப்பட்டு நிற்றலாகிய சம்பந்தத்தானென்பது முதலியன வருவிக்க.

அல்லதூஉம் எ-து. 'தீயோன் மகிழ்க'வென்னும் நியாயத்தால் அதனையுடன்பட்டுக் கூறுகின்றது. நீர்த்தன்மைமுதலியவற்றை யெடுத்துக்கொண்டு அதிவியாத்தி நீக்குதற்கு நாற்றத்தோ டொருநிலைக்களத் துளதாகிய திரவியத்தன்மை யெனப்பட்டது. உண்மைத்தன்மையினீக்குதற்குத் திரவியத்தன்மைக்கு அபரமாகிய வெனப்பட்டது; திரவியத்தன்மையாகிய குறைந்தவிடத்திருப்பது எ-று. அதனால் திரவியத்தன்மை விலக்கப்பட்டது. நாற்றம் புலப்படுதலின் எ-து. நீர் நறுநாற்றமுடைத்து என்பதுமுதலிய புலப்பாட்டுடைமையால் எ-று. பிருதிவியின்நாற்றமே எ-து. தனது பற்றுக்கோட்டோடு சையுத்தத்தன்மைச் சம்பந்தத்தானென்பது முதலியன வருவிக்க. ஆண்டு எ-து. நீர் முதலியவற்றுள் எ-று.

அற்றேல் எ-து. இவ்வாறுரைப்பக்கேட்டோனொருவனது ஆசங்கை கூறுகின்றது. எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடாகலின் எ-து. இயைந்து செல்லுதெனப்படு மிலக்கணத்தன்மையோடுகூடியசம்பந்தத்தோடுகூட்டி அதன்கணுள்ள காலமுதலியவற்றினை திவியாத்தி நீக்குகின்றது.

உண்மையாளுேக்கிற் சமவாயமுதலியன சமவாயத்தன்மை முதலியவற்ருற்ருனே சமுசர்க்கமாந்தன்மைபற்றி அவ்வடிவாற்ருனே அச்சம்பந்தம் அவ்வவ்விலக்கணங்களோடு கூடிநிற்பதாமெனவறிக.

௩0. மறுவலும், சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மூவகைப்படும். சரீரம் நம்மனோர்க்குள்ளது. இந்திரியம் கிராணம்; நாற்றத்தைக் கவர்வது; அது நாசிநுனியிலிருப்பது. விடயம் மண், கல் முதலியனவாம்.

மறுவலும் எ-து. வேறொருநெறியாற் பகுக்கின்றது. சரீரம் ஆன்மாவின் போகத்திற்குக் கருவி. எதனால் வரைந்துகொள்ளப்பட்ட ஆன்மாவின்கட் போகந்தோன்றும், அது போகத்திற்குக் கருவி. சுகம் துக்கமென்னுமிரண்டனுளொன்று புலப்படுதல் போகம்.

வேறொருநெறியால் எ-து. பிருதிவியினை என்பது வந்தியையும். ஈண்டு நித்தியமாகிய பிருதிவி சரீரம் இந்திரியம் என்பனவற்றின் வேறாயதெனப்படும் விடயத்தினிலக்கணத்தி னடங்குதலான் விடயத்தினடங்கியதாமாகலிற் பிருதிவி மூவகைத்தாமெனக் கொள்ளப்படும்; இதனே மூலத்துள் மறுவலும் மூவகைப்படுமெனக்கூறியது நன்குபோதருமாறறிக. ஒருசாரார் அநித்தியமாகிய பிருதிவிக்கே மூவகையுமுரைப்ப. சரீரம் எ-து. உத்தேசமுறைமைபற்றி முதற்கட் சரீரத்திற் கிலக்கணங்கூறுகின்றது. கருவி வரைந்துகொள்வது. எதனால் எ-து. ஆகவே, எவ்வியல்பிற்ருகிய விலக்கணம் பெறப்பட்டது, அவ்வியல்பிற்ருகியவதனைக் கூறுகின்றது. சுகந் துக்கமென்னு மிரண்டனுளொன்றனைப் புலப்ப

டக் காண்டலை வரைந்துகொள்வ தென்றவாறாயிற்று. ஈண்டு இறுதிக்கண்ணதாகிய அவயவியாய் என்னும் விசேடணங் கொடுக்கற்பாற்று. அதனாற்பாதமுதலியன வரைந்துகொள்வதாயவழியும் ஆண்டதிவ்யாத்தியின்மை யறிக. மற்றுச் சரீரத்தன்மை சாதியன்று, பிருதிவித்தன்மை முதலியவற்றோடு கலத்தலினென்பது.

சத்தத்தின்வேறாகிய உற்பூதவிசேடகுணங்கட்குப் பற்றுக்கோடாகாது ஞானத்திற்குக் காரணமாகிய மனத்தின் கூட்டத்திற்குப் பற்றுக்கோடாயுள்ளது இந்திரியம். சரீரமும் இந்திரியமுமல்லாதது விடயம். ஆகவே, நாற்றமுடைத்தாகிய சரீரம் பிருதிவிசரீரம்; நாற்றமுடைத்தாகிய இந்திரியம் பிருதிவி இந்திரியம்; நாற்றமுடைத்தாகிய விடயம் பிருதிவிவிடயமென அவ்வவற்றினிலக்கண மறிந்துகொள்க. சரீரம் எ-து. பிருதிவிசரீரத்தினைக் காட்டுகின்றது. இந்திரியம் எ-து. இந்திரியத்தினைக் காட்டுகின்றது.

ஆகவே இந்திரியத்தன்மை சாதியன்று என்னுங்கருத்தால் சத்தத்தின்வேறாகியவெனப்பட்டது. ஆன்மாமுதலியவற்றினதிவ்யாத்தி நீக்குதற்குச் சத்தமல்லாத உற்பூதகுணங்கட்குப் பற்றுக்கோடாகாது எ-ம், சோத்திரத்தின்கணவ்வியாத்தி நீக்குதற்குச் சத்தமல்லாத எ-ம், சட்சுமுதலியவற்றின்கண் விசேடகுணமாகிய உற்பூதமல்லாத வுருவமுதலியனவுண்மையின் அவ்வியாத்தி நீக்குதற்கு உற்பூதம் எ-ம் கூறியவாறு. உற்பூதத்தன்மை சாதியன்று, வெண்மைத்தன்மை முதலியவற்றோடு கலத்தலினென்பது. உற்பூதத்தன்மை வெண்மைத்தன்மை முதலியவற்றால் வியாபிக்கப்படுதலிற் பல

வாமெனக் கூறலும் பொருந்தாது, சட்சுவினாற் காண்டல் முதலியவற்றின்கண் உற்பூதவுருவத்தன்மைமுதலியவற்றாற்காரணமாதல்பொருந்தாமையினென்பது. மற்றென்னையெனின், யாது வெண்மைத்தன்மைமுதலியவற்றான் வியாபிக்கப்பட்டு உற்பூதவுருவமல்லாததாயப் பலவாம், அவ்வவ்வபாவத்தான் விசேடிக்கப்பட்டதாதல் உற்பூதத்தன்மை; அதுவே சையோகமுதலியவற்றினுங் கொள்ளப்படும்; ஆகவே சத்தமல்லாத உற்பூதகுணமாகிய சையோகத்தை யெடுத்துக்கொண்டு அசம்பவத்தினீக்குதற்கு விசேடம் எனப்பட்டது. காலமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு விசேடியங் கூட்டப்பட்டது. ஆண்டே யதிவியாத்தி நீக்குதற்கு ஞானந்தீர்ந்த காரணம் எனப்பட்டது. பிராசீனமதத்தின்கண் விடயத்தினவயவமும் இந்திரியத்தினவயவமுமாகிய விரண்டனது கூட்டங் காட்சியைத் தோற்றுவிப்பதாகலின் அதன் பற்றுக்கோட்டினும், இந்திரியத்தி னவயவத்தினும்; நவீனமதத்தின்கட் காலமுதலியவற்றின்கணுள்ள வுருவத்தி னபாவக்காட்சிக்கட் சம்பந்தத்தோடு கூடிநிற்பதாகலிற் காரணமாகிய சட்சுவின சையோகத்தினுங் காலமுதலியவற்றினு நீக்குதற்கு மனம் என்னும் பதங் கொடுக்கப்பட்டது. ஆன்மாவின் வேறாயென்னு மிதனானே ஆன்மாவின்க ணதிவியாத்தி நீக்கமுள்ளதாகவும் சத்தத்தின்வேறாகிய உற்பூதமென்பதுமுதலாக சாலவும் மிகைபடுமாறு விசேடணங் கூட்டியதனாற் பயனென்னையெனக் கூறற்க, அவ்வாறாய வழித் தோற்கும் மனத்திற்குமுளதாகிய சையோகம் ஞானமாத்திரைக்கு ஏதுவாமென்னும்மதத்தின்கண் அதிவியாத்தி நீக்குதற்கு அவ்வாறுரைக்கப்பட்டதாதலின்.

விரிப்பிற் பெருகும். ஆகவே எ-து. அவைப்பொருட்டு சரீரமுதலிய சாமானிய விலக்கணத்தின்கண் எ-று.

நாற்றத்தைக்கவர்வது என்பதுபயன் கூறியவாறு. கிராணம் என்பது பெயர்கூறியவாறு. நாசிநுனியில் என்பது பற்றுக்கோடு கூறியவாறு. இவ்வாறு முன்னருமறிந்துகொள்க. மண் கல் எ-து. பிருதிவி விடயத்தினைக் காட்டுகின்றது.

நாற்றத்தைக்கவர்வது எ-து. அற்றேல் நாற்றமுடைத்தாதல் என்பது பெய்துரைக்கவே இலக்கணம் பெறப்படுமாகலின் நாற்றத்தைக்கவர்வது என்பது பெய்துரைத்தல் நன்றன்று; ஆதலின் இந்திரியம் நாற்றத்தைக் கவர்வது என வாசிரியர் கூறுதல் பொருந்தாதென்னு மாசங்கையைப் பரிகரிக்கும்பொருட்டு அஃதனை பயன்கூறுதலே பயனுகவுடைத்தென வுரைக்கின்றது. முன்னரும் எ-து. 'இந்திரியம் இரசத்தைக்கவர்வது' என்பது முதலியவற்றின்கண் எ-று.

கக அப்புவாவது தண்மைப்பரிசமுடையது. அது நித்தியமும், அநித்தியமும என இருவகைத்து. நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம. சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் வருணலோகத்துள்ளது. இந்திரியம் இரசனம்; சுவையைக் கவர்வது; நாக்குநுனியிலிருப்பது. விடயம் யாறு கடல் முதலியன.

தண்மை எ-து. அப்புவிற்கு இலக்கணங்கூறுகின்றது. தோன்றியழிவதாகிய சீரின்க ணதிவியாத்தி நீக்குத

ற்குத் தண்மைப்பரிசத்தோடு ஒருங்கிருக்குந் திரவியத்தன்மைக்குக் கீழாகிய சாதியுடைத்தாந்தன்மையென்பது தாற்பரியம். 'தண்ணென்றது சிலாதல'மென்பதுமுதலியவற்றின்கண் நீரின் சம்பந்தத்தானன்றே தண்மைப்பரிசமறியப்படுதலின் ஆண்டதிவியாத்தியின்றென்பது.

தண்மைப்பரிசத்தோடு எ-து. ஆண்டு விசேடணத்தின் பயன் முன்னுரைத்தவாறுபற்றி ஊகித்துணரற்பாற்று. நீர்த்தன்மையாகிய சாதி பெறப்படுதல் சிநேகத்தினைத் தோற்றுவிப்பதன்றன்மையை வரைந்துகொள்வதன்றன்மையாலெனவறிந்துகொள்க.

ஏனையவனைத்தும் முன்னுரைத்தவாறுபற்றி உரைக்கற்பாலன.

ஏனையவனைத்தும் எ-து. நித்தியத்தன்மைமுதலியன. நீர்ச்சரீரமுதலியவற்றி னிலக்கணமும் நாற்றமுடைத்தாந்தன்மையென்புழித் தண்மைப்பரிசமுடைத்தாந்தன்மையெனப் பெய்துரைத்துப் பிருதிவி தெரித்துணர்த்தப்பட்டமுறைமைபற்றி எ-று. மூலத்துள் நீரையே எ-து. இந்தனம் எரியச்செய்வனவாகிய விறகுமுதலியன.

கஉ. தேயுவாவது வெம்மைப்பரிசமுடையது. அஃதும் நித்தியமும், அநித்தியமும் என இருவகைத்து. நித்தியம்பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப்படும். சரீரம் ஆதித்தியலோகத்துள்ளது. இந்திரியம் சட்சு; உருவத்தைக் கவர்வது; கண்ணுறை கருமணியின் நுனியிலிருப்பது. விடயம் மண்ணினுள்ளதும், விண்ணினுள்ளதும், வயிற்றினுள்ளதும், ஆகரத்திற்

றேன்றுவதும் என்னும் வேறுபாட்டால் நான்குவகை த்து. மண்ணிலுள்ளது நெருப்பு முதலியன. விண்ணி லுள்ளது மின்னல் முதலியன; அவை நீரையே இந்த னமாகவுடையன. வயிற்றிலுள்ளது உண்டதன் பரிணாமத்திற் கேதுவாயிருப்பது. ஆகரத்திற்றோன்று வது பொன் முதலியனவாம்.

வெம்மைப்பரிசமுடையது எ-து. தேயுவினிலக்கணங் கூறுகின்றது. 'நீர்வெய்யது' என்னுமுணர்ச்சி தே யுசம்பந்தத்தாற் றோன்றுவதாகலின் ஆண்டதிவியாத்தியின் மையுணர்க. மண்ணிலுள்ளதும் எ-து. விடயத்தினைப் பகுக் கின்றது. அற்றேல், பொன் பிருதிவியினியல்பிற்று, பீதத் துவமுடைமையானுங் குருத்துவமுடைமையானும், அரிச னம்போலவெனின்;— அற்றன்று, பேரழல்கூடியவழி நெய் முதலியவற்றின்கண் திரவத்துவத்திற்கு அழிவுகாணப்படுத லானும், நீரிடைநின்ற நெய்யின்கண் திரவத்துவத்திற்கு அழிவுகாணப்படாமையானும், தடையில்லாதவழிப் பிருதி விக்கணுள்ள திரவத்துவத்தி னழிவிற்கும் அக்கினியின்கூட் டத்திற்குங் காரிய காரணத்தன்மை துணியப்படுதலானும் பொன் பேரழல்கூடியவழி அழிக்கப்படாத திரவத்துவத்தி ற்கு இடமாகலின் பிருதிவியினியல்பிற்றென்றல் பொருந் தாமையானுமென்பது. அதனால் பீதத்துவமுடைய திரவி யத்தின் திரவத்துவத்தி னழிவிற்குத் தடைசெய்து நிற்பதா தல்பற்றித் திரவத்துவமுடைய வேறு திரவியம்பெறப்படுமா கலின் நைமித்திகமாகிய திரவத்துவத்திற்கு இடமாகலின் நீராதல் பொருந்தாமையானும், உருவமுடைமையின் வாயு முதலியவற்றுளடங்காமையானும், தேயுவினியல்பிற்றென் பது பெறப்படும்.

உண்டதன் எ-து. உண்டது ஓதனம்முதலியன. பரிணாமம் பரிபாகம், அதற்குக் காரணம் எ-று. ஆகரத்திற்றோன்றியது எ-து. ஆகரம் சுரங்கம், ஆண்டுத்தோன்றியது எ-று. அற்றேல் எ-து. தீபிகையுள் பொன் தேயுவினியல்பிற்றாதலை நிலைநிறுத்தற்பொருட்டு ஆசங்கித்துரைக்கின்றது. குருத்துவமுடைமையாலும் எ-து. பிருதிவியினியல்பிற்றாதலைச்சாதிக்கும் பீதத்துவமுடைமையாகிய வேதுவையுரைத்துத் தேயுவினியல்பிற்றல்லாமையைச் சாதிக்கும் ஏதுவுரைக்கின்றது. இதனால் பொன்னாகிய தேயுவின்கண் வேற்றுச்சாதிமையுடைத்தாகிய பீதத்துவவடிவங் கொள்ளப்படும், பொன் பீதத்துவமுடையது என்னும் பாதிதமல்லாத காட்சிக்கு நன்கு புலப்படுதலின் என்பது. இவ்வாறாகவே தேயுவினியல்பிற்றாதற்குப் பாதமின்மையின் பிருதிவியினியல்பிற்றாதல் பெறப்படாது என்போனது மயக்கம் நீக்கப்பட்டது, குருத்துவங் காட்சிக்குப் புலனாகாமையின் அவ்வாறுரைத்தல் கூடாமையினென்பது. பேரழல் எ-து. பொன்னுக்கு பீதத்துவமுடைமைக்குங் குருத்துவமுடைமைக்கும் பற்றுக்கோடாகலின் மேற்பட்டமையை நிலைநிறுத்தும்பொருட்டுக் கூறப்படுவதாகிய வனுமானவளவை பயனிலதாமென்னு மாசங்கை நீக்குதற்குக் காரிய காரணத்தன்மை யுடையனவென்னு மியையுடைத்தாகிய தருக்கத்தை நிலைநிறுத்துகின்றது. பொன் எ-து. அனுமானவளவை வருமாறு:—'பொன் பிருதிவியினியல்பிற்றன்று, தடையில்லாததாகிய பேரழல் கூடியவழி அழிக்கப்படாத திரவியத்திற்கு நிலைக்களமாகலின், யாது இங்ஙனமன்று, அஃது இங்ஙனமன்று, எங்ஙனம் பிருதிவி' யெனக்

கண்டு கொள்க. நீரிடைநின்ற நெய் முதலியவற்றின் முறைபிறழ்ச்சி நீக்குதற்குத் தடையில்லாத எ-ம், தீயின்கூட்டத்தோடு ஒருநிலைக்களத்துளதாகாத திரவத்துவமுடையனவாகிய நெய்முதலியவற்றின்கண் முறைபிறழ்ச்சி நீக்குதற்குப் பேரழல்கூடியவழி எ-ம் கூறியவாறு. திரவத்துவமுடைய வேறு திரவியம் எ-து. 'பேரழலோடுகூடியதாகிய பீதத்துவத்திற்குப்பற்றுக்கோடு திரவதத்துவத்தி னழிவிற்குத் தடையாகிய திரவத்துவமுடைய வேறுதிரவியத்தோடுகூடியது, பேரழல்கூடியவழியும் அழிவுபடாத திரவத்துவத்திற்குநிலைக்களமாய்க் குருத்துவமாதலின், நீரிடைநின்ற நெய்முதலியன போல' வென்னு மனுமானவளவையால் அது பெறப்படுதல் காட்டற்பாற்று. நைமித்திகம் எ-து. நீர்முதலியவற்றை யெடுத்துக்கொண்டு அனுமானவளவையாய் முடிதலி னீக்குகின்றது.

அதன் வெம்மைப்பரிசமும் விளக்கமாய வடிவும் அதனையடக்கிநிற்கும் பிருதிவியின் வடிவும், பரிசமுந் தடைசெய்து நிற்றலிற் புலப்படாவாயின. அதனால் பொன் தேயுவேயென்பது பெறப்பட்டது.

அதன் வெம்மைப்பரிசமும் எ-து. அற்றேல் வெம்மைப் பரிசமும் விளக்கமாகிய வடிவும் புலப்படாமையிற் பொன் தேயுவினியல்பிற்றுதல் பொருந்தாதென்னு மைய நீக்குகின்றது. தடைசெய்துநிற்றலின் எ-து. தடை குற்றம்.

கக. வாயுவாவது உருவமின்றிப் பரிசமுடையது. அது நித்தியமும் அநித்தியமுமென இருவகைத்து.

நித்தியம் பரமாணுரூபம் அநித்தியம் காரியரூபம்: சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மறுவலும் மூவகைப் படும். சரீரம் வாயுலோகத்துள்ளது. இந்திரியம் துவக்கு; பரிசத்தைக் கவர்வது; சரீரமெங்குமிருப்பது. விடயம் மரம் முதலியன அசைதற்கேதுவாயிருப்பது. சரீரத்தினகத்துச் சஞ்சரிக்கும் வாயுப் பிராணன் எனப்படும்; அஃது ஒன்றாயினும் உபாதி வேறுபாட்டாற் பிராணன் அபானன் முதலிய பெயர் பெறும்.

உருவமின்றி எ-து. வாயுவைத் தெரித்துணர்த்துகின்றது, ஆகாயமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குப்பரிசமுடையது எ-ம், பிருதிவிமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு உருவமின்றி எ-ம் கூறியவாறு. சரீரத்தின் எ-து. அற்றேல் பிராணன்யாண்டடங்குமென்னும்வினவுக்குவிடை கூறுகின்றது. அஃதும் எ-து.பிராணன்ஒன்றே இடவேறுபாட்டால் பிராணன் அபானன் முதலிய சொற்களால் வழங்கப்படும் எ-று. வாயு பரிசத்தா னனுமித்தறியப்படும்; அங்ஙனமன்றே, 'இவ்வாயு வீசும்பொழுது வெம்மையுந் தண்மையுமில்லாத பரிசம் புலப்படுமன்றே, அப்பரிசம் யாதாயினுமொன்றனைப் பற்றிநிற்கும், குணமாதலின், உருவம்போல' எனக் கண்டுகொள்க. இதற்குப் பற்றுக்கோடு பிருதிவியுமன்று. உற்பூதமாகிய பரிசமுடைய பிருதிவிசம்பந்தமுடையதற்கு உற்பூதமாகிய வுருவமுடைத்தாந்தன்மை நியமமாகலின். நீரின் சம்பந்தமுடையதுந் தேயுவின் சம்பந்தமுடையதுமன்று, வெம்மையுந் தண்மையுமில்லதாகலின். வியாபகப் பொருள் நான்குமன்று, எங்கும் புலப்படுமெனல் வேண்டுதலின், மனமுமன்று. பரமாணுவின் பரிசம் இந்திரியத்திற்

குப் புலனாகாமையின். ஆதலின் யாது உணரப்படும் பரிசத்திற்குப் பற்றுக்கோடாம், அது வாயுவென்க.

சரீரத்தின் எ-து. ஆகவே பிராணன் விடயத்தின்கணடங்கும். இடவேறுபாட்டால் எ-து. 'இருதயத்துப் பிராணன்' என்பது முதலாக நிகண்டிற் கூறப்பட்ட இடவேறுபாட்டால் எ-று. பரிசத்தானனுமித்து எ-து. தன்மதங் கூறுகின்றது. இதற்கு எ-து. உணரப்படும் பரிசத்திற்குப்பற்றுக்கோடு பிருதிவியுமன்று எனவியையும். ஆகாயமுதலியன தனித்தனியே வேறுவேறா மென்னுங் கருத்தால் நான்கும் எனப்பட்டது. எங்கும்புலப்படும் எ-து. பரிசமுதலியன, ஆகாயமுதலியன விபுவாகலினென்பது கருத்து.

அற்றேல் வாயுக் காட்சிப்பொருள், காட்சிப்பரிசத்திற்குப் பற்றுக்கோடாகலின், குடம்போலவெனக் கோடுமெனின்;— அற்றன்று, உற்பூதவுருவமுடைமையுபாதியாகலின். யாண்டுத் திரவியமாய்ப் புறவிந்திரியக்காட்சியாம், ஆண்டு உற்பூதவுருவமுடைமையெனக் குடமுதலிய துணிபொருட்கண் வியாபித்தலும் பக்கத்தின்கண்ணதாகிய ஏதுவின்கண் வியாபியாமையுமறிக. இவ்வாறாதலின் வெய்தாக்கப்பட்ட நீரின்கணின்ற தேயுவுங் காட்சிப்படுவதன்றெனல் வேண்டுமென்னற்க, நூலோர்கொள்கையதுவாதலானென்பது; ஆதலின் உருவமின்மையால் வாயுக்காட்சிப் பொருளன்றென்பது துணியப்படும்.

காட்சிப்பொருள் எ-து. புறவிந்திரியத்தாற்றோன்றிய காட்சிக்கு விடயம். உற்பூதமல்லாத பரிசத்திற்குப் பற்றுக்கோடாகிய துவக்கிந்திரியத்தின்கண் மூறைபிறழ்ச்சி நீக்குதற்குக் காட்சி யெனப்பட்டது. உபாதி

யாகலின் எ-து. ஆகவே, ஏதுவின்கண் உபாதி முன்ற பிறழ்தலாற் சாத்தியத்தின்கண் முறைபிறழ்தலுண்டா மாகலிற் காட்சியாதல் பெறப்படாதென்பது கருத்து. யாண்டு எ-து. அற்றேல், அவ்வியல்பிற்றாகிய காட்சி குணமுதலியவற்றின்கண்ணுமுளதாமாகலின் ஆண்டு உற்பூதவுருவமின்மையின் சாத்தியத்தின்கண் வியாபியாதாகலின் அஃதுபாதியாத லெங்ஙனமென்னும் வினவுக்கு விடைகூறுகின்றது. ஆகவே பக்கதருமத் தான் வரைந்துகொள்ளப்பட்ட துணிபொருளின்கண் வியாபிப்பது இவ்வுபாதியென்பது கருத்து. இவ்வாறு எ-து. காட்சிப்பரிசத்திற்குப் பற்றுக்கோடாயதற்கும் உற்பூதவுருவமின்மையின் காட்சியாதல் கொள்ளப்படாதவழி எ-று. காட்சிப்படுவதன்று எ-து. ஆண்டு உற்பூதவுருவமின்மையினென்பது கருத்து.

இனிக் காரியவடிவாகிய பிருதிவிமுதலிய நான்கன் தோற்றவொடுக்கமுறைமை கூறுதும்:—இறைவனது செய்தல் வேட்கையத்தாற் பரமாணுக்களின்கட் கிரியை தோன்றும். பின்னர்ப் பரமாணு இரண்டுகூடியவழித் துவியணுகந்தோன்றும். மூன்று துவியணுகங்களால் திரியணுகந்தோன்றும். இங்ஙனமே சதுரணுகமுதலிய முறைமை பற்றி மாபிருதிவி, மாவப்பு, மாதேயு, மாவாயு என்பனதோன்றும். இவ்வாறுதோன்றிய காரியப்பொருள்களை அழித்தல் வேட்கையத்தாற் கிரியைநிகழப் பரமாணுவிரண்டுபொகுபட்டவழித் துவியணுகமழியும். அதன்பின்னர்த் திரியணுகமும் அதன்பின்னர்ச்சதுரணுகமுமழியும். இம்முறைமையாற் பிருதிவிமுதலியனவழியுமென்க. அசமவாயிகாரணத்தினழிவால் துவியணுகமழியும்; சமவாயிகாரணத்தினழிவால் திரியணுகமழியுமென்பது சம்பிரதாயம்.

இனி எ-து. பரமாணுக்கூட்டமே குடமுதலிய வுருவமா மாகலின், மேற்பட்ட அவயவியின்றாகலின் பிருதிவிமுதலியநான்கும் நித்தியமும் அநித்தியமுமாகப் பகுக்கப் படுதல் பொருந்துமாறெங்ஙனமென்னு மாசங்கைநீக்குகின்றது, பிருதிவிமுதலிய நான்கனையுந் தெரித்துணர்த்தியபின் எ-று. துவியணுகமழியு மென்பதற்குப் பரமாணுவிரண்டனது சையோகமழிதலாலென்பது முதலியன.

யாண்டுஞ் சமவாயிகாரணத்தினழிவால் திரவியமழியு மென்பர் நவீனர். பரமாணுவுண்மைக்குப் பிரமாணம் யாதெனிற்கூறுதும்:—'சாளரத்தில் நுழையுமென்றூழ்க்கதிரின்கண் மிகநுண்ணிதாகத் தோன்றுவது யாது, அது அவயவத்தோடு கூடியது, சட்சுவிற்குப் புலனாகுந் திரவியமாதலிற் குடம்போல' வெனத் திரியணுகமுண்மைபெறப்படும். 'திரியணுகத்தினவயவமும் அவயவத்தோடுகூடியது, பெரிதைத் தோற்றுவிப்பதாகலின், நூல்போல' வெனப் பெறப்படும். யாது துவியணுகத்தினவயவமாம், அதுவே பரமாணுவெனப்படும். அஃதும் நித்தியமெனக் கொள்ளப்படும், காரியமெனின் அநவத்தையாகலானும் மேருவுங் கடுகுமொத்த பரிமாணமுடையதெனல்வேண்டுமாகலானுமென்பது. தோற்றமு மொடுக்கமு முண்மைக்கும் 'பிரமன் முன்போலப்படைத்தான்' என்னுஞ்சுருதி பிரமாணமாம். காரியத்திரவியமெல்லாமழிவது அவாந்தரப்பிரளயமெனவும், காரியமாகிய பாவபதார்த்தமெல்லாமழிவது மகாப்பிரளயமெனவு மோர்ந்துணர்க.

யாண்டும் எ-து. தோற்றுவிக்கப்பட்ட திரவியப்பொதுமைக்கண் எ-று. யாண்டும் ஒருமுறைமைப்படுதலே நன்றென்பது கருத்து. சட்சுவிற்குப்புலனாதும் எ-து. சட்

சுவிற்குப் புலனாயவழித் திரவியமாமாதலின் எ-று. உருவமுதலியவற்றின்கண்ணும், ஆன்மாவின்கண்ணும் முறைபிறழ்ச்சி நீக்குதற்கு விசேடிய விசேடணங்கள் கூட்டியுரைக்கப்பட்டன. இது பயனில்லதெனக்கூறற்க, சட்சுவிற்குப் புலனாதற்குக் காரணமாகிய பெரிதாயது துடியின்கணவாவப்படுமாகலின் அவயவத்தோடு கூடியதாந்தன்மையின்றி அவயவத்தின்றொகையாற் றோன்றியதாகிய அது கொள்ளப்படுதல் கூடாமையினென்றவாறுமாகலின். திரவியத்தினழிவுபாடு இன்றும் சிறிதுளவாமாகலின் எல்லாம் எ-ம், நித்தியத்திரவியங்கட்கு அழிவின்மையிற் காரியம் எ-ம், பரமாணுவின்கண்ணதாகிய வுருவமுதலியன அன்றுமுளதாமாகலின் திரவியம் எ-ம், அழிவுபாட்டிற்கு அழிவுபாடின்மையின் மகாப்பிரளயத்து முளதாகலிற் பாவம் எ-ம் கூறியவாறு.

௧௪. ஆகாயமாவது சத்தகுணமுடையது. அஃதும் ஒன்றாய் விபுவாய் நித்தியமாயுள்ளது.

சத்தகுணமுடையது எ-து. ஆகாயத்திற்கு இலக்கணங்கூறுகின்றது. அஃதும்ஒன்றாய் எ-து. அற்றேல்,ஆகாயம் பிருதிவிமுதலியனபோலப் பலவாகாததென்னையென்னும்வினாவுக்கு விடைகூறுகின்றது. வேறுபாட்டிற்குப் பிரமாணமின்மையின் எ-று. விபு எ-து. ஒன்றாதலானே எங்கும் புலப்படுதலின் விபுவாதல் கொள்ளப்படுமென்கின்றது. விபுவாதல் மூர்த்தமுடைப்பொருளெல்லாவற்றின்கண்ணுஞ் சையோகியாதல். மூர்த்தமுடைமை வரம்புபட்ட பரிமாணமுடைமை, வினையுடைமையெனினுமாம். நித்தியம் எ-து.

விபுவாதலானே ஆன்மாப்போல நித்தியப்பொருளென்கின்றது.

சந்ததுணமுடையது என்புழிச் சத்தமுடையது எனற்பாற்றாகவும் அவ்வாறு கூறியது ஆகாயத்தின்கட் சத்தமே விசேடகுணமென்பது குறித்தற்பொருட்டு. வேறுபாட்டிற்கு எ-து. குடாகாயம் மடாகாயம் என்பனமுதலிய வழக்கு உபாதியானுண்டாயதாகலிற் சாதிக்கப்படாமையின், ஆகாயம் பலவாதற்கட் பிரமாணமில்லையென்கின்றது. ஒன்றுதலான் எ-து. ஆகாயம் என்பது முதலியன. எங்கும் எ-து. அற்றேல், ஒன்றாதலினும் விபுவாதலுளதாமென்னுஞ் சங்கை நீக்குகின்றது, திக்கெல்லாவற்றானும் வரைந்துகோடலான் எ-று. வரம்புபட்ட பரிமாணமுடைமை எ-து. வரம்புபட்டது சேய்மைக்கண்ணதாகிய பற்றுக்கோடுடைமையின், பரமாணு மிக நுணணியதாகலின் துவியணுகத்தின் பரமாணுவினைநோக்கப் பரமாணுவின் பரிமாணஞ் சேய்த்தாதலின்மையிற் பரமாணுவின்கண் இவ்விலக்கணம் வியாபிப்பதன்றெனக் கூறப்படுமாதலின் அது நீக்குதற்கு வினையுடைமையெனப்பட்டது. உண்மையானேக்கிற் பின்னென்றுரைத்தற்குக் காரணம் னொய்திற்கோடலேயாமென்பதறிந்துகொள்க.

கரு. காலமாவது இறந்தது முதலிய வழக்கிற்கு ஏதுவாயது. அஃதும் ஒன்றாய் விபுவாய் நித்தியமாயுள்ளது.

இறந்தது எ-து. காலத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. காலம் எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடும், எல்லாக்காரியங்கட்கும் நிமித்தகாரணமுமாம்.

இறந்ததுமுதலிய வென்னுநூலுள், முதலியவென்றதனால் எதிர்காலமுதலியனகொள்ளப்படும். இறந்ததன்றன்மை நிகழ்காலத்தி னழிவுபாட்டிற்குப் பிரதியோகியாதல். நிகழ்வின்றன்மை ஈண்டுச்சொற்பிரயோகத்திற்கு நிலைக்களமாகிய காலத்தின்கணுளதாதல். எதிர்வின்றன்மை நிகழ்காலத்தின் முன்னபாவத்தின் பிரதியோகியாதல். ஈண்டு எங்குங் காலங் கலந்துநிற்றலின் அதற்குச சொற்பிரயோகவடிவாகிய இறந்ததுமுதலிய வழக்கிற்கேதுவாத லறிந்துகொள்க. அவ்வியல்பிற்றாகிய வழக்குச் செங்கதிரியக்கமுதலியனவாகிய வுபாதியை யெடுத்துக்கொள்வுழியும் நிகழுமெனக்கூறலும் பொருந்தாது, ஒருங்குசெல்லும் வழக்கு ஒருங்குசெல்லும் விடயமின்றி யுளதாகாமையின் மேற்பட்டகாலங் கொள்ளப்படுமாகலினென்பது. எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடு எ-து. காலசம்பந்தமுடையதாகிய சம்பந்தத்தாலென்பதுமுதலியன. ஈண்டு வேற்றுக்காலத்தின்க ணிகழுமிரண்டிற்கு ஆதாரமு மாதேயமுமாதலின்மையின் வினைமுதலியன எல்லாவற்றிற்கு மாதாரமாமென்னுஞ் சங்கை முடியாது என்பது கருத்து.

௧௬. திக்காவது கிழக்குமுதலிய வழக்கிற்கு ஏதுவாயது. அஃதும் ஒன்றாய் விபுவாய் நித்தியமாயுள்ளது.

கிழக்கு எ-து. திக்கிற்கு இலக்கணங் கூறுகின்றது. திக்குங் காரியமாத்திரைக்கு நிமித்தகாரணம்.

கிழக்குமுதலிய வழக்கிற்கு ஏதுவென்னுநூலுள் முதலிய வென்றதனால் மேற்கு முதலியன கொள்ளப்படும், உத

யமலையினணிமைக்கணுள்ள மூர்த்தத்தான் வரைந்து கொள்ளப்பட்ட திக்கு கிழக்கு. அதனுலிடையீடுபட்ட மூர்த்தத்தான் வரைந்துகொள்ளப்பட்டது மேற்கு. மேருவினணிமைக்கணுள்ள மூர்த்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட திக்கு வடக்கு. அதனுலிடையீடுபட்ட மூர்த்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட திக்கு தெற்கு.

கஎ. ஆன்மாவாவது ஞானத்திற்கு இடமாயுள்ளது. அது பரமான்மா சீவான்மா என இருவகைத்து. அவற்றுள், பரமான்மா ஈசுரன், முற்றறிவன், ஒருவனே, மற்றுச் சீவான்மா சரீரந்தோறும் வேருய், விபுவாய், நித்தியமாயுள்ளது.

ஞானம் எ-து. ஆன்மாவிற்கு இலக்கணங் கூறுகின்றது. அது எ-து. ஆன்மாவைப் பகுக்கின்றது. அவற்றுள் எ-து. ஆன்மாவிற்கிலக்கணங் கூறுகின்றது. நித்தியமாகிய ஞானத்திற்கிடமாதல் ஈசுரன்றன்மை. அற்றேல், ஈசுரனது உண்மைக்குப் பிரமாணம் யாது, அது புறக்காட்சியாக அகக்காட்சியாக இரண்டனுளொன்ருகிய காட்சியன்று, அருவப்பொருளாகலின் புறக்காட்சியன்று, ஆன்மாவினது சுகமுதலியவற்றிற்கு எதிர்மறைப்படுதலின் அகக்காட்சியன்று, இலிங்கமின்மையி னனுமானமுமன்று, அவ்வகைப்படு மாகமமின்மையின் ஆகமவளவையுமன்ருமெனின்;— அற்றன்று, 'நிலத்தின்கண்ணதாகிய அங்குரமுதலியன வினைமுதலாற்ருேன்றியது, காரியமாகலின், குடம்போல' என்னுமனுமானம் பிரமாணமாகலானென்பது.

ஞானத்திற்கு இடம் எ-து. சமவாயத்தால் ஞானமுடையது ஏ-று. அவற்றுள் எ-து. அவ்விரண்டனுள் எ-று.

தீபிகையுள் நித்தியமாகிய ஞானத்திற்கு இடமாய் எ-து. 'நித்தியம், ஞானம், ஆனந்தம், பிரமம்' என்னுஞ்சுருதியோடு முரணுமெனக் கூறற்க. ஆனந்தம் என்பது ஆனந்தமுடையது எனப் பொருள்படுமாறுபோல விஞ்ஞானமென்பதும் விஞ்ஞானமுடையது எனப் பொருள்படுமாறுபற்றிக்கொள்ளப்படுதலின் முரணின்மையினென்பது. ஆனந்தமென்பது அவ்வாறு பொருள்படுமெனவே கொள்க.

ஈண்டு ஆனந்தமென்றது பாரம்நீங்கியவழி நான் சுகமடைந்தேன் என்பதுபோலத் துக்கமின்மைக்க ணுபசரித்துக் கூறப்படும். மற்று நவீனர் ஈசுரனுக்கு நித்திய சுகங்கொண்டுரைப்ப. விரிப்பிற்பெருகும். அநுவப்போநுளாகலின் எ-து. புறக்காட்சிக்கு உற்பூதவுருவங் காரணமாகலினென்பது கருத்து. ஆன்மாவின்சுகம் எ-து. வேற்றுச்சாதிமையுடைய ஆன்மா மனம் என்பனவற்றின் 'சையோகமெனப்படும் மானதக்காட்சியின் காரணம் ஈசுரன்கணின்மையினென்பது கருத்து. பிரமாணமாகலின் எ-து. இது பயனில்லதென்னற்க, காரியத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதற்குச் செயலான் வரைந்துகொள்ளப்பட்டது காரணமாகலிற் பயனுளதாமாகலின் எனக் கொள்க.

உபாதானத்தினை வெளிப்படகாணுமறிவும் செய்தல் வேட்கையும் செயலுமுடைமை வினைமுதற்றன்மை.
உபாதானம் சமவாயிகாரணம் பரமாணுமுதலிய நுண்பொருளனைத்தையுங்காண்டலின் முற்றறிவனும். 'எவன் எல்லாவற்றையுமறியும் அவன் முற்றறிவனு'மென்னும் ஆகமமும் பிரமாணமென்க. சீவான்மா எ-து. சீவனுக்கு இலக்கணங்

கூறுகின்றது. சுகமுதலியனவுடைமை சீவனுக்கு இலக்கணம். அற்றேல் 'யான் மனுடன், யான் பார்ப்பான்' என்பது முதலியவற்றுள் யான் என்னுமுணர்விற்குச் சரீரமே விடயமாகலிற் சரீரமே ஆன்மாவெனக் கோடுமெனின்;— அற்றன்று, சரீரத்தின்கண்ணதாகிய கை கால்முதலியன அழிந்தவழி ஆன்மாவும் அழிந்ததெனல் வேண்டுமாகலினென்பது. இந்திரியங்களும் ஆன்மாவாகா, அவ்வாறாயவழிக் குடத்தைக் கண்ட யானே இப்பொழுது குடத்தைத் தீண்டினேன் என்னுந் தொடர்புபாட்டறிவு இன்றெனல்வேண்டுமாகலினென்பது. வேறொருவன் அனுபவித்ததனை மற்றொருவனெட்டியறிதலின்மையுமறிக. ஆதலின் சரீர இந்திரியங்களின்வேறாயது சீவான்மா எனவும் சுகமுதலியவற்றின் வேறுபாட்டால் சரீரந்தோறும் வேறெனவுமுணர்க. அஃதும் பரமாணுவின் பரிமாணமுடையதுமன்று, சரீரமுழுவதும் வியாபித்த சுகமுதலியவற்றின் அனுபவமின்றெனல் வேண்டுமாகலினென்பது.

உபாதானத்தினை எ-து. வினைமுதற்றன்மை செயலுடைமையானுளதாமெனினும் வெளிப்படக்காணுமறிவு முதலியன செய்தல்வேட்கைமுதலியவற்றிற்குக் காரணமாதல் காட்டுதற்பொருட்டு இவ்வாறுரைக்கப்பட்டதென்க. முற்றறிவன் எ-து. 'அறி' என்னும் வினைமுதனிலையின்பொருள் விசேடவறிவினுலறிதல். இலக்கணங்கூறுகின்றது. எ-து. சொரூபங்கூறுகின்றது எ-று. மூலத்துள், சீவான்மா சரீரந்தோறும் வேறு எ-து. உறுப்புக்களது வளர்ச்சியுங் குறைவுமென்னுமிரண்டானும், சாத்தன்முதலியோர் சரீரம் வேறு வேறாயவழியுஞ் சீவான்மாவேறுபடுதலின்மையின் இதானகுபோதராது, இங்ஙனங் காயவியூகத்துங்கொள்க, எனக்கூறற்க,

ஒருகாலத்துளதாகிய யோகத்தாற் றோன்றுமியல்பாற் றோன்றுவதாகிய சரீர வேறுபாடென்பதே கருத்தாதல் பற்றிக் குற்றமின்மையினென்பது. இவ்வாறாகவே இச சரீரத்தான் வரைந்துகொள்ளப்பட்ட போகமுடையது ஒருகாலத்துளதாகிய யோகமுதலியவற்றாற்றோன்றாத சரீரத்தான் வரைந்துகொள்ளப்பட்ட போகம்போல வேறாமென்னு முறைமைபற்றிச் சரீரந்தோறுஞ் சீவான்மா வேறாமென்பது சாதிக்கப்படும். இனியமையும் சரீரமே எ-து. அங்ஙனமன்றேல், மனுடன் முதலியோர்க்குச் சரீரத்தினியல்பால் அவ்வாறாகியவுணர்ச்சி நன்குபோதராதென்பதுகருத்து. அழிந்ததேனல் எ-து. சமவாயிகாரணத்தினழிவு திரவியத்தினை யழிப்பதாகலானென்பது கருத்து. கூடத்தைக்கண்ட எ-து. இறந்தகாலத்துக் காணப்பட்டதற்கு நிகழ்காலத்துத் தீண்டப்படுதல் உணரப்படுதல் தெளியப்படுமன்றே, அஃதும் நும்மதத்தில்லை; காணப்படுவதுந் தீண்டப்படுவதும் வேறுபாடுடையனவாகலினென்பது கருத்து. தொடர்வுபாட்டறிவு எ-து. அங்ஙனமன்றேல், சாத்தனால் நுகரப்பட்ட பொருள் கொற்றனால் நினைக்கப்படுமெனல்வேண்டுமாகலினென்பது கருத்து.

இடைப்பட்ட பரிமாணமுடையதுமன்று, அவ்வாறாய வழி யநித்தியப்படுமாகலிற் செய்ததழிந்து செய்யாதது வருமெனப்படுமாகலினென்பது. ஆகலின், சீவான்மா நித்தியமும் விபுவுமாமெனவறிக.

இடைப்பட்டபரிமாணம் எ-து. அற்றேல், சரீரமெல்லாவற்றானும் வரைந்துகொள்ளப்பட்ட ஆன்மாவின்கட் சுகமுதலியன புலப்படுதல் பொருந்துவதாகவும் எல்லாச் சரீரங்களினும் வியாபித்தல் ஆன்மாவிற்காகுக;

அங்ஙனமாயினும் விபுவெனக் கோடலினும் பயனில்லையென்னுங் கருத்தால் ஆசங்கித்துரைக்கின்றது. அநித்தியம் எ-து. யாது இடைப்பட்ட பரிமாணமுடையது அஃது அநித்தியமாமென்னும் வியாத்தியாலென்பது கருத்து. செய்தது எ-து. செய்தது யாகமுதலியவற்றாற் படைத்துக்கொண்ட வறமுதலியன; அழிவு நாசம்; வரவு அடைதல்; இவ்வாறு கூறல்வேண்டுமாகலின் எ-று. வினைமுதலாகிய வான்மா மறுமைக்கணிலதாகலானும் வினைமுதலல்லாத துளதாகலானு மென்பது கருத்து. அற்றேல், சீவான்மாவிற்கு அணுவாந்தன்மையேயுளவாகுக, அதனான் மேற்கூறப்பட்ட குற்றமின்றாம்; நுண்ணிதாகிய விளக்கு இல்லமுழுவதனையும் விளக்கினாற்போல அணுவடிவிற்றாகிய சீவான்மாவிற்குஞ் சரீரமுழுவதனையும் விளக்குதலால் ஒளிபரத்தல் கொள்ளப்படுமாதலினெனின்;—அற்றன்று, அங்ஙனமாயவழிக் காயவியூகத்தின்கட் சுகமுதலியன புலப்படுதல் பொருந்தாமையினென்பது.

கஅ. மனமாவது சுகம் முதலிய அநுபவத்திற்குக் கருவியாகிய இந்திரியம். அஃதும் உயிர்தோறும் நியதமாயிருத்தலின் அநந்தமாய், பரமாணுரூபமாய், நித்தியமாயுள்ளது.

மனமாவது எ-து. மனத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. பரிசமின்றித் தொழிலுடைமை மனத்திற்கிலக்கணம். அஃதும் எ-து. மனத்தினைப் பகுக்கின்றது. ஒவ்வோரான்மாவிற் கொவ்வொருமனம் ஒருதலையான் வேண்டப்படுமாகலின் ஆன்மாக்களனேகமாகலின் மனமுமனேகம் எ-று. பரமாணுரூபமாய் எ-து. இடைப்பட்ட பரிமாணமா

மெனின் அநித்தியமெனல்வேண்டுமாகலின் எ-று. அற்றேல், மனம் விபு எனப்படும், பரிசமில்லாத திரவியமாகலின் ஆகாயமுதலியனபோலவெனின்;— அற்றன்று, மனம் விபுவாயின் ஆன்மாவிற்கும் மனத்திற்குமுளதாகிய சையோகமாகிய அசமவாயிகாரணமின்றுமாகலின் ஞானந்தோன்றாதெனல்வேண்டுமாகலினென்பது. விபு இரண்டற்குச் சையோகமுண்டெனக் கூறற்க, அச்சையோக மநித்தியமாகலிற் சுழுத்தியின்றெனல்வேண்டுதலின் * இருதயநாளத்தின் வேறாகியவிடத்து ஆன்மாவிற்கும் மனத்திற்குமுளதாகிய சையோக மெக்காலமுமறியப்படுமாகலினென்பது, மற்று அணுவாமெனின் மனம் இருதயநாளத்தின்கணெக்காலத்துப் புகும், அக்காலத்துச் சுழுத்திநிகழும்; எக்காலத்து வெளிப்படும், அக்காலத்துஞானந்தோன்றும்; இங்ஙனமாதலின் அணுவாதல் பெறப்படும்.

பரிசமின்றி எ-து. மனத்தினது சையோகமுதலியவற்றின் அதிவியாத்தி நீக்குவதாகிய இந்திரியமென்பதனோடு கூடிய நூலுட்கூறப்பட்ட இலக்கணத்தினைநோக்க நொய்தாகிய இலக்கணங்கூறுகின்றது. ஒவ்வோருமனம்எ-து. ஆன்மாக்க ளெல்லாவற்றிற்கும் மனமொன்றேயெனக் கொள்ளின் ஒன்று அறிகின்றவழி ஏனையதற்கு அது

---

* இருதயநாளம் என்பதற்கு 'புரீதத்' என்பது மூதனூற் பிரதிபதம். இதுவே சுழுமுனைநாடிபோலுமென மயங்கி மொழிபெயர்க்கப்பட்டது. மூலகந்தத்தினின்றுந் தோன்றி வீணாதண்டினைப்பற்றிச்சென்று சிரகபாலத்துட்டங்குஞ் சுழுமுனைநாடி வேறு, இருதயத்தின் கீழுள்ள 'புரீதத்' என்னும் நாடி வேறு. பதகிருத்தியத்துள் ஏலம் பிரிவினும் இது கூறப்பட்டிருந்து.

பொருந்தாது, அஃதணுவாதலின் எல்லாவிந்திரியங்க ளோடு மொருசேரச் சையோகப்படுதலின்மையினென்பது கருத்து. விபு எ-து. ஆகவே அது பெரிதாகிய பெருமையென்னும் பரிமாணமுடைத்தாகலின் முற்கூறப்பட்ட குற்றத்திற்கிடமின்று. இன்றுமாகலின் எ-து. விபு இரண்டற்குச் சையோகங் கொள்ளப்படாமையினென்பது கருத்து. ஞானந்தோன்றாது எ-து. உள்பொருளாகியகாரியத்திற்கு அசமவாயிகாரணத்தாற்றோற்றுவிக்கப்படுதல் நியமமாகலினென்பதுகருத்து. விபு இரண்டற்கு எ-து. அது நித்தியமாகலின் அசமவாயிகாரணத்தின்றோழில் முதலியன இல்வழியுங் குற்றமின்றென்பது கருத்து.

## ௨. குணம்.

கக. உருவமாவது சட்சுமாத்திரையாற் கவரப்படுங் குணம். அஃதும் வெண்மை, கருமை, பொன்மை, செம்மை, பசுமை, புகைமை, சித்திரம் என்னும் வேறுபாட்டால் எழுவகைத்து. பிருதிவி அப்புத் தேயுக்களினுள்ளது. அவற்றுள் பிருதிவிக்கண் எழுவகையுமுள்ளது. நீரில் விளங்கா வெண்மை; தேயுவில் விளக்கமாய வெண்மை.

சட்சு எ-து. உருவத்திற்கிலக்கணங் கூறுகின்றது. சங்கைமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு மாத்திரை எ-ம், உருவத்தன்மையி னதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம் கூறியவாறு. அஃதும் எ-து. அதனைப் பகுக்கின்றது. அற்றேல் வியாபியாதிருக்குங் கருமைமுதலியவற்றின் சமுதாயமே சித்திரவுருவமாமெனின்;—அற்றன்று, வியாபி

த்திருத்தலே யுருவத்திற்கு நியமமாகலின் அற்றேல், சித்திரப்படத்தின்கண் அவயவத்தினுருவம் புலப்படுதலுளதாகுகவெனின்;— அற்றன்று, உருவமின்மையிற் படங் காட்சிப் பொருளெனல் வேண்டுதலின். உருவுடைப்பொருளின் சமவேதங் காட்சியைப்பயப்படுதென்றலும் பொருந்தாது, மிகையாமாதலினென்பது. அதனாற் படங் காட்சிப்பொருளென்பது பொருந்தாமையிற் சித்திரவுருவமுண்மைபெறப்படும் பிருதிவிக்கண் எ-து. உருவத்திற்குப் பற்றுக்கோடு கூறுகின்றது. அவற்றுள் எ-து. பற்றுக்கோட்டினைப் பகுத்துக காட்டுகின்றது.

மாத்திரை எ-து. சட்சுமாத்திரையாற் கவரப்படுதல் சட்சுவின் வேறாயவற்றாற் கவரப்படாது சட்சுவாற் கவரப்படுதலாமெனினும் அஃதுருவத்தின்கணுளதாகாமையின், துவக்கிந்திரியத்தாற் கவரப்படாது சட்சுமாத்திரையாற் கவரப்படுதலெனவறிந்துகொள்க. குணம் எ-து. இங்ஙனமாயினும் ஒளிக்கும் பித்திகைக்குமுனாய சையோகத்தின்கண் அதிவியாத்தி வருமெனக் கூறற்க, துவக்கிந்திரியத்தாற் கவரப்படாது சட்சுவாற் கவரப்படுங் குணத்தினைப் பகுக்குமியல்புடைமையென்பது பொருளாய்முடிதலிற் குற்றமின்றாமாகலினென்பது. இதனானே பரமாணுவுருவமுதலியவற்றி னதிவியாத்தியின்மையறிக. கூட்டமே எ-து. ஏகாரத்தால் மேற்பட்ட சித்திரவுருவம் பிரிக்கப்பட்டது. வியாபித்திருத்தல் எ-து. தேயசம்பந்தமுடையதன்கண் வியாபித்திருத்தல் எ-று. இஃதுபலக்கணம். ஒவ்வொரு சித்திரவுருவத்தின்கண்ணும் பலவுருவங்களுக்குத் தனித்தனி கொள்ளப்படும் முன்னபாவ முதலியவற்றின்கண்ணும் பல முன்னபாவங் கொள்ளப்படுதலானும் பல

யுருவங்களின்கண் சித்திரமெனப்படுமுணர்ச்சிக்கு விடயமாதல் கொள்ளப்படுதலானும் மிகையாமென்பது. உருவமின்மையின் எ-து. சமவாயத்தால் என்பதுமுதலியன. எனல்வேண்டுதலின் எ-து. திரவியஞ் சட்சுவிற்குப் புலப்படுதற்குச் சமவாயத்தாற்றானே யுருவங் காரணமென்பது கருத்து. உருவுடைப்பொருளிற்சமவேதம் எ-து. தனது பற்றுக்கோட்டின்கட் சமவேதமாகிய சம்பந்தத்தானுளதாயவுருவம் எ-று. காட்சியைப்பயப்பது எ-து. காட்சிக்கு விடயமாதலைப் பயப்பதாகுக எ-று. மிகையாமாகலின் எ-து. நேரே சம்பந்தப்படுதலிற் காரணமாதலை நோக்கமிகையாம் எ-று. சித்திரத்தின் அவயவத்தினையுடைய அவயவங்களானாக்கப்பட்ட குடம் சட்சுவிற்குப் புலனாகல் தடைப்படுதலிற் றனது சமவாயிக்கட் சமவேதப்படுதலாகிய சம்பந்தத்தாற்றானே யுருவமதனைப்பயத்தல்கொள்ளற்பாற்று. இங்ஙனமே துடி சட்சுவிற்குப் புலனாதல் பொருந்தாமையுங் காட்டற்பாற்று. காட்சிப்பொருளாதல் பொருந்தாமையின் எ-து. இதனாற் சித்திரவுருவம்போலச் சித்திரரதமும் பெறப்படுகவென்னுஞ் சங்கை நீக்கப்பட்டது, திரவியத்தின்கண் உலகசம்பந்தம்பற்றியுள்ளதாகிய இரசனமென்னு மிந்திரியத்தின் சம்பந்தமுளதென்னும் வழக்கின்மையின் அது பொருந்தாமையின் மையிற் சித்திரமாகிய இரதம் பெறப்படாதாகலின்.

௨௰. இரதம் இரசனத்தினாற் கவரப்படுங் குணம். அஃதும் இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, கால்ப்பு, கைப்பு, துவர்ப்பு என்னும் வேறுபாட்டா லறுவகைத்து. மண்

ண்ணினு நீரினுமிருப்பது. மண்ணில் ஆறுவகையும், நீரில் இனிப்பொன்றுமே.

இரசனத்தினுல் எ-து. இரதத்திற்கு இலக்கணங்கூறுகின்றது. இரதத்தன்மையி னதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எனப்பட்டது. மண்ணினும் எ-து. இரதத்திற்குப் பற்றுக்கோடு கூறுகின்றது. மண்ணில் எ-து. பற்றுக்கோட்டினைப் பகுத்துக்காட்டுகின்றது.

இரதத்தன்மை எ-து. இரசனத்தாற் கவரப்படாத குணத்தினைப்பகுக்கு முபாதியுடையதென்பது தாற்பரியம். இங்ஙனங் கந்தத்தினிலக்கணத்துங் கொள்க.

உக. கந்தம கிராணத்தினுற் கவரப்படுங் குணம். அஃதும் நறுநாற்றமுந் தீநாற்றமுமெனவிருவகைத்து பிருதிவியின்மாத்திரமிருப்பது.

கிராணத்தினுல் எ-து. கந்தத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. கந்தத்தன்மையி னதிவியாத்தி நீக்குதற்குக் குணமெனப்பட்டது.

உஉ. பரிசந் துவக்கிந்திரியமாத்திரையாற் கவரப்படுங் குணம். அஃதும் தண்மை, வெம்மை, தண்மையும் வெம்மையுமில்லது என்னும் வேறுபாட்டான் மூவகைத்து. பிருதிவி அப்புத் தேயு வாயுக்களிலிருப்பது. அவற்றுள் நீரிற்றண்மையும்; தேயுவில் வெம்மையும்; பிருதிவியினும் வாயுவினும் வெம்மையுந் தண்மையுமில்லாத பரிசமுமுள்ளன.

துவக்கிந்திரியம் எ-து. பரிசத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. பரிசத்தன்மையி னதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம், சையோகமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு மாத்திரம் எ-ம் கூறியவாறு.

மாத்திரம் எ-து. சட்சுவினாற் கவரப்படாது துவக்கிந்திரியத்தினாற் கவரப்படுங் குணத்தினைப்பகுக்கு முபாதியுடைத்தாதலென்பது இதனாற் போந்தபொருளாம்.

௨௯. உருவம் முதலிய நான்கும் பிருதிவியிற் பாகத்தாற் றோன்றுவனவும், அநித்தியமுமாம். ஏனையவற்றிற் பாகத்தாற் றோன்றாதனவாய் நித்தியமு மநித்தியமுமாவனவாம். நித்தியப்பொருளையடைந்தவை நித்தியமும், அநித்தியப்பொருளையடைந்தவை அநித்தியமுமாம்.

பாகத்தான் எ-து. பாகந் தேயுவின்சையோகம். அதனால் முன்னுள்ள உருவமழியும், வேற்றுருவந் தோன்றும். எ-று. ஈண்டுப் பரமாணுக்களுள்ளே பாகந்தோன்றும், துவியணுகமுதலியவற்றுட் டோன்றாது.

பரமாணுக்களுள்ளே எ-து. பரமாணுக்களுள்ளே முன்னுள்ள வுருவத்தின் நீக்கமுதலியவற்றைத் தோற்றுவிக்குந் தேயுவின் சையோகமுளதாம். எ-று. துவியணுகம் எ-து. ஏகாரத்தாற் பிரிக்கப்பட்டதனை விளக்குகின்றது.

ஆம * பாகத்தின்பொருட்டு வைக்கப்பட்ட குடத்துப் பரமாணுக்களின்கண் வேற்றுருவந் தோன்றுழிப்

* ஆமம் = பரிபக்குவமின்மை.

பசுங் குடங்கெட்டுப் பின்னர்த் துவியணுகமுதலிய முறைமையைபற்றிச் செங்குடந்தோன்றும்; ஆண்டுப் பரமாணுக்கள் சமவாயிகாரணம்; தேயுவின்சையோகம் அசமவாயிகாரணம்.

ஆமபாகத்தின்பொருட்டு எ-து. குடம் ஆமபாகத்தின்பொருட்டு வைக்கப்பட்டவழிப் பரமாணுக்களுள் வேற்றுருவந் தோன்றுழியென விரிக்க. ஆண்டு எ-து. பரமாணுவுருவத்தின்கண் எ-று.

துவியணுகமுதலியவற்றின் உருவத்தின்கட் காரணவுருவம் அசமவாயிகாரணமென்பர் பீலு†பாகவாதிகளாகிய வைசேடிகர்.

அவயவியின்கட் பாகங் கொள்ளப்படாமையிற் காரணவுருவம் எனப்பட்டது. பரமாணுக்களுட் பாகங் கூறும் வைசேடிகர் கருத்து வருமாறு:— வேகமிகுதியுடைத்தாகிய தேயு, பரமாணுக்களொன்றோடொன்று நெருங்கக்கூடுமாறு செய்யும்வழி அவற்றிலொருதலையாற்றொழில்தோன்றும், பின்னர் விபாகந்தோன்றும், பின்னர்த் தோற்றத்திற்குக் காரணமாகிய சையோகமழிந்தவழி யொருதலையாக அவயவியி னழிவுதோன்றும், பின்னர்ச் சுதந்திரமாகிய பரமாணுக்களுள் வேற்றுருவந்தோன்றுழி அதனுழ்முதலியவற்றோடு கூடிய கருவியின்வயத்தாற் பரமாணுக்களுணிகழுந் தொழிலின் விபாகமுதலிய முறையானே நடந்தவாறே பேரவயவியிறுதியாயவை தோன்றுமென்பது.

முன்னுள்ளதாகிய குடத்திற்கு அழிவின்றியே அவயவியின்கண்ணும் பரமாணு இறுதியாகிய அவயவங்களி

† பீலு = அணு.

ன்கண்ணும் வேற்றுருவமொருங்கே தோன்றுமென்பர் § பிட ரபாகவாதிகளாகிய நையாயிகர். இதனானே பிருதிவியின் கண்ணதாகிய பரமாணுக்களது உருவமுதலியன அநித்திய மாம் எ-று.

அவயவியின்கண்ணும் பாகங்கூறும் நையாயிகர் கருத்து வருமாறு:—தேயு, பரமாணுக்கள் நெருங்கக் கூடுமாறு செய்கின்றுழியும், ஒருதலையாக வதனது தோற்றத்திற்குக் காரணமாகிய தனித்தனியே இரட்டையாக விபாகமாதலைத் தோற்றுவிக்குந்தொழில் தோன்றுதற்கட் பிரமாணமின்மையின், அவயவியின்கண்ணும் பாகமுண்டெனக்கோடல் நன்று. இதனானே 'இஃது அந்தக் குடம்' என முன்னறிந்ததனுணர்ச்சியு நிகழும். அளவிறந்த அவயவியினழிவுகொள்ளாமை நொய்ம்மையுமாமென்பது. அவயவியினுருவத்திற்கு அவயவத்தினுருவமும், அதனழிவிற்குப் பற்றுக்கோட்டினழிவும் ஏதுவாதலின் கண் முறைபிறழ்ச்சியுண்டெனக் கூறற்க, காரியத்தன்மையை வரைந்துகொள்வதன்கண் வேற்றுச்சாதியுடைமை பெய்துரைத்தலான் முறைபிறழ்ச்சி நீக்கப்படுமாகலினென்பது.

ஏனையவற்றில் எ-து. நீர்முதலியவற்றில் எ-று. நித்தியப்பொருளையடைந்தவை எ-து. பரமாணுக்களையடைந்தவை எ-று. அநித்தியப்பொருளையடைந்தவை எ-து. துவியணுகமுதலியவற்றையடைந்தவை எ-று. உருவமுதலிய நான்கும் உற்பூதமாயவை காட்சிக்குப்புலனும். அநுற்பூதமாயவை காட்சிக்குப்புலனுகா. உற்பூதத்தன்மை காட்சியைப்பயப்பதாகிய தருமம். அதனின்மை யநுற்பூதத்தன்மையெனப்படும்.

---

§ பிடரம் = கபாலம் = குடத்தினவயவம்.

நீர்முதலியவற்றின் எ-து. உருவமுதலியநான்கும் நீர்முதலியவற்றின்கட் பாகிதமாயினுந் தகுதிபற்றி இயைத்துரைத்துக்கொள்கவென்பதுகருத்து. உற்பூதம் எ-து. உற்பூதத்தன்மை சாதி, வெண்மைத்தன்மைமுதலியவற்றாற் கலக்கப்பட்டதென்னற்க; குணத்தோடு கலந்தது குற்றமன்றென்னு நவீனர் கோட்பாடுபற்றி இவ்வாறுரைக்கப்பட்டதாகலின் இது குற்றமன்றாகலினென்க. சிலர் வெண்மைத்தன்மைமுதலியவற்றின் வியாப்பியமாகிய வனுற்பூதத்தன்மைபலவாறும், அதனபாவத்தான் விசேடிக்கப்பட்டதே உற்பூதத்தன்மையெனக் கூறுப.

உ௪. சங்கை ஒருமைமுதலியவழக்கிற்குக்காரணம். அஃது ஒன்பது பொருளினும் இருப்பது; ஒன்றுமுதற் பரார்த்தமீறாயது. ஒருமை நித்தியமும் அநித்தியமுமாம். நித்தியப்பொருளையடைந்தது நித்தியமும், அநித்தியப்பொருளை யடைந்தது அநித்தியமுமாம். மற்று இருமைமுதலியன யாண்டும் அநித்தியமேயாம்.

ஒருமை எ-து. சங்கைக்கு இலக்கணங் கூறுகின்றது.

அநுவன், இருமைமுதலியன எ-து. காரணமாகிய அபேக்ஷாபுத்தியழிதலால் இருமையுமழியுமாகலின் என்பது கருத்து.

உ௫. பரிமாணம் அளத்தல் வழக்கிற்குச் சிறந்தகாரணம். ஒன்பதுபொருளினுமுள்ளது. அது நுண்மையும் பெருமையுங் குறுமையும் நெடுமையுமென நான்குவகைத்து.

அளத்தல் எ-து. பரிமாணத்திற்கு இலக்கணங் கூறு கின்றது. அது எ-து. பரிமாணத்தைப் பகுக்கின்றது. இவை நான்குங் குணத்தினையுணர்த்தும் பெயர்கள். நெடிதாதலும் நுண்ணிதாதலும் பெரிதாதலுங் குறிதாதலும் எனப் பொருளுரைக்க.

பரிமாணத்தினைக் குணியையுணர்த்துஞ் சொற்களாற் பகுத்துக்காட்டுதல் பொருந்தாமையின், தீபிகையுள், குணத்தினையுணர்த்தும் பெயர்கள் எனப்பட்டது.

௨௬. வேற்றுமை வேறென்னும் வழக்கிற்குச் சிறப்புக் காரணம். எல்லாப்பொருளினுமுள்ளது.

வேறு எ-து. வேற்றுமைக்கு இலக்கணங் கூறுகின்றது. இஃதிதனின் வேறென்னும் வழக்கிற்குக் காரணம் எ-று.

சிறப்பு எ-து. காலமுதலியன பொதுக்காரணமாகலின் ஆண்டதிவியாத்தியின்றென்பது கருத்து.

௨௭. சையோகம் கூடியது என்னும் வழங்கிற்குக் காரணம். எல்லாப்பொருளினுமுள்ளது.

கூடியது எ-து. சையோகத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. இவ்விரண்டுங் கூடியவையென்னும் வழக்கிற்கு எ-று. சங்கைமுதலியவற்றி னிலக்கணங்க ளெல்லாவற்றினும், திக்கு காலம் முதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குச் சிறப்பென்னும் அடைகொடுக்கற்பாற்று. சையோகந் தொழிலாற்றோன்றியதுஞ் சையோகத்தாற்றோன்றியதுமென இருவகைத்து. முதலாவது கையின்றொழிலாற் புத்தகத்தோடுளதாகிய சையோகம், இரண்டாவது கைக்

கும் புத்தகத்திற்குமுளதாகிய சையோகத்தால் உடம்பிற்கும் புத்தகத்திற்குமுளதாகிய சையோகம். வியாபியாமலிருத்தல் சையோகம். வியாபியாமலிருத்தலாவது தனது முழுதும பாவத்தோ டொருநிலைக்களத்துளதாதல்.

தனது முழுதும் எ-து. தனதுபிரதியோகியாதலும், தனது ஒரு நிலைக்களத் துளதாதலுமென்னு மிருசம்பந்தத்தானும் அபாவமுடைத்தாதலென்பது தேற்றம்.

உஅ. விபாகம் சையோகத்தினை யழிக்குங் குணம். எல்லாப்பொருளினுமுள்ளது.

சையோகத்தினை எ-து. விபாகத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. காலமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம், உருவமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குச் சையோகத்தினையழிப்பது எ-ம் கூறியவாறு. விபாகமுந் தொழிலாற்றோன்றியதும், விபாகத்தாற்றோன்றியதுமென இருவகைப்படும். முதலாவது கையின்றொழிலாற் கைக்கும் புத்தகத்திற்குமுளதாகிய விபாகம். இரண்டாவது கைக்கும் புத்தகத்திற்குமுளதாகிய விபாகத்தால் உடம்பிற்கும் புத்தகத்திற்குமுளதாகிய விபாகம்.

சையோகத்தினையழிப்பது எ-து. அங்ஙனமாயினுஞ் சையோகத்தின்கணதிவியாத்திவரும், அதனதுபிரதியோகியின் விநாசத்தால் அழிவிற்குக்காரணமாகலின் என்னற்க, பிரதியோகித்தன்மைச் சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்படாத அழிவின்கண்ணதாகிய தோற்றுவிக்கப்படுந் தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட தோற்றுவிப்பதாதலே கூறுதல் கருத்தாகலிற் குற்றமின்மையினென்பாரிலர்; மற்றும் பிறரெல்லாஞ் சையோகத்தினையழிவாத

னான் வரைந்துகொள்ளப்பட்டதுந் தெரித்துணர்த்தப்ப ட்டதுமாகிய சமவாயத்தான் வரைந்துகொள்ளப்பட்ட காரணமாதல் தேற்றமாம் எ-ம், குணமென்னும் பதம் இதன் தாற்பரியத்தினைக் கவர்வது எ-ம் கூறுப. வியா கம் எ-து. இஃதும் வியாபியாதிருப்பமெதன வறிந்து கொள்க.

௨௯. பரத்துவம் முன்னென்னும் வழக்கிற்குச் சிற ப்புக் காரணம். அபரத்துவம் பின்னென்னும் வழ க்கிற்குச் சிறப்புக் காரணம். அவ்விரண்டும் பிருதிவி முதலிய நான்கினும் மனத்தினும் உள்ளன: அவை திக்கினுற் செய்யப்படுவனவுங், காலத்தினுற் செய்யப் படுவனவும் என இருவகைப்படும். அவற்றுள், திக் கினுற்செய்யப்படும் பரத்துவம் சேய்மைக்கணுள்ளது; திக்கினுற்செய்யப்படும் அபரத்துவம் அணிமைக்கணு ள்ளது; காலத்தினுற்செய்யப்படும் பரத்துவம் மூத் தோன்கணுள்ளது; காலத்தினுற்செய்யப்படும் அபர த்துவம் இளையோன்கணுள்ளது.

பரம் எ-து. பரம் அபரம் என்னுமிரண்டற்கு மிலக்க ணங்கூறுகின்றது. பரம் என்னும் வழக்கிற்குக் கார ணம் பரத்துவமும் அபரமென்னும் வழக்கிற்குக் காரணம் அபரத்துவமுமாம் எ-று. அவ்விரண்டும் எ-து. அவற்றைப் பகுக்கின்றது. சேய்மைக்கணுள்ளது எ-து. திக்கினுற் செ ய்யப்படுவதற்கு உதாரணங் கூறுகின்றது. மூத்தோன்கண் எ-து. காலத்தினுற் செய்யப்படுமென்றதற்கு உதாரணங் கூறுகின்றது.

௩0. குருத்துவம் ஆதியில் வீழ்ச்சிக்கு அசமவாயி காரணம்: பிருதிவியினும் நீரினும் உள்ளது

ஆதியில் எ-து. குருத்துவத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. இரண்டாவதுமுதலிய வீழ்ச்சிக்கு வேகம் அசமவாயிகாரணமாகலின் அதன்க ணதிவியாத்தி நீக்குதற்கு ஆதியில் எனப்பட்டது.

ஆதியில் எ-து. ஆதியாதல் தன்னோடொருநிலைக்களத்துளவாகிய வீழ்ச்சியின் பிரதியோகியினது அழிவோடொருகாலத்துளதாகாமை. இரண்டாம் வீழ்ச்சிமுதலியன முதலாம்வீழ்ச்சியி னழிவுபாட்டோடு ஒருகாலத்துளவாவனவாகலின் விலக்கப்பட்டதென்பதுகருத்து.

௩௧. திரவத்துவம் ஆதியில் ஒழுகுவதற்கு அசமவாயிகாரணம்: பிருதிவி அப்புத் தேயுக்களில்உள்ளது; அஃது இயல்பாயுள்ளதும், நிமித்தத்தாலாவதும் என இருவகைத்து நீரின் இயல்பாயுள்ளது: பிருதிவி தேயுக்களின் நிமித்தத்தாலாவது. பிருதிவிக்கண் நெய்முதலியவற்றின் நெருப்புக்கூடுவதால் தோன்று நெகிழ்ச்சி; தேயுவிற் பொன் முதலியவற்றிற்றோன்றுவது.

ஒழுகுவதற்கு எ-து. திரவத்துவத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. ஒழுகுதல் பாய்தல். தேயுவின் சையோகத்தாற்றோன்றியது நிமித்தத்தாலாயது; அதனின்வேறுயது இயல்பாயுள்ளது. நெய்முதலியவற்றின் எ-து. பிருதிவியின்கண் நிமித்தத்தாலாயதென்பதற்கு உதாரணங்கூறுகின்றது. பொன்முதலியவற்றின் எ-து. தேயுவின்கண் அது கூறுகின்றது.

அது கூறுகின்றது எ-து. நிமித்தத்தாலாயது கூறுகின்றது எ-று.

கஉ. சிநேகம் பொடிமுதலியன திரளுவதற்கு ஏதுவாய குணம்: நீர்மாத்திரைக்கேயுள்ளது.

பொடி எ-து. சிநேகத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. காலமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம், உருவமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குத் திரளுதல் எ-ம் கூறியவாறு.

திரளுதல் எ-து. திரளுதல் சையோகவிசேடம்.

கக. சத்தம் சோத்திரத்தாற் கவரப்படுவதாகிய குணம்: ஆகாயமாத்திரைக்கேயுள்ளது: அஃது ஒலிவடிவும் எழுத்துவடிவும் என இருவகைத்து: அவற்றுள், ஒலிவடிவு முரசமுதலியவற்றிற்றோன்றுவது. எழுத்துவடிவு வடமொழிமுதலிய பாஷைவடிவாயுள்ளது.

சோத்திரத்தால் எ-து. சத்தத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. சத்தத்தன்மையி னதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம், உருவமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குச் சோத்திரத்தால் எ-ம் கூறியவாறு. சத்தம் சையோகத்தாற்றோன்றியதும், விபாகத்தாற்றோன்றியதும், சத்தத்தாற்றோன்றியதுமென மூவகைப்படும். அவற்றுள் முதலாவது முரசுங் குணிலுங் கூடிய சையோகத்தாற்றோன்றியது. இரண்டாவது மூங்கில் பிளவுபடுங்காற் பிள்விரண்டன் விபாகத்தாற்றோன்றிய சடசடவொலி. மூன்றாவது

முரசு முதலியவிடத்தொடங்கிச் சோத்திரங்காறும் இரண்டா மொலி முதலியவற்றுற் றேன்றுவது.

முரசுங் குணிலும் எ-து. முதலாவதன்கண் அசமவாயி காரணம் முரசின்கணுள்ள ஆகாயத்தின்கூட்டம். மற்று நிமித்தகாரணம் முரசுங் குணிலுங் கூடுஞ் சையோகம். இரண்டாவதன்கண் மூங்கிற்பிளவின் ஆகாயத்தின் விபாகம் அசமவாயிகாரணம், பிளவிரண்டன் விபாகம் நிமித்தகாரணம். மற்று மூன்றுவதன்கண் முன்முன் உள்ள ஒலி அசமவாயிகாரணம், நீங்குதல் முதலியன நிமித்தகாரணமெனவறிக.

௩௪. புத்தியாவது எல்லாவழக்கிற்குங் காரணமாகிய குணம எனப்படும் அறிவு. அது நினைவும் அநுபவமும் என இருவகைத்து. நினைவு வாசனைமாத்திரையாற்றேன்றும் ஞானம்.

எல்லாம் எ-து. புத்திக்கு இலக்கணங் கூறுகின்றது. காலமுதலியவற்றினதிவியாத்தி நீக்குதற்குக் குணம் எ-ம், உருவமுதலியவற்றினதிவியாத்தி நீக்குதற்கு எல்லா வழக்கிற்கும் எ-ம் கூறியவாறு. அறிகின்றேன் எனப் பின்னிகழுமுணர்ச்சியாற்போதரற்பாலதாகிய அறிவாதலே இலக்கணம் எ-று. அது எ-து. புத்தியைப் பகுக்கின்றது.

அறிகின்றேன் எ-து. ஞானமாதன்மாத்திரையே இலக்கணம்; மற்று அறிகின்றேனெனப் பின்னிகழுமுணர்ச்சியாற் போதரற்பாலதாதல் என்றது ஞானமாதல் பிரமாணத்தாற் றுணியப்பட்டதென்ப துணர்த்துதற்பொருட்டென்பதறிக, அங்ஙனமன்றேல், குடத்தினை யறி

கின்றேனென்பது முதலியனவாகிய பின்னர்ப் போந்தபின்னிகழு முணர்ச்சி பின்னர்ப்போந்த வியல் பின்றிப் பொருந்தாமையின் அது கொள்ளப்படுமாக லின் றொய்ம்மையாற் சாதியாதல் பெறப்பட்டது. இங்ஙனமாகவே நூலுள் எல்லாவழக்கிற்குங்காரணம் எ-து புத்தியின்சொரூபங் கூறியவாறுமென்பது கருத்து.

வாசனைமாத்திரையால் எ-து. நினைவிற்கு இலக்கணங் கூறுகின்றது. பாவனையெனப் பெயரிய வாசனை யென்க. வாசனையினழிவுபாட்டின்கணதிவியாத்தி நீக்குதற்கு ஞானம் எ-ம், குடமுதலிய காட்சியுணர்வி னதிவியாத்தி நீக்குதற்கு வாசனையாற்றோன்றும் எ-ம், முன்னறிந்ததனுணர்வி னதிவியாத்தி நீக்குதற்கு மாத்திரை எ-ம் கூறியவாறு.

வாசனை மூவகைப்படுமாகலிற் பாவனையெனப்பெயரிய வெனப்பட்டது. முன்னறிந்ததனுணர்வின் எ-து. 'அவனித்தேவதத்த' னென்பதுமுதலியனவாகிய முன்னறிந்ததனுணர்வின்கண் அவ்வவ்விடத்தினுங் காலத்தினுமுளதாதலெனப்படும் அவ்வவ்வாசனையாற் றோன்றற்பாலதுளதாமாகலின் ஆண்டு அதிவியாத்தி வருமென்பது கருத்து. மாத்திரை எ-து. வாசனையாற் றோன்றற்பாலதாதல் வாசனையின் வேறாயவற்றாற் றோற்றுவிக்கப்படாது வாசனையாற் றோன்றற்பாலதாதல். அஃது நினைவின்கண் அசம்பவமாம், ஆண்டு வாசனையின் வேறாய ஆன்மாமுதலியவற்றாற் றோன்றற்பாலதின்மையினென்பது. இங்ஙனமாயினும் சட்கமுதலியவற்றாற் றோன்றற்பாலதாகாது வாசனையாற் றோன்றற்பாலதாதலென்பது தாற்பரியமாக முடிக்தவாறறிக.

௩௫ அநுபவம் அதனின்வேறாய ஞானம். அது மெய்யனுபவமும் பொய்யனுபவமுமென இருவகைத்து. அஃதுடைப்பொருளின்கண் அது விசேடணமாக நிகழும் அனுபவம் மெய்யனுபவம்; எங்ஙனம 'இது குடம்' என்னுமறிவு: அதுவே பிரமையென் றுரைக்கப்படும்.

அதனின்வேறாய எ-து. அனுபவத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. நினைவின்வேறாய ஞானம அனுபவம் எ-று. அது எ-து. அனுபவத்தினைப் பகுக்கின்றது. அஃதுடைப்பொருளின்கண் எ-து. உண்மையனுபவத்திற்கு இலக்கணங் கூறுகின்றது.

அற்றேல், 'குடத்தின்கட் குடத்தன்மை' யென்னும் பிரமையின்கண் அதிவியாத்தி வரும், குடத்தன்மையின்கட் குடமின்மையானெனின்;—அற்றன்று, யாண்டு எதன்சம்பந்தமுண்டு, ஆண்டு அதன்சம்பந்தம் அனுபவமென்பது பொருளாகலிற் குடத்தன்மையின்கண்ணுங் குடசம்பந்தமுண்மையின் அதிவியாத்தியின்றாமாகலினென்பது.' அதுவேஎ-து. மெய்யனுபவமே நூலின்கட் பிரமையெனக் கூறப்படும். எ-று.

நூலுள் அஃதுடைப்பொருளின்கண் எ-து. ஏழாம்வேற்றுமைப்பொருளாகிய விசேடியமாதல் பற்றுக்கோடாந்தன்மைச் சம்பந்தத்தால் அனுபவத்தோடியையும். ஆகவே அஃதுடையதாகிய விசேடியத்தினையுடைய அஃதாகிய விசேடியத்தினையுடைய அனுபவமாதல் உண்மையனுபவத்திற்கு இலக்கணம். அது என்னுஞ் சொற்குப் பொருள் விசேடணம். அஃதுடைத்தாதல் விசேடணமாந்தன்மையை வரைந்துகொள்வதன்

சம்பந்தத்தாற் கவரற்பாற்று. அதனால், காலசம்பந்தமுடைத்தாகிய சம்பந்தத்தால் இப்பிமுதலியவற்றின்கண் வெள்ளித்தன்மையுள்ளவழியும் இது வெள்ளியென்னும் பிறழ்ச்சியுணர்வின்கணதிவியாத்தியின்றென்பது. அங்ஙனமாயினும் வங்கத்தன்மையானும் வெள்ளியின்கணழுந்திக்கிடப்பதன்கண் வெள்ளித்தன்மையானும் வங்கத்தின்கணழுந்திக்கிடப்பதன்கண் இவைவங்கவெள்ளிகளெனப்படுங் கூட்டம்பற்றி நிகழும் பிறழ்ச்சியுணர்வின்கணதிவியாத்திவரும், ஆண்டு வங்கமாகிய விசேடியமுடைமையும், வங்கத்தன்மையாகிய விசேடணமுடைமையும், வெள்ளியாகிய விசேடியமுடைமையும், வெள்ளித்தன்மையாகிய விசேடணமுடைமையும் உண்மையினெனக் கூறற்க, அஃதுடையதாகிய விசேடியமாதலான் வரைந்துகொள்ளப்பட்ட அஃதாகிய விசேடணமுடைமையான் விசேடிக்கப்பட்ட அனுபவமாதலென்னும் பொருள்கூறுதல் கருத்தாகலிற் குற்றமின்மையினென்பது. அங்ஙனமன்றே, எவ்விடயத்தன்மைகட்குந் தெரித்துணர்த்தப்பட்டதுந் தெரித்துணர்த்துவதுமாகிய தன்மையுளதாம், அவற்றுட் றெரித்துணர்த்தப்பட்ட விடயித்தன்மைகட்கே வரைந்துகொள்ளப்பட்டதும் வரைந்துகொள்வதுமாகிய தன்மையுளதாமென்பது சித்தாந்தம். மேற்காட்டப்பட்ட பிறழ்ச்சியுணர்வின்கண் வங்கத்தன்மையாகிய விசேடணமுடைமையின்கண் வங்கமாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டமையும், வெள்ளித்தன்மையாகிய விசேடியத்தன்மைக்கண் வெள்ளியாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்டமையுமின்மையின் வங்கமாகிய விசேடியமுடைத்தாதலான் வரைந்துகொள்ளப்பட்ட வங்கத்தன்மையாகிய விசேடணமுடைத்

தாதலும் வெள்ளியாகிய விசேடியமுடைத்தாதலான் வரைந்துகொள்ளப்பட்ட வெள்ளித்தன்மையாகிய விசேடணமுடைத்தாதலுமிலவாகலின் அதிவியாத்தியின்மை யுணர்க.

நினைவின் வேறுபடுத்தற்கு அநுபவம் என்பது பெய்துரைக்கப்பட்டது. இதனதுபலம் 'அநு' என்னும் பதத்தானினிதுவிளங்கும். கூடத்தின்கட் கூடத்தன்மை எ-து. அற்றேல், அஃதுடைப்பொருள் என்பதற்கு அஃதாகிய இடத்தின்கண் என்பது பொருளாகலிற் குடத்தின்கட் குடத்தன்மையென்னும் பிரமைக்கணதிவியாத்திவரும், ஆதேயத்தன்மையாகிய உண்மைக்கு நியாமகமாகாத அதன்சம்பந்தத்தாற் குடம் எனப்படும் விசேடணத்திற்கு இடமாதல் வழங்கப்படாமையி னென்னுங் கருத்தால் ஆசங்கித்துரைக்கின்றது. அஃதுடையதன்கண் என்பதற்கு அதன் சம்பந்தமுடையதன்கண் எனப் பொருளுரைக்க.

யானும் எ-து. இங்ஙனமே குடத்தன்மையுங் குடமாகிய சம்பந்தமுடைத்தாந்தன்மையாகலின் அவ்வியல்பிற்றாகிய பிரமைக்கண் ஆதேயத்தன்மையாற் குடமாகிய சம்பந்தமுடைய குடத்தன்மையாகிய விசேடியமுடைத்தாதலான் வரைந்துகொள்ளப்பட்ட குடமாகிய விசேடியமுடைத்தாதலான் வரைந்துகொள்ளப்பட்ட குடமாகிய விசேடணமுடைமையுண்மையின் அதிவியாத்தியின்றென விடைகூறுகின்றது. உண்மையநுபவமே யென்னும் ஏகாரத்தால் உண்மைநினைவு பிரிக்கப்பட்டது. உண்மையறிவுமாத்திரமே பிரமையாதற்கண் நினைவின்கரணம் வேறு பிரமாணமாதல் வேண்டுதலினென்பது கருத்து.

௩௩. அஃதில்பொருளின்கண் அது விசேடண மாக நிகழும் அனுபவம் பொய்யனுபவம்.

அஃதில்பொருளின்கண் எ-து. பொய்யனுபவத்தி னைத் தெரித்துணர்த்துகின்றது. அற்றேல், 'இது சையோகமுடைத்து' என்னும் பிரமைக்கண் அதிவியாத்தி வருமாலோவெனின்;—அற்றன்று, எதன்வரைவான் எதன் சம்பந்தமில்லை அதன் வரைவான் அதன் சம்பந்தவுணர்ச்சி கூறுதல் கருத்தாகலின். சையோகத்தினபாவத்தான் வரைத லாற் சையோகஞானம் பிறழ்ச்சியுணர்வாமாகலின் சையோ கத்தான் வரைந்த சையோக சம்பந்தமுளதாகலின் அதிவியா த்தியின்மையுணர்க.

அதிவியாத்தி எ-து. சையோகமில்லதன்கட் சையோகமா கிய விசேடணமுடைத்தாதலுண்மையான்என்பது கரு த்து. எதன்வரைவான் எ-து. எதன்வரைவால் எதன் சம்பந்தத்தால் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித் தன்மையுடைத்தாகிய எதனபாவம் எ-று. அதன்வரை வான் எ-து. அதன் சம்பந்தத்தால் அஃதாகிய விசே டணமுடைய வனுபவங் கூறல் கருத்தாகலின் எ-று. சையோகத்தினபாவத்தான் எ-து. சையோகத்தினபா வமாகிய வரைந்துகொள்வதனான் வரைதலான் எ-று. சையோகத்தான் வரைந்த எ-து. சையோகமாகிய வரைந்துகொள்வதனான் வரைந்த எ-று. சையோகசம் பந்தம் எ-து. சமவாயசம்பந்தத்தாற் சையோகம் எ-று.

இது வியாபியாதிருக்குஞ் சையோகமுதலியனவாகிய விசேடணமுடைத்தாகிய பிறழ்ச்சியுணர்வின் நடைப் பாட்டாற் கொள்க. மற்று வியாபித்திருக்கும் வெள் ளித்தன்மை முதலியனவாகிய விசேடணமுடைய பிற ழ்ச்சியுணர்வினிலக்கணம் அதன் சம்பந்தத்தான் வரைந் துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடைய அதன

பாவமுடையது யாது அஃதுடைத்தாகிய விசேடியத்தினையுடையதனுன் வரைந்துகொள்ளப்பட்டவதன்சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அஃதாகிய விசேடணமுடைத்தாதலான் விசேடிக்கப்பட்ட வனுபவமாதல், பிரதியோகித்தன்மைக்கண் விசேடணத்தன்மையாகிய வரைந்துகொள்வதன் சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்டமை பெய்துரைக்கப்படுதலான், 'மலைதீயுடைத்து' என்னும் பிரமைக்கட் சமவாயத்தான் வரைந்துகொள்ளப்பட்ட தீயின்மையுடைத்தாகிய மலையாகிய விசேடியமுடைத்தாதலுள்வழியும் அதிவியாத்தியின்றென்பதூஉம் விசேடியமுடைத்தாதலும் விசேடணமுடைத்தாதலும் வரைந்துகொள்ளப்பட்டதும் வரைந்துகொள்வதுமாந்தன்மை கூறுதல் கருத்தாகலின் இவை வங்கவெள்ளிகளெனப்படும் பிரமைக்கண் வங்கத்தன்மைமுதலியனவில்லாததாகிய வெள்ளித்தன்மைமுதலிய விசேடியமுடைத்தாதலும் வங்கத்தன்மைமுதலிய விசேடணமுடைத்தாதலும் உள்ளவழியும் அதிவியாத்தியின்றென்பதூஉம் ஈண்டேயறிந்துகொள்க. விரிப்பிற் பெருகும்.

௩௭. மெய்யனுபவம் காட்சி, அநுமிதி, உபமிதி, சாத்தம் என்னும் வேறுபாட்டால் நான்குவகைத்து. அதன்கரணமும் காண்டல், அநுமானம், உபமானம், சத்தம் என்னும் வேறுபாட்டால் நான்குவகைத்து.

கா-ட்சி எ-து. உண்மையனுபவத்தினைப் பகுக்கின்றது. அதன்கரணமும் எ-து. பிரசங்கத்தாற் பிரமைக்குக் கரணத்தைப்பகுக்கின்றது, அதன்கரணம் என்றது பிரமைக்குக் கரணம் எ-று. பிரமைக்குக் கரணம் பிரமாணமென்பது பிரமாணத்துக்குப் பொதுவிலக்கணம்.

பிரசங்கத்தால் எ-து. பிரசங்கம் நினைக்ததுவெறுக்கப்ப டுங் தகுதியின்றுதல்; அதனால் எ-று. பிரமைக்குக் கர ணம் எ-து. பொதுவகையாலறியப்பட்டதற்கே விசேட வகையாற் கூறப்படுதலுளவாமாகலிற் பொதுவிலக்க ணங் கூறுகின்றது.

௩அ. கரணமாவது சிறப்புக்காரணம்.

சிறப்பு எ-து. கரணத்திற்கு இலக்கணங்கூறுகின்றது. பொதுக்காரணமாகிய திக்கு காலம் முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்குச் சிறப்பு எனப்பட்டது.

சிறப்பு எ-து. திக்குக் காலம் ஊழ்முதலியன காரியத் தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதனைக் குறித்தே காரணமாகலான் அனுபவத்தின்கண் வியாப்பியமாகிய வியல்பான் வரைந்துகொள்ளப்பட்ட பிரமைக்கணுஅ தாகிய காரியத்தன்மையாற் றெரிந்துணர்த்தப்பட்ட காரணமாதலெனப்படுஞ் சிறப்புக்காரணமாத லாண் டின்மையி னதிவியாத்தியின்மையுணர்க. மற்றுப் பிரா சீனர் வியாபாரமுடைத்தாயென்பதுங் கூறற்பாற்றாக லிற் சட்சுவின் சையோகமுதலியவற்றின்க ணதிவியா த்தியின்றெனவும் சோத்திரத்திற்கும் மனத்திற்குமுள தாகிய சையோகமாக சத்தமாக வியாபாரமுளதாமாக லிற் சோத்திரமென்னு மிந்திரியத்தின்கண் கரணத்தி னிலக்கணத்திற்கு அவ்வியாத்தியின்றெனவுங்கூறுவர். எதன்றாழ்வால் முதற்கண்ணதாகிய காரியத்திற்குத் தோற்றமின்மையுளதாம், அது காரணமாதல் சிறப்பெ னப்படுமாகலிற் காலமுதலியவற்றின்கண் அவ்வியல் பிற்றாகியகாரணமாதலின்மையின் அதிவியாத்தியின்று. வியாபாரமுடைமையாற் கொள்ளப்பட்ட இந்திரியத்

இன் சையோகமுதலியனவேகாரணமாம். 'இலிங்கவார்ரா ய்ச்சியனுமான'மென்னும் ஆசிரியர்கூற்றே இதனை நன் குவிளக்கும். ஆதலின் மணிகாரராற்றும் 'அஃதும் இலிங்கபராமரிச'மென்பதனு லுரைக்கப்பட்டதென்பர் நவீனர். இவற்றின் விரிவெல்லாம் மணிப்பிரபையு ளுரைத்தாம்; ஆண்டுக் கண்டுகொள்க.

ரு௬. காரணங் காரியத்திற்கு நியதமாய் முன்னுள் ளது.

காரியத்திற்கு எ-து. காரணத்தினிலக்கணங் கூறுகின் றது. முன்னிற்பது காரணம் என்றவழிக் கழுதை முதலியவற்றின் கணதிவியாத்திவருமாகலின் நியதமாய் எ-ம், அது மாத்திரையே கூறியவழிக் காரியத்தின்க ணதிவியா த்தி வருமாகலின் முன்னுள்ளது எ-ம் கூறியவாறு. அற் றேல் நூலுருவமும் ஆடையைக்குறித்துக் காரணமாமாலோ வெனின்;— அற்றன்று, வேறொராற்றாற் பெறப்படாததாய் என்னும் அடைகொடுக்கற்பாற்றாகலின். வேறொராற்றாற் பெறப்படாமை வேறொராற்றாற் பெறப்படுதலின்மை. வே றொராற்றாற் பெறப்படுதல் மூவகைத்து. எதனோடுகூடியே எதனைக்குறித்து முன்னுளதாதலறியப்படுவதியாது, அது அதனால் வேறொராற்றாற் பெறப்பட்டது: எங்ஙனம், ஆடை யைக்குறித்து நூலோடுகூடி நூலுருவமும் நூற்றன்மையும்.

வேறொன்றனைக் குறித்து முன்னுளதாதலறிந்தவழி யாது எதனைக்குறித்து முன்னுளதாதலறியப்படும், அதனைக்குறித்து அது வேறொராற்றாற் பெறப்பட்டது; எங் ஙனம், சத்தத்தினைக்குறித்து முன்னுளதாதலறியப்பட்டவழி யே ஆடையைக்குறித்து ஆகாயம் வேறொராற்றாற் பெறப் பட்டது.

பிறவிடத்து வரையறுக்கப்பட்ட நியதமாக முன்னுள்ளதனை காரியந்தோன்றுழி அதனொடுகூடியது வேறோராற்றாற் பெறப்பட்டது: எங்ஙனம், பாகத்தாற்றோன்றுவதாகியவிடத்து நாற்றத்தினைக்குறித்து உருவத்தின்முன்னபாவம் வேறோராற்றாற் பெறப்பட்டதாம். இங்ஙனங்கூறியவாற்றால் வேறோராற்றாற் பெறப்படாததாய் நியதமாக முன்னுள்ளதாவது காரணமெனக்கொள்க.

**நியதமாய்** எ-து. நியதமாதல் வியாபகமாதல். அஃதுங் கழுதைமுதலியவற்றிற்கின்மையின் ஆண்டுக் குடத்திற்குக் காரணமாவான் செல்லுமென்பது கருத்து. **முன்னுளதாவது** எ-து. தனது வியாபகந் தன்மாட்டுளதாயவழியுந் தனக்கு முற்காலத்துளதாதலின்மையின் ஆண்டுச் சேறலின்றென்பது கருத்து. காரியத்தன்மையை வரைந்துகொள்வதாகிய சம்பந்தத்தாற் காரியமாகிய இடத்தின்கட் காரியத்தானிடையீடுபடாத முதற்கணத்தான் வரைந்துகோடலால் அறியப்படுவதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாந்தன்மையை வரைந்துகொள்ளாததாகிய அவ்வியல்புடைத்தாதல். அவ்வடிவாற் காரணமாமென்பது போந்தபொருளாகக் கொள்க. **காரணம்** எ-து. அதற்கு நியதமாக முன்னுளதாதலுண்மையினென்பது கருத்து.

வேறுநூல்களுள் வேறோராற்றாற் பெறப்பட்டது ஐவகைத்தாமெனினும் மணிகாரமதக்கோட்பாடுபற்றி மூவகைத்து எனப்பட்டது. **எதனொடுகூடியே** எ-து. எதனொடு கூடியே யென்பதற்கு நூலோடுகூடி எ-ம், எதனைக் குறித்து என்பதற்கு ஆடையைக்குறித்து எ-ம், அதனைக்குறித்து என்பதற்கு ஆடையைக்குறித்து எ-ம்,

யாது என்பதற்கு நூலுருவமும் நூற்றன்மையும் எ-ம், அதனால் என்பதற்கு நூலினால் எ-ம் உரைத்து வேறோராற்றாற் பெறப்பட்டதென்க. ஈண்டுக் கூடுதல் ஓரறிவிற்கு விடயமாதலெனவறிக. நூலுருவத்திற்கு ஆடையைக் குறித்து முன்னுளதாதலறியப்படுதற்கண் வேறொன்றன் மேற்செல்லாத நூலுருவமாதலாற்றானே விடயமாதல் கூறற்பாற்று. ஆகவே நூலுருவம் வேறோராற்றாற் பெறப்பட்டதாம். இங்ஙனம் நூற்றன்மை முன்னுதளாதலறிகின்றுழியும் நூலாகிய விடயத்தோடு கூடியதேயாகலின் அஃதும் வேறோராற்றாற் பெறப்பட்டதாமென்பது கருத்து. எதனால் என்பதற்குச் சுதந்திரமாகிய அந்நுவயமும் வெதிரேகமுமுடைத்தாகிய எ-ம், யாது என்பதற்குச் சுதந்திரமாகிய அந்நுவயமும் வெதிரேகமுமில்லாததாகிய எ-ம், அடைகொடுக்கற்பாற்று. அதனால் அவ்வாறாகிய நூற்றன்மையால் நூற்கு வேறோராற்றாற் பெறப்பட்டமையின்றாமென்றாயினும் நூலியைபு நூலோடுகூடி வேறோராற்றாற்பெறப்படுதலின்றென்றாயினும் சுருங்கக் கண்டுகொள்க. மற்றுப்பிறரெல்லாம்வினையவற்றின் அந்நுவயத்தானும் வெதிரேகத்தானு மாக்கப்பட்ட அந்நுவயத்தினையும் வெதிரேகத்தினையும் உடையது யாது, அது வேறோராற்றாற் பெறப்பட்டதென்ப.

சத்தத்தினைக்குறித்து எ-து. ஆகாயத்தன்மை சத்தத்திற்குச் சமவாயிகாரணமாதல். ஆகவே சத்தத்திற்குக் காரணமாதல் கொள்ளப்படாத ஆகாயத்தின் ஆகாயத்தன்மையால் குடத்திற்கு முன்னுள்ளதாதல் கோடலரிதாகலின் ஆகாயம் வேறோராற்றாற் பெறப்பட்டது எ-று.

பிறவிடத்து வரையறுக்கப்பட்ட எ-து. பாகத்தாற்றேன்றாதல்லாதவிடத்து நாற்றத்தைக்குறித்து வரையறுக்கப்பட்ட நியதமாக முன்னிற்பதாகிய நாற்றத்தின் முன்னபாவத்தோடுதானே பாகத்தாற்றேன்றுவதாகியவிடத்தும் அஃதுள்வழி உருவத்தின் முன்னபாவம் வேறேராற்றாற் பெறப்பட்டது எ-று.

எனவே இங்ஙனம் நியதமென்னும் பதம் நின்றுவற்றும், நியதமல்லாததாகிய கழுதைமுதலியன மூன்றுவதாகிய வேறேராற்றாற் பெயப்பட்டதாகலின் ஆய் என்பதனாற்றனே அதிவியாத்தி நீக்கமுளதாகலினெனின்;—அற்றன்று, குடப்பொதுமையைக்குறித்து வேறேராற்றாற் பெறப்படாமையின்மையினென்பது. வேறிடமாகிய குடத்தின் வேறாகிய ஆடை முதலியவற்றின்கண் வரையறுக்கப்பட்ட முன்னுள்ளனவாகிய நூல்முதலியவற்றாற் குடந் தோன்றுதலின்மையினென்பது.

இனி நவீனர் கூறுமாறு:—நொய்ம்மையாகிய நியதமாய் முன்னிற்பனவே காரியத்தோற்றத்தின்கட் காரணமாம். அதனின்வேறாயது வேறேராற்றாற் பெறப்பட்டதாம். ஆகலின் வேறேராற்றாற் பெறப்பட்டது ஒருவகைத்தேயாம். நொய்ம்மையாதல் சரீரத்தாற் செய்யப்பட்டதும், அணிமையாற் செய்யப்பட்டதும், சம்பந்தத்தாற் செய்யப்பட்டதுமென மூவகைப்படும். அவற்றுள் முதலாவது பலபொருள்கள் சமவேதமாதலை நோக்கப் பெரிதாயது. இரண்டாவது நாற்றத்தைக்குறித்து உருவத்தின் முன்னபாவத்தினைநோக்க நாற்றத்தின் முன்னபாவம் நாற்றத்தின் பிரதியோகி அணிமைக்கண்ணதாகலின் அதனணிமை விரைவாதலினென்பது.

மூன்றாவது தண்டத்தன்மை தண்டவுருவமுதலியன வற்றைநோக்கத் தண்டமுதலியன, தனது பற்றுக்கோடாகிய தண்டத்தின் சையோகமுதலியனவெனப்படும் பரம்பரையான் மிகையாமாகலினென்பது. இங்ஙனமே இவ்வளவிற்றாகக்கொள்ளப்படும் வேறொரு ற்றாற் பெறப்படுதலினை மூவகைத்தெனவும் ஐவகைத்தெனவும் விரித்துரைத்தல் கற்போர்க்குப்பலவாற்றான் விளக்கும்பொருட்டெனக்கொள்க. நியதமென்னும் பதம் கழுதைமுதலியன வேறொராற்றாற் பெறப்பட்டதாகலாற்றானே அதிவியாத்தி நீக்கமுளதாமாகலின் நின்றுவற்றுமெனக் கூறற்க; என்னை? வேறொராற்றாற் பெறப்பட்டதாகிய தொடர்ந்துவருவது கூறற்கரிதாகலின் யாண்டு யாண்டு அறிந்தோரால் வேறொராற்றாற் பெறப்பட்டதென வழங்கும் வழக்குண்டாம், அதனதன் வேறுபாட்டான் விசேடிக்கப்பட்டதென்னும் அடைகொடுக்கற்பாற்றாகலின். மற்று நொய்ம்மையாகிய நியதமென்பதுமுதலியன வேறுபாட்டின் பிரதியோகியும் அதனதன் வடிவுமென்பதனை யுணர்த்துவன. இங்ஙனமே ஆண்டு நியதமல்லாத பின்னுள்ளனவாகிய கழுதைமுதலியனவற்றிற்கு நியதமாயென்னும் விசேடணமொன்றானே நீக்கமுளதாமாகலின் அவ்வவற்றின் வேறுபாட்டால் விசேடிக்கப்பட்டவென்னும் அடைகொடுத்தல். மிகையாம். மற்று நியதமாகிய தண்டத்தன்மைமுதலியனவாராமையின் அவ்வவற்றின் வேறுபாடுடைத்தாதல் பெய்துரைக்கற்பாற்றென்பது கருத்து.

௪௦. காரியம் முன்னபாவத்திற்குப் பிரதியோகி.

காரியம் எ-து. காரியத்திற்கிலக்கணங்கூறுகின்றது

௬௧. காரணம் சமவாயி, அசமவாயி, நிமித்தம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்து. எதன்கட் சமவேதமாய்க் காரியந்தோன்றும், அது சமவாயிகாரணம். எங்ஙனம், நூல்கள் ஆடைக்கு, ஆடையுந் தன்னையடைந்த உருவமுதலியனவற்றிற்கு. காரியத்தோடாகக் காரணத்தோடாகக் கூடி ஒருபொருளின்கட் சமவேதப்பட்டுக் காரணமாவது அசமவாயிகாரணம். எங்ஙனம், நூலின் சையோகம் ஆடைக்கும் நூலினுருவம் ஆடையுருவத்திற்கும் அசமவாயிகாரணமாம். அவ்விரண்டின்வேறாய காரணம் நிமித்தகாரணம். எங்ஙனம், ஆடைக்கு நாடா, வேமா முதலியன.

காரணம் எ-து. காரணத்தைப் பகுக்கின்றது. எதன்கட் சமவேதமாய் எ-து. சமவாயிகாரணத்தி னிலக்கணங் கூறுகின்றது. காரியத்தோடு எ-து. அசமவாயிகாரணத்திற்கு இலக்கணங் கூறுகின்றது.

எதன்கட் சமவேதமாய் எ-து. எவ்வியல்பான் வரைந்துகொள்ளப்பட்டது எவ்வியல்பான் வரைந்துகொள்ளப்பட்டதன்கட் சமவாயத்தாற்றோன்றும், அவ்வியல்பான் வரைந்துகொள்ளப்பட்டதனைக்குறித்து அவ்வியல்பான் வரைந்துகொள்ளப்பட்டது சமவாயிகாரணமென்பது கருத்து.

நூலியைபு எ-து. காரியத்தோடென்பதற்கு உதாரணங் கூறுகின்றது. காரியமாகிய ஆடையோடு ஒருபொருளாகிய நூலின்கட் சமவேதமாதலான் நூலியைபு ஆடைக்கு அசமவாயிகாரணம் எ-று. நூலுருவம்* எ-து.

காரணத்தோடென்பதற்கு உதாரணங்கூறுகின்றது. காரணமாகிய ஆடையோடு ஒருபொருளாகிய நூலின்கட் சமவேதமாதலின் நூலுருவம் ஆடையுருவத்திற்கு அசமவாயிகாரணம் எ-று. அவ்விரண்டின் எ-து. நிமித்தகாரணத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. சமவாயி அசமவாயி என்னுமிரண்டின் வேறாகிய காரணம் நிமித்தகாரணம் எ-று.

**காரணமாகிய ஆடையோடு** எ-து. தனது காரியத்தின் சமவாயிகாரணமாகிய ஆடையோடு எ-று. தனது நூலுருவத்திற்கும் ஆடைமுதலியனவற்றிற்கும் நாடா நூலியைபுமுதலியன அசமவாயிகாரணமாதலி னீக்குதற்கு அவ்வவ்வசமவாயிகாரணத்தி னிலக்கணத்தின்கண் அவ்வவற்றின் வேறாயவெனவடைகொடுக்கற்பாற்று.

## பிரத்தியக்ஷப்பிரமாணம்.

சஉ. இங்ஙனங் கூறிய மூவகைக் காரணங்களுள் யாது சிறப்புக்காரணம், அதுவே கரணம் எனப்படும். அவற்றுள், காண்டலாவது காட்சியறிவிற்குக் கரணம். காட்சி இந்திரிய விடய சம்பந்தத்தாற் றோன்று ஞானம். அது நிருவிகற்பகமும், சவிகற்பகமும் என இருவகைத்து. அவற்றுள், நிருவிகற்பகம் விசேடணமின்றித் தோன்றும் ஞானம். சவிகற்பகம் விசேடணத்தோடு தோன்றும் ஞானம். எங்ஙனம்,' இவன் சாத்தன், இவன் பார்ப்பான், இவன் கரியன் என்பன.

இங்ஙனங்கூறிய எ-து. காரணத்தினிலக்கணத்தினை முடித்துரைக்கின்றது. அவற்றுள் எ-து. காட்சியளவையினிலக்கணங் கூறுகின்றது. பிரமாணம் நான்கனுள் எ-று. இந்திரியம் எ-து. காட்சியறிவினிலக்கணங் கூறுகின்றது. இந்திரியம் சட்சு முதலியன; பொருள் குடமுதலியன; அவ்விரண்டின் சம்பந்தம் சையோகமுதலியன; அதனாற்றோன்றிய ஞானம் எ-று. அது இருவகைத்து எ-து. அதனைப்பகுக்கின்றது. விசேடணமின்றி எ-து. நிருவிகற்பகத்தினிலக்கணங் கூறுகின்றது. விசேடண விசேடிய சம்பந்தத்தினழுந்தாத ஞானம் எ-று.

விசேடியம் எ-து. அற்றேல், நான்காம்விடயத்தன்மையைத் தெரித்துணர்த்துவதாகிய நிருவிகற்பகஞானத்திற்குத் தெரித்துணர்த்துவதாந்தன்மைச் சம்பந்தத்தால் விசேடணத்தன்மை யின்றுதல்போல விசேடியத்தன்மையின்றுதலும், சமுசர்க்கத்தன்மையின்றுதலும், விட்டுவிலகுத லின்மையின் இலக்கணமாமாகலின், இலக்கணம் மூன்றுங் காட்டுகின்றது. விசேடியத்தன்மைமுதலிய வியல்பால் விசேடியத்தன்மை முதலியவற்றி னழுந்தாத ஞானம் எ-று. ஆகவே, ஞானமாதலோடு கூடிய விசேடியத்தன்மை யின்றுதலும், விசேடணத்தன்மை யின்றுதலும், சமுசர்க்கத்தன்மையின்றுதலுமென்னும் இலக்கணமூன்றும் முடிந்தவாறு மென்பது கருத்து. மற்றுச் சிலர், அற்றேல், இருந்தவாறின்மை விசேடணத்தன்மையின்றுதலாம். விசேடணத்தன்மையாவது அறியப்படுவதாகிய விசேடிக்கப்பட்டதன்றன்மையின் பிரதியோகியாதல். அஃதாவது சமுசர்க்கத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட விடயத்தன்மையென்க. ஆகவே, சமுசர்க்கத்தின்கண் அழுந்

தாதஞானமாதலேயாக, சமுசர்க்கத்தன்மையில்லதாகிய ஞானமாதலேயாக இலக்கணமாம், நொய்ம்மையானுகலின் நூற்பொருளாக விசேடியத்தன்மை கூறப்படும் எனக்கூறுப. அஃதறிந்துகொள்க, சித்தாந்தத்துள் சமுசர்க்கத்தன்மைபோல விசேடணத்தன்மையும் விலக்கணத்திற்கு விடயமாகலின் விசேடணமின்றித்தோன்று ஞானமாதலென்னு மிலக்கணத்தின்கண் மிகையின்றுமாகலின்.

அற்றேல், நிருவிகற்பகமுண்மைக்குப் பிரமாணமில்லையெனின்;—அற்றன்று, 'ஆ என விசேடிக்கப்பட்டதறிவு விசேடணஞானதநாற் றோன்றற்பாலது. விசேடிக்கப்பட்ட ஞானமாகலின், குழையன் என்னுஞானம்போல' வென்னும் அநுமானம் பிரமாணமாகலினென்பது.

ஆ எ-து. நிருவிகற்பகம் இந்திரியத்திற்குப் புலனுகாமையின் ஆண்டுக் காட்சியளவையின்மையின் அநுமானவளவை கூறுகின்றது. விசேடிக்கப்பட்ட ஞானமாகலின் எ-து. விசேடிக்கப்பட்ட புத்திக்கு விசேடணஞான காரணமாகலிற் பயனுளதாகாதென்னுஞ் சங்கையில்லையென்பது கருத்து.

விசேடணஞானமுஞ் சவிகற்பகமாயின் அநவத்தையாமாகலின் நிருவிகற்பகமுண்மை பெறப்படும். விசேடணத்தோடு எ-து. சவிகற்பகத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. பெயர் சாதிமுதலிய விசேடண விசேடிய சம்பந்தத்தின்கண் ணழுந்திக்கிடக்கு ஞானம் எ-று. எங்ஙனம் எ-து. சவிகற்பகத்திற்கு உதாரணங் கூறுகின்றது.

**அநவத்தையாமாகலின் எ-து. சவிகற்பகம் விசேடிக்கப்பட்ட புத்தியாகலின் விசேடணஞானத்தினுற் றோற்று**

விக்கற்பாலதாதல் நியமமாகலினென்பது கருத்து. விசேடண விசேடிய சம்பந்தம் எ-து. ஈண்டும் மேற்கூறிய முறைமைபற்றி இலக்கண மூன்றுமறிந்துகொள்க.

௪௫. காண்டலறிவிற்கு ஏதுவாகிய இந்திரியத்திற்கும் பொருட்குமுளதாய சம்பந்தம் சையோகமும், சையுக்தசமவாயமும், சையுக்தசமவேதசமவாயமும், சமவாயமும், சமவேதசமவாயமும், விசேடண விசேடியத்தன்மையும் என அறுவகைப்படும். சட்சுவாற் குடக்காட்சி தோன்றும்வழிச் சையோகஞ் சம்பந்தமாம்; (௧) குடவுருவக்காட்சி தோன்றும்வழிச் சையுக்தசமவாயஞ் சம்பந்தமாம்; (௨) சட்சு சையுக்தமாய குடத்தின்கண் உருவம் சமவாயப்பட்டு நிற்றலானென்க. உருவத்தன்மைப் பொதுமைக்காட்சிதோன்றும்வழிச் சையுக்தசமவேதசமவாயம்சம்பந்தமாம், (௩) சட்சு சையுக்தமான குடத்தின்கண் உருவம் சமவேதமும் அதன்கண் உருவத்தன்மை சமவாயமுமாதலானென்க. சோத்திரத்தாற் சத்தத்தினை நேரே காணும்வழிச் சமவாயஞ் சம்பந்தமாம்; (௪) செவித்துளையிலிருக்கும் ஆகாயம் சோத்திரமாகலின், சத்தம் ஆகாயகுணமாதலின், குணமுங்குணியும் சமவாயமாதலானென்க. சத்தத்தன்மையினை நேரேகாணும் வழிச் சமவேதசமவாயஞ் சம்பந்தமாம்; (௫) சோத்திரத்தின்கட் சமவேதமாய சத்தத்தின்கண் சத்தத்தன்மை சமவாயமாதலானென்க. அபாவக்காட்சிக்கண்

விசேடண விசேடியத்தன்மை சப்பந்தமாம்; (சு) குட த்தின்பாவத்தையுடையது பூதலம் என்புழிச் சட்சு சையுத்தமான பூதலத்தின்கண் குடத்தின்பாவம் விசேடணமாதலானென்க. இவ்வாறுகூறிய அறுவ கைச் சம்பந்தத்தானுந் தோன்றிய அறிவு காண்ட லெனப்படும்; அதற்குக் கரணம் இந்திரியம்; அத னால் இந்திரியம் காண்டலளவையென்பது பெறப்பட் டது. காட்சியுரைக்கப்பட்டது.

காண்டலறிவிற்கு எ-து. இந்திரியத்திற்கும் பொருட் குமுளதாகிய சம்பந்தத்தைப் பகுக்கின்றது. கண் ணினால் எ-து. சையோகசம்பந்தத்திற்கு உதாரணங் கூறுகி ன்றது. திரவியக்காட்சிக்கண் யாண்டுஞ் சையோகமே சம் பந்தம் எ-று. ஆன்மா மனத்தோடுகூடும்; மனம் இந்திரி யத்தோடு; இந்திரியம் பொருளோடு; அதனாற் காட்சியுண ர்வு தோன்றுமெனவறிக. குடவுருவம் எ-து. சையுத்த சம வாயத்திற்கு உதாரணங் கூறுகின்றது. சட்சுவினோடு எ-து. ஆண்டு யுத்திகூறுகின்றது. உருவத்தன்மை எ-து. சையு த்த சமவேத சமவாயத்திற்கு உதாரணங் கூறுகின்றது.

மனம் இந்திரியத்தோடு எ-து. கூடுமென்பதனோடி யையும்; இவ்வாறு முன்னருங் கண்டுகொள்க. இனி ஆன்மாவின் காட்சி கவரப்படுமாறு;— ஆன்மா மனத் தோடுகூடும், அதனாற் காட்சியறிவு தோன்றுமென வேறுவகையாற் கூட்டியறிந்துகொள்க.

சோத்திரத்தால் எ-து. சமவாயத்திற்கு உதாரணங் கூறுகின்றது. செவித்துளை எ-து. அது பொ ருந்துமாறு காட்டுகின்றது. அற்றேல், செய்மைக்கண்ணதா

கிய ஒலி சோத்திரத்தோடு சம்பந்தப்படுவது எங்ஙனமெ னின்;—அற்றன்று, வீசிதரங்கநியாயத்தானாக, கதம்பமுகுள நியாயத்தானாக ஒரு சத்தத்தான் வேற்றுச்சத்தந் தோன்று முறைமையால் சோத்திரத்தின்கட்டோன்றிய ஒலிக்குச் சோத்திரத்தோடு சம்பந்தமுண்மையிற் காட்சியறிவு தோன் றுமாகலினென்பது. சத்தத்தன்மை எ-து. சமவேத சமவா யத்திற்கு உதாரணங் கூறுகின்றது. அபாவம் எ-து. விசே டண விசேடியத்தன்மைக்கு உதாரணங் கூறுகின்றது.

சோத்திரத்தோடு சம்பந்தப்படுவது எ-து. சோத்திரம் ஆகாயவடிவமாகலின் அதன் சமவாயஞ் செய்மைக்க ணுள்ள சத்தத்துமுண்டெனக் கொள்ளற்க, அதிப் பிரசங்கம் வராமைப்பொருட்டுச் செவித்துளையான் வரைந்துகொள்ளப்பட்ட ஆகாயத்திற்கு அநுயோகி யாதலான் விசேடிக்கப்பட்ட சமவாயமே காட்சிக்கு ஏதுவாகக் கொள்ளப்படுதலின் அவ்வியல்பிற்றாகிய சம் பந்தம் செய்மைக்கண்ணதாகிய சத்தத்தின்கணின்மை யானென்பது கருத்து. முதற்கண் முரசுங் குணிலுங் கூடிய சையோகத்தான் ஆகாயத்தின்கட் சத்தந்தோன் றும், அதனாற் சத்தங்கள் தோன்றும், அவற்றாற் பின் னர்ச் சத்தங்கள் தோன்றுமென்று மிம்முறைமையால் திக்கெவ்வாவற்றானும் வரைந்துகோடலாற் சத்தத்தோ ற்றங் கொள்ளப்படுதலின், அதன்கூற்றினும் சமமாதலை யிலேயிறுத்தும்பொருட்டுக் கதம்பமுதநியாயத்தானாக வெனப்பட்டது.

குடத்தினபாவம் எ-து. அதனைப் பொருந்துமாற்றாற் காட்டுகின்றது. பூதலம் விசேடியமுங் குடத்தினபா வம் விசேடணமுமாம். பூதலத்திற் குடமில்லையென்புழி அபா வம் விசேடியமாதல் காட்டற்பாற்று.

காட்டற்பாற்று எ-து. விசேடணத்தன்மை சையுத்தமாகிய விசேடணத்தன்மைமுதலாகப் பலவிதப்படுமாயினும் விசேடணத்தன்மையாதலாற்றானே யெண்ணப்படுதலின் அறுவகைத்தாதற்கு இழுக்கில்லையென்பது. இங்ஙனமாகவே சமவாயமாதலாற்றானே சையுத்த சமவாயமுதலியனவும் இதனோடொத்துவாராத தென்னையென்னற்க, வினையினீங்கி விளங்கிய என்பதுமுதலிய நியாயம்பற்றிக் குற்றமின்றாகலானென்பது.

இதனானே அனுபலத்தி வேறுபிரமாணமென்பது மறுக்கப்பட்டது. 'ஈண்டுக் குடந்தோன்றுமாயின். அப்பொழுது பூதலம்போலக் காணப்படவேண்டும், காட்சியின்மையின் அஃதில்லை'யெனத்தருக்கஞ்செய்யப்பட்ட மறுதலைப்பொருளினுண்மைக்கு விரோதமாகிய அநுபலத்தியோடுகூடிய இந்திரியத்தினாற்றானே அபாவஞானந்தோன்றுதலின் அநுபலத்தி வேறுபிரமாணமாதல் இன்மையானும் நிலைக்களமறிதற்பொருட்டு வேண்டப்படுவதாகிய இந்திரியமே கரணமாதல் பொருந்துமாகலின் அநுபலத்தி கரணமாதல் பொருந்தாமையானுமென்பது.

இதனால் எ-து. அபாவப்பிரமைக்கண் விசேடிய விசேடணத்தன்மைச் சம்பந்தத்தாற் றோன்றற்பாலதாதல் காட்டப்பட்டமையான் எ-று. வேறுபிரமாணமென்பது எ-து.. காட்சி முதலியவற்றின் மேற்பட்ட பிரமாணம் எ-று. அற்றேல் அநுபலத்தி வேறுபிரமாணமாகாதெனிற் குடம் புலப்படுகின்றுழி அதனபாவங் காட்சிப்படுமெனல்வேண்டும், மற்று நம்மதத்து அநுபலத்தியுடைத்தாகிய வேறுபிரமாணமின்மையின் அங்ஙனமாகாதென்னும் பாட்டமதத்தோரது ஆசங்கையைப் பரிகரிக்

கும்பொருட்டுத் தகுதியுடைத்தாகிய அநுபலத்தி இந்திரியத்தோடுகூட நிகழ்தன்மாத்திரையானே கொள்ளப்படுமாகலின் மேற்பட்ட பிரமாணமாத லின்றென்றென்னுங்கருத்தால் ஈண்டுக் குடமில்லையென்பதுமுதலியன கூறப்பட்டது. ஈண்டு எ-து. சட்சுவின் சையோகமுடைத்தாகிய பூதலத்தின்கண் எ-று. காட்சியின்மையின் எ-து. தருக்கம் வருவிப்பதின்மைக்குச் சாதகமாகிய திரிபின் பிரதியோகியை வருவிக்கப்படுவதெனப்படுந் திரிபு அதனகத்ததாய் முடிக்கப்படுதல் காட்டுகின்றது. அக்காட்சியின்மையின் அஃதில்லை எ-று. தருக்கஞ்செய்யப்பட்ட எ-து. தருக்கஞ்செய்யப்பட்டனவென்பதற்கு வருவிக்கப்பட்டன எ-ம், பிரதியோகி என்பதற்குக் குடமுதலியன எ-ம். உண்மைக்கு என்பதற்கு உண்மையோடுகூடிய எ-ம், விரோதமாகிய அநுபலத்தி என்பதற்கு உபலத்தியின் பிரதியோகியோடுகூடிய அபாவம் எ-ம் உரைத்துக்கொள்க.

அநுபலத்திக்கு விரோதம் என்னும் விசேடணம் வருவிப்பதென்பது உணர்ந்ததற்கு. பிரதியோகியுண்மைவருவிப்பதும் வருவிக்கப்பட்டதும் புலப்பட்டதாகிய பிரதியோகியுடைத்தாதலெனப்படுந் தகுதியுடைமையான் விசேடிக்கப்பட்ட அநுபலத்தியோடுகூடிய என்பது போந்தபொருளாகக் கொள்க. ஒளியின் சையோகமுதலியன வில்வழி, ஈண்டுக் குடமுண்டாயின் புலப்படல்வேண்டுமென வருவிக்கப்படுதலின்மையின் தகுதியுடைய அநுபலத்தியின்றாகலின் ஆண்டுக் குடத்தினபாவக்காட்சி யில்லையென்றவாறாயிற்று.

மற்றுஞ் சிலர் கூறுமாறு:—தருக்கஞ்செய்யப்பட்டன என்பது முதலியவற்றிற்கு ஆரோபஞ்செய்யப்பட்டனவாநு

கிய பிரதியோகியுண்மையாகிய விரோதியுடையதெனப்படும் அநுபலத்தியோடுகூடிய என்பது பொருள்.

இதுகாறுங் கூறியவாற்றாற் பிரதியோகியுண்மையெனப்படுங் காரணமின்மையானுக்கப்பட்ட உபலத்தியின்மை அபாவக்காட்சிக்குக் காரணமாம். மற்று ஏனைக் காரணமின்மையானுக்கப்பட்ட உபலத்தி அபாவமன்றென்பது கருதப்பட்டது. இதனானே இருளின்கண் உபலத்தி அபாவமுள்ளவழியுங் குடத்தினபாவக்காட்சியின்றாமெனக் கூறுப.

அற்றேல் அபாவப்பிரமைக்கண் இந்திரியங் காரணமாதலும் அநுபலத்தியினுடனிகழ்ச்சியும் நும்மாற் கொள்ளத் தகும். அதனைநோக்க அநுபலத்தியே காரணமாமெனக் கோடல் நன்றெனை ஆசங்கித்து அபாவத்தின் நிலைக்களமாகிய பூதலத்தின் காட்சிக்கண் இந்திரியமொருதலையான் வேண்டப்படுதலின் வரைசெய்துணர்த்திய இந்திரியமே காரணமாதலின் அபாவக்காட்சி பொருந்துமாகலின் அநுபலத்தி வேற்றுச்சாதிமையுடைய பிரதிக்குக் கரணமாதல் கொள்ளுதல் பொருந்தாதென்னுங்கருத்தால் நிலைக்களம் எனப்பட்டது.

விசேடண விசேடியத்தன்மை விசேடண விசேடிய சொரூபமேயன்றி வேறுசம்பந்தமன்று. இவ்வாறு ஏ-து. காட்சியறிவினை முடித்துரைத்து அதற்குக் கரணங் கூறுகின்றது. சிறப்புக்காரணமாதலின் இந்திரியங் காட்சியறிவிற்குக் கரணம் எ-று. அதனால் எ-து. காட்சியறிவினை முடித்துரைக்கின்றது.

விசேடண விசேடியத்தன்மை எ-து. அற்றேல் விசேடண விசேடியத்தன்மையெனப்படுஞ் சம்பந்தம் நும்மால் மேற்பட்டதெனக் கொள்ளற்பாற்று என்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது. காட்சி உலகசம்பந்தமுடையதும் உலகசம்பந்தமில்லதுமென இருவகைப்படும்; அவற்றுள் உலகசம்பந்தமுடையது விடயித்தன்மை விசேடம். உலகசம்பந்தமுடையதற்குச் சம்பந்தமாறுங் காரணம். மற்று உலகசம்பந்தமில்லதற்குப் பொதுவிலக்கணமுடையது, ஞானவிலக்கணமுடையது, யோகத்தாற்றோன்றுமியல்பு என்னும் மூன்றுமியைபாம். அவற்றுள் பொதுவிலக்கணமுடையது புகைமுதலிய வடிவுடையது, அல்லது அதன் ஞானவடிவுடையது, இலக்கணம் என்பது சொரூபம் அல்லது விடயமெனப் பொருள்படுமாகலின். அஃதும் பற்றுக்கோடாகிய புகைமுழுவதற்கும் உலகசம்பந்தமுடைத்தல்லாத காட்சிக்கண் ஆளப்படும், இறந்ததும் எதிர்வதுமாகிய புகைமுதலியவற்றின்கட் சட்சுவின் சையோகமுதலியவின்மையானுஞ் சேய்மைக்கணுள்ளனவாகிய இந்திரியங்கள் காட்சியைத்தோற்றுவிப்பனவல்லனவாகலானுமென்பது. மற்று ஞான விலக்கணமுடையது 'சந்தனம் நறுமணமுடைத்து' எனச் சட்சுவின் அணிமைக்கட் புலப்படுகின்றுழி, நறுமணத்தோடு சட்சுவிற்குத் தகுதியாகிய சம்பந்தமுளதாகாமையினென்பது. இங்ஙனம் யோகிகள் தேயமிடையிட்டனவுங் காலமிடையிட்டனவுமாகிய பொருள்களைக் காணுங்கால் யோகத்தாற்றோன்றுமியல்பாகிய வியைபுகாரணமாம். இன்னோரன்னவையெல்லா மீண்டேயறிந்துகொள்க.

## அநுமானப்பிரமாணம்.

சச. அநுமானமாவது அநுமிதிக்குக் கரணம். அநுமிதியாவது ஆராய்ச்சியாற்றோன்று ஞானம்.

அநுமிதிக்கு எ-து. அநுமானத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. ஆராய்ச்சி எ-து. அநுமிதிக்கு இலக்கணங் கூறுகின்றது.

அநுமானத்திற்கு இலக்கணங்கூறுகின்றது எ-து. காட்சியளவையின் காரியமாதல் நன்குபோதருதலின் அநுமானத்தினைத் தெரித்துணர்த்துகின்றது. எ-று. ஆராய்ச்சி எ-து. ஆகவே காட்சிப்பிரமிதியைநோக்க அநுமிதி இலக்கணவேறுபாடுடைய பிரமிதியாதலின் அநுமானம் வேறுபிரமாணமாதல் பெறப்படுமென்பது கருத்து.

அற்றேல் ஐயத்தின் பின்னர்த்தாகிய காட்சிக்கண் அதிவியாத்திவரும்; குற்றியோ மகனோவென்னுமையத்தின்பின்னர் மகன்மையான் வியாபிக்கப்பட்ட கரமுதலியவற்றையுடையோ னிவன் என்னு மாராய்ச்சியுளதாயவழி மகனேயென்னுங் காட்சிதோன்றுமாகலினென்பது. ஆண்டு அநுமிதியே யதனைத்தோற்றுவிப்பதெனலும் பொருந்தாது; மகனைக்காண்கின்றேனென்னும் பின்னிகழுமுணர்ச்சியோடு மாறுகோடலினெனின்;—அற்றன்று, பக்கத்தன்மையோடுகூடிய ஆராய்ச்சியாற் றோன்றுவதென்பது கூறுதல் கருத்தாகலின்.

அற்றேல் எ-து. விபரீதவறிவின் பின்னர்த்தாகிய காட்சிக்கு விசேடக்காட்சியேதுவாதல் கொள்வோர் மதம்பற்றி ஆசங்கித்துரைக்கின்றது. குற்றியோ மகனோ

என்-து. மாறுபட்ட பாவமிரண்டுடன் கண்ணதாகிய ஐயங் கொள்ளுதலால் இவ்வாறுரைக்கப்பட்டது. மற்றுப் பிறரெல்லாம், இதற்கு குற்றிமையினபாவமும் மகன்மையினபாவமுமென்னு மிரண்டும்பற்றி நிகழுமையங் கொள்ளுதலால் இவ்வாறுரைக்கப்பட்டதெனக்கூறுப. மகனே என்-து. எதுவிசேடங் காட்டுதற்பொருட்டு. ஆண்டு என்-து. ஐயத்தின் பின்னர்த்தாகிய காட்சிக்கண் என்-று. பின்னிகழுமுணர்ச்சியோடு என்-து. மகனே அநுமிக்கின்றேனெனப் பின்னிகழுமுணர்ச்சியின்மையிற் பிரமாணமின்றாமாகலின் இஃது பயலக்கணமென்பதுங் காட்டற்பாற்று.

பக்கத்தன்மையாவது சாதித்தல் வேட்கையின்மையோடுகூடிய பெறுதியின்மை.

பக்கத்தன்மை என்-து. ஐயத்தின் பின்னர்த்தாகிய காட்சி தோன்றுழிக்கூறப்படும் பக்கத்தன்மை ஆராய்ச்சியோடு கூடியதாதற்கட் பயனின்மையிற் பக்கத்தன்மையோடு கூடிய வாராய்ச்சியாற் றோன்றற்பாலதாதல் கூறுதல் கருத்தாகலின் அதிவியாத்தியின்றென்பது கூறுகின்றது. இதனால் 'வன்னியின் வியாப்பியமாய புகையுடைத்தாகிய மலையினையுடையது இது' என விசேடிக்கப்பட்டதும் விசேடிக்கப்பட்டதனையுடையதுமென்னு மிரண்டனுள்ளும் அழுந்திக்கிடக்கும் புத்திக்கு விசேடணத்தன்மையை வரைந்துகொள்வதனியல்பு விளக்குமியல்பால் வன்னியின்வியாப்பியமாகிய புகையுடையது இம்மலையென்னுமாராய்ச்சி காரணமாயினும் ஆண்டதிவியாத்தியின்றும், பக்கத்தன்மையோடுகூடிய வாராய்ச்சியாற் றோன்றற்பாலதாதலின்மையின் அதிவியாத்தி

யின்றுமாகலினென்பது என்றவாறாயிற்று. சாதித்தல்வேட்கை எ-து. துணிபொருளினையுறவு பக்கத்தன்மையாயவழியும் துணிபொருள் துணியப்பட்டகாலத்து அனுமிதி நீக்கமுளதாயினும் மேகமுழக்கத்தால் மேகத்தினனுமிதிக்கண் முறைபிறழுமாகலின் வேற்றியல்பிற்றாகிய பக்கத்தன்மை கூறுகின்றது. துணிபொருளின் அனுமிதிக்கட்டோன்றுமிச்சைக்குச் சமவாயத்தால் எவ்வபாவம் சொரூபசமவாயம் என்னும் இரண்டோடுங்கூடிய ஒருநிலைக்களத்துளதாதலாகிய சம்பந்தத்தானுளதாம், அதனான் விசேடிக்கப்பட்ட பெறுதிக்கு சமவாயத்தால் உளதாம் அபாவம் எ-று.

துணிபொருட்பெறுதி அநுமிதிக்குத்தடை; பெறுதியுள்ளவழியும் அநுமிப்பேனென்னுமிச்சையால் அநுமிதி நிகழக்காண்டலிற் துணிதல்வேட்கை அதற்குமாற்றாம். அதனால் மாற்றின்மையான் விசேடிக்கப்பட்ட மணியினபாவம் வெம்மைக்குக் காரணமாதல்போலச் சாதித்தல் வேட்கையின்மையோடுகூடிய பெறுதியின்மையும் அநுமிதிக்குக் காரணமாம்.

துணிபொருட்பெறுதி எ-து. பக்கத்தன்மையை வரைந்துகொள்வதனான் விசேடிக்கப்பட்டதன்கண் துணிபொருட்டன்மையை வரைந்துகொள்வதனான் விசேடிக்கப்பட்ட துணிபொருளாகிய விசேடிக்கப்பட்டதனையுடையதோடு அழுந்திநிற்குந் துணிபு எ-று. பெறுதியுள்ளவழியும் எ-து. பெறுதிக்கட் சாதித்தல் வேட்கையின்மையான் விசேடிக்கப்பட்டதனையுடையது என்பது பெயருரைத்தற்குப்பயன்காட்டுகின்றது. ஈண்டுப் பெறுதி [illegible] வன்னியுடையது என்னும் [illegible] வியாப்பியமாகிய

புகையுடையதுமாம்' என்னுங் கூட்டம்பற்றி நிகழும் ஞானமெனப்படுமாதலின் ஆராய்ச்சியாற் பெறப்படுத லென்பதறிந்துகொள்க.

சரு. ஆராய்ச்சியாவது வியாத்தியான் விசேடிக்க ப்பட்ட பக்கதருமத்தன்மை ஞானம்; எங்ஙனம், 'தீயின் வியாப்பியமாகிய புகையுடையது இம்மலை' என்னு ஞானம் ஆராய்ச்சி; அதனாற்றோன்றுவதாகிய 'மலை புகையுடைத்து' என்னுஞானம் அநுமிதியென்க.

வியாத்தி எ-து. ஆராய்ச்சிக்கு இலக்கணங் கூறுகின்றது. வியாத்தியை விடயமாகவுடைய பக்கதருமத்தன்மை ஞானம் யாது அது ஆராய்ச்சி எ-று. எங்ஙனம் எ-து. ஆராய்ச்சியை வெளிப்படுத்துக் காட்டுகின்றது. அதனாற்றோன்றியது எ-து. அநுமிதியை வெளிப்படுத்துக் காட்டுகின்றது; ஆராய்ச்சியாற் றோன்றியது எ-று.

வியாத்தியை விடயமாகவுடைய எ-து. வியாத்தியான் விசேடிக்கப்பட்ட பக்கதருமத்தன்மை ஞானம் என்புழி வியாத்தியான் விசேடிக்கப்பட்டதன்கட் பக்கதருமத்தன்மை வியாத்தியான் விசேடிக்கப்பட்ட பக்கதருமத்தன்மை. அவ்வறிவு என ஏழாம்வேற்றுமைப்பொருள்கொள்ளின் முறைபிறழ்வதாகிய இலிங்கத்தினையுடைய அநுமிதியின்கண் வியாத்தியான் விசேடிக்கப்பட்ட பக்கதருமத்தன்மையறிவாற் றோன்றற்பாலதாந் தன்மையின்மையின் அதிவியாத்தி வருமாகலின் வியாத்தியான் விசேடிக்கப்பட்ட என்னும் பதத்திற்கு வியாத்தியை விடயமாகவுடையது எனப் பொருள்கொண்டு ஞானமென்னும் இறுதிச்சொல்லோடு கூட்டிப் பண்புத்

தொகைப்பொருள் கொண்டுரைக்கின்றது. வியாத்தியான் வரைந்துகொள்ளப்பட்ட விசேடணத்தன்மையாற்றெரித்துணர்த்தப்பட்ட பக்கத்தன்மையை வரைந்துகொள்வதனுல் வரைந்துகொள்ளப்பட்ட விசேடியத்தன்மையுடைத்தாகிய நிச்சயம் ஆராய்ச்சியென்பது தேற்றம். வெளிப்படுத்து எ-து. வெளிப்படுத்துவதாகிய சொல்லினைக் கூறி எ-று.

௬௬. வியாத்தியாவது யாண்டுப்புகை ஆண்டுத்தீ என்னும் உடனிகழ்ச்சி நியமம்.

யாண்டு எ-து. வியாத்திக்கு இலக்கணங் கூறுகின்றது. யாண்டுப்புகை ஆண்டுத்தீ என்பது வியாத்தியை வெளிப்படுத்துக்காட்டியது. உடனிகழ்ச்சி நியமம் எ-து. இலக்கணம். உடனிகழ்ச்சி ஒருநிலைக்களத்திருத்தல். அதன்நியமம் எதுவோடொரு நிலைக்களத்துளதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாகாத துணிபொருளோடு ஒருநிலைக்களத்துளதாதல். இவ்விரண்டுமாயது வியாத்தி எ-று.

நியதமாய் ஒருநிலைக்களத்துளதாதல் சாத்தியத்தினபாவமுடையதன்கண் இலதாதன்முதலிய வடிவுடைத்தாகாது, 'இது பொருளாம் அறியப்படுவதாகலின்' என்பது முதலியவற்றின்கண் அவ்வியாத்தி வருமாகலானும் சாத்தியத்தினபாவமுதலிய வழக்கின்மையானுமென்னுங்கருத்தால் ஏதுவோடொருநிலைக்களத்துளதாகிய எனப்பட்டது. 'தீயுடைத்து,புகையால்'என்பதுமுதலியவற்றுள் புகையின்நிலைக்களத்துளதாகிய முழுதுமபாவம் குடமுதலியவற்றினபாவம்; அதற்குப் பிரதியோகியாகாதது தீ; அதனேடொருநிலைக்களத்துளதாதல்புகை

க்கணுளதாமாகலின் இலக்கணம் பொருந்துமாறறிக. மற்றும் புகையுடைத்துத் தீயால் என்பதுமுதலியவற்றுள் புகைப்பொதுமையினபாவமும் எதுவின் நிலைக்களத்துளதாகலிற் புகை அதன்பிரதியோகியாம் ஆதலின் அதிவியாத்தியின்றென்பது.

தீயுடைத்துப புகையால் என்பதுமுதலியவற்றுள் அவ்வத்தீயினபாவஞ் சாலினீநியாயத்தால் புகையின் நிலைக்களத்துளதாகலின் அவ்வியல்பிற்றாகிய வபாவத்திற்குப் பிரதியோகியாகாமை தீக்குச் சிறிதுமின்றாகலின் அவ்வியாத்தி வருமெனக் கூறற்க, பிரதியோகியில்லாததாகிய துணிபொருளென்பதற்குப் பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்ளாத சாத்தியத்தன்மையை வரைந்துகொள்வதனால் வரைந்துகொள்ளப்பட்டதென்னும் பொருட்கருத்தால் குற்றமின்றாமாகலினென்பது.

பிரதியோகித்தன்மைக்கட் சாத்தியத்தன்மையை வரைந்துகொள்வதன் சம்பந்தத்தால் வரைந்துகொள்ளப்பட்டது என்பது பெய்துரைக்க. அதனால் 'தீயுடைத்துப் புகையா'லென்பது முதலியவற்றுள் சமவாயத்தால் தீயின்றன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடையதனபாவம் புகையினிலைக்களத்துளதாயவழியுங் குற்றமின்றென்பது.

எது என்பது எதுத்தன்மையை வரைந்துகொள்வதனான் வரைந்துகொள்ளப்பட்டது என்னும் பொருட்டாகலின், 'திரவியம், விசேடிக்கப்பட்டதுண்மையின்' என்பதுமுதலியவற்றுள் விசேடிக்கப்பட்டது சுத்தத்தின் மேற்ப

டாததாகலின் ஏதுவின்நிலைக்களத்துள்ள குணமுதலிய வற்றின்கணுள்ளதாயினுந் திரவியத்தன்மையி னபாவத் திற்கு அவ்வியாத்தியின்றென்பது.

ஏதுவின் நிலைக்களத்துளதாதல் ஏதுத்தன்மையின் சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்டதெனக்கொள்க. அதனால் 'தீயுடைத்து, புகையால்' என்பது முதலியவற்றுள் தீப்பொதுமையினபாவம் புகையின் சமவாயிக்கணுள்ளதாயவழியும் அவ்வியாத்தியின்றென்பது.

இங்ஙனமாயினும், 'இது குரங்கின கூட்டமுடைத்து, மரமாதலின்' என்பது முதலியவற்றுள் அவ்வியாத்திவரும், சாத்தியம் ஏதுவோடு ஒருநிலைக்களத்துளதாதலின் அபாவத்தின் பிரதியோகித்தன்மையை வரைந்துகொளவதனுன் வரைந்துகொள்ளப்பட்டதாகலினென்னற்க, ஏதுவோடு ஒருநிலைக்களத்துளதாதலி னபாவத்தின்கட் பிரதியோகிவேற்றுநிலைக்களத்துளதாவதென்பது பெயதுரைக்கற்பாற்றாகலினென்பது. கேவலாந்நுவயியுடைத்தாகியசாத்தியத்தின்கண் அவ்வியல்பிற்றாகிய குடத்தினபாவமுதலியன பெருவழக்குடையனவாகலின் அவ்வியாத்தியின்றென்க. ஏனையனைத்தும் மணிப்பிரபையென்னுமுரையுட்காட்டினும்; ஆண்டு நுண்ணிதினோர்ந்துணர்க.

சஎ. பக்கதருமதத்தன்மையாவது வியாப்பியம் மலைமுதலியவற்றினுள்ளதாதல்.

வியாப்பியம் எ-து. பக்கதருமத்தன்மையின் சொரூபங்கூறியவாறு.

௬அ. அநுமானம் தன்பொருட்டனுமானமும், பிற ன்பொருட்டனுமானமும் என இருவகைப்படும். அவ ற்றுள் தன்பொருட்டனுமானமாவது தனது அநுமி திக்குக் காரணம். அங்ஙனமன்றே, தானே பல காட்சியால் யாண்டுப்புகை, ஆண்டுத்தீ என அடுக் களை முதலியவற்றின்கண் வியாத்தியைக் கவர்ந்து கொண்டு மலையினணிமைக்கட் சென்றான்; ஆண்டுச்செ ன்றுழித் தீயின்கண் ஐயமுற்று மலையின்கட் புகை யைக்கண்டு 'யாண்டுப்புகை, ஆண்டுத்தீ' என வியா த்தியை நினைகின்றான். அதன்பின்னர்த் 'தீயின் வியா ப்பியமாகிய புகையுடையது இம்மலை' என்னுஞானந் தோன்றும். அதுவே இலிங்கபராமரிசம் எனக் கூறப் படும். அதனால் 'மலைபுகையுடைத்' தென்னும் அநு மிதிஞானந் தோன்றும். இது தன்பொருட்டனுமான மென்க.

அநுமானம் எ-து. அநுமானத்தினைப் பகுக்கின்றது. தன்பொருட்டு எ-து. அஃதிருவகைத்தாதல் காட் டுகின்றது. அவற்றுள் எ-து. அவைபிரண்டனுள் எ-று. தானே எ-து. தன்பொருட்டனுமிதியினைக் காட்டுகின்றது.

தன்பொருட்டனுமிதி எ-து. பொருள் பயன்; அஃதாவது துணிபொருளின் ஐயுறவினீக்கம்; அதனைப்பயப்பதா கிய அனுமிதி எ-று.

பலகாட்சியால் எ-து. அற்றேல், பிருதிவித்தன்மை இரும்பாற் கிழிக்கப்படுந்தன்மை என்பது முதலிய வற்றுள் பலகாலுடனிகழ்ச்சி கண்டுழியும் மணிமுதலியவற்

றுள் முறைபிறழக்காண்டலின் பலகாட்சியால் வியாத்தி கவரப்படுதலெங்ஙனமெனில்;— அற்றன்று, முறைபிறழ்ச்சி யறிதலின்மையோடுகூடிய உடனிகழ்ச்சியறிவே வியாத்தி யைக் கவர்வதாகலின்.

கண்டு எ-து. 'ஒருசம்பந்தமுடையதனறிவு வேறு சம் பந்தமுடையதனை நினைப்பது' என்னுமுறைமையாற் காண்டல் நினைவிற்கு ஏதுவாதலினென்பது கருத்து. கவரப்படுதலெங்ஙனம் எ-து. முறைபிறழ்ச்சியறிதற் கண் ஒருவனுயினும் வியாத்தியின் றுணிவினை அடை யாறுதலிற் பலகாட்சி வியாத்தியின் றுணிவிற் குக் காரணமாகாதென்பது கருத்து; இஃதுபலக்கணம். பலகாட்சியால் என்பதற்குப் பலவாகிய காட்சிகளது கூட்டம் எ-ம், பலவாகிய துணிபொருள் ஏது என்ப னவற்றின் காட்சி எ-ம், பலவாகிய இடங்களிற் கா ண்டல் எ-ம் மூவகையாகப் பொருள்கொள்ளப்படும். ஓரிடத்து உடனிகழ்ச்சியைக் காண்டலாகிய தாரை யால் வியாத்தி நிச்சயப்படுமெனல் வேண்டுதலின் முத ற்பொருள் பொருந்தாது. 'இவ்வுருவமுடையது, இவ் விரதத்தால்' என்பதுமுதலிய துணிபொருள் ஏது என் பனவற்றின் நிலைக்களத்துப் பலவாதலின்மையின் வியாத்தி நிச்சயந்தோன்றாது எனல்வேண்டுதலின் இர ண்டாவதும் மூன்றாவதுமாகிய பொருள்கள் பொருந் தாவென வறிந்துகொள்க.

முறைபிறழ்ச்சியறிதலின்மை எ-து. மணிகாரசித்தாந்த மதம்பற்றி விடைகூறுகின்றது. வியாத்தியைக்கவர் வதாகலின் எ-து. வியாத்தியாவது ஏதுவோடொருநி லைக்களத்துளதாகிய முழுதுமபாவத்தின் பிரதியோகித்

தன்மையை வரைந்துகொள்வதாகாத துணிபொருட்டன்மையை வரைந்துகொள்வதனுன் வரைந்துகொள்ளப்பட்ட துணிபொருளோ டொருநிலைக்களத்துளதாகிய ஏதுத்தன்மையை வரைந்துகொள்வதெனப்படுவதேயாம், ஒருநிலைக்களத்துளதாவது கழுதைமுதலிய பொதுவாவனவாகலின். புகைமுதலியனவற்றிற்குச் சொரூபத்தால் வியாப்பியத்தன்மையை வரைந்துகொள்வதாதல் அவ்வியல்பிற்றுகிய புகைத்தன்மையாதல் முதலியனவாகலான் வியாத்தித்தன்மையென வரைந்துகொள்ளப்பட்டதும் வரைந்துகொள்வதுமொன்றுயவழியுங் குற்றமின்றென்பது. இங்ஙனமே துணிபொருட்டன்மையை வரைந்துகொள்வதாகிய அவ்வியல்பிற்றுகிய பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வதாகாமையாகாத கூற்றினைக்கவர்வதாகிய துணிபொருட்டன்மையைவரைந்துகொள்வதன்கண் அவ்வியல்பிற்றுகிய பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வதெனப்படும் முறைபிறழ்ச்சி கவர்தலின்மை விபரீதமாகக் கவர்தலின்மையாகிய இயல்பால் அபாவவடிவுடைமையான் ஏதுவாகாது. மற்றுத் துணிபொருளோடொருநிலைக்களத்துளதாவதாகியகூறு கவர்தற்கண் விசேடணஞானத்தினியல்பால் ஒருநிலைக்களத்துண்மையறிவே ஏதுவாமென்னு முறைமையால் முறைபிறழச்சியறிவின்மையும் ஒருநிலைக்களத்துண்மை யறிவுமென்னு மிரண்டன்கண்ணும் வியாத்தி கவர்தல் ஏதுத்தன்மையென வறிந்துகொள்க.

**உண்மையானேக்கின் ஏதுவான் வியாபிக்கப்பட்ட துணிபொருளோ டொருநிலைக்களத்துளதாதலே வியாத்தி. வியாபிக்கப்பட்டதாகிய கழுதைப்பொதுமையால் பிரமையோடுகூடிய கழுதையாகிய இலிங்கத்தினையுடைய**

வாராய்ச்சியாற் பிறழ்ச்சியுணர்வோடுகூடிய தீயின் அனுமிதி தோன்றுது, பிரமையோடுகூடிய வாராய்ச்சிக்குப் பிறழ்ச்சியுடைத்தாகிய வநுமிதியைத் தோற்றுவியாததாகிய நியமமுண்மையால் விரும்பியதுபெறுதலென்னுங் குற்றத்தால் பொருந்தாமையினெனும் பொருந்தாது, எவ்வியல்பான்வரைந்துகொள்ளப்பட்ட வியாபகத்தன்மை வியாத்தியோடு கூடியது, அவ்வியல்பினையுடைய தருமியின்றன்மையை வரைந்துகொள்வதாகிய வியாத்தியின் விசேடணத்தின் றுணிவே அநுமிதிக்கு வேதுவாதல் பொருந்துமாகலின் குற்றமின்மையினென்பது. இதனுனே வியாத்தியின்கட் புகைத்தன்மையாதல் பெய்துரையாமையால் நொய்ம்மையாமெனக் கொள்க.

முறைபிறழ்ச்சியுணர்வு துணிவும் ஐயமுமென விருவகைத்து. அதனின்மை ஒரோவழித் தருக்கத்தாற் பெறப்படும், ஒரோவழித் தன்னுற் பெறப்படும்.

ஐயமும் எ-து. முறைபிறழ்ச்சியுடைய ஐயத்திற்கும் வியாத்தியின் கவர்ச்சிக்குத் தடையாதல் அனுபவத்தானறியப்படுதலின் அது பொதுவாகிய முறைபிறழ்ச்சியறிவான் வரைந்துகொள்ளப்பட்டதல்லாத வேது என்பது கருத்து. அதனின்மை முறைபிறழ்ச்சியையமின்மை. ஒரோவழி எ-து. தருக்கமில்லாத வேனைக்காரணமுழுவதுங் கூடியவிடத்து எ-று. ஒரோவழித்தன்றுற்பெறப்படும் எ-து. வேனைக்காரணமில்லாதவிடத்து அவ்வியல்பிற்றுகிய காரணமின்மையான் ஆக்கப்பட்ட எ-று. ஆகவே ஆண்டுத் தருக்கம் அவாவப்படுதலின்று.

புகைக்குந் தீக்குமுளதாகிய வியாத்திகவரப்படுதற்கண் காரிய காரணத்தன்மைக் கேடுவருமெனப்படும் இலக்கணத்தினையுடைய தருக்கம் ஐயப்பாட்டினை நீக்குவதாம்.

புகைக்குந் தீக்கும் எ-து. புகைக்குந் தீக்குமுளதாகிய கவர்ச்சிதோன்றுதற்கண் முறைபிறழ்ச்சியையத்தை நீக்குவது காரிய காரணமுண்மைக்குக் கேடுண்டாதல் வேண்டுமென்னு மிலக்கணத்தினையுடைய தருக்கம் எனவியைக்க. அத்தருக்கமும் 'புகை தீயின்கண் முறைபிறழ்வதாமெனின் தீயிற்றோன்றுவதன்று' எனப்படுவதாதலறிந்துகொள்க.

அற்றேல் எல்லாத் தீப்புகைகளுங் காட்சிச் சம்பந்தப்படாமையின் வியாத்தி கவருமாறெங்ஙனமெனின்;— அற்றன்று, தீத்தன்மை புகைத்தன்மையெனப்படும் பொதுவகையாகிய இயைபால் எல்லாத்தீயும் எல்லாப் புகையும் அறியப்படுத லுளதாமாகலினென்பது. அதனால் எ-து. இலிங்கபராமரிசத்தால் எ-று.

அற்றேல் எல்லாத்தீ எ-து. அற்றேல் அடுக்களைக்கணுளதாகிய தீயும் புகையுமென்னுமிரண்டும் அணிமைக்கணுளவாகலின் உடனிகழ்ச்சி கவரப்படுதற்கண்ணும் ஏனைத் தீப்புகைகள் சேய்மைக்கணுள்ளனவாகலின் உடனிகழ்ச்சி காணப்படுதலின்றாகலின் எல்லாப் புகைகளின் கண்ணும் வியாத்தி காணப்படுதலுளதாகாது. ஆகவே மலையின்கணுள்ள புகையின் காட்சியால் வியாத்திநினைவு தோன்றாதாகலின் ஆராய்ச்சி பொருந்தாதென்னுங் கருத்தால் ஆசங்கித்துரைக்கின்றது.

தீத்தன்மை புகைத்தன்மை எ-து. எல்லாத் தீப்புகைகளின்கண்ணும் உலகசம்பந்தமுடைத்தாகிய சம்பந்த

மில்வழியும் பொதுவாகிய வியைபெனப்படும் உலகசம்பந்தமுடைத்தல்லாத சம்பந்தமுண்மையின் தீத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட ஒருநிலைக்களத்துளதாதலான் எல்லாப்புகையுமுடனிகழ்தல் காணப்படுதலுண்மையின எல்லாப் புகைகளின்கண்ணும் வியாத்தி கவரப்படுதலுளதாம்; இங்ஙனமே மலையின்கண்ணதாகிய புகையின்கண் வியாத்தி கவரப்படுதலின், புகையின் காட்சியால் வியாத்தி நினைவுதோன்றுதலின் ஆராய்ச்சி பொருந்தாமையின்றென விடைகூறுகின்றது.

சகூ. தான் புகையால் தீயை அநுமித்துணர்ந்து பிறனுக்குணர்த்தும்பொருட்டு ஐவகையுறுப்புக்களையுடைய வாக்கியம் எடுத்தாளப்படுவது யாது, அது பிறன்பொருட்டனுமானமாம். எங்ஙனம், மலை தீயுடைத்து, (க) புகையுடையதாதலால், (உ) யாது யாது புகையுடைத்து, அது அது தீயுடைத்து அடுக்களைபோல, (ங) இஃதும் அங்ஙனம், (௪) ஆதலின் இங்ஙனம் (ரு) என்பது. இதனாற் கூறப்பட்ட இலிங்கத்தால் பிறனுந் தீயுண்டென உணர்ந்துகொள்வன். ஐவகை உறுப்புக்களாவன பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என்பன. இதனுள் மலை தீயுடைத்து என்பது பிரதிஞ்ஞை; புகையுடைமையால் என்பது ஏது; யாது யாது புகையுடைத்து, அது அது தீயுடைத்து என்பது உதாரணம்; இஃதும் அங்ஙனம் என்பது உபநயம்; ஆதலின் இங்ஙனம் என்பது நிகமனம்.

நூான் எ-து. பிறன்பொருட்டனுமானங் கூறுகின்றது. யாது என்பது அது பிறன்பொருட்டனுமானமென் புழி அது என்பதனோடியையும். எங்ஙனம் எ-து. ஐவகை யுறுப்புக்களையுடைய வாக்கியத்திற்கு உதாரணங் கூறுகின் றது. பிரதிஞ்ஞை எ-து. உறுப்புக்களின் சொரூபங் கூறு கின்றது. மலை புகையுடைத்து எ-து. உதாரணங் கூறப்ப ட்ட வாக்கியங்களுள்வைத்துப் பிரதிஞ்ஞைமுதலியவற்றின் விபாகங் கூறுகின்றது.

பிறன்பொருட்டனுமானங்கூறுகின்றது எ-து. பிறன்பொரு ட்டனுமானமென்பதற்கு பிறன் எ-து. முன்னிலையின்க ணுள்ளோன் எ-ம், பொருள் எ-து. துணிபொருளின் அனுமிதியெனப்படும் பயன் எ-ம் பொருள்படுதலின் பிறன்கட் சமவேதமாகிய அனுமிதிக்குக் கரணமெனப் படும் இலிங்கவாராய்ச்சியெனப் பொருள்கொள்ளப்படு மாதலின் தன்பொருட்டனுமிதி பிறன்பொருட்டனு மிதியென்னுமிரண்டற்கும் இலிங்கவாராய்ச்சியே கா ணம் என்பதுமுதலாக மேற்காட்டப்பட்ட நூல்வாக் கியம் முட்டின்றி நன்குபோதருமாயினும் பிறன்பொ ருட்டனுமானத்தைப் பயப்பதாகிய ஐவகையுறுப்புக்க ளையுடைய வாக்கியத்தின்கண் பிறன்பொருட்டனுமா னமென்னுஞ் சொற்பிரயோகம் உபசாரமாமென்னுங் கருத்தால் நூலினைத் துணிந்துரைக்கின்றது. ஐவ கையுறுப்புக்களையுடைய வாக்கியமென்னு மிதனனே பிரதிஞ்ஞைமுதலிய வாக்கியமைந்தின் சமுதாயமாதல் நியாயத்திற்கு இலக்கணமாத லறிந்துகொள்க. இத னாற்கூறப்பட்ட இலிங்கத்தால் என்னும் நூற்குப் பிரதிஞ்ஞைமுதலிய ஐந்தின் கூட்டத்தானு மாக்கப்ப ட்ட இலிங்கவாராய்ச்சியால் என்பது பொருள்.

பிரதிஞ்ஞையாவது துணிபொருளுடைத்தாந் தன்மையாற் பக்கத்தினைக் கூறுவது. ஏதுவாவது இன்னுன் உருபு ஈருக இலிங்கத்தினை யெடுத்துக்காட்டுவது.

துணிபொருளுடைத்தாந்தன்மையால் எ-து. துணிபொருட்டன்மையை வரைந்துகொள்வதனன் வரைந்துகொள்ளப்பட்ட பக்கமாகிய விசேடியத்தினையுடைய அறிவினைத் தோற்றுவிக்கும் வாக்கியம் எ-று. உதாரணத்தினல் துணிபொருட்டன்மையை வரைந்துகொள்வதனன் விசேடிக்கப்பட்ட விசேடிக்கப்பட்டமையுடையதனேடு அமுழ்ந்திநிற்குமறிவு, பக்கத்தன்மையை வரைந்துகொள்வதனல் விசேடிக்கப்பட்டதன்கணைன்று. உபநயத்தால் பக்கத்தன்மை வரைந்துகொள்வதனல் விசேடிக்கப்பட்டதன்கட் டுணிபொருட்டன்மையை வரைந்துகொள்வதனல் விசேடிக்கப்பட்ட விசேடிக்கப்பட்டமையுடையதனேடு அழுந்திநிற்கும் ஞானமாதலின் அவ்விரண்டும் மறுக்கப்பட்டன. வாக்கியம் என்பதற்கு நியாயத்தினுறுப்பாகிய வாக்கியமென்பது பொருளாகலின் நியாயத்தின்புறனுகிய வாக்கியம் நீக்கப்பட்டது. இவ்வாறு முன்னரு மறிந்துகொள்க. 'இது தண்டமுடைத்தன்று' அத்தண்டத்தின் சையோகத்தாற் றேன்றிய பொருளாகலின் என்பது முதலியவற்றுள் பிரதிஞ்ஞையின்கண் ஐந்தாம்வேற்றுமை யுண்மையின் அதிவியாத்தி நீக்குதற்கு இலிங்கத்தினையெடுத்துக்காட்டுவது எனப்பட்டது. ஏதுவை யெடுத்துக்காட்டும் வாக்கியம் எ-று.

உதாரணமாவது வியாத்தியை எடுத்துக்காட்டுவது.

வியாத்தியை எடுத்துக்காட்டுவது எ-து. முதற்கணணதாகிய ஏதுவையுடையதன்கண் முதற்கண்ணதாகிய ஏது வியாபகமாதலான் விசேடிக்கப்பட்ட துணிபொருளினையுணர்த்தும் வாக்கியம் எ-று. உதாரணம் வியாபகமாதலை யறிவிப்பதெங்ஙனமெனிற் காட்டுதும்;— சாத்தியம் என்னுஞ் சொற்கு ஏது வியாபகமாதலான் விசேடிக்கப்பட்ட துணிபொருளென்பது காரணமின்றி வருமிலக்கணையாற்கொள்ளப்படும். இருகாற்கூறிய யாது என்னும் பதம் நின்றுபயனின்மைப்பாற் படுமெனக் கூறலும் பொருந்தாது, அவ்வியல்பிற்றாகிய தாற்பரியத்தினைக் கவர்வதாகலின் பொருளுடைத்தாகலானென்பது. அல்லதூஉம் முதலாவதாகிய யாதென்னுஞ் சொற்குப் பொருளாகிய அடுக்களையின்கண்ணும் இரண்டாவதாகிய யாதென்னுஞ் சொற்குப் பொருளாகிய அடுக்களையல்லாததன்கண்ணும் முதற்கண்ணதாகிய ஏதுவுடைத்தாதற்கு முதற்கண்ணதாகிய அது என்னுஞ் சொல்லின் பொருட்கண்ணும் இரண்டாவதாகிய அதுவென்னுஞ் சொல்லின் பொருட்கண் அடுக்களையின்கண்ணும் அடுக்களையல்லாததின்கண்ணுஞ் சாத்தஞானந்தோன்றியவழிப் பிற்காலத்து வியாபகத்தன்மையறிவு மனத்ததாம். ஆகவே வியாத்தியை யெடுத்துக்காட்டுவது உதாரணத்துக்குப் பொருளாகலின் குற்றம் யாதுமின்றெனக்கொள்க.

உ—பநயமாவது வியாத்தியான் விசேடிக்கப்பட்ட இலிங்கத்தினை யெடுத்துக்காட்டுவது.

வியாத்தியான் விசேடிக்கப்பட்ட இலிங்கத்தினை யெடுத்துக்காட்டுவது எ-து. பக்கத்தன்மையை வரைந்துகொ

ள்வுதனுன விசேடிக்கப்பட்ட விசேடியத்தினையுடைய தாகிய முதற்கண்ணதாகிய துணிபொருளின்கண் வியாப்பியமாகிய ஏதுவென்னும் விசேடணத்தினையுடைய அறிவைத் தோற்றுவிக்கும் வாக்கியம் எ-று. உபநயம் பக்கதருமத்தன்மையறிவை யறியும்பொருட்டு என்பது பாடமாயின் எடுத்தாளப்படுவது என்பது வருவித்து எங்ஙனமாயினும் மேற்காட்டிய பொருள் நன்குபோதருமாறறிந்துகொள்க.

நிகமனமாவது ஏதுவுந் துணிபொருளுமுடைத்தாந்தன்மையாற் பக்கத்தினையெடுத்துக்காட்டுவது. பக்க அறிவு பிரதிஞ்ஞைக்குப் பயன். இலிங்கஅறிவு ஏதுவுக்குப் பயன். வியாத்தியறிவு உதாரணத்துக்குப் பயன். பக்கதருமத்தன்மையறிவு உபநயத்துக்குப் பயன். பாதிதமன்மை முதலியன நிகமனத்துக்குப் பயன்.

ஏதுவுந் துணிபொருளுமுடைத்தாந்தன்மை எ-து. ஏதுவினறிவினை அறியப்படுதலான் விசேடிக்கப்பட்ட துணிபொருளுடைத்தாகிய விடயத்தினையுடைய அறிவினைத் தோற்றுவிக்கும் வாக்கியம் எ-று. பிற்காலத்துப் பாதிதமல்லாததும் சற்பிரதிபக்கமல்லாததுமாகிய விடயத்தினையுடைய அறிவு இல்லையென்பது காட்டற்பாற்று.

ரு௦. தன்பொருட்டநுமிதி பிறன்பொருட்டநுமிதியென்னுமிரண்டற்கும் இலிங்கவாராய்ச்சியே கரணம். அதனுல் இலிங்கவாராய்ச்சி அநுமானமாம்.

தன்பொருட்டு எ-து. அனுமிதிக்குக் கரணங்கூறுகின்றது. அற்றேல் வியாத்தி நினைவும் பக்கதருமத்தன்மையறிவுமே அனுமிதியைத் தோற்றுவிப்பனவாகவும் விசே

டிக்கப்பட்ட ஆராய்ச்சிகோடல் எதன்பொருட்டெனின்;— அற்றன்று, 'தீயின் வியாப்பியமாகிய புகையுடைத்து இது' என்னும் சாத்தபராமரிசத்தின்கண் ஆராய்ச்சி ஒருதலையான் வேண்டப்படுதலின் நொய்தாக யாண்டும் பராமரிசமே காரணமாமாகலின்.

அற்றேல் எ-து. அற்றேல், விசேடிக்கப்பட்ட விசேடிக்கப் பட்டதனையுடையதனோடு அழுந்திநிற்குமாராய்ச்சி அனுமிதிக்குக் காரணமெனின், ஆண்டு வேறொராற்றாற் பெறப்படாமையும் நியதமாக முன்னுளதாதலுமென்னு மிரண்டுங் கொள்ளப்படுமாகலின் மிகையாம். தீயின் வியாப்பியம் புகை, புகையுடைத்து மலை' யென்னு ஞானமிரண்டும் நும்மதத்து விசேடிக்கப்பட்ட ஆராய்ச்சிக் குக் காரணமாகலின் வரைசெய்துணர்த்திய காரண மாதற்கண் வேறொராற்றாற் பெறப்படாமை மாத்திர மே கொள்ளப்படுதலின் நொய்ம்மையாமெனப் பிரபா கரமதம்பற்றி ஆசங்கித்துரைக்கின்றது.

**தீயின்வியாப்பியம்** எ-து. ஈண்டு நும்மாற்கொள்ளப்பட்ட காரணமின்மையின் முறைபிறழுமாகலின் ஞானமிரண் டுங் காரணமாதலுளதாகாதென்பது கருத்து. எங்ஙன மாயினும் வியாப்பியத்தன்மையை வரைந்துகொள்வதா கிய புகைத்தன்மை முதலியவற்றினுணர்ச்சி ஆராய்ச்சி யாற் றேன்றுவதென்பது விளக்குவதற்கு **சாத்தபரா மரிசம்** எனப்பட்டது. **நொய்தாக** எ-து. எளிதாக எ-று.

அங்ஙனமன்றே, ஞானமிரண்டன்கண்ணும் வேறொராற் றாற் பெறப்படாமையும் நியதமாக முன்னுளதாதலு மென்னுமிரண்டுங் கொள்ளப்படுதலைநோக்கி விசேடிக்

கப்பட்ட ஆராய்ச்சிக்கண் அது கொள்ளுதலே நொய் தாமென்பது. உண்மையாளுக்கின் அவ்வியல்பான் வரைந்துகொள்ளப்பட்ட விசேடியத்தினையுடைத்தாகிய வியாத்தியாகிய விசேடணத்தின் றுணிபான் விசேடிக்கப்பட்ட அவ்வியல்பான் வரைந்துகொள்ளப்பட்ட விசேடணத்தினையுடைய பக்கத்தன்மையை வரைந்து கொள்வதனன் வரைந்துகொள்ளப்பட்ட விசேடியத்தினையுடைய நிச்சயமாதலே காரணத்தன்மையை வரைந்துகொள்வதாதல் ஞானமிரண்டன் பொதுமையைத் தடுப்பதாகியவதனற் கொள்ளற்பாற்று.

மற்று, நையாயிகமதத்துள், வியாத்தியான் விசேடிக்கப்பட்ட விசேடிக்கப்பட்டதனையுடையதனோடு அழுந்திநிற்கும் நிச்சயமாதல் காரணத்தன்மையைவரைந்துகொள்வதெனக் காரணத்தன்மையை வரைந்துகொள்வது நொய்தாக முடிக்கப்படும்.

இலிங்கங் கரணமன்று, இறந்ததும் எதிர்வுமுதலியவற்றுள் முறைபிறழ்தலின். வியாபாரமுடைத்தாகிய காரணங் கரணமென்னு மதத்தின்கண் ஆராய்ச்சியின் வழியால் வியாத்தியறிவு கரணமாம். வியாபாரம் அதனிற்றோன்றி யதனிற்றோன்றற்பாலதனைத் தோற்றுவிப்பது. அதனல் எ-து. அனுமானத்தை முடித்துரைக்கின்றது.

இலிங்கம் எ-து. விட்டுவிலகுதலின்மையால் அறியப்படுவதாகிய இலிங்கத்தன்மையானுங் கரணமாதல் கூறும் ஆசிரியர்மதத்தினை மறுத்துரைக்கின்றது. முறைபிறழ்தலின் எ-து. அனுமிதி யனுபவத்தாற் பெறப்படுதலின் அதனல் இடையீடுபடாது முன்னையதும் ஆவதுமாகிய புகைமுதலியன இன்மையினென்பது

கருத்து. மதம் எ-து. பலமாகிய பிறிதினியைபின்மை நீக்கப்பட்டது காரணத்தின்கரணமென்னுமதத்தின்கண் ஆராய்ச்சியே கரணமெனக்கொள்க. கரணத்தின்கண திவியாத்தி நீக்குதற்கு அதனிற்றேன்றி யெனப்பட்டது.

௫௧. இலிங்கம் அந்நுவயவெதிரேகியும், கேவலாந்நுவயியும், கேவலவெதிரேகியுமென மூவகைத்து. அந்நுவயத்தானும் வெதிரேகத்தானும் வியாத்தியுடையது அந்நுவயவெதிரேகி. எங்ஙனம், தீயாகிய துணிபொருளின்கட் புகையுடைமை. 'யாண்டுப்புகை ஆண்டுத்தீ, அடுக்களைபோல' என அந்நுவய வியாத்தியும், 'யாண்டுத்தீயில்லை ஆண்டுப்புகையுமில்லை, மடுப்போல' என வெதிரேகவியாத்தியுமுண்மையின். அந்நுவயத்தின்மாத்திரமே வியாத்தியுடையது கேவலாந்நுவயி. எங்ஙனம், 'குடம்அபிதேயம், பிரமேயத்தன்மையால், ஆடைபோல' என வரும். ஈண்டுப் பிரமேயத்தன்மை அபிதேயத்தன்மைகட்கு வெதிரேகவியாத்தி யின்று, எல்லாப்பொருளும் பிரமேயமும் அபிதேயமுமாகலானென்க. கேவலவெதிரேகி வெதிரேகத்தின் மாத்திரமே வியாத்தியுடையது. எங்ஙனம், 'பிருதிவி ஏனையவற்றின் வேறு, நாற்றமுடைத்தாதலால், யாது ஏனையவற்றின் வேறன்று, அது நாற்றமுடையதன்று, அப்புப்போல, இஃது அங்ஙனமன்று, ஆதலின் இங்ஙனமன்று' என வரும். ஈண்டு யாது நாற்றமுடைத்து, அது ஏனையவற்றின் வேறு என அந்நுவய திருட்டாந்தமில்லை, பிருதிவி முழுதும் பக்கமாகலின்.

இலிங்கம் எ-து. இலிங்கத்தினைப் பகுக்கின்றது. அந்நுவயத்தானும் எ-து. அந்நுவயவெதிரேகிக்கு இலக்கணங் கூறுகின்றது.

அநுமானத்தினைத் தெரித்துணர்த்தலே மேற்கொள்ளப்பட்டமையின் அதனைப் பகுத்துக்காட்டலே நன்றாயினும் இலிங்கம் மூவகைத்தாதல் காட்டப்பட்டவழி அதனறிவு மூவகைத்தாதலே பயனுமென்னுங்கருத்தால் இலிங்கத்தினைப் பகுக்கின்றது எனப்பட்டது.

ஏதுவிற்குந் துணிபொருட்குமுளதாய வியாத்தி அந்நுவயவியாத்தி, அவற்றினபாவங்கட்குளதாய வியாத்தி வெதிரேகவியாத்தி. அந்நுவயத்தின் எ-து. கேவலாந்நுவயிக்கு இலக்கணங் கூறுகின்றது.

ஏதுவிற்குந் துணிபொருட்கும் எ-து. அந்நுவயத்தானும் வெதிரேகத்தானும் வியாத்தியுடையது என்னுநூற்கு அந்நுவயத்தோ டொனிகழ்ச்சியைக் கவர்தலுங் கவரப்படுவதுமாகிய வியாத்தியுடையதாய் வெதிரேகத்தோடுடனிகழ்ச்சியைக் கவர்தலுங் கவரப்படுவதுமாகிய வியாத்தியுடையது எனப் பொருள்கொண்டு அவ்வியல்பினவாகிய வியாத்தியிரண்டனையுங் காட்டுகின்றது.

கேவலாந்நுவயியாகிய துணிபொருளினையுடைய இலிங்கம் கேவலாந்நுவயி.

கேவலாந்நுவயியாகிய துணிபொருளினையுடைய எ-து. அந்நுவயத்தின் மாத்திரமே வியாத்தியுடையதெனப்படுங் கேவலாந்நுவயியினிலக்கணத்தின்கண் மாத்திரையென்னும் பதத்தால் வெதிரேகவியாத்தி நீக்கப்படுதலின் பெறுதற்கும் பெருமைக்குங் கேடுவருதலின் அதனை வேறோராற்றான் விளக்குகின்றது.

முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாகாமை கேவலாந்நுவயித்தன்மை.

முழுதுமபாவம் எ-து. கேவலாந்நுவயியாகிய துணிபொருளினையுடைய வெதிரேகமாகிய வேது கவரப்படும்பொருட்டுத் துணிபொருட்கண் கேவலாந்நுவயியாதல் பெய்துரைக்கப்பட்டது; அதற்கு நிருத்தி கூறுகின்றது. வரைந்துகொள்ளப்படாத உண்மையுடையது முழுதுமபாவம் எ-று. அதனால் ஆகாயத்தி னபாவத்தின் சையோகத்தி னபாவமுதலிய துணிபொருளினையுடைய எது கொள்ளப்படும்.

குடம் அபிதேயம் எ-து. கேவலாந்நுவயிக்கு உதாரணங் கூறுகின்றது. இறைவனுணர்விற்கு விடயமாந்தன்மையும் எல்லாமொழியானும் பெயரிட்டு வழங்கற்பாலதாந்தன்மையும் யாண்டுமுண்மையின் வெதிரேகமிலதாயிற்று. வெதிரேகத்தின் எ-து. கேவலவெதிரேகிக்கு இலக்கணங் கூறுகின்றது. பிருதிவி எ-து. கேவலவெதிரேகிக்கு உதாரணங் கூறுகின்றது. அற்றேல் ஏனையவற்றின் வேறுதல் வழக்குடையதோ அன்றோ; முதலாவதாயின் யாண்டு வழக்குடையது ஆண்டு எதுவுண்டெனின் அந்நுவயியாம், இன்றெனிற் சிறப்புடைத்தாம். இரண்டாவதெனின் துணிபொருளறிவின்மையின் அதனன் விசேடிக்கப்பட்டவநுமிதி எங்ஙனந் தோன்றும், விசேடண அறிவில்வழி விசேடிக்கப்பட்டதனறிவு தோன்றாமையினென்பது.

குடம் படமுதலியவற்றால் பெயரிட்டு வழங்கற்பாலதாதல் படமுதலியவற்றின்கணின்மையின் யாண்டுமுளதாகாமையின் எல்லாமொழியானும்பெயரிட்டுவழங்கற்பாலதாந்தன்மை எனப்பட்டது. நூலின் வெதிரேகத்

தின் மாத்திரம் வியாத்தியுடையது எ-து. துணியப் பட்ட வெதிரேகத்தின்மாத்திரம் வியாத்தியுடையது எ-று. அதனால் பிருதிவி ஏனையவற்றின் வேறு நாற்ற முடைத்தாதலான் என்பது முதலியவற்றுள் அந்நுவய வியாத்தியுள்ளவழியும் இலக்கணம் நன்குபோதருதல றிக. ஏனையவற்றின் வேறுதல் பிருதிவி ஏனையவற் றின் வேறுதலான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோ கித்தன்மையுடையதனின்வேறுதல்.அந்நுவயியாம்எ-து அந்நுவயத்தோ டடனிகழ்ச்சியைக் கவர்தலுங் கவரப் படுதலுமாகிய வியாத்தியுடைத்தாதலாம் எ-று. ஆக வே வழங்கப்படும் அனுமானம்போல இஃதும் அந்நு வயவெதிரேகியேயாம் என்பது கருத்து. சிறப்புடை த்தாம் எ-து. சபக்கத்தினின்மையெனப்படுஞ் சிறப் பிலக்கணத்துளடங்குதலால் எ-று. வழங்கப்படாத துணிபொருளுடையதன்கண்ணுந் துணிபொருளாகிய விசேடணத்தினையுடைய அநுமானமேயென்னுங் கரு த்தால் துணிபொருளறிவின்மையின் துணிபொருளறி வின்மையின் எனப்பட்டது.

பிரதியோகியறிவின்மையின் வெதிரேகவியாத்தியறி வுந் தோன்றுதாலோவெனின்;—அற்றன்று, அப்புமு தலிய பதின்மூன்றினும் ஒன்றினொன்றின்மையாகிய பதின் மூன்றின்கண்ணுந் தனித்தனியே வழங்கப்படுந்தன்மை பிரு திவிக்கணுண்டென்பது சாதிக்கப்படுமாதலின்.

வெதிரேகவியாத்தியறிவும் எ-து. துணிபொருளபாவத் தின்கண் வியாபகமாய அபாவத்திற்குப் பிரதியோகி யாதல் எ-று. அப்புமுதலிய எ-து. பிருதிவி ஏனையெல் லாவற்றினும் வேறுதல் சாதிக்கப்படுவதன்று, மற்று

நீர்முதலியவற்றின் வேறுபாட்டான் விசேடிக்கப்பட்டமை சாதிக்கப்படும். ஆகவே கூறப்பட்ட குற்றத்திற்கு இடமில்லையென்கின்றது. நீர்முதலியவற்றிற்குரிய ஒன்றினொன்றபாவம் பதின்மூன்றனும் விசேடிக்கப்பட்டமை சாதிக்கப்படும் எ-று. சமுதாயம் வழங்கப்படாமையின் தனித்தனி எனப்பட்டது.

பதின்மூன்றன் றன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட துணிபொருள் ஒருசிலவைகளத்திராமையின் அந்நுவயியாதலுஞ் சிறப்பாதலுமின்று.

**பதின்மூன்றன் றன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட** எ-து. அநுமிதிக்குமுன் துணியப்பட்ட துணிபொருட்டன்மையை வரைந்துகொள்வதனான் வரைந்துகொள்ளப்பட்டனவாகிய தருமிகட்கு வழக்கின்மையின் ஆண்டு எதுவுண்மையு மின்மையுங் கூறுதற்கண் அந்நுவயியாதலும் சிறப்பாதலுமின்றென்பது போந்த பொருளாகக் கொள்க.

தனித்தனியாகிய இடத்தின்கணுள்ள வழக்கால் துணிபொருளான் விசேடிக்கப்பட்ட அநுமிதியும், துணிபொருளினபாவத்தின் வியாபகமாகிய அபாவத்தின் பிரதியோகியாதலின் வெதிரேகவியாத்தியைத் தெரித்துணர்த்துதலும் உளவாமாகலின் யாது ஏனையவற்றின் எனப்பட்டது.

**தனித்தனியாகிய** எ-து. தனித்தனியே வழக்கின்கண் அவாவிநிற்கும் புத்திக்கு விசேட விடயமாதலெனப்படுஞ் சமுதாயமாதலான் விசேடிக்கப்பட்ட அறிவுளதாம். ஆகவே, விசேடணத்தன்மையை வரைந்துகொள்வதா

கிய விசேடணம் விளக்கப்படுதலுண்மையின் துணிபொ ருட்டன்மையை வரைந்துகொள்வதனன் விசேடிக்கப் பட்ட விசேடிக்கப்பட்டமையுடையதனேடு அழுந்திநிற் கும் அநுமிதியும் வெதிரேகவியாத்தியறிவும் உளவாமெ ன்கின்றது.

நீர்முதலிய பதினன்கிற்கு முரியனவாய் அப்பதினன்கன் கண்ணுந் தனித்தனியே வழக்குடையனவாகிய ஒன் றினென்றபாவங்களென்னு முறைமையாற் கூறுதல் நன்றாயினும் அருத்தாபத்தி வேறு பிரமாணமாமெனக் கொள்ளும் பிரபாகரமதத்தோரை மறுக்கும்பொருட்டு வெதிரேகவியாத்தி அநுமிதிக்கு அங்கமாதல் காட்டப் படற்பாற்றாகலின் அம்மதப்பொதுமையால் வெதிரேக வியாத்தி காட்டுதற்கு நீர்முதலிய பதின்மூன்று என்பது முதலியன வுரைக்கப்பட்டன. அம்மதத்து நீர்முதலிய பதினன்கிற்குமுரிய ஒன்றினென்றபாவங்கள் வழக் குடையன என்னற்க, நிலைக்களமில்லதாகிய அபாவம் அவராற் கொள்ளப்படாமையினெனக் கொள்க.

மற்றுச் சிலர் நீரைமுதலாகவுடைய பதின்மூன்றனவெ்தென விரித்து நீர்முதலியவற்றின் பிரதியோகியுடையவாகிய பதினன்கிற்குமுரியவொன்றினென்றபாவங்களது எ-ம் பதினன்கன்கண்ணும் என்பதற்கு நீர்முதலியன எ-ம மேல்விரித்த முறைபற்றிப் பதினன்கன்கண்ணுமெனப் பொருள்கூறி முன்னரு மிவ்வாறே யறிந்துகொள்க வெனக் கூறுப.

௪௨. பக்கம் ஐயுற்றத்துணியும் பொருளுக்கிடம்: எங்ஙனம், புகையுடைமையாகிய—ஏதுவின்கண் மலை·

சபக்கம் துணிந்தபொருளுக்கிடம்: எங்ஙனம், அவ்வேதுவின்கண் அடுக்களை. துணிந்த பொருளில்லாத விடம் விபக்கம்: எங்ஙனம், ஆண்டே மடு.

ஐயுற்று எ-து. பக்கத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. அற்றேல், கேள்வியின் பின்னுளதாவதாகிய சிந்தனைக்கண் அதிவியாத்திவரும். ஆண்டு வேதவாக்கியங்களினால் ஆன்மா துணியப்பட்டமையின் ஐயமின்மையி னென்பது. அன்றியும், காட்சிக்குப்புலனாகிய தீயின்கண்ணும் இச்சையுள்வழி யநுமிதி தோன்றும்; ஆண்டு அவ்வியாத்தி வருமெனின்;— அற்றன்று, மேற்காட்டப்பட்ட பக்கத்தன்மைக்குப் பற்றுக்கோடாதல் பக்கத்திற்கு இலக்கணமாகலி னென்பது. துணிந்த எ-து. சபக்கத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. துணிந்தபொருள் எ-து. விபக்கத்திற்கு இலக்கணங் கூறுகின்றது.

நூலுள் ஐயுற்றுத்துணியும் எ-து. விசேடணத்தன்மைச் சம்பந்தத்தால் துணிபொருளாகிய விசேடணத்தினையுடைய ஐயத்தான் விசேடிக்கப்பட்ட எ-று. சபக்கத்தினிலக்கணமுதலியனவும் இங்ஙனமே விளக்கற்பாற்று. தீபிகையுள் அற்றேல் எ-து. பக்கத்தினிலக்கணத்திற்கு அவ்வியாத்திவருமெனச் சங்கித்துரைக்கின்றது.

அன்றியும் எ-து. ஐயத்தோடுகூடாத ஆகமப்பிரமாணத்தின்கண் அதிவியாத்திகூறிக் காட்சிப்பிரமாணத்தின்கண்ணு மதுகூறுகின்றது. காட்டப்பட்ட எ-து. துணிதல்வேட்கையான் விசேடிக்கப்பட்ட பெறுதியின்மையெனப்படும் பக்கத்தன்மைக்குப் பற்றுக்கோடாதல் பக்கத்திற்கு இலக்கணமாகலின் எ-று.

## ஏதுப்போலி.

ரு௩. ஏதுப்போலிகள் சவ்வியபிசாரம், விருத்தம், சற்பிரதிபக்கம், அசித்தம், பாதிதம் என ஐவகையின. அவற்றுள் சவ்வியபிசாரம், அநைகாந்திகம். அது பொதுவும், சிறப்பும், முடிவுபெறாததும் என மூவகைத்து.

சவ்வியபிசாரம் எ-து. இவ்வாறு உண்மை ஏதுக்களைத் தெரித்துணர்த்தி இன்மையேதுக்களைத் தெரித்துணர்த்தும்பொருட்டுப் பகுக்கின்றது.

உண்மையேதுக்களைத்தெரித்துணர்த்தி எ-து. வியாத்தி முதலியவற்றான் விசேடிக்கப்பட்ட ஏதுக்களைத் தெரித்துணர்த்தி எ-று. உண்மையேதுவைத் தெரித்துணர்த்துகின்றுழி இன்மையேது நினைக்கப்படுதலின் பிரசங்கத்தால் நன்குபோதருமாகலின் அது தெரித்துணர்த்தப்படுகின்றதென்பது கருத்து. நூலுள் ஏதுப்போலிகள் எ-து. ஏதுப்போறலின் ஏதுப்போலி எனப்படுங் குற்றமுடைய ஏதுக்கள் தெரித்துணர்த்தப்படுகின்றன எ-று. அநுமிதி எ-து. அற்றேல், பொதுவியல்பாகிய விசேடணத்தி னறிவின்றி விசேட அறிவின் வேட்கைதோன்றாதாகலின் பகுத்துக்காட்டுதல் நன்றன்று என்னும் ஆசங்கை நீக்குதற்குக் குற்றத்தினிலக்கணங் காட்டப்பட்டவழிக் குற்றமுடைத்தாதலெனப்படுங் குற்றமுடையதனிலக்கணம் நன்குவிளங்குதலின் அது பெறப்படுமென்னுங்கருத்தால் குற்றத்திற்குப் பொதுவிலக்கணங் கூறுகின்றது.

அனுமிதியைத் தடுப்பதாகிய உண்மையறிவிற்கு விடயமாதல் ஏதுப்போலித்தன்மை.

ஏதுப்போலித்தன்மை எ-து. ஏதுப்போல்வன ஏதுப்போலி, அஃதாவது ஏதுவின்கணுள்ளனவாகிய குற்றங்கள்; அவற்றின்றன்மை ஏதுப்போலித்தன்மை. எ-று. 'மடு தீயுடையது' என்பதுமுதலிய அனுமிதிக்குத் 'தீயின்மையுடையது மடு' என்பதுமுதலிய பாதம் நிச்சயப்படுதல் தடையாகலின் பிரமையுடைத்தாகிய அவ்வியல்பினையுடைய நிச்சயத்திற்கு விடயமாதல் தீயில்லதாகிய மடு முதலியவற்றுள் உளதாதலின் இலக்கணம் பொருந்துமாறறிக. அவற்றுள் அநுமிதியென்னும்பதம் விடாத விலக்கணையால் அநுமிதியும் அதன்கரணமுமென்னும் இரண்டனுளொன்றுதலென்னும்பொருட்டு. அதனால் முறைபிறழ்ச்சிமுதலியவற்றினறிவு ஆராய்ச்சியைத் தடுப்பதாதலானேகொள்ளப்படுதலின் அநுமிதிக்குத் தடையாகாதவழியும் முறைபிறழ்ச்சி முதலியவற்றுள் அவ்வியாத்தியின்று.

'மலை தீயில்லது' என்னும் பாதமுடைத்தாகிய பிறழ்ச்சியுணர்வு 'மலை தீயுடைத்' தென்னு மநுமிதிக்குத் தடையாகலின் அதன் விடயமாகிய தீயினபாவமுதலியவற்றின்கண் அதிவியாத்தி வருமாகலின் உண்மையறிவிற்கு எனப்பட்டது. பிறழ்ச்சியுணர்வின் வேறுகிய எ-று.

இனி இவ்வாறுயினும் தீயினபாவமுடைத்தாகிய மலைவினையுடைய பாதத்தின் ஏகதேசத்தின்கண் தீயினபாவமுதலியவற்றின்கண் அதிவியாத்திவரும், 'தீயினபாவமுடையது மடு' எனப்படும் உண்மையறிவிற்கு விடயமா

தல் ஆண்டுண்மையினெனின்;— அற்றன்று, எதன்வடிவான் வரைந்துகொள்ளப்பட்ட விடயத்தினையுடைய ஞானப்பொதுமை யநுமிதிக்குத் தடையாம், அதன் வடிவாந்தன்மையால் வரைந்துகொள்ளப்பட்டதாதல் குற்றத்தன்மையென்பது முடிந்தபொருளாகலிற் குற்றமின்றாகலானும் தீயினபாவத்தன்மையான் ' வரைந்து கொள்ளப்பட்ட விடயத்தினையுடையதாகிய 'தீயினபாவத்தையுடையது மடு' என்னுமறிவு அநுமிதிக்குத் தடையாமெனினும் அவ்வியல்பிற்றாகிய ஞானப்பொதுமையினடங்குவதாகிய தீயினபாவமெனப்படும் ஞானந் தடையாகாமையின் தீயினபாவத்தன்மை முதலியனவற்றிற்கு யாது என்னும் பதம் கொடுக்கப்படுதலின்றாகலானும் என்பது.

உண்மையென்னும் பதம் நின்றவற்றும், 'மலை தீயில்லது' என்னும் பிறழ்ச்சியுணர்விற்கு விடயமாகிய தீயினபாவமுதலியவற்றின்கண் வரும் அதிவியாத்தி மேற்கூறப்பட்ட முறைமையாற்றானே நீக்கப்படுமாகலினெனக் கூறற்க, ஞானமென்னும் பதம் ஞானவிசேடமென்றுந் தாற்பரியத்தினைக் கவர்வதாகலின் உண்மையென்னும் பதத்தோடொத்த பொருளுடைத்தாமாகலினென்பது.

இங்ஙனமே எதன்வடிவான் வரைந்துகொள்ளப்பட்ட விடயத்தினையுடையதும் வருவிக்கப்படாததும் பிரமாணமாகாததுமாகிய அதிவாற் ப்லவாதலாகிய நிச்சயப்பொதுமை முதற்கண்ணதாகிய அநுமிதிக்குத் தடையம், அதன்வடிவான் வரைந்துகொள்ளப்பட்டதாதல் குற்றத்தன்மையென்னும் பொருள் முடிக்கப்பட்டது;

அதனால் தீயினபாவத்தையுடைய மடுவாகிய விடயத்தி னையுடையதாக, வருவிக்கப்பட்டதாக, பிரமாணமாகாத ஞானத்தான் விசேடிக்கப்பட்ட ஞானமாக, ஐயமாக, அநுமிதிக்குத்தடையாயவழியும் அசம்பவமாகாது. இனி யமையும்.

மற்றுப் பிறரெல்லாம் இது குற்றமுடையனவற்றிற்கே இலக்கணம்; எனையது அறியப்படு முறைபிறழ்ச்சிமுத லியனவற்றிற்குத் தடையாதல் அடைந்தேயாம். அதன் பொருள் யாவை யநுமிதிக்குத் தடையாவனவாகிய முறைபிறழ்ச்சி முதலியனவாம், அவற்றுள் ஒருஞானத் திற்கு விடயமாதலான் விசேடிக்கப்பட்ட முதற்கண்ண தாகிய ஏதுத்தன்மையை வரைந்துகொள்வதனையுடை யதன் சம்பந்தத்தால் அதன்விசேடணமாகிய உண்மை யறிவிற்கு விசேடியமாதல். 'புகையுடைத்துத் தீயால்' என்பது முதலியவற்றுள் புகையினபாவமுடையதன் கண் உளதாதலான் விசேடிக்கப்பட்ட தீயின் முறை பிறழ்ச்சி மேற்கூறப்பட்ட சம்பந்தத்தால் அதனையு டையது மலையெனப்படும் உண்மையறிவிற்கு விசேடி யமாதலுளதாமாகலின் இலக்கணம் பொருந்துமாறறிக.

அநுமிதியென்னும் பதம் முதற்கண்ணதாகிய அநுமிதி யென்னும் பொருட்டாகலின் உண்மையேதுவின்கண் அநுமிதிக்குத் தடையாகிய முறைபிறழ்ச்சிமுதலியன வழங்கப்படாமையின் அதிவியாத்தியின்றென்பது. உண் மையென்னும் பதம் நீக்கப்பட்டவழிக் காட்டப்பட்ட சம்பந்தத்தான் முறைபிறழ்ச்சியாகிய விசேடணத்தினை யுடைய பிறழ்ச்சியுணர்வாகிய விசேடியத்தன்மை உண் மையேதுவின்கண்ணுமுளதாகலின் அதிவியாத்தி வரு மாதலின் அது புணர்த்துரைக்கப்பட்டது எனக் கூறுப.

அது எ-து. சவ்வியபிசாரத்தினைப் பகுக்கின்றது.

அது எ-து. மற்றுப் பொதுவிலக்கணம் பொது முதலியவற்றுளொன்றாதலென்பது வெளிப்படை.

ருச. அவற்றுள் பொதுவனைகாந்திகம் துணிபொருளில்லாவிடத்துமிருப்பது. எங்ஙனம், மலை தீயுடைத்து பிரமேயமாதலால் என்பது; பிரமேயமாந்தன்மை தீயில்லாவிடமாகிய மடுவின்கண் இருத்தல் அறியப்படுதலினென்க. சிறப்பனைகாந்திகம் சபக்க விபக்கங்களெல்லாவற்றினும் இல்லாதது. எங்ஙனம், சத்தம் நித்தியம், சத்தத்தன்மையுடைமையான் என்பது. சத்தத்தன்மை நித்தியப்பொருள் அநித்தியப்பொருள் யாவற்றினு மின்றிச் சத்தத்தின்மாத்திர மிருப்பது. முடிவுபெறாதது அந்நுவய திருட்டாந்தமும், வெதிரேக திருட்டாந்தமும் இல்லாதது; எங்ஙனம், எல்லாம் அநித்தியம், பிரமேயமாதலால் என்பது. ஈண்டு எல்லாம் பக்கமாதலின் திருட்டாந்தமில்லை.

அவற்றுள் எ-து. பொதுவனைகாந்திகத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. எங்ஙனம் எ-து. உதாரணங் கூறுகின்றது. சபக்கம் எ-து. சிறப்பனைகாந்திகத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. அந்நுவயம் எ-து. முடிவுபெறாதற்கு இலக்கணங் கூறுகின்றது.

நூலுள், அவற்றுள் எ-து. பொதுமுதலியவற்றுள் எ-று. துணிபொருளில்லாவிடத்து எ-து. துணிபொருட்டன்மையை வரைத்துகொள்வதாகிய இயல்பின் சம்பந்த

தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையு டையதாகிய வபாவமுடையதனுற் றெரித்துணர்த்தப் பட்ட ஏதுத்தன்மையை வரைந்துகொள்வதன் சம்பந் தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட ஆதேயத்தன்மையு டையது எ-று.

அதனுல் 'தீயுடையது புகையால்' என்பதுமுதலியவற்றுள் ஏதுவுடைத்தாகிய மலைமுதலியவற்றின்கண் அவ்வத் துணிபொருளினபாவமும் வேறு சம்பந்தத்தான் வரை ந்துகொள்ளப்பட்ட பொதுவபாவமுமுள்ளவழியுந் துணி பொருளில்லதாகிய புகையினுறுப்பு முதலியவற்றுட் சமவாயமுதலியவற்ருற் புகைமுதலியன உள்ளவழியும் அதிவியாத்தியின்றென்பது. ஈண்டுத் துணிபொருள பாவமுடைத்தாந்தன்மைக்கட் சம்பந்தவிசேடத்தான் வரைந்துகொள்ளப்பட்டதாதல் கூட்டப்படாதவழிக் 'தீயுடைத்துப் புகையால்' என்பது முதலியவற்றுள் தீ முதலியவற்றினபாவங் காலசம்பந்தமுடையதுமுதலிய சம்பந்தத்தான் மலைமுதலியவற்றின்கணுண்மையி னதி வியாத்தி வரும். தேயசம்பந்தமுடையதாகிய விசேட ணத்தன்மை விசேடத்தான் வரைந்துகொள்ளப்பட்ட தாதல் கூட்டப்பட்டவழிக் குடத்தன்மையினின்மைமு தலிய துணிபொருளுடையதாகிய பிறழ்ச்சியுடையதன் கண் துணிபொருளபாவங் குடத்தன்மைமுதலியவற்றி னது விசேடணத்தன்மையாகிய விசேடணத்தின் நிலைக் களத்துவழங்கப்படாமையின் அதிவியாத்திவருமாகலின் துணிபொருட்டன்மையை வரைந்துகொள்வதன் சம் பந்தத்தால் துணிபொருளுடைத்தாந்தன்மை அவர்வத னைக்குறித்து எச்சம்பந்தத்தால் துணிபொருளில்லதா ந்தன்மையின் -நிச்சயந் தடைப்பாடுடையதாம், அச்சம்

பந்தத்தால் துணிபொருளில்லதாதல் கூறுதல் கருத்தாகக் கொள்ளற்பாற்று, நீமுதலியனவாகிய துணிபொருட்கண் அவ்வியல்பிற்றாகிய சம்பந்தந் தேயசம்பந்தமுடைத்தாகிய விசேடணத்தன்மையுங் குடத்தன்மையினின்மைமுதலியனவாகிய துணிபொருட்கட் சமவாயந் தேயசம்பந்தமுடையதாகிய விசேடணத்தன்மையுமாம். ஆகலிற் குற்றமின்று.

'குரங்கின் கூட்டத்தையுடையது இது, மரமாதலின்' என்பதுமுதலியவற்றுள் அவ்வியல்பிற்றாகிய சம்பந்தம் வரைந்துகொள்ளப்படாத தேயசம்பந்தமுடையதாகிய விசேடணத்தன்மையெனக்கொள்க. விருத்தத்தின்கண் அதிவியாத்தி வருமென மயங்கற்க, 'உபாதியுடையது கலந்துழியும் உபாதி கலவாதாகலி' னென்னு நியாயந் தாற் பொதுவாகிய விருத்தத்தின்கண்ணுங் குற்றமின்மையினென்பது.

நூலுள், சபக்கமெல்லாவற்றினுமில்லாத எ-து. சபக்கத்தினுளதாதலான் வரைந்துகொள்ளப்பட்ட அபாவமுடையது எ-று. எல்லாம் என்னும் பதம் சபக்கத்தினுளதாதற்பொதுமையின் அபாவத்தினை விளக்குவது. சபக்கம் என்னும் பதம் துணியப்பட்ட துணிபொருளுடையது என்னும்பொருட்டு. சத்தத்தின்கண் அநித்தியமாதலைச்சாதிப்பதாகிய சத்தத்தன்மைமுதலிய உண்மையேதுவின்கண்ணும் பக்கத்தின்கட் டுணிபொருளின் ஐயுறவுநிகழ்வுழிச் சிறப்பாதல் விரும்பப்படுதலான் என்பர் சம்பிரதாயமுணர்ந்தோர்.

மற்று நவீனர் உண்மையேதுவின்கண்ணும் பக்கத்தின்கட் டுணிபொருளின் ஐயுறவு நிகழுங்காலத்துச் சிறப்

பாதலும் முதற்கண்ணதாகிய ஆராய்ச்சியின் காலசம் பந்தமுடைய விருத்தத்தி ளுராய்ச்சி நிகழ்கின்றுழிச் சற்பிரதியக்கபக்கமுங் கொள்ளப்படும் வழிப்பாதத்தின் பிறழ்ச்சியுணர்வு நிகழுங்காலத்துப்பாதமுங் கொள்ளப் படுதல் வேண்டுமாகலின் மாறிக்கூறுதற்கட் பொருந்து மாறுகீண்டிலம். இவ்வாறாகலின் ஈண்டுச் சபக்கம் என் னும் பதந் துணிபொருளுடையது என்னுமாததிளை யேயுணர்த்துவது. 'சத்தம் அநித்தியம் கேட்கப்படுத லின்' என்பதுமுதலிய துணிபொருளுடையதன்கணில தகிய ஏதுவே இலக்கியமாதலிற் சிறிதுங் குற்றமின் றெனக் கூறுப.

அந்நுவயதிருட்டாந்தமும் வெதிரேகதிருட்டாந்தமு' எ-து. அதன்றன்மையாவது யாதாயினும் விசேடியத்தினையு டைய துணிவிற்கு விடயமாகாத துணிபொருளினை யுடையதாய் யாதாயினும் விசேடியத்தினையுடைய துணி விற்குவிடயமாகாத துணிபொருளின்மையுடைத்தாதல்.

மற்று நவீனமதத்தன் முழுதுமபாவத்தின் பிரதியோகி யாகாமையின் விசேடிக்கப்பட்ட துணிபொருண்முதலி யனவே முடிவுபெறுததாம். அதனறிவு வெதிரேகவி யாத்தி கவர்தற்குத் தடையாம்.

நுகு. துணிபொருளில்லாவிடத்து வியாபித்திருக் கும் ஏது விருத்தம்; எங்ஙனம், சத்தம் நித்தியம் கா ரியப்பாட்டால் என்பது. காரியப்பாடு நித்தியத்தன் மையல்லாததாகிய அநித்தியத்தன்மையான் வியாபிக் கப்பட்டது. துணிபொருளின் மறுதலையைச் சாதிக் கும் ஹேத்தேதுவையுடையது யாது, அது சற்பிரதிப

க்கமாம்; எங்ஙனம், சத்தம் நித்தியம், கேட்கப்படுதலால், சத்தத்தன்மைபோல. சத்தம் அநித்தியம், காரியப்பாட்டால், குடம்போல என வரும். அசித்தம் சார்பசித்தமும், சொரூபாசித்தமும், வியாப்பியத்தன்மையசித்தமும் என மூவகைப்படும். சார்பசித்தம் எங்ஙனம், ஆகாயத்தாமரை நறுநாற்றமுடைத்து தாமரைத்தன்மையால், பொய்கைத்தாமரைபோல என வரும். ஈண்டு ஆகாயத்தாமரை சார்பு; அதுவே இல்லை. சொரூபாசித்தம் எங்ஙனம், சத்தம் அநித்தியம், சட்சுவிற்குப் புலனாதலின், உருவம்போல என வரும். ஈண்டும் சட்சுவிற்குப் புலனாதல் பக்கத்தின்கணின்று, சத்தம் சோத்திரத்திற்குப் புலனாவதாகலின்.

துணிபொருள் எ-து. விருத்தத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. துணிபொருளின் எ-து. சற்பிரதிபக்கத்தி னிலக்கணங் கூறுகின்றது. அசித்தம் எ-து. அசித்தத்தைப் பகுக்கின்றது. ஆகாயம் எ-து. சார்பசித்தத்திற்கு உதாரணங் கூறுகின்றது. சத்தம் எ-து. சொரூபாசித்தத்திற்கு உதாரணங் கூறுகின்றது.

துணிபொருளில்லாவிடத்து எ-து. துணிபொருளில்லாவிடத்து வியாபித்தல் துணிபொருளுடையதன்கணிலதாதல். மற்றுச் சிறப்பு துணியப்பட்ட துணிபொருளில்லதன்கண் இலதாதலின் இரண்டும் ஒன்றாகாது. மற்று நவீனமதத்தின்கட் டுணிபொருளின்மையின் வெதிரேகவியாத்தி துணிபொருட்கண் வியாபகமாதலின்மைக்குப் பிரதியோகியாதலெனப்படுமாகலின் இரண்டுமொன்றாகாதெனப்படும். இவ்வியல்பிற்றாகிய வி

யாத்தியான் விசேடிக்கப்பட்ட ஏதுவுடைத்தாந்தனமையறிவு அநுமிதிக்கு நேரே தடையெனவறிக. துணிபொருளின் எ-து. எதன்றுணிபொருள் எதன்சம்பந்தமுடைத்தாம், அதனபாவத்தின்கண் வியாப்பியமாகிய வேறோரேதுவி னறிவு பக்கத்தின்க ணுளதாமன்றே, அது சற்பிரதிபக்கம் எ-று. முதற்கண்ணதாகிய துணிபொருட்கண் வியாப்பியமாகலானே அறியப்படுவதாகிய முதற்கண்ணதாகிய ஏது யாது, அதனால் வேறோரேதுவின்கட்டுணிபொருளபாவம் வியாப்பியமாத லறிகின்றுழியே அதற்குச் சற்பிரதிபக்கத்தன்மை யுளதாமென்பதுணர்த்துதற்கு வேறோரேதுவினையுடையது எனப் பிராசீனர் கூறுவர்.

இனி நவீனர் கூறுமாறு:— எதன்சம்பந்தமுடைத்தாகிய சாத்தியத்தினபாவத்தின்கண் வியாப்பியமாகிய வேறேதுவுண்மை பக்கத்தின்கணறியப்படும், அது சற்பிரதிபக்கம் எ-று. சார்பசித்தம் எ-து. சார்பசித்தி பக்கத்தின்கட் பக்கத்தன்மையை வரைந்துகொள்வதில்லாதது; பக்கத்தன்மையை வரைந்துகொள்வதில்லாதபக்கமெனினுமாம். நூலுள் அதுவேயில்லை எ-து. தாமரைவழங்கப்படுதலின் 'விசேடணத்தோடு கூடியதன்றோ' வென்னுநியாயத்தால் தாமரையின்கண் ஆகாயத்துளதாதலில்லையென்பது முடிந்தபொருளாகக்கொள்க. சொரூபாசித்தி பக்கத்தின்கண் ஏதுவின்மை; ஏதுவில்லதாகிய பக்கமெனினுமாம்.

நிசு. வியாப்பியத்தன்மையசித்தமாவது உபாதியோடு கூடிய ஏது; உபாதி சாத்தியத்தின் வியாபித்து ஏதுவின்கண் வியாபியாதது. சாத்தியத்தில் வியாபி

த்தல் சாத்தியத்தோ டொருங்கிலைக்களத் துளதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாகாமை. ஏது வின் வியாபியாமை ஏதுவின்கண்ணதாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகியாதல். 'மலை புகையுடைத்து, தீயுடைமையால்' என்புழி ஈரவிறகின் கூட்டம் உபாதி; அங்ஙனமன்றே யாண்டுப் புகையுண்டு ஆண்டு ஈரவிறகின்கூட்டமுண்டு எனச்சாத்தியத்தில் வியாபகமாயும், யாண்டுத் தீயுண்டு ஆண்டு ஈரவிறகின்கூட்டமின்று, ஒழுகக்காய்ச்சிய இரும்பில் ஈரவிறகின்கூட்டமின்மையின் என ஏதுவின்கண் வியாபகமாதலின்றியு மிருத்தலினென்க. இங்ஙனமாதலின், சாத்தியத்தின் வியாபகமாய் ஏதுவின்கண்வியாபகமின்றியிருத்தலின் ஈரவிறகின்கூட்டம் உபாதியாம். உபாதியுடைமையால் தீயுடைத்தாதல் வியாப்பியத்தன்மையசித்தம்.

௨ உபாதியோடு எ-து. வியாப்பியத்தன்மையசித்தத்திற்கு இலக்கணங் கூறுகின்றது.

உபாதியோடுகூடிய எ-து. அற்றேல் உபாதியோடு கூடியதாகிய மேற்பட்டது உண்மையின் ஏதுப்போலி ஐந்தாதலெங்ஙனமென்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது. வியாப்பியத்தன்மையசித்தி வியாத்தியின்மை, அது உபாதியோடுகூடிய ஏதுவின்கண் நியதமாகவுண்மையின் உபாதியோடுகூடியதே வியாப்பியத்தன்மையசித்தமாம். மற்று மேற்பட்டதாகிய ஏதுப்போலியன்றென்பது கருத்து. உபாதிக்குக் குற்றமாதலின்றென்பது முன்னர்த் தீபிகையுள் விளக்கப்படும்.

துணிபொருட்கட் டுணிபொருட்டன்மையை வரைந்து கொள்வதாதல் துணிபொருளின் வழக்கின்மை. ஏது வின்கண் ஏதுத்தன்மையை வரைந்துகொள்வதனபா வம் ஏதுவின் வழக்கின்மை; எங்ஙனம், 'பொன்மயமா கிய தீயுடைத்து பொன்மயமாகிய புகையுடைமையி' னென்பது முதலியவற்றுள் அது கவரப்படுகின்றுழி ஏதுத்தன்மையை வரைந்துகொள்வதனுன் விசேடிக்கப் பட்டதன்கட் டுணிபொருட்டன்மையை வரைந்துகொ ள்வதனுன் விசேடிக்கப்பட்ட வியாத்திகவர்தலின் றடைப்பாடு பலம். அவ்விரண்டும் வியாப்பியத்தன்மை யசித்திக்கணடங்குதலின் மேற்பட்ட ஏதுப்போலியன் றென்பது மீண்டே முடித்துக்கொள்க.

சாத்தியத்தில் எ-து. உபாதிக்கு இலக்கணங் கூறுகின்றது.

சாத்தியத்தில்வியாபகமாதல் எ-து. சாத்தியத்தில் வியாப கமாதலும் சாதனத்தின்கண் வியாபகமாகாமையென்னு மிரண்டும் ஒருவடிவானும் ஒருசம்பந்தத்தானுங் கொள் ளப்படுவனவாம். அதனுல் 'தீயுடைத்துப் புகையால்' என்பது முதலியவற்றுள் அவ்வத்தீயின்கண் தீத்தன்மை யால் சாத்தியத்தில் வியாபகமாதலும் அவ்வத்தீத்தன் மையான் ஏதுவின் வியாபகமாகாமையும் உள்ளவழியும் ஒளியின்கட் சையோகத்தால் சாத்தியத்தின்கண் வியா பகமாதலும் சமவாயத்தால் ஏதுவின்கண் வியாபகமாகா மையுமுள்ளவழியும் அதிவியாத்தியின்று.

உபாதி துணிபொருண் மாத்திரைக்கே வியாபகமாவ தும், பக்கதருமத்தான் வரைந்துகொள்ளப்பட்ட துணிபொருட்கண் வியாபகமாவதும், ஏதுவான் வரைந்து

கொள்ளப்பட்ட துணிபொருட்கண் வியாபகமாவதூஉம், யா தானுமோர் தருமத்தான் வரைந்துகொள்ளப்பட்ட துணி பொருட்கண் வியாபகமாவதுமென நான்குவகைத்து.

உபாதி எ-து. நூலுட்கூறப்பட்ட உபாதியினிலக்கணத்தி ற்கு அதிவியாத்தி நீக்குதற்குத் தீபிகையுள் இலக்கிய த்தி னிலக்கணவேறுபாடு காட்டுகின்றது. எத்தரும த்தான் விசேடிக்கப்பட்ட சாத்தியத்தின்கண் வியாபக மாதலுண்டாம், அத்தருமத்தான் விசேடிக்கப்பட்ட ஏது வின்கண் வியாபகமாகாமை இலக்கணத்தின்கட் கூட் டியுரைக்கற்பாற்று. அங்ஙனமன்றேல், மலைத்தன்மை யாகிய பக்கதருமத்தன்மையான் விசேடிக்கப்பட்ட தீ யாகிய வியாபகம் யாதாயினும் புகைத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட வியாபகமாதலின் அதிவியாத் திவருமென்பதறிக. யாதானும் எ-து. பக்கதத்தினியல் பும் ஏதுவினியல்புமென்னு மிரண்டின்வேறுபாடு எ-று.

அவற்றுள், முதலாவது ஈரவிறகின்கூட்டம். இரண் டாவது எங்ஙனம், 'வாயுக்காட்சிப்பொருள் காட்சிப் பரிசத்திற்குப் பற்றுக்கோடாகலின்' என்புழிப் புறப்பொரு ண்மையான் வரைந்துகொள்ளப்பட்ட காட்சிக்கண் வியாபக மாவது உற்பூதவுருவமுடைமை.

புறப்பொருண்மை எ-து. ஆன்மாவின்வேறாய பொரு ண்மை. இது காட்சிமாத்திரைக்கே துணிபொருளாதல் கொள்ளப்படுதலின்.

மூன்றாவது எங்ஙனம், 'முன்னபாவம் அழிவுடைத்து, தோன்றற்பாலதாகலின்' என்பது. ஈண்டுத் தோன் றற்பாலதாதலான் வரைந்துகொள்ளப்பட்ட அநித்தியத்தன் மைக்கண் வியாபகமாவது பாவத்தன்மை.

மற்று நான்காவது 'முன்னபாவமழிவுடைத்து, பிரமேயமாகலி' னென்பது. ஈண்டுத் தோன்றற்பாலதாதலான் வரைந்துகொள்ளப்பட்ட அநித்தியத்தன்மைக்கண் வியாபகமாவது பாவத்தன்மையெனக் கொள்க.

முன்னபாவம் எ-து. ஈண்டுத் தோற்றுவிக்கற்பாலதாதல் பக்கதருமமாகாதாகலின் ஏதுவான் வரைந்துகொள்ளப்பட்ட சாத்தியத்தின் வியாபகமாதல் இலக்கணத்தின் கட் கூட்டப்பட்டது. அநித்தியத்தன்மைக்கண் வியாபகம் எ-து. நாசமுடைமைக்கண் வியாபகம் எ-று. பிரமேயமாகலின் எ-து. தோற்றுவிக்கற்பாலதாதல் யாதாயினுமொன்றுதல் பெறுதற்பொருட்டு.

ருள. ஏதனது துணிபொருளின்மை வேறு பிரமாணத்தாற்றுணியப்படும், அது பாதிதமாம்; எங்ஙனம், 'வன்னி வெம்மையில்லது, திரவியமாதலின்' என வரும். ஈண்டு வெம்மைத்தன்மையின்மை துணிபொருள். அதனபாவமாகிய வெம்மைத்தன்மை துவக்கிந்திரியக்காட்சியாற் கவரப்படுமாதலின் இது பாதிதமாயிற்று. அநுமானம் உரைக்கப்பட்டது.

ஏதனது எ-து. பாதிதத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. ஈண்டுப் பாதிதங் கொள்ளற்பாலதனபாவத்தைத் துணிதலுடைமையாலும் சற்பிரதிபக்கம் விரோதமுடைத்தாகிய அநுமிதிக்குக் கருவியாகலானும் சேரே யநுமிதிக்குத் தடையாவனவாம். ஏனையுவை ஆராய்ச்சிக்குத் தடையாவனவாம்.

பாதிதம் எ-து. துணிபொருளில்லதாந்தன்மையின் றுணைபு எ-று. கோடற்பாலத னபாவத்தைத்துணிதலுடை

மையான் எ-று. அநுமிதிக்குத் தடையாமென்றதனோ டியையும். விரோதமுடைத்தாகிய அறிவிற்குக் கருவியாகலானும் எ-து. இது பிராசீனமதத்துக் கொள்ளப்படுவது. உண்மையானேக்கின் விரோதமுடைத்தாகிய வாராய்ச்சி துணிபொருளின்மையின் வியாப்பியமுடைத்தாந் தன்மையின் றுணிவாற்றானே தடையாதல் பொய்ம்மையாற் கொள்ளப்படும். ஏனையவற்றுள் எ-து. முறைபிறழ்ச்சி முதலியன கவர்வனவற்றுள் எ-று.

அவற்றுள்ளும் பொதுவநைகாந்திகம் பிறழ்ச்சியின்மையில்லதாகலானும் விருத்தம் ஒருநிலைக்களத்துள தாதலின்மையானும் வியாப்பியத்தன்மைசித்தம் விசேடிக்கப்பட்ட வியாத்தியில்லதாகலானும் சிறப்பநைகாந்திகமும் முடிவுபெறாததும் வியாத்தியின்கண் ஐயுறவினைத் தோற்றுவித்தலானும் வியாத்தியறிவிற்குத் தடையாவனவாம்; சாரபசித்தமுஞ் சொரூபாசித்தமும் பக்கதருமத்தன்மையறிவிற்குத் தடையாவனவாம்.

அவற்றுள்ளும் எ-து. முறைபிறழ்ச்சிமுதலியன கவர்வனவற்றுள்ளும் எ-று. பொது எ-து. குணப்பெயராற் கூட்டப்பட்டமையின் பொதுவெனக் கூறியவாறு. பிறழ்ச்சியின்மையில்லதாகலானும் எ-து. அதன் கவர்ச்சிக்கு என்பது எஞ்சிநின்றது; வியாத்தியறிவிற்குத் தடையென்பதனோடியையும். இவ்வாறு முன்னருங் கண்டுகொள்க.

எது துணிபொருளில்லதன்கணுளதாதலே துணிபொருட் டன்மையென்ற துகொள்வதாயவழி எதுவோடொரு நிலைக்களத்துள தாகிய முழுதும்பாவத்திற்குப் பிரதியோ

இத்தன்மையை வரைந்துகொள்வது முறைபிறழ்வதாக லின் அதன்கவர்ச்சிக்கு ஏதுவோடொருநிலைக்களத்துள தாகிய முழுதுமபாவத்திற்குப் பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வதனபாவமெனப்படும் முறைபிறழ்ச்சி யாது; அதன் கவர்ச்சிக்குத் தடையென்பது கருத்து.

ஏதுவின்கட் டுணிபொருளில்லதன்கணிலதாதலாகிய இயல்பு கவர்தல் வியாத்திகவர்தற்குத் தடையாதல் மணிமந்திராதிநியாயத்தாலென்க. விசேடிக்கப்பட்ட வியாத்தியில்லதாகலான் எ-து. ஏதுவின் வியாபக த்தன்மையை வரைந்துகொள்வதாகிய துணிபொருட் டன்மையை வரைந்துகொள்வதனான் வரைந்துகொள் ளப்பட்ட ஒருநிலைக்களத்துளதாதலின் அபாவமெனப் படுவதனான் எ-று.

வியாத்தியின்கண் ஐயுறவினைத்தோற்றுவித்தலானும் எ-து ஏதுவின்கட் சிறப்பாதன்முதலியன அறியப்படுகின் றுழி ஏதுவிற்குந் துணிபொருட்கும் ஒருநிலைக்களத்து ளதாதலின் றுணிவின்மையானும் பக்கத்தினடங்குத லானுந் துணிபொருளினையுறவால் வியாத்தியினையுறவு தோன்றுதலான் வியாத்தி துணியப்படாதென்னும் பிராசீனமதம்பற்றி இவ்வாறுரைக்கப்பட்டது.

பக்கதருமத்தன்மையறிவிற்குத்தடையாம் எ-து. பக்கத் தின்கண் பக்கத்தன்மையை வரைந்துகொள்வதில்லா மையும் ஏதுவில்லாமையுந் துணியப்படுகின்றுழி ஏது வின்கண் பக்கத்தன்மையை வரைந்துகொள்வதனான் விசேடிக்கப்பட்ட பக்கத்தினுளதாதலின் கவர்ச்சியின் மையென்பது கருத்து.

மற்று உபாதி முறைபிறழ்ச்சி யறிவின்வழியானே வியாத்தியறிவிற்குத் தடையாம்.

அற்றேல் பக்கத்தன்மையென்றல் நன்கு போதராது, ஏதுவின்க ணுபாதி கவரப்படுகின்றுழியும் வியாத்தியின் றுணிவின்மையின் உபாதியறிவு வியாத்தியின் றுணிவிற்குத் தடையாகலின் ஒருதலையாற் கூறப்படற்பாற்றாகலின் உபாதியும் ஏதுப்போலியி னிலக்கணத் தினடங்குதலின் உபாதி எனப்பட்டது. முறைபிறழ்ச்சியறிவின் வழியானே எ-து. ஆகவே ஏதுப்போலியி னிலக்கணத்துள் நேரே யநுமிதியும் அதன் கரணமும் என்னு மிரண்டனுளொன்றற்குத் தடையாதல் பெய்துரைக்கப்படற்பாற்றாகலின் வேறொரு முகம்நோக்கு வதாகிய உபாதி ஏதுப்போலியன்றென்பது கருத்து.

மற்றுச் சித்தசாதனம் பக்கத்தன்மையைச் சிதைத்தலின் சார்பசித்தத்து ளடங்குமென்பர் பிராசீனர் தோல்வித்தானத்துளொன்றென்பர் நவீனர்.

சித்தசாதனம் எ-து. அற்றேல் அங்ஙனமாயினும் பெறுதியுள்வழி அநுமிதி தோன்றாமையின் அதன் விடயமாகிய துணிபொருளுடைத்தாகிய பக்கமும் ஏதுப்போலியாதல் ஒருதலையான் வேண்டப்படுமென்னும் ஆசங்கையைக்கழிந்ததாகிய நையாயிகமதம்பற்றி விரும்பியதுபெறுதலாற் பரிகரிக்கின்றது. பக்கத்தன்மையைச்சிதைத்தலான் எ-து. அம்மதத்துப்பக்கத்தன்மை துணிபொருளி னியுறவெனப்படுமாகலின் அதனைச் சிதைத்தல் துணிபொருளின் றுணிவு என்பதற்குக் கேடன்றென்பது கருத்து. அடங்குதலான் எ-து. ஆகவே பருத்தற்குக் கேடின்றென்பது கருத்து. காட்டப்

பட்ட மதம் வலிதன்றென்னுங் கருத்தால் தோல்வித் தானத்துளொன்று எனப்பட்டது.

சித்தாந்தத்துள் அநுமிதிக்குப் பெறுதி தடையாகலின் அதன் விடயம் ஏதுப்போலியாகாத தென்னையென்பதூஉம் பொருந்தாது, சாதித்தல் வேட்கை பெறுதிக்குத் தடையாதற்கண் மாற்றாகலின் சாதித்தல் வேட்கையோடுகூடிய பெறுதிமாத்திரையே தடையாகாமையின் அதன் விடயமாகிய ஏதுப்போலியி னிலக்கணத்துள் அடங்குதலானென்பது கருத்து. ஏனையனைத்தும் மணிப்பிரபையென்னு முரையுளுரைத்தாம், ஆண்டு நுண்ணிதிற் கண்டுணர்க.

## உபமானப்பிரமாணம்.

ருஅ. உவமானம் உவமிதியறிவிற்குக் கரணம். உவமிதி பெயர்க்கும் பெயருடையதற்கு முளதாகிய சம்பந்தவறிவு. அதற்குக் கரணம் ஒப்புமையறிவு. ஆங்ஙனமன்றேல், ஆமா என்னுஞ் சொற்குப் பொருளறியாதானொருவன் யாங்காயினுங் காட்டகத்துள்ளானாகிய வேடனொருவனால் ஆவினையொக்கும் ஆமா எனக் கூறக்கேட்டுக் காட்டிற்சென்று அவன்கூறிய சொற்பொருளை நினைந்து ஆவொப்புமையுடைத்தைக் காண்கின்றான். அதன்பின்னர் இது ஆமா என்னுஞ் சொற்பொருள் என உவமிதியறிவு தோன்றுமென [illegible] உரைக்கப்பட்டது.

உவமிதி எ-து. உவமானத்திற்கு இலக்கணங் கூறுகின்றது.

உவமானத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. எ-து. முறையானே உவமானத்தினைத் தெரித்துணர்த்துகின்றது. எ-று. நூலுள் பெயர்க்கும் எ-து. உவமிதிக்குப் பொருள் கூறுகின்றது. பெயர் ஆமா வென்னுஞ்சொல்; பெயருடையது ஆமா; அவற்றின் சம்பந்தம் ஆற்றல், அதனையறியுமறிவு எ-று. மற்று இலக்கணம் உவமிக்கின்றேன் எனப் பின்னிகழுமுணர்ச்சியாற் போதரற்பாலதாகிய உவமிதியாதலென்பதறிக.

தொடர்மொழிப் பொருளைநினைந்து ஆவோப்புமையுடையபிண்டத்தைக் காண்கின்றான் எ-து. இதனால் நினைவு ஒப்புமை காண்டலைத் தோற்றுவிப்பது; விளங்கக்காட்டுவதாகிய வேறொன்றனைத் தோற்றுவிப்பதெனினுமாம். இரண்டும் ஒப்புமையறிவோ டொனிகழ்வதாம். மற்று ஒப்புமை காண்டலைத் தோற்றுவிப்பதே நினைவோ டொனிகழ்வதன்றென்பது கருதப்பட்டது.

மற்றுப் பிராசினர், தொடர்மொழிப்பொருளை நினைந்து என்புழி நினைந்து என்பதற்கு நினைவானும் எனப் பொருள்கூறி வாக்கியப்பொருணினைவிற்கு ஒப்புமைக் காட்சியைத் தோற்றுவிப்பதாதல் பெறப்படுதலான் வியாபாரத்தன்மை பெறப்படுமெனக் கூறுப. அதன் பின்னர் எ-து. ஒப்புமைக் காட்சியின் பின்னர் எ-று. ஆமா ஆமாவென்னுஞ்சொற்குப் பொருளென்னும் வடிவிற்றாகிய [illegible]யெனப்படும் [illegible]யா [illegible] அறிவுமாக்[illegible] [illegible]ன் [illegible]யுடையதாகிய உவமிதிதோன்றும் எ-று. இஃ

துபலக்கணம்; வேற்றியல்பினையுடையதனைக் காணுமை யானும் உவமிதி தோன்றுமெனவறிக.

மற்று வைசேடிகர் பதப்பொருளாதற்கண் வியாப்பியமாகிய ஒப்புமை முதலியவற்றி னாராய்ச்சியால் பதத்திற்குப் பொருளாதல் அநுமிதியெனவே படுமாகலின் உவமானம் வேறு பிரமாணமன்றெனக் கூறுப. வியாத்தியறிவின்றியுஞ் சொற்பொருட் பிரமிதி தோன்றுதல் அநுபவத்தானறியக் கிடத்தலின் அது பொருந்தாமையறிக. இதன் விரிவெல்லாம் மேனூல்களுட் கண்டுகொள்க.

## சத்தப்பிரமாணம்.

நிகூ. சத்தமாவது ஆத்தன் வாக்கியம். ஆத்தன் உள்ளது கூறுவோன். வாக்கியம் பதங்களின்கூட்டம்; எங்ஙனம், ஆவைகொணு என்பது.

ஆத்தன் எ-து. சத்தத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. வாக்கியம் எ-து. வாக்கியத்திற்கு இலக்கணங் கூறுகின்றது.

சத்தத்திற்கு இலக்கணங் கூறுகின்றது எ-து. காரணகாரியத்தன்மை நன்குபோதருதலின் சத்தத்தினைத் தெரித்துணர்த்துகின்றது எ-று.

அறியப்படுவதாகிய சத்தம் சத்தப்பிரமாணமாகலின் சத்தம் உவமானத்தின் காரியமாகாமையின் உவமிதியும்

ஞானமுஞ் சாத்தஞானமென்னும் பலமிரண்டும் நன்கு போதருதலறிக. அங்ஙனமன்றே, ஆற்றலின் விளக்கமே உவமிதியாம்; அஃதும் சாத்தஞானத்தின் காரணமாகலிற் பலமிரண்டுங் காரண காரியத்தன்மையுடையனவாம். அவ்வியல்பிற்றாகிய நன்குபோதருதல் பலத்தின் கண்ணதாயினுந் தன்னைப்பற்றி ற்குங் காரணமாகிய பரம்பரைச் சம்பந்தத்தாற் காரணத்தின் கண்ணதாகலிற் கரணமிரண்டன் பின் பெயரிட்டாளுதல் பயன்றருவதாயிற்று.

மற்று, சத்தஞானம் பிரமாணமாதல்கொள்ளும் நவீனமதத்துள் உவமிதியாற்றலுடைத்தாகிய பதத்திற்கு விடயமாதலுடைமையிற் சத்தப்பிரமாணமாகலின் ஆண்டும் உவமானத்தாற் றோன்றற்பாலதாதற்குக் கேடின்மையின் சொரூபமிரண்டும் நன்குபோதருதல் கொள்ளற்பாலனவாம். நூலுள் சத்தம் ஆத்தன்வாக்கியம் எ-து. சத்தமென்பது இலக்கியத்தினை யெடுத்துக் காட்டியவாறு. பிரமாணமாகிய சத்தம் என்பது அதன்பொருள் ஆத்தன்வாக்கியம் எ-து. இலக்கணம். 'நீரால் நனை' என்பதுமுதலிய சத்தங்கள் ஆத்தனாற்கூறப்பட்ட வாக்கியமாமன்றே. மற்றுத் 'தீயால் நனை' என்பதுமுதலிய சத்தங்கள் அங்ஙனமாகாது, அவற்றைக்கூறும் வினைமுதற்கு உள்ளது கூறுவோனாதலெனப்படும் ஆத்தனாந் தன்மையின்மையினென்பது. முதற்கண்ணதாகிய வாக்கியப்பொருளைப் புலப்படக்காணும் உண்மையறிவாற் றோன்றற்பாலதாய வாக்கியம் பிரமாணமாகிய சத்தமென்பது தேற்றம். வாக்கியத்தினையாளுதற்கு வாக்கியஞானங் காரணமாதலின் இலக்கணம் நன்குபோதரும். இது சத்தமணியின்கண் வெளிப்படை.

௧௦. ஆற்றலுடையது பதம். ஆற்றல் இப்பதத்தால் இப்பொருளுணர்த்துக என்னும் இறைவனிச்சையாகிய சங்கேதம்.

ஆற்றலுடையது எ-து. பதத்தினிலக்கணங் கூறுகின்றது. இப்பதத்தால் எ-து. ஆற்றல் பொருள் நினைவிற்கு ஏற்புடைத்தாகிய சொற்கும் பொருட்குமுளதாகிய சம்பந்தம்; அஃதும் வேறு பதார்த்தமென மீமாஞ்சகர் கூறுப; அதனை மறுத்துரைக்கின்றது. சாத்தன்முதலியவற்றிற்குப்போலக் குடமுதலியனவற்றிற்குஞ் சங்கேதமே ஆற்றலாகலின் வேறுபதார்த்த மன்றென்றவாறு.

பொருணினைவிற்கு எ-து. மீமாஞ்சகமதத்தை மறுப்பதாகலின் முன்வரும் நூல்வாக்கியத்தினைத் துணியும்பொருட்டு அம்மதப்பொதுமையால் ஆற்றலென்னும் பதத்திற்குப் பொருள் கூறுகின்றது. சாத்தஞானத்தினைத் தோற்றுவிப்பதாகிய பொருணினைவிற்கு ஏற்ற குடமுதலிய பதங்கட்கும் குடமுதலியனவெனப்படும் பொருள்கட்குமுளதாயசம்பந்தம் ஆற்றல் எ-று. ஏற்புடைத்தாதல் கண்டுப் பயப்பதாதல்; அஃதுங் காரணத்தன்மையை வரைந்துகொள்வதாகிய பதத்திற்கும் பதப்பொருட்குமுளதாய சம்பந்தத்தின்கண்ணுங் கேடில்லதாமென்க. குடமுதலிய பதங்களும் அவற்றின்பொருளும் என்னுமிவற்றின்வேறாய சம்பந்தத்தினிக்குதற்குப் பொருணினைவிற்கு ஏற்புடைத்தாகிய வெனப்பட்டது, அவற்றின்வேறாய சம்பந்தஞானம் பொருள் நினைவினைத் தோற்றுவிப்பதாயினும் சாத்தஞானத்தினைத் தோற்றுவிப்பதாகிய நினைவினைத் தோற்றுவிப்பதாகாமையினென்பது. பொருள் நினைவிற்கு ஏற்புடை

த்தாதல் ஊழ்முதலிய பொதுமையாளுகலின் விசேடிய மெனவறிக. வேறுபதார்த்தம் எ-து. அவ்வப்பதார்த்தத்தன்மையை வரைந்துகொள்வதாகாமையின் விசேடிக்கப்பட்டது எ-று. அதனுல் மேற்பட்டதாகிய பதார்த்தமாதல் வேறு மதத்துள் வழங்கப்படுவதன்றாயினுங் கேடின்றென்பது. இப்பதத்தால் இப்போருள் என்னும் நூற்கு இப்பதத்தாற்றோன்றிய ஞானத்திற்கு விடயம் இப்பொருளெனப்படும் ஈசுரனிச்சை ஆற்றல் எ-று.

வேறுபதார்த்தம்அன்று எ-து. ஈசுரனது ஞானம் இச்சையாயினும் செயலாயினும் ஆற்றலாதலுடைமையின் விட்டுவிலகுதலின்மையின் மேற்பட்ட பதார்த்தமாமெனக் கூறலும் பொருந்தாது, இப்பொழுதுளதாகிய சங்கேதம் இச்சையெனப்படுமாகலின் ஆற்றலும் இச்சைவடிவுடைமையிற் சங்கேதவறிவிற்குத் தொடர்ந்து வரும் காரணத்தன்மை யுளதாவதன்றிப் பிறிதாகாமையின் விட்டுவிலகுதலுளதாமாகலின் இச்சையே யாற்றலாதல் கொள்ளப்படுமாகலினென்பது. பொருள்களெல்லாவற்றையும் விடயமாகக்கொள்ளும் ஈசுரனிச்சை ஆற்றலாமெனக் கொள்வுழிக் குடமென்னும் பதத்தானறியப்படுவதாகிய விசேடணத்தினையுடைய அவ்விச்சை படத்தின்கண்ணுமுண்மையின் குடமென்னும்பதத்திற்குப்பொருளாதற்கு அதிப்பிரசங்கம்வரும், இங்ஙனமே கலைசயென்னும் பதத்தாற்றோன்றிய வறிவிற்கு விடயமாதலாகிய விசேடணத்தினையுடைய இச்சை கரையின்கண்ணுமுண்மையின் ஆற்றலாற்றானே அவ்வறிவு தோன்றுமெனின் இலக்கணத்திற்குக் கேடுவருமென்றலும் பொருந்தாது, என்னை? அவ்வப்பதங்க

ட்குப் பொருளாதல் அவ்வப்பதங்களாற் றோன்றிய அறிவிற்கு விடயமாகிய விசேடணத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட ஈசுரனிச்சையின் சம்பந்தமுடைய விசேடியத்தன்மையுடையதாதல்; அவ்வியல்பிற்றாகிய விசேடணத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட விசேடியத்தன்மைச் சம்பந்தத்தால் அவ்விச்சையுடைத்தாதலெனினுமாம். ஆகவே அவ்வியல்பிற்றாகிய| குடமென்னும் பதப்பொருளாதல்படத்தின்கணின்மையின் அதிப்பிரசங்கமின்று; கங்கைமுதலிய பதங்களாற் றோன்றற்பாலதாதல் அறிவாகிய கூற்றின்கண்ணும், அறிவிற்கு விடயமாதல் கரையாகிய கூற்றின்கண்ணும் சுதந்திரத்தால்விளங்குதல் ஈசுரனிச்சையின்கணடையும்; இங்ஙனமே பிரிக்கப்படாத தன்மையுள்ளவிடத்துத் தெரித்துணர்த்தப்பட்டதுந்தெரித்துணர்த்துவதுமாகியதன்மைபொருந்திநிற்கும் விடயமாதலின்மையினபாவத்தால் கங்கைமுதலிய பதத்தாற்றோன்றற்பாலதாகிய விசேடணத்தன்மையாற்றெரித்துணர்த்தப்பட்டதும்அறிவிற்கு விடயமாந்தன்மையாற்றெரித்துணர்த்தப்பட்டதுமாகிய விசேடியத்தன்மைச்சம்பந்தத்தால் இச்சையுடைத்தாதல்கரையின்கணுளதாகலிற் கேடின்றெனச் சுருங்கக் கண்டுகொள்க.

ஆமுதலிய சொற்களுக்குச் சாதியின்கட்டானே யாற்றல்கொள்ளப்படும்; விசேடணமாதலின் சாதிமுன்னர் அறியப்படுதலினெனவும் பொருட்பேறு கடாமுதலியவற்றால் நிகழுமெனவுஞ் சிலர் கூறுப: அது பொருந்தாது, ஆவைக்கொணர் என்பது முதலியவற்றின்கண் முதியோர்வழக்கால் யாண்டுங் கொணர்தல்முதலியன பொருட்கண்ணே நிகழ்க்காண்டலின் சாதியான் விசேடிக்கப்பட்ட

பொருளின்கண்ணே ஆற்றல் கொள்ளப்படுமாகலினென்பது.

ஆமுதலிய எ-து. விசேடிக்கப்பட்டதன்கண் ஆற்றலை நிலைநிறுத்தும்பொருட்டு மீமாஞ்சகமதத்தினை யெடுத்துக்காட்டி மறுக்கின்றது. விசேடணமாகிய சாதி கொள்ளாது விசேடிக்கப்பட்டது கொள்ளப்படாமையின் விசேடிக்கப்பட்டதன்கண் ஆற்றல்கொள்ளுதல் கூடாதாகலின் சாதிகோடல் முன்னர் அணிமைப்படுதலின் சாதிக்கண்ணே ஆற்றல்கொள்ளுதல் நொய்தாகலின் நன்றுமென்னுங் கருத்தால் விசேடணமாதலின் எனப்பட்டது. முன்னர் அணிமைப்படுமாகலின் எ-து. விசேடிக்கப்பட்டது கொள்ளப்படுதலின் முன் அறியப்படுதலின் எ-று. பொருள் எ-து. இனிப் பொருட்பெறுதி எங்ஙனமென்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது. 'கடாமுதலியவற்றுல் எ-து. அருத்தாபத்திப்பிரமாணத்தால் எ-று. பொருட்கண்ணே நிகழக்காண்டலின் எ-து. பொருந்தாமையின் றொடர்வுபாடில்வழியும் பொருள் புலப்படுதல் அநுபவத்தாற் பெறப்படுதலானும் என்பது மறிந்துகொள்க.

விசேடிக்கப்பட்ட பொருட்கண்ணே எ-து. எகாரத்தால் தனியே சாதிகோடல் நீக்கப்பட்டது. சாதியும் அதனுள் விசேடிக்கப்பட்டதும் அதன் பற்றுக்கோடும் என்னுமூன்றன்கண்ணு மாற்றல் கொள்ளப்படும், சொற்பொருளிரண்டன் சம்பந்தஞ் சொல்லிரண்டன் வழக்காற் பெறப்படுமாகலின் ஏனையாற்றலுடைத்தாகற்பாலதாகாதது சாத்தஞானத்தின்கட் புலப்படுதலின் ன்மையினென்பது மின்னே யறிந்துகொள்க மற்று கனி

னர் இலக்கியத்தன்மையை வரைந்துகொள்ளப்பட்டது கவரப்பட்டமாத்திரையால் இலக்கியத்தன்மையை வரைந்துகொள்வது எங்ஙனஞ் சாத்தஞானத்தின்கண் விளங்கும், அங்ஙனமே ஆற்றலுடைத்தாகற்பாலதன்றன்மையை வரைந்துகொள்வது கவரப்பட்டமாத்திரையானே• ஆற்றலுடைத்தாகற்பாலதாந்தன்மையை வரைந்துகொள்வது சாத்தஞானத்தின்கட் புலப்படுதலுளதாமாகலின் ஆற்றலுடைத்தாகற்பாலதாந்தன்மையை வரைந்துகொள்வதன்கண் ஆற்றல் கொள்ளற்பாற்றன்றெனக் கூறுப.

ஆற்றல் கவர்தலும் முதியோர் வழக்கானேயாம். அங்ஙனமன்றே, சொற்பொருளுணர்தல் வேட்கையுடையானோரிளைஞன், ஆவைக்கொணா என முற்பட்ட முதியோன் கூறுந் தொடர்மொழியைக் கேட்டபின்னர், இடைப்பட்ட முதியோன் முயலுந் தொழிலைநோக்கி ஆக்கொணரப்படுதலைக்கண்டு இடைப்பட்ட முதியோனது முயற்சியைத் தோற்றுவிக்குமறிவு உடன்பாட்டானும் எதிர்மறையானும் வாக்கியத்தாற்றோன்றற்பாலதெனத் தெளிந்து 'குதிரையைக் கொணா' 'ஆவைக்கட்டு' என்னும் வேறு வாக்கியத்தின்கட் கொள்ளுதலானுந் தள்ளுதலானும் ஆ என்னும் பதத்திற்கு ஆத்தன்மையான் விசேடிக்கப்பட்டதன்கண் ஆற்றலெனவும் குதிரையென்னும் பதத்திற்குக் குதிரைத்தன்மையான் விசேடிக்கப்பட்டதன்கண் ஆற்றலெனவுஞ் சொற்பொருளுணர்ந்துகொள்ளும்.

ஆற்றல் கவர்தலும் எ-து. ஆற்றல் கவரப்படுதல் முதியோர் வழக்கு முதலியவற்றானுளதாம் எ-று. முதலிய என்றதனால் இலக்கண நூல்முதலியன கொள்ளப்படும். இதனானே ஆற்றல்கொள்ளுதல் இலக்கணம் உப

மானம் நிகண்டு, ஆத்தன் வாக்கியம், வழக்கு என்பனவற்றுனுமாம். "வாக்கியசேடத்தானும்,விவரணத்தானும், பெறப்பட்ட பதம் அணிமைக்கணிற்றலானும், முதியோர் ஆற்றல் கூறுவர்" என்னுஞ் சான்றோர் கூற்று நன்குபோதரும். இலக்கணத்தாற் பகுதி இடைநிலை முதலியவற்றி னாற்றல் கவரப்படும். மற்று உவமானத்தானாற்றல் கொள்ளப்படுதல் மேலே காட்டப்பட்டது. நிகண்டாற் கூறப்படுவனவாகிய ஒருபொருட் பலசொற்கள் அவ்வொருபொருட்டன்மையான் விசேடிக்கப்பட்டதன்கண் ஆற்றலுடையனவாகலின் ஒருபொருட்டன்மையான் விசேடிக்கப்பட்டதன்கண் ஆற்றல் கவரப்படும். ஆண்டுக் கூறப்படும் ஒருபொருட் பலசொற்கள் சொல்லும் பொருளுமாகலின் வேறுபாடுடையனவாமாகலின் அவை யிரண்டாதல் பொருந்தும். 'கோகிலம் குயில்' என்னுஞ் சொற்குப் பொருளென்னுமாத்தன்வாக்கியத்தாற் குயில் என்னுஞ் சொற்குக் கோகிலத்தின்கண் ஆற்றல் கவரப்படும்.

சொற்பொருளுணர்தல்வேட்கையுடையோன் எ-து. வழக்கானாற்றல் கவரப்படுதல் பொருந்துமாறு காட்டுகின்றது; ஆற்றல்கவரும் வேட்கையுடையோன் எ-று. முற்பட்டமுதியோன் எ-து. ஏவும் முதியோன் எ-று. இடைப்பட்டமுதியோன் எ-து. இயற்றும் முதியோன் எ-று. ஆவைக்கொணர்தலைக்கண்டு எ-ம், முயநிலை நோக்கி எ-ம் இயைத்துக்கொள்க. நோக்கி என்பதற்கு அநுமித்து எனப் பொருளுரைக்க. 'இவ்வினைமுயற்சியாற்றோன்றுவது, இலக்கணவேறுபாடுடைய வினையாகலின், தனது வினைபோல'வென அநுமானப்பிரயோகமறிக. முயற்சியைத் தோற்றுவிக்கும் ஞானம் எ-து,

ஆவைக் கொணர்தலைக் காண்டலாகிய முயற்சியைத் தோற்றுவிக்கும் ஆவைக்கொணர்தலின் ஞானத்தினையுடைய வாக்கியத்தினது விசேடிக்கப்பட்டதாகிய பொருட்கண் ஆற்றல் கொள்ளப்படற்பாற்றன்று, அவ்வியல்பிற்றாகிய பொருள் வழக்காற்பெறப்படுமாதலினென்பது. சொற்பொருள் தன்னின்வேறாயதனாற் பெறப்படாததன்றேயென்னுநியாயத்தாலென்னுங்கருத்தால் நுதிரையைக்கோளு எனப்பட்டது. கொள்ளுதலானுந்தள்ளுதலானும் எ-து. கொள்ளுதல் கவர்தல், தள்ளுதல் விடுதல். அறிந்துகோளும் எ-து. சொற்பொருளுணர்ச்சிக்குப் பற்றுக்கோடாம் எ-று. வாக்கியசேடத்தால் எங்ஙனம், 'யவமயமாகிய சரு ஆகின்றது' என்புழி யவமென்னுஞ் சொல் ஆரியர்வழக்கால் நீண்டவாலான் விசேடிக்கப்பட்டதனைக்கூறுவதாமோ மிலேச்சர்வழக்கால்கருந்தினையினைக்கூறுவதாமோவென ஐயம்நிகழ்வுழி வேனிற்காலத்துப்பயிரெல்லாம் இலையுதிர்க்கும் யவம் மகிழ்ச்சிக்குரியதாய் கதிர்கான்றுநிற்கும் என்னும்வாக்கியசேடத்தால் நீண்டவாலான் விசேடிக்கப்பட்டதன்கண் ஆற்றல்கொள்ளப்படும். மற்றுக் கருந்தினையின்கண் ஆற்றல் மயக்கத்தாற் றோன்றியதேயாம். விவரணத்தால் எங்ஙனம், 'அடுகின்றான், அடுதலைச்செய்கின்றா'னென முயற்சிப் பொருட்டாகிய செய்கின்றானெனப்படும் யாவராலும் கூறப்படுவதாகிய உரையாற் கூறப்பட்டதற்கு முயற்சித்தன்மையான் விசேடிக்கப்பட்டதன்கண் ஆற்றல் கொள்ளப்படும். மற்றுப் பெறப்பட்ட பதத்தினணிமையால் ஆற்றல் கவரப்படுதல் 'மலர்ந்த தாமரைக்கண்' என முன்வரும் வாக்கியமே நன்குவிளக்கும். விரிப்பிற் பெருகும்.

அற்றேல் யாண்டுங் காரியப்பொருட்டாகலான் வழக்குக் காரியமாகிய வாக்கியத்தின்கண்ணே சொற்பொருளுணரப்படும், பெறப்பட்டதன்கண் நிகழாதாலோவெனின்;— அற்றன்று, 'கடலின்கண் முதுகுடுமிப்பெருவழுதியுளன்' என்பது முதலியவற்றுள் பெறப்பட்டதன்கண்ணும் வழக்குளதாகலானும், மலர்ந்த தாமரைக்கண் வண்டு தேன்பருகும் என்பதுமுதலியவற்றுள் பெருவழக்கிற்குரிய பதத்தினைச் சார்த்திவழங்குதலாற் பெறப்பட்டதன்கண்ணும் வண்டுமுதலியவற்றின் சொற்பொருளுணர்ச்சி காணப்படுதலானுமென்பது.

வழக்குக்காரியப்பொருட்டாகலான் எனக் கூட்டுக. காரியப்பொருட்டாதல் செயலாற் சாதிக்கப்படுந் தொணர்தல்முதலியனவாகிய வினையின் குற்பரியமுடைத்தாதல். சொற்பொருளுணர்ச்சி எ-து. ஆற்றல் கவர்தல் பெறப்பட்டதன்கண்நிகழாது எ-து. ஏகாரத்தாற் பிரிக்கப்பட்டதனை விளக்குகின்றது. பெறப்பட்டதன்கண்ணும் வழக்குளதாகலானும் எ-து. ஆகவே பெறப்பட்டதன்கண்ணு மாற்றல் கவர்தல் ஒருதலையாக நிகழும் அங்ஙனமன்றேல் ஆண்டு அநுபவத்தாற் பெறப்பட்டதாகிய சாத்தனானம் நீங்குமெனல் வேண்டுமாகலினென்பது கருத்து.

இலக்கணையுஞ் சத்தத்தின்கணுள்ளது. ஆற்றலுடைத்தாகற்பாலதன்சம்பந்த மிலக்கணை யெனப்படும். 'கங்கைக்கணிடைச்சேரி' என்புழிக் கங்கையென்னுஞ்சொற்குப் பொருளாகிய நீர்ப்பெருக்கின் சம்பந்தத்தாலே கரையண்மைப்படுதலின் கரையின்கண்ணும் ஆற்றல் கொள்ளப்படுவதன்று. மாமுதலியவற்றுள் மாமரத்திற்குங் குதிரைக்கும் ஒன்றற்கொன்று சம்பந்தமின்மையின் வெவ்வேறாற்றல்

கொள்ளப்படும். அவ்விலக்கணை விட்டவிலக்கணையும் விடாதவிலக்கணையும் விட்டும்விடாதவிலக்கணையுமெனமூவகைத்து. யாண்டுச் சொல்லின்பொருட்கு அந்நுவயமின்றாம் ஆண்டு விட்டவிலக்கணை; எங்ஙனம், 'கட்டில் கரைகின்றது' என்பது. யாண்டுச் சொல்லின்பொருட்கு மந்நுவயமுளதாம் ஆண்டு விடாதவிலக்கணை; எங்ஙனம், 'கவிகையாளர் செல்கின்றார்' என்பது. யாண்டுச்சொற்பொருளினேகதேசத்தைவிட்டு ஏகதேசத்தின்கண் அந்நுவயமுளதாம், ஆண்டு விட்டும்விடாதவிலக்கணை; எங்ஙனம், 'அது நீயாகின்றாய்' என்பது. குணம் பற்றி நிகழ்வதும் இலக்கணையேயாம், குறிக்கப்படுங் குணத்தின் சம்பந்தத்தின் சொரூபமுடைத்தாகலினென்பது; எங்ஙனம், 'அக்கினி மாணுக்கன்' என்பது.

கரையின்கண்ணும் ஆற்றல் எ-து. கங்கையென்னும் பதத்தினது என்பது எஞ்சிநின்றது. அற்றேல் இங்ஙனமே மா முதலிய பதங்கள் பலபொருளுடையனவாதல் பொருந்தாது, ஓரிடத்து ஆற்றலும் வேறிடத்து இலக்கணையுங் கொள்ளப்படுமாகலினென்னு மாசங்கை நீக்குதற்பொருட்டு மா முதலியவற்றுள் எனப்பட்டது. முதலிய என்றதனால் அரி முதலிய பதங்கள் கொள்ளப்படும். சம்பந்தமின்மையின் எ-து. சையோகமுதலியவெனப்படுஞ் சம்பந்தமின்மையின் எ-று. இஃதுபலக்கணம். பெருவழக்கிற்றாகிய பொருளிரண்டற்கும் ஆற்றல் யாண்டுளது, இலக்கணை யாண்டுளது என்புழி விட்டுவிலகுவதின்மையின் ஈரிடத்தும் ஆற்றல் கொள்ளுதல் ஒருதலையான் வேண்டப்படுமென்பது. கட்டில் எ-து. கட்டில் என்னும் பதங் கட்டிற்கணுள்ளோன்மாட்டிலக்கணையாற் கொள்ளப்படும், சொல்லின் பொருட்குக் கரைதற்கு வினைமுதலாகிய அந்நுவயமின்மையி

னென்பது கருத்து. சொல்லின்பொருட்கும் எ-து. உம்மையால் இலக்கியத்தின் கூட்டங் கொள்ளப்படும். கவிகையாளர் எ-து ஒருங்குவரும்பொருளாகிய சமத்த லாற் கவிகையின்கண்ணுங் கவிகையாளரின்கண்ணுஞ் சேறற்கு வினைமுதலாதலாகிய அந்நுவயத்தின் தாற்பரி யம் பொருந்தாமையே இலக்கணைக்குக் காரணமாம். கவிகையாளர் என்பது அர் என்னும்விகுதியுடைமையின் பதக்கூட்டமாமாகலின் அஃது ஆற்றலுடைத்தாகற்பால தென்பது பெருவழக்கிற்றாகாமையின் ஆற்றலுடைத்தா கற்பாலதன் சம்பந்தமுடைத்தெனப்படு மிலக்கணையின் மையின் இஃது உதாரணமன்றென்னற்க, கூறப்படுஞ் சம்பந்தமே யிலக்கணையாமென்னுங் கருத்தால் அவ்வு தாரணங் கூறப்பட்டதாகலினென்பது. அங்ஙன மன்றேல், 'காகங்களினின்றுந் தயிர் காக்கப்படுக' என் பது உதாரணமாகக் காட்டற்பாற்று. ஆண்டுக் காகம் என்னும் பதம் காகத்தின்வேறாகிய பொதுமையுடைய தயிரையழிப்பனவாந்தன்மையான் வரைந்துகொள்ளப் பட்டவற்றின் மேற்றாகலானென்பது, மற்றுச் சிலர் கவிகையென்னுஞ்சொற்கு ஒருங்குவரும் பொருட்க ணிலக்கணையெனவும், விகுதிப்பொருள் சம்பந்தமுடை யதெனவும், ஆகவே ஒருங்குவரும் பொருளின் சம்பந் தமுடைத்தாகிய செல்கின்ற ரென்பதனோடொன்றாகிய அந்நுவயம் அறியப்படுமெனவுங் கூறுப.

அது நீயாகின்றாய் எ-து. ஈண்டு அஃதென்னுஞ் சொல் லின் பொருளாகிய முற்றறிவு முதலியவற்றான் விசே டிக்கப்பட்டதன்கண் நீயென்னுஞ் சொல்லின்பொரு ளாகிய அந்தக்கரணமுதலியவற்றான் விசேடிக்கப்பட் டது வேறுபடாமைபொருந்தாமையின் ஈரிடத்தும் விசே

டணக்கூறுவிடப்படும்,ஆகவே அஃது என்னும்பதத்தினி லக்கியமாகிய சுத்தம் நீ என்னும்பதத்தினிலக்கியத்தோ டு அபேதமாகிய அந்நுவயம் பொருந்தாதென்பது கரு த்து. இவ்வுதாரணஞ் சீவனுக்கும் பிரமத்துக்கும் ஐக் கியங்கூறும் பிரமவாதிகளது சித்தாந்தக்கருத்துப்பற்றி யுரைக்கப்பட்டது, நையாயிகமதத்துள் அக்கோட்பாடு இன்மையினென்பது. நையாயிகமதக்கோட்பாடியாதெ னின், 'அவனிச்சாத்தன்' என்பது முதலியவற்றுள் அவனுந்தன்மையாகிய கூறு இற்றைஞான்றின்மையிற் கேடுண்டாம், இவனுந்தன்மையாகிய கூறுண்மையின் கேடின்றாம் என விட்டும் விடாதவிலக்கணைக்கு உதார ணங் கூறுப. மற்றுப் பிறரெல்லாங் 'குடம் நித்தியம்' என்பது முதலியவற்றுள் குடத்தன்மையே 'அவனிச சாத்தன்' என்பது முதலியவற்றுள் அவனுந்தன்மையா கிய கூற்றி னுபலக்கணமாமாகலின் அது புலப்படு கின்றுழிக் குற்றமின்றுமாகலின் விட்டும்விடாதவிலக்க ணையாற் பயனென்னையென்ப. குணம்பற்றிநிகழ்வதும் எ-து. குணம்பற்றிநிகழ்வது வேறு விருத்தியாதலை மறுத்துரைக்கின்றது.

குறிக்கப்படும் எ-து. அற்றேல் 'கங்கைக்கணிடைச்சேரி' என்புழிக் கரையின்கண் ஆற்றலுடைத்தாகற்பாலதாகி ய நீர்ப்பெருக்குப்போல 'அக்கினிமாணுக்கன்' என்பது முதலியவற்றுள் மாணுக்கன்கண் ஆற்றலுடைத்தாகற் பாலதாகிய •அக்கினிக்கு நேரே சம்பந்தமுளதாகாமை யின்' இலக்கணையாற் கொள்ளுத லெங்ஙனமென்னும் வினவிற்கு விடைகூறுகின்றது. குறிக்கப்படுவதாகிய தூய்மைமுதலிய குணங்களின் சம்பந்தவடிவுடைத்து எ-று. இதன்கருத்து வருமாறு:— இலக்கணை ஆற்ற

லுடைத்தாகற்பாலதன் சம்பந்தமன்றோ அஃதும் ஒரோவழி நேரே சம்பந்தமும் ஒரோவழிப் பரம்பரைச சம்பந்தமுமாம். ஆகவே ஆற்றலுடைத்தாகற்பாலதாகிய அக்கினிக்கட் தன்கண்ணதாகிய தூய்மைமுதலியன வுடைமையாகிய சம்பந்தமே இலக்கணையென்பதாய்.

குறிப்பும் ஆற்றல் இலக்கணையென்பவற்றுளடங்கும். சொல்லாற்றலாற் றோன்றுவதாகிய பொருளாற்றலாற் றோன்றுவதும் அனுமானமுதலியவற்றான் வேறோராற்றற் பெறப்படுவது. தாற்பரியம் பொருந்தாமை இலக்கணைக்குக் காரணம். தாற்பரியம் அவ்வப்பொருளுணர்ச்சிவிருப்பான் உச்சரிக்கப்படுந்தன்மையெனப்படும். தாற்பரிய அறிவும் வாக்கியப்பொருளறிவிற்குக் காரணமாம், பலவகையாகப் பொருள்படுதலைத் தடுத்தலின். பிரகரணம்முதலியன தாற்பரியத்தைக் கவர்வனவாம்.

இனி அலங்காரநூலோர் 'கரைக்கணிடைச்சேரி' எனச செவ்வனே யுரையாது 'கங்கைக்கணிடைசசேரி' என அந்நுவயமின்றியு மெடுத்துரைத்தல் தண்மையுந் தூய்மையுமுதலியன காட்டும்பொருட்டு. அவ்வுணர்ச்சி இலக்கணையானுந் தோன்றுமென்றலும் பொருந்தாது, தனித்துநிற்குங் கரையென்பதாகிய இலக்கணையால் பொருந்தாமை பரிகரிக்கப்பட்டவழித் தண்மையுந் தூய்மையுமுதலியவற்றான் விசேடிக்கப்பட்ட இலக்கணமுண்மைக்குப் பிரமாணமின்மையினென்பது. ஆதலின் குறிப்பென்பது ஒருதலையாக்கொள்ளற்பாற்றெனக் கூறுப; குறிப்பும் எ-து. அம்மதத்தினை மறுத்துரைக்கின்றது.

ஆற்றல் இலக்கணையென்பனவற்றா னன்றாம் எ-து. இதன் கருத்து வருமாறு:— 'மாமகிழ்சிறப்பத் தோன்றும்' என்பது முதலியனவாகிய பலபொருள்படுங் குறிப்பின்கண் மா என்னுஞ்சொல்லால் மரத்தின்கட்போலக் குதிரையின்கண்ணும் ஆற்றலாற்றானே யுணர்ச்சிதோன்றும். மற்றுக் 'கங்கைக்கணிடைச்சேரி' என்பதுமுதலியவற்றுள் தண்மையுந் தூய்மையுமுதலியவற்றான் விசேடிக்கப்பட்ட கரையினுணர்ச்சியும் இலக்கணையின் பெருமையாற்றானே தோன்றும், ஆண்டு இலக்கணையைத் தோற்றுவிப்பதாகிய தாற்பரியம் பொருந்தாமையே யுண்மையின் மேற்பட்ட குறிப்பான் ஆம்பயனென்னையென்பது. பொருளாற்றலாற் றோன்றுவதும் எ-து. அற்றேல், சொல்லாற்றலாற் றோன்றுங் குறிப்பு வேறோராற்றாற் பெறப்பட்டதாயவழியும் பொருளாற்றலாற் றோன்றுமது வேறோராற்றாற் பெறப்பட்டதன்று;' அங்ஙனமன்றே, "செல்லாமையுண்டேலெனக்குரைமற்றுநின் - வல்வரவு வாழ்வார்க்குரை" என்பது முதலியவற்றுள் நீ பிரிந்தவழி என்னுயிர் நீங்குமாதலின் பிரியற்பாலையல்லையென்பதுமுதலியபொருள் குறிப்பாற் றோன்றும், ஈண்டு ஆற்றல் இலக்கணையென்பனவற்றாற் கொள்ளுதல் பொருந்தாது. இங்ஙனமே. குறிப்பும் ஒருதலையான் வேண்டப்படும் என்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது. உம்மை எச்சவும்மை.

அனுமானம்முதலியவற்றால் எ-து. அனுமானமாமாறு:— 'இவள் யான் பிரிந்துசென்ற பிற்காலத்து உயிர்துறக்கும், இலக்கண வேறுபாடுடைய சொற்களை எடுத்தாளுதலான்' என்பதுமுதலியன. முதலியன என்றதனால் சம்பாவனைமுதலியன கொள்ளப்படும். சம்பாவனையா

வது ஒருபாற்பட மிகுதிப்பட்டு நிகழும் ஐயம். மிகுதிப் பாடு விடயத்தன்மை விசேடம்.

இனி அனுபவமுடைய சான்றோர்க்கெல்லாம் 'சொல்லா னிப்பொருளுணர்கின்றே'னென்னு மனுபவம் சுவை பட நிகழுமாயின் குறிப்பால் நிகழுமுணர்ச்சி வடநூல் வல்லார்க்கெல்லாம் ஆற்றலுடைத்தாகற்பாலதல்லதாந் தன்மையை நீக்குவதாதலின் குறிப்புக் கொள்ளப்படா மை பொருந்தாதெனக் கொள்க; அந்நுவயம் பொருந் தாமை இலக்கணைக்குக் காரணமாயின் 'யாகதண்டத் தைப்புகுவிக்க' என்பது முதலியவற்றுள் இலக்கணை பொருந்தாது; மற்றுத் தாற்பரியம் பொருந்தாமை கார ணமாயின் அஃதாண்டுமுண்மையின் யாகதண்டம் என் னும் பதத்திற்கு யாகதண்டத்தைச் சுமப்போன்கண் இலக்கணையாமென்னுங் கருத்தால் தாற்பரியம் பொ ருந்தாமை எனப்பட்டது.

அவ்வுணர்ச்சி எ-து. கரைமுதலியனவெனப்படும் பொரு ளுணர்ச்சி எ-று. பலபொருள் எ-து. 'மாவைக்கொணு' வென்பது முதலியனவாகப் பலபொருள்படுமிடத்து மா என்னும் பதத்திற்குக் குதிரையின்கண்ணும் மரத்தின் கண்ணும் ஆற்றல் ஒப்பநிகழ்தலின் சாத்தஞானத்தின் கண் தாற்பரியங் கவர்தற்குக் காரணமாதலின்றி நியத மாயகாலத்து அவ்வவற்றினறிவு பொருந்தாதாகலின் ஆண்டு அதுகாரணமாதல் ஒருதலையான் வேண்டப்பட்ட வழி அதனைத் தடுத்தலான் யாண்டும் அது ஒருதலை யான் வேண்டப்படுமென்பது கருத்து.

'மௌனமுடையோன்கவி முதலியவற்றுட் சாத்தஞானம் பொருந்தாதென்பதும் பொருந்தாது. ஆண்டு நிருத்தி

கூறப்பட்ட தாற்பரியமின்மையினென்னற்க, தாற்பரியமென்பதற்கு அதனுணர்ச்சி வேட்கையென்பது பொருளாய் முடிதலின் ஆண்டு அவ்வியல்பிற்றாகிய தாற்பரியமுளதாகலிற் குற்றமின்மையினென்பது. அங்ஙனமாயினும் அவ்வுணர்ச்சிவேட்கையில்லதாகிய கிளிமுதலியவற்றா னுச்சரிக்கப்பட்ட வாக்கியத்தானுஞ் சாத்தஞானம் அனுபவத்தாலறியப்படுதலின் ஆண்டுப் பொருந்தாமை பரிகரிக்கப்படுதலின்றென வினவற்க, ஆண்டு ஈசுரனிச்சையை யெடுத்துக்கொண்டே பொருந்தாமை பரிகரிக்கப்படுத லுளதாமாகலினென்பது. விரிப்பிற் பெருகும்.

பிரகரணம் முதலியன எ-து. முதலியன என்றதனால் 'பசுந்துழாய்மால்' என்பது முதலியவற்றுள் மால் என்னுஞ் சொல் திருமாலின்கண் தாற்பரியமாதலை விளக்குவதாகிய பசுந்துழாயென்னும் விசேடணமுதலிய கொள்ளப்படும். பிரகரணமுதலியவற்றாற் றாற்பரியங் கவரப்படுமாறெங்ஙனமெனின்; அது வருமாறு:— 'மாவென்னு மிச்சொல் குதிரையையுணர்த்தும் வேட்கையா னுச்சரிக்கப்பட்டது, உலாப்போங்காலத்துக் கூறப்பட்டதாகலின்' என்பது முதலிய முறைமையாற் கொள்க.

"பிறவிப்பெருங்கடல் நீந்துவர்" என்புழிச் சேர்ந்தார் என்பது சொல்லெச்சம். அற்றேல் பொருளுணர்தற்பொருட்டேயாகலிற் சொல்லின்பொருளறியாது சொல் வருவித்தல் கூடாமையின் பொருளெச்சமென்றலே பொருத்தமுடைத்தெனின்;— அற்றன்று, சொல் விசேடத்தாற் றோன்றற்பாலதாகிய சொற்பொருளணிமையே சாத்தினா

னத்திற்குக் காரணமாகலின். அங்ஙனமன்றேற் 'குடம் செயப்படுபொருண்மை. கொணர்தல் செயல்' என்புழியுஞ் சாத்தஞானந் தோனறுமெனல்வேண்டுதலின்.

பிறவிப்பெருங்கடல் எ-து. பிரபாகரமதத்தினை மறுக்கும் பொருட்டுத் தனது சித்தாந்தங் காட்டுகின்றது. பொருளுணர்தற்பொருட்டேயாகலின் எ-து. சொல்லறிவு பொருளறிவாகிய பலமுடைமையான் எ-று.

இத்துணையுங் கூறியவாற்றால் பொருளறிவு முதற்கட்புலப்படுதலே நொய்ம்மையென்பது கருதப்பட்டது. அல்லதூஉம் 'பொருளையறிந்துவாக்கியமாக்கப்படு' மென்று நியாயத்தால் பொருளறிவின்றி அவாய்நிலையுடைத்தாகிய சொற்களின் றொடர்வுபாடெனப்படுஞ் சொல் வருவித்த லுளதாகாமையின் முதற்கட் பொருள் வருவித்தலே ஒருதலையான் வேண்டப்படுமென்னுங் கருத்தாற் பொருஃறியாது எனப்பட்டதென்க.

எங்ஙனமாயினும் அணிமைப்பட்ட சொற்பொருள்களது சாத்தஞானந் தோன்றுமையின் பதத்தாற்றோன்றற்பாலதாதல் அணிமைப்படுதலான்வி சேடிக்கற்பாலதாதலொருதலையாகலின் அவ்வியல்பிற்றாகிய அணிமைப்பாடடைதற்பொருட்டுச் சொல் வருவித்தலே இன்மை பற்றிக்கொள்ளத்தகுமென்னுங்கருத்தாற் பதவிசேடம் எனப்பட்டது.

விசேடமென்னும் பதத்திற்குப் பயன் காட்டுதற்பொருட்டுக் குடம் செயப்படுபொருண்மை என்பது முதலியன பிற்காட்டப்பட்டது. ஆண்டுச் செயப்படுபொருண்மை முதலியன பதங்களாற் றோன்றற்பாலதாகிய செயப்படு

பொருண்மைமுதலியன அணிமைப்பட்டு நிற்றலுள்ள வழியுங் குடமென்னும் பதத்தின் பின்னர்த்தாகிய அம் முதலிய பதங்களாற் றோன்றற்பாலதாகிய செயப்படு பொருண்மை முதலியவற்றின் அணிமைப்பாடின்மையின் சித்தாந்தத்துட் சாத்தஞானந் தோன்றாதென்பது கருத்து.

பதவிசேடத்தாற் றோன்றற்பாலதென்புழி விருத்தியாற் பதவிசேடத்தாற் றோன்றற்பாலதெனல் வேண்டுதலு மறிக. அதனாற் 'குடத்தைக்கொணு' என்பது முதலிய வற்றுட் குடம்முதலிய பதத்தால் ஆகாயமுதலியன அணிமைப்பட்டு நிற்பினுஞ் சாத்தஞானமின்றாமென்க.

பங்கடம்முதலிய சொற்களுட் காரணவிடுகுறி மரபும், அவயவவாற்றல் காரணமும் சமுதாயவாற்றலிடுகுறியு மாம். நியதமாய்த் தாமரையுணர்வே நிகழ்தற்பொருட்டுச் சமுதாயவாற்றல் வேண்டப்படும். அங்ஙனமன்றேற் குமுதத்தினும் எடுத்தாளப்படுதல் வேண்டுமாதலினென்பது. பிரபாகரமதநூலார் ஏனையதனோடு அந்நுவயப்படுதற்கண் ஆற்றலென்பர். கௌதமமதநூலார் அந்நுவயம் வாக்கியப்பொருட்டன்மையாக அறியப்படுதலின் அந்நுவயமாகிய கூற்றின்கண்ணும் ஆற்றல் கொள்ளற்பாற்றன்றென்பர்.

**பங்கயம்முதலிய பதங்களின்** எ-து. காரணமும் இடுகுறியும் காரணவிடுகுறிமரபும் காரணவிடுகுறியாக்கமும் என நால்வகைப்படுமாயினும்; காரணம் அவயவவாற்றலாகிய அம்மாத்திரையானே பொருளையெடுத்துக் கூறுவது, இது முதலாவது; எங்ஙனம், 'அடுவோ'னென்பது முதலியன. இடுகுறி சமுதாயவாற்றல். அது மாத்திரையானே பொருளையெடுத்துக் கூறுவது; இஃது

இரண்டாவது; எங்ஙனம், ஆ முதலியன. காரணமும் இடுகுறியுந் தம்முட் கலத்தலாற் பொருளையெடுத்துக் கூறுவது மூன்றாவது. எங்ஙனம், பங்கயம் முதலியன. காரணவிடுகுறியாக்கமென்பது காரணமும் இடுகுறியு மெனப் பொருள்படுதலிற் காரணத்தானும் இடுகுறி யானுந் தம்முட்கலப்பின்றிப் பொருளையெடுத்துக்கூறு வது. இது நான்காவது. எங்ஙனம், உற்பித்து என் பது. காரணத்தால் மரங் கொடிமுதலியவற்றிற்கும் மற்று இடுகுறியால் யாகவிசேடத்திற்கும் பெயராம். அங்ஙனமாயினுங் காரணவிடுகுறி மரபினை யெடுத் துக்காட்டி ஆண்டுக் காரணத்திற்கும் இடுகுறிக்குஞ் சொ ரூபங்காட்டுமுறைமையாற் பிறண்டும் அறிதற்கு ஆற்ற லுண்டாமென்னுங்கருத்தாற் பங்கயமுதலியபதங்களிற் காரணவிடுகுறிமரபினை எடுத்துக் காட்டுகின்றது.

காரணவிடுகுறிக்கூட்டம் எ-து. காரணத்தோடுகூடிய இடு குறி எ-று. நியதம் எ-து. அற்றேல், பங்கயமுதலிய சொ ற்களின்கண்ணுங் காரணமேயாகுக,அவ்வளவாற்றானே கொள்ளப்படுதலினென வாசங்கித்துப் பங்கயமென் னுஞ் சொற்குத் தாமரைத்தன்மையான் வரைந்துகொ ள்ளப்பட்டதன்கண் விருத்தியின்றி நியமத்தால் தாம ரைத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டமை யுணர ப்படுத லனுபவத்தாற் பெறப்பட்டதாகாமையின் தாம ரைத்தன்மையான் வரைந்துகொள்ளளப்பட்டதன்கட் காரண மொருதலையாற் கொள்ளப்படுமென்பது கூறு கின்றது. அங்ஙனமன்றேல் எ-து. நியதமாகிய தாம ரைத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட வுணர்ச்சி அனுபவத்தாற் பெறப்பட்டதாகற்கண் ஐயப்பாடுடை யானுக்கு அவ்வைய நீக்குகின்றது. நியதமாகிய தாம

ரைத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட வுணர்ச்சி யைப்பயப்பதாகிய சமுதாயவாற்றல் கொள்ளப்படாத வழி எ-று.

ஆளுதல் எ-து. பங்கயமுதலிய பதங்களையாளுதல் எ-று. வினையதனோடு எ-து. காரியத்தோ டந்நுவயப்பட்ட வழி ஆற்றல் கொள்ளப்படுவதென்பது பிரபாகரமதமாயினும் பெறப்பட்ட பொருளினையுடைய வாக்கியத்தின்கண்ணுஞ் சொற்பொருளுணர்ச்சி நிலைநிறுத்தப்பட்டமையின் அப்பொதுமைபற்றி அம்மதத்தினை விளக்கிக் காட்டுகின்றது. அந்நுவயப்பட்டவழி ஆற்றலென்பது தேற்றம். இதன் கருத்து வருமாறு:— எங்ஙனமாயினும் அணிமைப்பட்ட பதப்பொருள்களது சாத்தஞானத்தி ¦னீக்குதற்கு அவ்வவ்விடயத்தினையுடைய சாத்தஞானத்திற்கு விருத்திஞானத்தாற் றோன்றற்பாலதாகிய அதனணிமைப்பாட்டால் ஏதுவாதல் கொள்ளப்படுமாதலின் அந்நுவயமாகிய கூற்றின்கண்ணுமாற்றல் அவாவப்படும்; அங்ஙனமன்றேல் அவ்வியல் பிற்றாகிய காரிய காரணத்தன்மைப் பொதுமைக்குக் கேடுவருமாகலினென்பது.

சமுசர்க்கத்திற்கு விடயமாந்தன்மையின்வேறாகிய அவ்வவ்விடயத்தன்மையுடைய சாத்தஞானத்திற்கு விருத்திஞானத்தின்வயத்ததாகிய அவ்வவ்வணிமைப்பாட்டால் ஏதுவாதலுளதாம்; ஆகவே அந்நுவயமாய கூற்றின்கண்ணும் ஆற்றல் கொள்ளப்படாதவழியுங் குற்றமின்றெனக் கூறற்க, அவ்வாறாயவழிக் காரியத்தன்மையை வரைந்துகொள்வது மிகையாமாகலினென்பது. இங்ஙனமே 'அந்நுவயப்பட்டதாகியகுடம் குடமென்னுஞ் சொற்குப்

பொருளெ'னப்படு மாற்றலுணர்ச்சியே சாத்தஞானத்தினைப் பயப்பதாமென்பது. மற்றுச் சிலர் ஏனையத ஞேடு அந்நுவயப்பட்டவழி ஆற்றலென்பதற்குக் காரியத்தோ டந்நுவயப்பட்டவழி யாற்றலெனப் பொருள் கூறுப.

அந்நுவயம் எ-து. யுத்தியோடு நையாயிகமதங் காட்டுகின்றது. சொற்கும் பொருட்குமுளதாய சமுசர்க்கஞ் சொல்லினைச் சார்த்தி வழங்குதலின்வலியாற்றானே யறியப்படுதலுண்மையின் அச்சமுசர்க்கமாகிய கூற்றினும் ஆற்றல் கொள்ளற்பாற்றன்றென்பது போந்த பொருளாகக் கொள்க. இதன் கருத்து வருமாறு:— அதன் விடயத்தோடு கூடிய சாத்தஞானத்திற்கு விருத்திஞானத்தின்வயத்ததாகிய அதனணிமைப்பாட்டாற்றொடர்ந்துவருங் காரிய காரணத்தன்மையுண்டாகாது, ஆற்றலும் இலக்கணையுமென்னு மிரண்டன்பொதுமை விருத்தியாமெனக் கூறுதலரிதாகலின். மற்று அவ்வாற்றலுடைய சொல்லறிவாற் றோன்றற்பாலதாகிய அதனணிமைப்பாட்டால் ஒரு காரணத்தன்மையும் அதனிலக்கணையுடைத்தாகிய சொல்லறிவாற் றோன்றற்பாலதாய அதனணிமைப்பாட்டால் ஏனைக்காரணத்தன்மையுங் கொள்ளற்பாலன. ஒன்றோடொன்று அதனதன் அணிமைப்பாட்டாற் றோன்றற்பாலதாகிய சாத்தஞானத்தின்கண் முறைபிறழ்ச்சி நீக்குதற்கு அதனதன் காரணத்தினிடையீடுபடாத பிற்காலத்ததாதல் அவ்வக்காரணத்தாற் றோன்றற்பாலதாந்தன்மையை வரைந்துகொள்வதன்கட் பெய்துரைக்கற்பாற்று. இங்ஙனமே விருத்தி அணிமைப்படாததாகிய சொற்பொருளிரண்டன் சமுசர்க்கஞ் சாத்தஞானத்தை வருவிப்ப

தாதற்கண் முறைபிறழ்ச்சி நீக்குதலாற் காட்டப்பட்ட இருவகைக் காரிய காரணத்தன்மையும் பொருந்தாதனவாகலின் அந்நுவயமாகிய கூற்றின்கண் ஆற்றல் கொள்ளுதலாலாம்பயனென்னையென்பது.

௬௧. **வா**க்கியப்பொருளறிவிற்குக் காரணம் அவாய் நிலையுந் தகுதியும் அண்மையுமாம். அவாய்நிலை ஒருபதம் வேறொருபதமின்மையானுளதாய வினைபு உணரப்படாமையுடைத்தாதல். தகுதி பொருட்குப் பாதமின்மை. அண்மை பதங்களை ஒருதொடராக விரையக்கூறுதல். ஆகவே, அவாய்நிலைமுதலிய மூன்றுமில்லாத வாக்கியம் பிரமாணமன்று. 'ஆ குதிரை ஆண்மகன் யானை' என்பது அவாய்நிலையின்மையாற் பிரமாணமன்று. 'தீயால் நனை' என்பது தகுதியின்மையாற் பிரமாணமன்று. 'ஆவைக்கொணு' என்பது முதலியன ஒரு தொடராகக் கூறாது யாமத்துக்கொன்றாகக் கூறின் அண்மையின்மையாற் பிரமாணமன்று.

அவாய்நிலை எ-து. அவாய்நிலைமுதலியவற்றின் அறிவு எ-று. அங்ஙனமன்றேல் அவாய்நிலைமுதலியவற்றின் பிறழ்ச்சியுணர்வாற் சாத்தப் பிறழ்ச்சியுணர்வு தோன்றாது. ஒருபதம் எ-து. அவாய்நிலைக்கு இலக்கணங் கூறுகின்றது. பொருட்கு எ-து. தகுதியினிலக்கணங் கூறுகின்றது. பதங்களை எ-து. அண்மையினிலக்கணங் கூறுகின்றது. தாழ்வின்றிச் சொற்பொருள்களணிமைப்படுதல் தகுதி. மற்று உச்சரித்தலால் அதனைப் பயப்பிப்பதாதலின் ஆ குதிரையெனக் கூறப்பட்டது. குடம் செயப்படுபொருண்மை

என்பதும் அவாய்நிலையில்லதற்கு உதாரணமாகக் காட்டற்பாற்று.

அவாய்நிலைமுதலியவற்றின் அறிவு எ-து. அவாய்நிலைமுதலியன இல்லதாகிய பதக்கூட்டத்தால் சாத்தஞானந் தோன்றுமென்றலை நீக்குதற்கு அவாய்நிலைமுதலியன சாத்தஞானத்திற்குக் காரணமென ஆசிரியராற் காட்டப்பட்டது. அஃதும் நவீன மதத்திலதாமாகலின் அவ்வறிவிற்குக் காரணமாதல் கூறுகின்றது. முதலியன என்றதனால் தகுதி கொள்ளப்படும். அங்ஙனமன்றேல் எ-து. அவாய்நிலைமுதலியன சாத்தஞானத்திற்குக் காரணமாயவழி எ-று. நூலுள் ஒருபதம் எ-து. எப்பதம் எப்பதமின்மையானுக்கப்பட்ட இயைபினறிவைத் தோற்றுவிப்பதாகாது அப்பதத்தின்கண் வழங்கப்படும் அப்பதமுடைத்தாதல் அவாய்நிலை எ-று. ஆக்கப்படுதல் காரணத்தன்மையாற் காரியத்தன்மையென்னு முணர்ச்சிக்குச் சான்றாகிய சொரூப சம்பந்தவிசேடம். எப்பதம் எப்பதமின்மையானுக்கப்பட்ட இயைபினறிவைத் தோற்றுவிப்பதாகாது என்றது அச்சம்பந்தத்தை விளக்குதற்பொருட்டு. ஒருசொல்லின் பொருட்கண் ஏனைச்சொல்லின் பொருளுண்மை தகுதியாமென்னும் மதத்துள் ஐயந் துணியப்படுதலாகிய பொதுமையின் ஞானத்தால் வரைந்துகொள்ளப்பட்டது சாத்தஞானத்திற்குக் காரணமாம். மற்றுப் பாதம் நிச்சயமின்மை தகுதியாமென்னு நவீன மதத்துட் சொரூபத்தினழிவே தகுதிக்குக் காரணமாமெனக்கொள்க.

கூஉ. தொடர்மொழி வேதசம்பந்தமுடையதும், உலகசம்பந்தமுடையதும் என இருவகைப்படும். வே

தசம்பந்தமுடையது ஈசுரனாற் கூறப்பட்டமையான் முழுவதுமே பிரமாணம். மற்று உலகசம்பந்த முடையதனுள் ஆத்தனாற் கூறப்பட்டது பிரமாணம். ஏனையது பிரமாணமன்று. வாக்கியப்பொருளுணர்ச்சி சத்தத்தினாலாயவுணர்ச்சி. அதற்குக் கரணம் சத்தம்.

தொடர்மொழி எ-து. தொடர்மொழியைப் பகுக்கின்றது. வேதசம்பந்தமுடையது எ-து. வேதசம்பந்தமுடையதற்கு விசேடங் கூறுகின்றது. அற்றேல் வேதம் அநாதியாகலின் இறைவன் வாக்கியமாதலெங்ஙனமெனின்;—அற்றன்று, 'வேதம் புருடனாற் செய்யப்பட்டது வாக்கியக்கூட்டமாகலின், பாரதம்முதலியனபோல' என்னு மனுமானத்தாற் புருடனாற் செய்யப்பட்டமை பெறப்படுதலினென்பது. நினைக்கப்படும் வினைமுதலுண்மை உபாதியாமென்னற்க; கௌதமர் முதலியோரால் மாணாக்கர் பரம்பரையின்வைத்து வேதத்திற்கும் வினைமுதலுண்மை நினைக்கப்படுதலின் ஏதுவினும் வியாபகமாதலானும், 'அவனிடத்து நின்றும் வேதமூன்றும் பிறந்தன' என்பது சுருதியாகலானுமென்பது. அற்றேல் எழுத்துக்கள் நித்தியம், 'அதுவே இந்தக்ககர' மென்னும் முன்னறிந்ததனுணர்வின்வலியால். ஆகவே வேதம் அநாதியாதலெங்ஙனமெனின், அற்றன்று, 'ககரந்தோன்றிற்று' 'ககாரமழிந்தது' என்னுமுணர்ச்சியால் எழுத்துக்கள் அநித்தியமாமாகலினென்பது. 'அஃது இந்தக்ககர' மென்னும் முன்னறிந்ததனுணர்வு, 'அஃது இந்த விளக்கின்சுடர்' என்பதுபோலச் சாதிபற்றியேயாம். எழுத்துக்கள் நித்தியமாயினுந் தொடர்வுபாட்டால் விசேடிக்கப்பட்ட வாக்கியம் அநித்தியமேயாம்; ஆகலின் வேதம் இறைவனாற் கூறப்பட்டதேயாம். மனுமுதலிய மிருதிகளும் ஒழுக்கமும்

வேதத்தை முதனூலாகவுடைமையிற் பிரமாணமேயாம். மிருதிக்கு முதனூலாகிய வேதம் இக்காலத்தோதப்படாமையின் அதற்குக் காரணமாய உள்ளதொரு சாகை இறந்ததென்று கொள்ளற்பாற்று. அற்றேல் இக்காலத்து வழங்கும் வேதவாக்கியத்தினழிவு கொள்ளுதலரிதாகலின் அழிவில்லதாகிய வாதம் பொருந்தாமையினென வநும்ித்த்றியற்பாலதாகிய வேதங் காரணமாமெனின்;— அற்றன்று, அங்ஙனமாயினும் எழுத்துக்களது தொடர்வுபாட்டறிவின்மையின் அறியப்படுதலின்மையினென்பது.

அற்றேல் எ-து. மீமாஞ்சகமதநூலோர் சங்கை கூறுகின்றது. வேதம் எ-து. வேதம் ஈசுரனாற் கூறப்பட்டதாதலே அனுமானவளவையா னிலைநிறுத்துகின்றது. நினைக்கப்படும் எ-து. அற்றேல், 'பதினெண் புராணங்களுஞ் செய்தோன் வியாசன்' என்பது முதலிய பிரமாணவலியாற் பாரதமுதலியவற்றின்கண் வினைமுதலுண்மை புலப்படும், வேதத்துளங்ஙனமன்று; ஆகவே நினைக்கப்படும் வினைமுதலுண்மை பாரதமுதலிய துணிபொருட்கண் வியாபகமாதலானும் பக்கத்தின்கண் எது வியாபகமாகாமையானும் உபாதியாதலின் இவ்வனுமானந் துணிபொருளைச் சாதிப்பதாதலெங்ஙனமெனவாசங்கித்துரைக்கின்றது.

அவஸிடத்து நின்றும் எ-து. கௌதமர் முதலியோரான் மாணாக்கர் பரம்பரையின் வைத்து வேதத்தின் வினைமுதலுண்மை யுணர்த்தப்படுதற்கண் விவாதஞ்செய்வோனுக்கு விடைகூறுகின்றது. அதுவே இந்தக்ககாரம் எ-து. ஈண்டு இக்காலத்துளதாகிய ககாரத்தின்கண் அக்காலத்துள்தாகிய ககாரம் அபேதமென்பது விளங்

கும். அஃதும் எழுத்துக்கள் அநித்தியமாயவழி யுள தாகாதென்பது கருத்து. அஃது இந்த எ-து. அங்ஙனமாயின் முன்னறிந்ததனுணர்விற்கு விரோதமாமென்னுஞ் சங்கை நீக்குகின்றது. தோற்றமு மழிவுமென்னு மிரண்டன்றெளிவு வேறுபொருள்கோடலை நோக்க இத்தெளிவு அங்ஙனமாதல் கோடற்கண் ணொய்ம்மையாமென்பது கருத்து. அக்கினியென்பது முதலியவற்றுள் தொடர்ந்து வருவது அகாரத்திற்குப் பிற்பட்ட ககாரமும் ககாரத்திற்குப் பிற்பட்ட இகரமும் இகரத்திற்குப் பிற்பட்ட நகரமும் முதலியனவெனப்படும்; ஆண்டுப் பிற்படுதல் இடையீடுபடாத பிற்கணத்துளதாதலெனப்படும் எனக் கூறற்பாற்று. இங்ஙனமே எழுத்துக்கள் நித்தியமாமெனக் கொள்வழியும் அநித்தியமாகிய கணத்தோடு கூடிய தொடர்வுபாடு அநித்தியமாகலின் அதனன் விசேடிக்கப்பட்ட வாக்கிய சமுதாயமெனப்படும் வேதத்திற்கு நும்மாற்கொள்ளப்படும் நித்தியமாதல் பெறப்படாதாகலின் எழுத்துக்களநித்தியமெனக்கோடலே நன்றுமென்னுங் கருத்தால் எழுத்துக்கள் நித்தியமாயினும் என்பப்பட்டது. மனுமுதலிய எ-து. மிருதி முதலியன ஆத்தனாற் கூறப்பட்டமையானே அவற்றிற்கு வினைமுதலாகிய மனுமுதலியோர் ஆத்தராகலிற் பிரமாணமாதல் பெறப்படுமாயினும் அவர் ஆத்தராதற்கண் ஐயுற்றோனுக்குத் துணிவு கூறுகின்றது.

ஒழுக்கம் எ-து. ஒழுக்கத்தினையெடுத்துரைப்பதனன் விசேடிக்கப்பட்ட வாக்கியம் எ-று. இதனாற் பிரமாணத்தினைப் பகுத்தற்குக் கேடுண்டாமென்னுஞ் சங்கை நீக்கப்பட்டது. வேதப்பொருளையறிந்தே மனுமுதலியோரால் அப்பொருளினையுடைய மிருதிமுதலியன

செய்யப்பட்டனவாகலின் அவை பிராமாணியமாமென்னுங் கருத்தால் வேதத்தை முதனூலாகவுடைமையி னெனப்பட்டது. மிருதிக்கு முதனூல் எ-து. அற்றேல், அவ்வேதம் புலப்படாததென்னையென்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது. அதற்குக்காரணமாய் எ-து. மிருதி முதலியவற்றிற்குக் காரணமாகியவொரு சாகை ஓதுதலினின்றும் வழுவிற்றென அனுமித்துணரப்படும் எ-று. வாக்கியத்தினழிவு எ-து. வாக்கியத்தின் கேடு எ-று. அற்றேல் ஒத்ததாகத் தொடர்ந்து வரும் வேதமோதுதல் சம்பிரதாயத்தாற் பெறப்பட்டமையின் அவ்வியல்பிற்றாகிய வேதத்தின்கண் எத்துணை வாக்கியம் அழிந்ததெனக் கோடல் கூடாதாயினும் ஓதப்படுவதாகிய வேதத்தின்கட்டானே பிரிக்கப்படாததாகலின் அறியப்படும் வாக்கியம் மிருதிக்குக் காரணமாமென்னுஞ் சங்கை நீக்குகின்றது.

பொருந்தாமையின் எ-து. மிருதிமுதலிய ஒத்தபொருளினையுடைய வாக்கியங்கள் ஓதப்படும் வேதத்தின்கண் அறியப்படாமையினென்பது கருத்து. என்றும் அநுமித்தறியற்பாலதாகிய எ-து. என்றும் அநுமிக்கற்பாலதாதலே காரணமாகவுடைய எ-று. எழுத்துக்களது தொடர்வுபாட்டறிவு எ-து. அவ்வாறாகிய ஞானமுஞ் சாத்தஞானத்திற்குக் காரணமாகலின் இவ்வாறுரைக்கப்பட்டது. அங்ஙனமன்றேல் தியாகி கியாதி முதலிய சொற்களாற் பொருள் விசேடமறியப்படாதெனல் வேண்டுதலினென்பது கருத்து.

அற்றேல், 'இப்பதங்கள் நினைப்பிக்கப்படும்பொருளின் சமுசர்க்கத்தையுடையன, அவாய்நிலைமுதலிய பதக்

கூட்டமாகலின், 'ஆவைக்கொணு, தண்டத்தால்' என்னும் நம்மனோர் வாக்கியம்போல'என்னும் அனுமானத்தானே சமுசர்க்கஞானந் தோன்றுதலிற் சத்தம் வேறுபிரமாணமன்றுமெனின்;-அற்றன்று,அனுமிதியைநோக்கச் சாத்தஞானம் இலக்கண வேறுபாடுடைத்தாதற்குச் சொல்லானறிந்தேனெனப் பின்னிகழுமுணர்ச்சி சான்றுதல் எல்லார்க்குமுடம்பாடாமாகலினென்பது.

அற்றேல் எ-து. சத்தம் வேறு பிரமாணமாமெனக்கொள்ளும் வைசேடிகமதத்தினை மறுப்பான் றொடங்குகின்றது. இப்பதங்கள் எ-து. குடத்தைக்கொணு என்பதுமுதலியன எ-று. நினைக்கப்படும் எ-து. நினைப்பிக்கப்படும் பொருளின் சமுசர்க்கஞானத்தாற் றோன்றுவது எ-று. சமுசர்க்கத்தின்கட் டாற்பரியத்திற்கு விடயமாதல் பெய்துரைக்கற்பாற்று; அதனால் வேறு சமுசர்க்கத்தை எடுத்துக்கொண்டு வேறுபொருள் கொள்ளுதல் நீக்கப்பட்டது. அவாய்நிலைமுதலியன என்றதனாற் றகுதியுமண்மையுங்கொள்ளப்படும். அவாய்நிலை முதலியன இல்லதாகிய பதக்கூட்டத்தின்கண் முறைபிறழ்ச்சி நீக்குதற்கு அவாய்நிலை முதலியவற்றையுடைய எனப்பட்டது. ஆகவே காரியத்தினிலக்கண வேறுபாடுடைமையைத் தடுப்பதாதலாற் சத்தம் வேறுபிரமாணமென்பது கருத்து.

அருத்தாபத்தியாகிய வேறு பிரமாணமுமுண்டு, அற்றேல், 'பகலுண்ணான் சாத்தன் பருத்திருப்பன்' எனக் கண்டாயினுங் கேட்டாயினு மறிந்தவழிப் பருமை வேறோராற்றாற் பொருந்தாமையின் இரவுண்டல் அருத்தாபத்தியாற் கொள்ளப்படுமெனின்;— அற்றன்று, சாத்தனிரவு

ண்பன் பகலுண்ணாநவழிப் பருத்திருத்தலினென்னு மனு மானத்தாற்றானே இரவுண்டல் பெறப்படுமாகலினென்பது.

அற்றேல் எ-து. மீமாஞ்சகமதத்தோர் சங்கை கூறுகின்றது. கண்டு எ-து. காட்சியாலறிந்தெனவும் கேட்டு எ-து. சத்தத்தானுணர்ந்தெனவும் பொருள்படும். இதனால் காட்சியருத்தாபத்தியுங் கேள்வியருத்தாபத்தியுமென அருத்தாபத்தி யிருவகையாதல் கருதப்பட்டது. பருமை எ-து. பருமை இரவுண்டலின்றிப் பொருந்தாமையின் எ-று. எதனையின்றி எது பொருந்தாது, அஃது அதனைப் பொருந்தச்செய்வதாகலின், இரவுண்டல் பொருந்தச் செய்வதாம். பருமை பொருந்தச் செய்யப்பட்டது. பொருந்தச் செய்வதனறிவு பலமும், பொருந்தச்செய்யப்பட்டதனறிவு கரணமுமாம். பலமுங் கரணமுமென்னு மிரண்டன்கண்ணும் அருத்தாபத்தியென்னுஞ்சொல் பலத்தின்கண் அருத்தத்தினது ஆபத்தி கொள்ளுதலென்னுஞ் சொற்பொரு ளுணர்ச்சியானுளதாம். மற்றுக் கரணத்தின்கண் அருத்தங்கொள்ளுதல் எதனாலென்னுஞ் சொற்பொருளுணர்ச்சியா னுளதாம். இவையெல்லாமீண்டேயறிந்துகொள்க. சாத்தன் எ-து. வெதிரேகியனுமானத்தாற்றானே போந்த பொருளுடைமையின் அருத்தாபத்தி வேறுபிரமாணமாதல் நன்றன்றெனச் சமாதானங் கூறுகின்றது. பகலின் மாத்திர முண்போனாகிய பருத்திருப்போன்கண் முறைபிறழ்ச்சி நீக்குதற்குப் பகலுண்ணாதவழி என்பதும் பகலினு மிரவினு முண்ணாதோனாகிய பருமையில்லாதோன்கண் முறைபிறழ்ச்சி நீக்குதற்கு விசேடியமுங் கூட்டியுரைக்கப்பட்டன. அஃதும் யோகமுதலியவற்றாற் றோன்றுவதாகிய பருமையென்னும் பொருட்டு. அத

ளுல் உணவில்லோனுகிய யோகி பருத்திருந்தவழியும் முறைபிறழ்ச்சியின்றும்.

'நூற்றில் ஐம்பதுண்டு' என்னுஞ் சம்பவமும் அனுமானமேயாம். 'இவ்வாலிற்பேயுண்டு' என்னும் ஐதிகமும் அறிவின்மையாற் கூறுவோனையுடைமையாற் சத்தப்பிரமாணமேயாம். சேட்டையுஞ் சத்தானுமானங்களின் வழியானே வழக்கிற்கு ஏதுவாகலின் வேறுபிரமாணமன்று. ஆதலிற் காட்சி, அனுமானம், உவமானம், ஆகமம் எனக் கூறப்பட்ட நான்குமே பிரமாணமாம்.

நூற்றில் எ-து. சம்பவமும் ஐதிகமும் மேற்பட்ட பிரமாணமெனக்கூறும் பௌராணிகமதத்தினை மறுக்கின்றது. அனுமானமேயாம் எ-து. மற்று வேறு பிரமாணமன்று எ-று. நூறுடையது எனக் கூறப்பட்டவழி ஐம்பதுடையது என்னுமறிவு தோன்றுமன்றே, அது அனுமானத்தானேயாமெனக் கொள்ளப்படுமாகலின் நூறு ஐம்பதின் வியாப்பியமாகலினென்பது கருத்து. அஞ்ஞானத்தால் எ-து. விசேடித்துத் துணியப்படாத முதற்கூறுவோனையுடையது சத்தம், மற்று வேறு பிரமாணமன்று எ-று. அவ்வகையான சத்தம் உண்மையானுக்கிற் சத்தப்பிரமாணத்துளடங்கும், அங்ஙனமன்றேல் பிரமாணமன்றேயாமென்பது கருத்து. சேட்டையும் எ-து. அற்றேல், இச்சேட்டையால் இப்பொருளறியற்பாற்றெனச் சங்கேதஞ்செய்யப்பட்ட சேட்டையால் வேற்றுச் சாதிமையுடைத்தாகிய பிரமை தோன்றுதலிற் சேட்டையும் வேறுபிரமாணமாமெனக் கூறுவோனை மறுக்கின்றது. சத்தானுமானங்களின்வழியான் எ-து. சத்தத்தின் வழியாளுக அனுமானத்தின்

வழியானுக; மற்றுச் சுதந்திரமுடைமையானன்று எ-று. சேட்டையாற் கொள்ளப்படுஞ் சத்தம் பிரமையைத் தருவதாயவழியும் மிகையாமாகலின் அனுமானமாகக் கொள்ளப்படும். வழக்கு எ-து. பிரமையெனப்படு ஞானம் எ-று. ஆதலின் எ-து. முடித்துரைக்கின்றது.

## பிரமாணம்.

ஞானங்களது அதனையுடையதன்கண் அது விசேடணமாகத் தோன்றுந் தோற்றம் தன்னானுணர்தற் பாலதோ பிறிதானோவென ஆராயப்படும். ஆண்டு ஐயப்பாடு வருமாறு;— ஞானம் பிரமாணமாதல் அது பிரமாணமாதலின்மையைக் கவராததாகிய எல்லாஞானங்களையுங் கவருங் கருவியாற் கவரற்பாலதோ அன்றோவென்பது. ஈண்டு விதியாற் கூறியது தன்னானுணர்தற்பாலதாதல், மறையாற்கூறியது பிறிதானுணர்தற்பாலதாதல்.

ஞானங்களது எ-து. பிரமாணங் காட்டப்பட்டமையாற் பிரமையாதல் பிறிதாற் கவரற்பாலதாதலை நிலைநிறுத்தும்பொருட்டுக் கூறுகின்றது. ஆறும்வேற்றுமைப் பொருள் ஆதேயமாதல், அஃதும் அதனையுடையதன்கண் அது விசேடணமாகவென்பதனோடு முடியும். அஃதும் அதனையுடையதாகிய விசேடியத்தையுடையதனால் வரைந்துகொள்ளப்பட்ட அஃதாகிய விசேடணத்தினையுடையதாதல். அதுவென்னுஞ் சொற்குப் பொருள் குடத்தன்மைமுதலியன வெனப்படும். தன்னாற்கவரற்பாலது எ-து. ஞானத்தைக் கவர்வதாகிய கருவியாற் றானறற்பாலது கவரும் விடயம் எ-று. பிறிதால் எ-து. உணரற்பாலதென்பது வத்தியையும். அனுமான

முதலியவற்றுற் றேன்றற்பாலது கவரும் விடயமெ ன்பது அதன்பொருள். ஆண்டு எ-து. ஆராய்ச்சிக்கண் எ-று. பயப்பதாதல் ஏழாம்வேற்றுமைக்குப் பொருள், ஐயப்பாடென்பதனேடு முடியும். ஆராய்ச்சியைப் பய ப்பதாதல் அதற்குப் பொருளாமா றெங்ஙனமெனின், மாறுபட்ட பொருளினை யெடுத்துக்கூறும் வாக்கியம் இரண்டு ஐயப்பாடெனப்படும் அதனுற் பிரமாணமா காததோவெனச் சங்கைசூழ்ந்த அவ்வவ்வாக்கியப்பொ ருளறிவின்வழியானே நடுநின்றேனுக்கு ஐயந்தோன் றுமாகலின் ஒருபாற் றுணிவு தோன்றுதற்பொருட்டு ஙியாயத்தினை யெடுத்தாள்ன்முதலியன ஆராய்ச்சியெ னப்படும். இங்ஙனமே ஆராய்ச்சியைத் தோற்றுவிப்ப தாகிய ஐயத்தினைத் தோற்றுவிக்கு மையப்பாடு ஆரா ய்ச்சியைத் தோற்றுவிப்பதாவதாமென்றல் அழிவின்றி நாட்டப்படுமெனக் கூறுப.

ஞானம் பிரமாணமாதல் எ-து. பக்கத்தினை யெடுத்துக் காட்டியவாறு. ஈண்டு ஞானமென்னும் பகம் அதனை யுடையதன் அது விசேடணமாகத் தோன்றும் ஞான மாதலெனப்படும் பிரமாணமாதல் பக்கமென்னுந் தாற் பரியத்தினைக் கவர்வது. மற்றுப் பிரமிதிக்குக் கரண மெனப்படுந் தாற்பரியத்தினைக் கவர்வதன்று. உண் மையாறேக்கின் அதனையுடையதன்கண் அது விசே டணமாகத் தோன்றும் ஞானமாதல் குடத்தன்மை படத்தன்மை முதலியனவெனப்படும் பொருளின் வே றுபாட்டால் வேறுபடுமாகலின் பிரமாணமாவ தெதற் கும் எல்லாஞானங்களையுங் கவருங் கருவியாற் கவரற் பாலதாதலுளதாகாது. ஆதலின் எவ்வியல்போடுகூ டிய பிரமாணமாதல் பக்கமாம், அவ்வியல்பாகிய

விசேடணத்தினையுடைய ஞானத்தினைக் கவருமெல்லாவற்றையுங் கவர்வதாதலே சாதிக்கப்படும். மற்று ஞானமென்னும் பதம் பொதுவாகையால் ஞானங்களைக் கவருமெல்லாவற்றையுங் கவர்வதாதலென்னுந் தாற்பரியத்தினைக் கவர்வதன்று. அதுபிரமாணமாதல் எ-து. அது பிரமாணமாதலின்மையைக் கவராது எல்லாஞானங்களையுங் கவருங் கருவியாற் றோன்றற்பாலது கவர்தற்கு விடயமோ அன்றோ எ-று. இவ்வியல்பிற்றாகிய கவர்தல் குருமதத்தின்கண் முயற்சியும் முராரிமிசிரமதத்தின்கட் பின்முயற்சியும் பட்டமதத்தின்கண் அறியப்பட்ட தன்மையினையுடையவிலிங்கத்தினையுடைய அனுமிதியுமாம். ஈண்டுக் குருமதத்தின்கண் எல்லா ஞானங்களிலும் அளத்தலும் அளப்போனும் அளக்கப்பட்டதுமென்னு மூன்றும் விளங்கும், அம்மதத்தின்கட் குடத்தன்மையாற் குடத்தை யானறிகின்றேனெனப்படு முயற்சியே காரணமாகலினென்பது. இங்ஙனமே முயற்சி தன்னை விளக்குவதெனப்படுமாகலிற் தன்னாற்றானே தன்னாற்போந்த பிரமாணமாதல் கவர்தலிற் பிரமாணமாதல் தன்னாற் கவர்தலேயாம். விசேடிக்கப்பட்ட புத்திக்கு விசேடணவறிவு காரணமாதல் அவராற் கொள்ளப்படாமையின் அணிமைப்படாததாகிய பிரமாணமாதற்கும் புலப்பாடுளதாமாகலினென்பது. மிசிரமதத்தின்கண் இது குடமெனப்படும் ஞானத்தின்பின் குடத்தன்மையாற் குடத்தை யானறிகின்றேனென்னு ஞானத்தினை விடயமாகவுடைய உலகசம்பந்தம்பற்றி "நிகழு:மனவைதோன்றும்; அதனாற் பிரமாணமாதல் கவரப்படும். பட்டமதத்தின்கண் ஞான மிந்திரியத்திற்குப் புலனாகாமையின் அறி

யப்பட்ட தன்மையுடைத்தாகிய இலிங்கத்தினையுடைய அனுமிதியே முதற்கண்ணதாகிய ஞானத்தினைக் கவரு மெனப்படுமாகலின் அதனாற் பிரமாணமாதல் கவரப் படும்.

அனுமானப்பிரயோகமாமாறு:—'குடம் குடத்தன்மையுடைத்தாகிய விசேடியத்தினையுடையதும் குடத்தன்மையாகிய விசேடியத்தையுடையதுமாகிய ஞானத்திற்கு விடயமாம், குடத்தன்மையாகிய விசேடணத்தினையுடைய அறியப்பட்டதன்மையுடைத்தாகலின். யாது இங்ஙனமன்று, அஃது இங்ஙனமன்று' என வரும். அறியப்பட்டதன்மை விடயத்தோடுகூடிய ஞானத்தாற் றோன்றற்பாலதாகிய மேற்பட்ட பதார்த்தமாமென மதக் கோட்பாடறிக.

அனுமானத்தாற் கவரற்பாற்றாகலின் துணிந்ததனைத் துணிதலென்னுங் குற்றத்தி னீக்குதற்பொருட்டு எல்லாம் எ-ம், இஞ்ஞானம் மெய்யனுபவமன்று என்னு ஞானத்தாற் பிராமாணியமாதல் கவரப்படாமையின் பாதத்தினீக்குதற்குப் பிரமாணமாதலின்மையைக் கவராததாய் எ-ம், இஞ்ஞானம் மெய்யனுபவமன்றெனப் பின்னிகழுமுணர்வின்கண்ணதாகிய பிரமாணமாதலைக் கவர்வதற்குப் பிரமாணமாதலின்மையைக் கவர்தலின்மையின் தன்னாலாதலின்றாய்முடிதலின் 'அது எ-ம் கூறியவாறு. கவரற்பாலதாகிய பிரமாணமாதற்கு உரிய பற்றுக்கோடெனப்படுமதன்கண் பிரமாணமாதலின்மையைக் கவர்வது எ-று. எடுத்துக் காட்டிய உதாரணத்தின்கண் முன்முயற்சியிற் பிரமாணமாதலின்மையைக் கவர்வதும் பின்முயற்சியினது கவராததாகலிற் தன்னாலாதல் பெறப்படும்.

அநுமானத்தால் எ-து. எல்லாமென்னும் விசேடணங் கொடுக்கப்பட்டவழியே கவராததென்பது இறுதியாய வை பொருளுடைத்தாமென்னுங் கருத்தால் முதற்கண் அதற்கே பயன் காட்டுகின்றது, பிரமாணமாதலென்பது முதலியன. துணிந்ததனைத்துணிதல் எ-து. நையாயிகமதத்தும் 'இஞ்ஞானம் மெய்யனுபவம், பயன்படுவதாய முயற்சியைத் தோற்றுவித்தலின்' என்னுமனுமானத்தானும் 'இஞ்ஞானம் மெய்யனுபவ' மென்னும் ஆத்தன் வாக்கியத்தானுங் கவரற்பாலதாகலினென்பது கருத்து. நையாயிகரான் மறுக்கப்படுவதாகிய துணி பொருட்கட் பாதம் நீக்குதற்கு என்பதுமறிந்துகொள்க. எல்லாம் எ-து. அற்றேல் கருவிக்கு எல்லாமென்னும் விசேடணம் பொருந்தாது, எல்லாக் கருவியாற் றோன்றற்பாலதுங் கவர்தல் பெறப்படாமையின் எல்லா ஞானங்களின் கருவிகளானும் ஒரு ஞானந் தோற்றப்படுவதன்று. எல்லாமாகியகருவியென விசேடியங்கொடுத்து அவ்வவற்றாற் றோன்றற்பாலதனையுடைய கவர்தற்கு விடயமாதல் துணியப்படுமெனக் கூறற்க, பின்முயற்சிமுதலிய கருவிகட்கு அதன்மயமாதல் கூட்டியுரைக்கப்பட்டவழி மும்மதப்பொதுமையும் உறுதிப்படாமையினெனின்;— அற்றன்று, என்னை? எல்லாமென்றது பலத்தாற் கவர்தற்கு விசேடணமாகலின். ஆகவே ஞானத்தைக் கவர்வதன் கருவியாற்றோன்றற்பாலதாகிய எல்லாவற்றின் கவர்ச்சிக்கும் விடயமாதலென்பது போந்தபொருளாகக்கொள்க. அவ்வவ்வியல்பாகிய விசேடணத்தையுடைய ஞானத்தைக் கவர்வதாகிய கருவியாற் றோன்றற்பாலதன் கவர்ச்சி வியாபகமாகிய விடயித்தன்மைக்குப் பிரதியோகியாதலென்பது தேற்றம்.

பிரமாணமாதலேக்கவராமையின் எ-து. முயற்சிக்கண்ண தென்பதுமுதலியன பிரமாணமாதலே விடயமாகக் கொள்ளாமையால் எ-று. பிரமாணமாதலின்மையைக்கவராதது எ-து. ஆகவே அவ்வியல்பிற்ருசிய ஞானத்தின் கருவி துணிபொருட்கட் கூட்டப்படாமையின் அதனுற் பிரமாணமாதல் கவராதவழியும் பாதமின்றென்பது கருத்து. பின்முயற்சிக்கண்ணது எ-து. அவ்வியல்பிற்ருகிய பின்முயற்சிக்கண்ணதாகிய பிரமாணமாதலின்மையுடையதெனப்படும் விசேடியமுடைத்தாதலான் விசேடிக்கப்பட்ட பிரமாணமாகாமையாகிய விசேடணத்தையுடையதெனப்படும் பிரமாணமாதல் கவர்வது எ-று. தன்னுலாதலின்றும் எ-து. நிருத்தி கூறப்பட்ட பிரமாணமாதல் பக்கத்தன்மையாயவழிப் பிரமாணமாதலின்மையைக் கவராததாகிய பிரமாணமாதலின்மையாகிய விசேடணத்தினையுடைய ஞானத்தைத் தோற்றுவிப்பதாகிய கருவி துணிபொருட்கட் பெய்துரைக்கற்பாற்ருகலின் அவ்வியல்பிற்ருகிய கருவி வழங்கப்படாமையின் அது தன்னுற் கவரற்பாலதாதலின்றும் எ-று. எழாம்வேற்றுமைப் பொருள் கொண்டு அதன்கண் ணெனப்பட்டது. கவரற்பாலதாய பிரமாணமாதற்குப் பற்றுக்கோடென்றது இதற்கே விவரணம். எவ்வியல்பிற்ருகிய பிரமாணமாதல் முதற்கண்ணதாகிய அனுமிதிக்கண் உத்தேசிக்கப்பட்டதாம், அவ்வியல்பிற்ருகிய பிரமாணமாதற்குப் பற்றுக்கோடெனப்படும். விசேடியத்தினையுடைய பிரமாணமாதலின்மையெனப்படும், விசேடணத்தினையுடைய ஞானத்தினைத் தோற்றுவியாதவதென்பது கவராதது என்பது இறுதியாயவற்றிற்குப் பொருள். 'இஞ்ஞானம் மெ

ய்யனுபவமன்று' எனப் பின்னிகழுமுணர்ச்சிக்கண்ணதாகிய பிரமாணமாதலைக் கவர்வதாகிய கருவி முயற்சியெனப்படும் விசேடியத்தினையுடைய பிரமாணமாதல் கவர்தலைத் தோற்றுவிப்பதாயவழியும் பின்முயற்சியாகிய விசேடியத்தினையுடைய பிரமாணமாதல் கவர்தலைத் தோற்றுவிப்பதன்றாகலானும் ஞானத்தைக் கவர்வதாகலானும் பிரமாணமாதலின்மை யுடைத்தாகிய விசேடியத்தினை யுடைத்தாதலென்பது முதலியவற்றோடுகூடிய பிரமாணமாதற்குத் தன்னாற் கவரற்பாலதாதல் பெறப்படுமென்னுங் கருத்தால் எடுத்துக்காட்டிய உதாரணத்தின் எனப்பட்டது. 'இஞ்ஞானம் மெய்யனுபவமன்'றென்புழி எ-று. இதன் விரிவெல்லாம் மணிப்பிரபையென்னு முரையுட் கூறினும்; ஆண்டுக் கண்டுகொள்க.

அற்றேல், தன்னாற்றானே பிரமாணமாதல் கவரப்படும், குடத்தை யானறிகின்றேனென்னும் பின்முயற்சியால் குடத்திற்குங் குடத்தன்மைக்கும் போல அவற்றின் சம்பந்தத்திற்கும் விடயிக்கப்படுதலுண்மையின் முயற்சிவடிவாகிய இயைபு ஒப்பநிகழ்தலின் முன்னருள்ளதன்கண் இயல்பின் சம்பந்தமே மெய்யனுபவமென்னும் பதார்த்தமாகலினெனின்;— அற்றன்று, தன்னாற் பிரமாணமாதல் கவர்தற்கண் புனலுணர்வு மெய்யனுபவமோ அன்றோவெனப் பயிற்சியில்லாதகாலத்து மெய்யனுபவமாதற்கண் ஐயந்தோன்றுது, பின்முயற்சியாற் பிரமாணமாதல் துணியப்படுதலின்னென்க. அதனாற் தன்னாற் கவரற்பாலதாதலின்மையின் பிறிதாற் கவர்தற்பாலதேயாம். அங்ஙனமன்றோ முதற்கட் புனலுணர்வு தோன்றியபின்னர் முயற்சிதோன்றியவழிப் புனல் கிடைத்ததாயின் முன்னர்த்தோன்றிய ஞானம் மெ

ய்யனுபவம், பயன்றருவதாகிய முயற்சியைத் தோற்றுவித்தலின், யாது இங்ஙனமன்று, அஃது இங்ஙனமன்று, எங்ஙனம் பொய்யனுபவமென்னும் வெதிரேகியால் மெய்யனுபவமாதல் துணியப்படும். இரண்டாவது முதலிய ஞானங்களின்கண் முன்னை ஞானந் திருட்டாந்தமாதலுண்மையின் அதன் சாதியுடைத்தாகிய இலிங்கத்தானே அந்நுவயவெதிரேகியானுங் கவரப்படும்.

அற்றேல் எ-து. இங்ஙன மையப்பாட்டினை யெடுத்துக்காட்டி மீமாஞ்சகமதங் கூறுகின்றது. தன்னுற்றனே எ-து. குடத்தன்மை முதலியவற்றோடுகூடிய பிரமாணமாதல் நிருத்திகூறிய கருவியாற்றனே கவரப்படும் எ-று. உம்மைப்பொருட்கண்வந்த ஏதாரத்தானே அனுமானமுதலியனகொள்ளப்படும். பின்முயற்சியால் எ-து. இது மிசிரமதக் கருத்தாற் கூறப்பட்டது. மற்றுமும்மதப்பொதுமையாற் கொள்ளின் முதற்கண்ணதாகிய ஞானங் கவர்தலாலெனக் கொள்க. அவற்றின்சம்பந்தத்திற்றும் எ-து. குடமுங் குடத்தன்மையுமாகிய விரண்டன் சம்பந்தத்திற்கும் எ-று. அற்றேல் பின்முயற்சிக்கட் சம்பந்த விளக்க மெங்ஙனமென வாசங்கித்துக் குடத்திற்குங் குடத்தன்மைக்கும் முயற்சிவடிவாகிய இயைபு எங்ஙனம் விளங்கும், அங்ஙனமே அவற்றின்சம்பந்தத்திற்கும் முயற்சியாகிய இயைபிற்குமாம், விசேடமின்மையினென்னுங் கருத்தால் முயற்சியெனப்பட்டது. முன்னருள்ளதன்கண் எ-து. அற்றேல் அத்துணையானே பிரமாணமாதலெங்ஙனமென்னும் வினவிற்கு விடைகூறுகின்றது. முன்னுள்ளதன்கணுளதாகிய இயல்பின் சம்பந்தம் யாது, அதனோடு கூடியதற்கு எ-று. இதன் கருத்து வருமாறு:— நையாயிகரும் பின்முயற்சிக்கண்

விசேடியத்தன்மையும் விசேடணமாகிய வியல்பின்றன் மையுமென்னு மிரண்டன் விளக்கங் கொள்வர். முன் னுள்ளதனைக் குடத்தன்மையானறிகின்றேனெனப்படு வதே பின்முயற்சியென அவராற் கொளளப்படுதலி னென்பது. மற்று ஏனையது முன்னுள்ளதாகிய குட முதலியவற்றின்கட் குடத்தன்மை முதலியன வெனப்ப டும் இயல்பின் சம்பந்த விளக்கங்கொள்ளார். ஆகலின் ஆண்டு இயல்பின் சம்பந்த விளக்கம் காட்டப்படும்வழி விசேடிக்கப்படாததின்றெனப் பிரமாணமாதலின் விள க்கம் பெறப்படும், அணிமைப்படாதனவாகிய விசேடி யத்தன்மை விசேடணத்தன்மையென்னு மிரண்டன் விளக்கத்திற்கும் விளக்கம் யாவரானுங் கொள்ளப்படு தலினென்பது. புனலுணர்வு எ-து. புனலுணர்வு மெய்யனுபவமோ அன்றோவெனப்படுவது. பயிற்சியி ல்லாதகாலத்து எ-து. முதற்கண்ணதாகிய புனலுண ர்வு கவரப்பட்ட பிற்காலத்து எ-று. அனுபவத்தாற் பெறப்பட்டது பொய்யனுபவமாதற்கண் ஐயந் தோன் றுதென்றவாறு. துணியப்படுதலின் எ-து. அஃது டைத்தாந்தன்மை துணியப்படுதல் அஃதில்லதாந்தன் மையறிவிற்குத் தடையாகலினென்பது கருத்து. ஈண்டு அறியப்பட்டது குடம் என்னுமுணர்ச்சி அறிவிற்கு விடயமாந்தன்மையாகிய விடயமாதல் கொள்ளுதலா னே கொள்ளப்படும்வழி மேற்பட்டதாகிய அறியப்ப ட்டதன்மை கொள்ளப்படற்பாற்றன்று, மிகையாதலா னும் அளவையின்மையானுமென அதனை மறுக்குமா றறிந்துகொள்க. அதனால் எ-து. பயிற்சியில்லாதகால த்து ஐயம் அனுபவமாதலின் எ-று. இது தன்னூற் கவரற்பாலதாதலின்மையினென்றதனோடியையும். பிற்

தாற்கவரற்பாலது எ-து. பிரமாணமாதல் அனுமான முதலியவற்றானே கவரப்படுதல் எ-று. முயற்சிதோன் றியவழி எ-து. இதனால் மீமாஞ்சகமதத்தோரால் உட ன்படப்பட்ட பிரமாணமாதலின் றுணிபு முயற்சிக்கே துவாதற்கண் முறைபிறழ்ச்சி காட்டப்பட்டது. புடை பெயர்ச்சியில்லதாகிய முயற்சியே பிரமாணமாதலின் றுணிவிற்குக் காரணமாம். மற்றுப் புடைபெயர்ச்சியு டைத்தாகிய முயற்சி பிரமாணமாதலி னையத்திற்குக் காரணமாம். புடைபெயர்ச்சியில்லதும் புடைபெயர்ச்சி யுடையதுமென்னு மிரண்டும் விடயித்தன்மை விசே டம். இங்ஙனமே அவற்றுள் புடைபெயர்ச்சியுடைத் தாகிய முயற்சிகொள்வழியும் பிரமாணமாதலின் றுணி விற்குக் காரணமாதலின் முறைபிறழ்ச்சி யெங்ஙன மெனக் கூறற்க, அங்ஙனமாயினும் யாண்டுப் பிரமா ணமாதற்கண்ணும் பிரமாணமாகாமைக்கண்ணும் உண ர்வு தோன்றாது, நீர்முதலியவற்றி னுணர்வுமாத்திரை யே தோன்றும், ஆண்டு முயற்சி காணப்படுதலிற் பிர மாணமாதலி னையுறவு காரணமாதற்கண் முறைபிறழ் ச்சி நீக்கவரிதாகலினென்பது. இங்ஙனமே புனல்முத லியவற்றி னுணர்வு பிரமாணமாதலின்மை துணியப் பட்டகாலத்து முயற்சி தோன்றாதெனச் சங்கித்தலும் பொருந்தாது, கவரப்படாத பிரமாணமாதலின்மையை யுடைய நீர்முதலியவற்றி னறிவாதலானே அவ்வேதுத் தன்மை கொள்ளப்படுதலிற் குற்றமின்மையினெனச் சுருங்க வறிந்துகொள்க. புனல்கிடைத்ததாயின் எ-து. இத்துணையுங் கூறியவாற்றாற் பிரமாணமாதலை நிலை நிறுத்துமேது சொரூபாசித்திப்படுமென்னுஞ் சங்கை நீக்கப்பட்டது. இனிப் பக்கமின்மையின் முன்னர்த்

தோன்றியஞானம் என்னப்பட்டது. பயன்றநுவதாகிய எ-து. அஃதுடைத்தாகிய விசேடியத்தினையுடைய அஃதாகிய விசேடணம் எ-று. யாது இங்ஙனமன்று அஃது இங்ஙனமன்று எ-து. அந்நுவயிக்கு உதாரணமின்மையின் வெதிரேகியுதாரணத்தினைத் திருட்டாந்தத்தோடு கூறுகின்றது. யாது பொய்யனுபவமன்று அஃது பயன்றராததாகிய முயற்சியைத் தோற்றுவிப்பது எ-று. வெதிரேகியால் எ-து. வெதிரேகவியாத்தியுடையதனால் எ-று. துணியப்படும் எ-து. அனுமிக்கப்படும் எ-று. இரண்டாவதுமுதலிய ஞானங்களின்கண் எ-து. இரண்டாவதுமுதலிய புனலுணர்வின்கண் எ-று. அதன் சாதியுடைத்தாகிய இலிங்கத்தான் எ-து. முன்னை ஞானத்தோடொத்த சாதியுடைத்தெனப்படு மிலிங்கத்தானே எ-று. அஃதாவது பயன்றருவதாகிய முயற்சியைத் தோற்றுவிப்பதாதலானென்க. கவரப்படும் எ-து. பிரமாணமாதல் அனுமிக்கப்படும் எ-று.

மெய்யனுபவம் குணத்தாற்றோன்றற்பாலதாதல் தோற்றத்தின்கட் பிறிதானுதல். மெய்யனுபவத்திற்குச் சிறப்புக்காரணம் குணம். பொய்யனுபவத்திற்குச் சிறப்புக் காரணங் குற்றம். அவற்றுள் காட்சியின்கண் விசேடணத்தினையுடைய விசேடியத்தின் சம்பந்தங் குணம். அனுமிதியின்கண் வியாபகமுடையதன்கண் வியாப்பியவுணர்வு. உவமிதியின்கண் உண்மையாகிய வொப்புமையுணர்வு. சாத்தஞானத்தின்கண் உண்மையாகிய தகுதியுணர்வு. இவைமுதலியனவெல்லா மூகித்துணர்ந்துகொள்க. முன்னுள்ளதன்கண் விசேடணமின்மை பின்முயற்சியா லணிமைப்படாமையிற் பொய்யனுபவமாதல் பிறிதாற்றானே கவர்தற்பாலதாம். பித்தமுதலிய குற்றத்தாற் றோன்றற்பாலதாதலின் உற்பத்திக்கட் பிறிதானுதல் கொள்ளப்படும்.

மெய்யனுபவம் எ-து. இங்ஙனம் அறிதற்கட் பிறிதாளுதலை நிலைநிறுத்தித் தோற்றத்தின்கணதனைத் தெரித்துணர்த்துகின்றது. மெய்யனுபவத்திற்குச் சிறப்புக்காரணம் எ-து. மெய்யனுபவமாதலின் மிகுந்த விடத்துளதாகிய வியல்பான் வரைந்துகொள்ளப்படாத காரியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட காரணத்தன்மையுடையது எ-று. அதனால் ஞானமாத்திரைக்கே எதுவாகிய ஆன்மாவிற்கும் மனத்திற்குமுளதாகிய சையோகமும் பிறழ்ச்சியுணர்வைத் தோற்றுவிப்பனவாகிய பித்தமுதலிய குற்றங்களும் நீக்கப்பட்டன. பொய்யனுபவத்தின் சிறப்புக்காரணமும் இங்ஙனமே விளக்கற்பாற்று. அவற்றுள் எ-து. நால்வகையாகிய மெய்யனுபவங்கட்கு எதுவாகிய குணங்களை முறையானே எடுத்துரைக்கின்றது, மெய்யனுபவங்களுள் எ-று. இவைமுதலியனவெல்லாம் எ-து. 'சங்கம் பொன்னிறமுடைத்து' என்பது முதலிய பிறழ்ச்சியுணர்வின்கண்ணும் பித்தமுதலிய குற்றமேயாம். 'இது வெள்ளி'யென்பதுமுதலிய பிறழ்ச்சியுணர்வின்கண்ணும் விடயமாகப் போதருவது முதலியனவெனவு மூகித்தறிந்துகொள்க எ-று. முன்னுள்ளதன்கண் எ-து. பொய்யனுபவம் பிறிதாளுதல் பொருந்துமாற்றுறக் காட்டுகின்றது, விடயிக்கப்படாமையின் எ-று. ஆகவே இயைபின்மையிற் பொய்யனுபவமாதல் பின்முயற்சியாற் கவர்தலுளதாகாதென்பது கருத்து. பொய்யனுபவமாதல் அதனபாவமுடைத்தாகிய விசேடியத்தினையுடைத்தாதலான்விசேடிக்கப்பட்ட அதன்விசேடணமுடைமை. பிறிதாற்றனே கவரப்படும் எ-து. அனுமானமுதலியவற்றாற்றனே கவரப்படும் எ-று. அனுமானப்பிரயோகம்

'இஞ்ஞானம் பொய்யனுபவம் விபரீதஞானமுடைத்தா கிய முயற்சியைத் தோற்றுவிப்பதாகலின், யாது இங் ஙனமன்று, அஃது இங்ஙனமன்று, எங்ஙனம் மெய்யனு பவம்' என்பது.

அற்றேல் எல்லா ஞானமு முண்மையாகலின் உண் மையல்லாத ஞானமே இல்லையெனப்படும், இப்பி யின்கண் இது வெள்ளியென்னு ஞானத்தால் முயற்சி கா ணப்படுதலின் அங்ஙனமன்றென்றல் பெறப்படாதெனக் கூறற்க, வெள்ளியினினைவும் முன்னுள்ளதனுணர்வுமென் னுமிரண்டானுமே முயற்சி தோன்றுமாகலினென்பது. அணிமைப்பட்டதாகிய விரும்பியதன் வேறுபாட்டைக் கவ ராததே யாண்டும் முயற்சியைத் தோற்றுவிப்பதாகலின் இது வெள்ளியன்றென்பது முதலியவற்றின்கண் அதிப்பிர சங்கமின்மையினெனின்;— அற்றன்று, மெய்யாகிய வெள் ளியின்கண் முன்னுள்ளது விசேடியமாகவும் வெள்ளித்தன் மை விசேடணமாகவுமுடைய ஞானம் முயற்சியைத் தோ ற்றுவிப்பதாகலின் இப்பியின்கண்ணும் வெள்ளியைப் பெறு முயற்சி தோற்றுவிப்பதாகலின் விசேடிக்கப்பட்ட ஞான மே கொள்ளற்பாற்றாகலினென்பது,

**அற்றேல்** எ-து. குருமதத்தினை மறுத்து அங்ஙனமன்றெ ன்பதை நிலைநிறுத்துகின்றது. **உண்மையாகலின்** எ-து மெய்யனுபவமாகலின் எ-று. **உண்மையல்லாதஞான மேயில்லை** எ-து. அதனபாவமுடைத்தாகிய விசேடியத் தையும் அஃதாகிய விசேடணத்தையுமுடைத்தெனப் படும் உண்மையன்மை ஞானத்தின்க ணுளதாகாது எ-று. அதனாற் பெறுதிக்கும் பெறுதியின்மைக்கும் கேடின்று. மற்று உண்மையல்லாததின் பெருவழக்கு

இச்சை முதலியவற்றி னறியப்படும். அங்ஙனமன்று எ-து. அது கொள்ளப்படாதவழி முன்னுள்ளதாகிய விசேடியத்தினையுந் வெள்ளித்தன்மையெனப்படும் விரும்பப்பட்ட தன்மையை வரைந்துகொள்வதாகிய விசேடணத்தினையுமுடைய அறிவு உண்மையறிவும் விபரீதவறிவுமென்னு மிரண்டற்கும் பொதுவாகிய முயற்சியைத் தோற்றுவிப்பதாகலின் ஆண்டு முயற்சியே யின்றாமென்பது கருத்து. வெள்ளியினினைவு எ-து. வரையறுக்கப்பட்ட நியதமாக முன்னுள்ளனவற்றாலென்பது முதலியன. தோன்றுமாகலின் எ-து. ஆகவே முயற்சிக்கு விசேடிக்கப்பட்ட ஞானமாதலே காரணமாதலின்றாதலின் அதன்றடையால் அங்ஙனமன்றெனக்கொள்ளுதலுளதாகாதென்பது கருத்து. அணிமைப்பட்டது எ-து. அற்றேல், யாண்டு 'இது வெள்ளியன்று' என்னும் பாதங் கவரப்படும், ஆண்டும் முயற்சிதோன்றும் என்னுஞ் சங்கை நீக்குகின்றது. இத்துணையுங் கூறியவாற்றால் நினைவெனப்படுங் காரணம் அவாவப்படுதல் விளக்கப்பட்டது.

விரும்பியதன் வேறுபாட்டைக் கவராததே எ-து. வெள்ளிமுதலியனவெனப்படும் விரும்பியதன் வேறுபாடு கவர்தலில்லதே எ-று. ஏகாரத்தால் விசேடிக்கப்பட்ட ஞானம் முயற்சியைத் தோற்றுவிப்பதென்பது நீக்கப்பட்டது. யாண்டும் எ-து. வெள்ளியின்கண்ணும் இப்பியின்கண்ணும் எ-று. வெள்ளியின்கண் விசேடிக்கப்பட்ட ஞானமே முயற்சிக்குக் காரணமாமெனக் கொள்ளற்பாற்று. அங்ஙனமன்றேல் தருமஞானமுந் தருமிஞானமுமென்னு மிரண்டும் விரும்பியதன் வேறுபாடு

கவராதவெனப்படுந் திண்மையாகிய தருமத்தான் வரை ந்துகொள்ளப்பட்டதுங் காரணமாமாகலி னென்பது. **மெய்யனுடாவமாகியவெள்ளியின்கண்** எ-து. இங்ஙனமே அவற்றுள் முயற்சிக்கு அந்நுவயத்தானும் வெதிரேகத் தானும் விசேடிக்கப்பட்ட ஞானமே கொள்கின்றுழி நொய்ம்மையாற் பொதுவகையாக முயற்சித்தன்மை யான் வரைந்துகெள்ளப்பட்டதற்கு விசேடிக்கப்பட்ட ஞானமாதலாலே தொடர்வுபாடுடைய காரணத்தினின் மையே கொள்ளப்படற்பாற்றாகலின் விபரீதமாகிய முயற்சியும் அதன் காரியத்தன்மையை வரைந்துகொள் வதனைத் தழுவிநிற்றலின் அதன் விசேடிக்கப்பட்ட ஞானங் கொள்ளற்பாற்றாகலின் அங்ஙமன்றென்றல் மறுக்கப்படுவதன்றெனச் சமாதானங் கூறுகின்றது. **வெள்ளித்தன்மை விசேடணமாக** எ-து. அவ்வியல்பிற் றாகிய ஞானத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட் டது எ-று. **முயற்சியைத்தோற்றுவிப்பதாகலின்** எ-து. முயற்சித்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதனைத் தோற்றுவிப்பது எ-று. **விசேடிக்கப்பட்டஞானம்** எ-து. முன்னுள்ளதாகிய விசேடியத்தினையுடைய விரும்பப்ப ட்ட தன்மையை வரைந்துகொள்வதாகிய விசேடண ஞானம் எ-று. ஏகாரத்தால் விரும்பப்பட்ட வேறுபா ட்டினைக் கவராதது நீக்கப்பட்டது. **கொள்ளற்பாற் றாகலின்** எ-து. அனுமானத்தாற் கொள்ளற்பாற்றாக லின் எ-று. அதன் பிரயோகமாமாறு;— 'முன்னுள்ள தாகிய இது விசேடியத்தினையுடைய விரும்பப்பட்ட தன்மையை வரைந்துகொள்வதாகிய விசேடணத்தினை யுடைய ஞானத்தாற் றோன்றுவது, முயற்சியாகலின், வெள்ளிக்கண்ணதாகிய முயற்சிபோல'வென்பது. காட்

சிக்கட் சம்பந்தங் காரணமாகலின் வெள்ளித்தன்மை யாகிய கூற்றின்க ணஃதின்மையின் இப்பியின்கணெ ங்ஙனம் இது வெள்ளியென்பது காட்சியேயாமெனி ன்;—அற்றன்று, உலகசம்பந்தமுடைத்தல்லாத சம்பந்த மூங் காட்சியைத் தோற்றுவித்தலின் நிலைநிறுத்தப்பட் டதாகலின் ஞானவிலக்கணமுடைத்தாகியவியைபே முத ற்கணுள்ள தன்கணுளதாகலினென்பது.

௬௧. பொய்யனுபவம் ஐயம், திரிவு, தருக்கம் என் னும் வேறுபாட்டால் மூவகைத்து. ஐயமாவது ஒரு தருமியின்கண் மாறுபட்ட பலதருமங்களால் விசே டிக்கப்பட்டமையோடு பற்றிநிற்கும் உணர்வு: எங்ங னம், 'குற்றியோ மகனோ' வென்பது. திரிவு மித்தை யறிவு: எங்ஙனம், இப்பியின்கண் 'இது வெள்ளி' யெ ன்பது. தருக்கமாவது வியாப்பியத்தினை ஆரோபிப்ப தால் வியாபகத்தை ஆரோபிப்பது: எங்ஙனம், 'தீயி ல்லையெனிற் புகையுமில்லை' யென்பது.

பொய்யனுபவம் எ-து. பொய்யனுபவத்தைப் பகுக்கின்றது. சொப்பனம் மானதக்காட்சியின்பிரிவாகலின் மூவகையாதற்கு மாறுபாடின்று. ஒருதருமி எ-து. ஐயத்தினிலக்கணங் கூறுகின்றது, புலி விற்கெண்டையெனக் கூட்டம்பற்றிநிகழ்வதன்கண் அதிவியாத்தி நீக்குதற்கு ஒருதருமியின் எ-ம், குடங் திரவியமென்பது முதலியவற்றின்க ணதிவியாத்தி நீக்குதற்கு மாறுபட்ட எ-ம், ஆடைத் தன்மையின் மாறுபட்ட குடத்தன்மையுடையது என்புழி வரு மதிவியாத்தி நீக்குதற்குப் பல எ-ம் கூறியவாறு.

சொப்பனம் எ-து. அற்றேல் நூலுள் பொய்யனுபவம் மூவகைத்தெனக் கூறுதல் பொருந்தாது, |அனுபவிக்கப்பட்ட பதார்த்தங்களை நினைக்கும் ஐயும் பித்தமுமுதலியவெனப்படுந் தாதுக்களது குணத்தானுங் குற்றத்தானுந் தோன்றுவதாகிய ஊழினாற் றோன்றுவதாய், பாதிதமாகிய பொருள்களை விடயமாவுடையதாயுள்ள சொப்பனவறிவு அனுபவத்தாற் பெறப்பட்டமையினென்னும் சங்கை நீக்குகின்றது. சொப்பனம் இடவிசேடத்தினின்ற மனத்தின்சையோகமாயினும் அதன்சமவாயிகாரணத்தினையுடைய வறிவின்கட் சொப்பனமென்னுஞ் சொல் வழங்கப்பட்டதென முடித்துக்கொள்க. கண்ணாற்காண்டன்முதலியவெனப்படுதலின்மையின்மானதக்காட்சியெனப்பட்டது. யாது நினைவின்வடிவாகியசொப்பனஞானமெனப்படும், அது பாடியமுதலியவற்றோடு மாறுபடுதலின் விலக்கப்படும். இருபாற்கண்ணும் வியாபியாதிருப்பதாகிய ஞானத்தின்பின் தோன்றுவதாகிய ஒரு தருமியின்கட் குடமும் அதனபாவமுமென்னு மிரண்டன் விசேடணக்கூட்டத்தின்கண் அதிவியாத்தி நீக்குதற்கு விரோதமாகிய விடயமாதல் பெய்துரைக்கப்பட்டவழியும் பல்வென்பது |ஒருதலையான் வேண்டப்படுமென்பது காட்டுதற்கு படத்தன்மையின் மாறுபட்ட எனப்பட்டது. பல எ-து. ஒருதருமியின்கண்ணதாகிய விசேடியத்தன்மையாற் றெரித்துணர்த்தப்பட்ட மாறுபட்ட பலதருமத்தின்கண்ணதாகிய விசேடணத்தன்மையாதலின்மையின் அதிவியாத்தியின்றென்பது கருத்து. வேறுபட்ட வடிவானே ஒரு தருமியாகிய விசேடியத்தினையுடைய மாறுபட்ட பலதருமமெனப்படும் விசேடண ஞானத்தின்க ணதிவியாத்திவரு

மெனச் சங்கித்தலும் பொருந்தாது, ஒருதருமத்தான் வரைந்துகொள்ளப்பட்ட விசேடியத்தன்மையோடுகூடியதென விளக்குதலானே குற்றமின்றாமாகலினெனக் கொள்க.

மிக்ஷுத எ-து. திரிபினிலக்கணங் கூறுகின்றது. அஃதில்லதன்கண் அது விசேடணமாகத் தோன்றுந்துணிபு எ-று. வியாப்பியத்தினை எ-து. தருக்கத்தினிலக்கணங் கூறுகின்றது. தருக்கந் திரிபினுளடங்குமாயினும் பிரமாணத்திற்கு உபகாரமாகலின் வேறாகக் கூறப்பட்டது.

வேறுநூலுட் பிரமத்தின்வேறாகிய வெல்லாவற்றின்கண்ணுமே மித்தையென்னுஞ்சொல்லெடுத்தாளப்படுதலின் அஃதில்லதன்கண் எனப்பட்டது. மெய்யனுபவத்தினீக்குதற்கு இவ்வாறுரைக்கப்பட்டது. அதனபாவத்தினையுடைத்தாகிய விசேடியத்தினையுடைத்தாகலான் வரைந்துகொள்ளப்பட்ட அஃதாகிய விசேடணத்தன்மையுடைத்தாதலென்பது முதலியபொருள் கூறுதல் கருத்தாகலின் கூட்டம்பற்றி நிகழ்வதன்கண் அதிப்பிரசங்கமின்று. துணிவென்னும் பதம் ஐயமும் இச்சையுமென்பனவற்றி னீக்குதற்கு ஐயத்தின்வேறாகிய ஞானமென்னும் பொருளுடைத்தாமெனச் சுருங்க வறிந்துகொள்க. நூலுள், வியாப்பியத்தினையாரோபித்தலான் எ-து. வருவிக்கப்பட்ட வியாப்பியத்தினை யுடைத்தாந்தன்மையெனப்படும் பிறழ்ச்சியுணர்வாற் றோன்றிய வருவிக்கப்பட்ட வியாபகமுடைத்தாந்தன்மையெனப்படும் பிறழ்ச்சியுணர்வு தருக்கம் எ-று. இது வருவிக்கப்பட்ட ஞானமாத்திரைக்கட் சேறலி னீக்குதற்கு வருவிக்கப்பட்ட வியாப்பியத்தன்மையுடைத்தாகிய பிற

ழ்ச்சியுணர்வாற் றோன்றியதெனப்பட்டது. இது மக னன்று என்னுந் துணிவுள்ளவழிக் கிளை முதலியன வற்றைக் கைமுதலியவெனக்கொள்ளும் பிறழ்ச்சியுண ர்வான் இவன் மகனென்பதுமுதலியன ஆகாரியாரோ பம்; ஆண்டதிவியாத்தி நீக்குதற்கு முதலாவதாகிய வருவிக்கப்பட்டவென்னும் பதமும் வெள்ளித்தன்மை யான் வியாபிக்கப்பட்ட அபாவமுடைத்தாந்தன்மை யைக் கவர்கின்ற காலத்து எவ்வெள்ளித்தன்மை யின் வியாப்பியமுடைத்தாந் தன்மையறிவு வருவி க்கப்படும், அதனாற் றோன்றற்பாலதாகிய இது வெள்ளி யெனப்படும் வருவிக்கப்படாத ஞானத்தி ன்கணதிவியாத்தி நீக்குதற்கு இரண்டாவதாகிய வரு விக்கப்பட்ட வென்னும் பதமுங் கூட்டப்பட்டன. தருக் கத்தின்கண் கொள்ளப்பட்ட வெதிரேகத்துணிவும் கொ ள்ளப்பட்டதும் கொள்ளப்படுவதுமாகியவிரண்டன்வியா த்தியின்றுணிவுங் காரணமாமெனக் கொள்க. தருக்கந் திரிபிறுங் எ-து. மற்றுத் தருக்கம் மானதத்திரிபெனப் படுமாகலிற் பொய்யனுபவம் மூவகைத்தெனக் கூறுத லெங்ஙனமென்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது. பிரமாணத்திற்குஉபகாரம் எ-து. பிரமாணத்தால் மெ ய்யனுபவந் தோன்றற்பாலதாதற்கட் தடையாதலில்ல தாகிய வழியால் உபகாரமாதல் எ-று. வேறாக எ-து. தருக்கத்தன்மையெனப்படும் இலக்கண வேறுபாடுடை மையான் எ-று. தருக்கம் பிரமாணத்திற்கு உபகார மாதலுணர்த்துதற்பொருட்டு அங்ஙனங் கூறப்பட்ட தென்பது கருத்து.

௬௪. நினைவு மெய்யும், பொய்யும் என இருவகைத்து. மெய்யனுபவத்தாற் றோன்றியது மெய். பொய்யனுபவத்தாற் றோன்றியது பொய்.

நினைவு எ-து. நினைவினைப் பகுக்கின்றது.

௬௫. சுகம் எல்லார்க்கும் ஏற்புடைத்தாக உணரப்படுவது. துக்கம் ஏற்புடைத்தன்றாக அறியப்படுவது. இச்சை காமம். வெறுப்பு வெகுளி. முயற்சி தொழிற்பாடு. தன்மம் விதிக்கப்பட்ட வினையாற்றோன்றியது. அதன்மம் விலக்கப்பட்ட வினையாற்றோன்றியது. புத்திமுதலிய எட்டும் ஆன்மா மாத்திரைக்கே உரிய விசேடகுணங்கள். புத்தி, இச்சை, முயற்சி என்னும் மூன்றும் நித்தியமும், அநித்தியமுமாம். ஈசுரனது புத்திமுதலிய மூன்றும் நித்தியம்; உயிரது புத்திமுதலிய மூன்றும் அநித்தியம்.

எல்லார்க்கும் எ-து. சுகத்தினிலக்கணங் கூறுகின்றது. சுகமுடையேன் யான் என்பதுமுதலிய பின்முயற்சியாற் போதரற்பாலதாகிய சுகத்தன்மை முதலியனவே இலக்கணம். மற்றீண்டுக் கூறப்பட்டது சொரூபமெனக் காட்டற்பாற்று.

அற்றேல் எல்லார்க்கும் ஏற்புடைத்தாக வுணரப்படுவதென்பது முதலிய நூல் வாக்கியம் சுகமுதலியவற்றினிலக்கணங் காட்டுதற்பொருட்டாகாது. பிறன்பொருளை நுகர்தன்முதலியவற்றாற் றோன்றற்பாலதாகிய சுகம் சான்றோரான் வெறுக்கப்படுதல், காணப்படுதே

லின் அவ்வியாத்தி வருமென்னு மாசங்கை நீக்குதற்குச் சுகமுடையேன் யானென்பது முதலியனவாகக் காட்சியாற் பெறப்பட்ட சுகத்தன்மை முதலியனவே இலக்கணமாமென்னுங் கருத்தாற் சுகமுடையேன் யான் எனப்பட்டது. சுகத்தன்மைமுதலியனவென்புழி முதலியனவென்றதனால் துக்கத்தன்மை கொள்ளப்படும். மற்று ஈண்டு எ-து. எல்லார்க்கு மேற்புடைத்தாகவென்பது முதலியன எ-று.

௬௬. வாசனை வேகமும் பாவனையும் நிலைபெறுத்துவதும் என மூவகைத்து. வேகம் பிருதிவிமுதலிய நான்கினும் மனத்தினும் இருக்கும்.

வாசனை எ-து. வாசனையைப் பகுக்கின்றது. வாசனைத்தன்மையாகிய சாதியுடையது வாசனை. பிருதிவி எ-து. வேகத்தின் பற்றுக்கோடு கூறுகின்றது; வேகத்தன்மையாகிய சாதியுடையது வேகம்.

௬௭. பாவனை அநுபவத்தினது காரியமாய் நினைவிற்குக் காரணமாயது. ஆன்மா மாத்திரைக்கேயுள்ளது.

அநுபவத்தின் எ-து. பாவனைக் கிலக்கணங் கூறுகின்றது. அநுபவத்தி னழிவுபாட்டின்க ணதிவியாத்தி நீக்குதற்கு நினைவிற்கு எ-ம், ஆன்மாமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு அநுபவத்தினது எ-ம் கூறியவாறு. நினைவும் வாசனையைத் தோற்றுவிக்குமென நவீனராற் கூறப்பட்டது.

அநுபவத்தின் எ-து. நினைவிற்கும் வாசனைக்கும் அநுப வத்தன்மையானே காரணத்தன்மைகூறும் பிராசீனர் கருத்து வருமாறு;—அவ்வவ்விடயத்தினையுடைய நினை விற்கும் அவ்வியல்பிற்றாகிய வாசனைக்கும் அவ்வவ்விட யத்தினையுடைத்தாகிய அநுபவத்தன்மையாற்றானே காரணத்தன்மை கொள்ளப்படும். மற்று அவ்வவ்விட யத்தினையுடைய ஞானத்தன்மையாற்றானே அநுபவத் திற்குங் கொள்ளப்படுவதன்று, சாதியாதலாலே ஞா னத்தன்மையினை நோக்க மிகையாதலின்மையினென் பது. விட்டுவிலகுதலுளதாமெனை வாசங்கித்தலும் பொ ருந்தாது, வியாப்பியத்தினியல்பு முன்னுக் காரண மாதலுள்ளவழி வியாபகத்தினியல்பு வேறோராற்றாற் பெறப்படுவதனைத்தெரித்துணர்த்துவதாகலினென்பது. இனி நவீனர் அவ்வவ்விடயத்தினையுடைய நினைவிற் கும் அவ்வியல்பிற்றாகிய வாசனைக்கும் அவ்வவ்விடயத் தினையுடைய ஞானத்தன்மையாற்றானே காரணத்தன் மைகொள்ளப்படும், மற்று அநுபவத்தன்மையானன்று. வாசனை பலத்தினையழிப்பதாகலின் முதல் நினைவாற் றானே அநுபவத்தாற் றோன்றற்பாலதாகிய வாசனை யழிதலின் ஒருகால் அநுபவப்பட்டது நினைவின் பின் நினைக்கப்படாதெனல் வேண்டுதலினென்பது. தன் னாற் றோன்றிய நினைவு வாசனையை யழிப்பதாயவழி நினைவிற்குப் பொதுவாகிய ஞானத்தன்மையானே காரணமாயவழியும், குடம் படம் முதலியவெனப்படும் பலவிடயங்களோடு அழுந்திநிற்கு மநுபவத்தானே தோற்றுவிக்கப்பட்ட அவ்விடயத்தினையுடைய வாசனை குடமுதலியவாவற்றை ஒவ்வொன்றாகக்காணும் நினை வானழிதலின் அதன்பின் படமுதலியவற்றி னினைவு

பொருந்தாது; அவ்வவ்விடயத்தினையுடைய வாசனையின்றாகலானும், நினைவாற்றோன்றிய படமுதலியனவற்றைக்காணும் வாசனை வேறுபட்ட விடயத்தினையுடையதாகலின், படமுதலியனவற்றை நினைப்பது பொருந்தாமையானுமென்பது; ஆதலின் தன்னாற் றோன்றிய விருதி நினைவே வாராமைபற்றி அவ்வவ்வடிவுத்தன்மையான் அவ்வவ்வாசனைத்தன்மையாற் கொள்ளப்படுமாகலின் அனுபவத்தன்மையானே தோற்றுவிப்பதாதற்கண்ணுங் குற்றமின்றென்றலும் பொருந்தாது, குறைவில்லாததாகிய விடயத்தினையுடைய பலமே அழிப்பதாதல் கொள்ளப்படுதலிற் குற்றமின்மையினென்பது. அடுத்தடுத்து நினைதலான் மிகத் திண்மையான வாசனைதோன்றும். திண்மையாவது மிகுதியெனப்படுஞ் சாதிவிசேடம் விரைவில் நினைவுதோன்றுதலைப் பயப்பது. ஊழ்வயத்தால் விரைவாக வறியுமறிவு கூடிநிற்றலாற்றானே விரைவாக நினையும் நியமந் தோனறுதற்கண் அதனைப் பயப்பதாகாமையின் வாசனையாற்றோன்றிய சாதிவிசேடம் பெறப்படுமென்றலும்பொருந்தாது, விரைவாக நினைதல் ஊழ்வயத்தால் விரைவினறியுமறிவு பொருந் திநிற்றல்கொண்டு வாசனையின் மிகுதியை மறுப்புழி நூல் முதலியவற்றின்கட் பயிற்சி வேண்டாமெனல் வேண்டுதலினென்பது. அல்லதூஉம் துணியப்பட்ட முறைபிறழ்ச்சியில்லதாகிய வுருவத்தினைவிட்டுக் கவரப்படு முறைபிறழ்ச்சியுடையதனுனே காரணமாதல் கோடலுளதாகாமையின் அனுபவத்தன்மையானே நினைவிற்குங் வாசனைக்குங் காரணத்தன்மைகொள்ளுதல் அசம்பவமாகாதெனக் கூறுப. நினைவும் எ-து. அம்மதங் காட்டுகின்றது. உண்மையா லனுபவங்

கொள்ளப்படும். இம்மதம்பற்றி யிலக்கணங் கூறும்வழி யனுபவத்தினது காரியமாமென்புழி ஞானத்தினது காரியமாமென்பது பெய்துரைக்கற்பாற்று.

கூஅ. நிலைபெறுத்துவது வேறுவிதமாகச் செய்யப் பட்டதனை மீட்டும் அந்நிலையேயாக்குவது. அது பாய் முதலிய பிருதிவியினுள்ளது. குணங் கூறப்பட்டது.

வேறு எ-து. நிலைபெறுத்துவதற்கு இலக்கணங் கூறு கின்றது. சங்கைமுதலிய வெட்டும் நிமித்தத்தா னாய திரவத்துவமும் வேகமும் நிலைபெறுத்துவதும் பொது க்குணங்கள். ஏனையுருவமுதலியன விசேடகுணங்கள். திர வியத்தைப் பகுக்கு முபாதியிரண்டோடும் ஒருநிலைக்களத்தி லதாகிய சாதியுடைமை விசேடகுணத்தன்மை.

திரவியத்தைப்பகுக்குமுபாதி எ-து. பிருதிவித்தன்மை அப்புத்தன்மை முதலியனவெனப்படுந் திரவியத்தைப் பகுக்கு முபாதி யிரண்டாவன யாவை, அவற்றோடு தனித்தனியே ஒருநிலைக்களத்துள்ளன இருமை வேற் றுமை முதலியவற்றின் சையோகமுதலியன; அவை யில்லாத சாதியுடைத்தாகிய குணத்தன்மை எ-று. உருவமுதலிய நான்கன்கண்ணும் அவ்வியல்பிற்றாகிய வுருவத்தன்மை முதலியனவற்றையும் இயல்பாகவுள்ள தாகிய திரவத்துவத்தின்கட் திரவத்துவத்தின்றன்மை யாகிய அவாந்தரசாதியையும் சிநேகமுதலிய பத்தின் கண்ணும் சிநேகத்தன்மை முதலியவற்றையும் பாவ னைக்கண் வாசனைத்தன்மையி னவாந்தரசாதியையு மெ டுத்துக்கொண்டு இலக்கணம் பொருந்துமாறறிக. அற் றேல் இவ்விலக்கணம் ஒருமைமுதலியவற்றின்க ணதி

வியாத்தியுடைத்தாம், ஒருமைத்தன்மைமுதலிய சாதியு
மவ்வாறாகலினென்பது. அவ்வியல்பிற்றாகிய உபாதியிர
ண்டோடு ஒருநிலைக்களத்துளதாகிய குணத்தன்மையின்
குறைவினுளதாகிய சாதியில்லாத குணத்தன்மையெ
ன்பது அதன்பொருள்; இங்ஙனமே ஒருமைமுதலிய
வற்றின்கட் சங்கைத்தன்மை முதலியனவுளவாகலின்
அவ்வியல்பிற்றாகிய சாதியின்மை யின்றாமாகலி னதி
வியாத்தியின்றெனக் கூறற்க, இங்ஙனமே பரிமாண
முதலியவற்றின்கண்ணு மதிவியாத்தி வரும். பரிமா
ணத்தன்மைமுதலியன அவ்வியல்பிற்றாகிய சாதியாகா
மையினெனின்;—ஈண்டு அறிஞர் கூறுமாறு;—எவ்வெவ்
வடிவான் வரைந்துகொள்ளப்பட்ட வொருநிலைக்களத்
துளதாதல் சிறிதாயினுந் திரவியத்தினைப் பகுக்கு மு
பாதியிரண்டுமாம், அவ்வவ்வுருவத்தினும் நிலைபெறுத்
துவதினும் வேறாய சாதி யாது, அதனையுடைத்தாய்க்
குணமாதலென்பது அதன் பொருள். எவ்வடிவான்
வரைந்துகொள்ளப்பட்ட வொருநிலைக்களத் துளதாதற்
குச் சமவாய சம்பந்தத்தோடு கூடியவென்பது பெய்
துரைக்கற்பாற்றாகலின், எவ்வுருவமென்னும் பதத்தாற்
குடத்தன்மைமுதலியன நீக்குதலரிதாகலிற் குடமுத
லியவற்றின்க ணதிவியாத்தி வருமாகலின் விசேடிய
மும், நிலைபெறுத்துவதன்க ணதிவியாத்தி நீக்குதற்கு
நிலைபெறுத்துவதின்வேறாய் என்னும் விசேடணமுங்
கூட்டியுரைக்கப்பட்டன. மற்று நிலைபெறுத்துவது பிரு
திவிமுதலிய நான்கினு முளதென்னு மதத்து அவ்வடை
கொடுக்கற்பாற்றன்று. உருவத்தன்மைமுதலியன எவ்
வுருவமென்னும் பதத்தா னீக்குதல் கூடுமாயினும்
அவாந்தரசாதியை யெடுத்துக்கொண்டு உருவ முதலிய

வற்றின்க ணிலக்கணம் பொருந்துமாறறிக. பிருதிவிக்கணுள்ள வெம்மையுந் தண்மையு மில்லதாகிய பரிசம் வாயுவின்கணுள்ளதனை நோக்க வேற்றுச்சாதிமையுடையதே என்பது அனுபவத்தாற் பெறப்படுதலின், மற்றுச் சங்கைமுதலியன பொதுக்குணங்களாகலின் ஆண்டு வேற்றுச்சாதிமையின்மை அப்புவும் பிருதிவி முதலியவற்றின் வேறுதலானே சித்தாந்தத்துட் பெறப்பட்டமையின் அதிவியாத்தியின்று. அவ்வியல்பிற்றாகிய சாதியுடையதின் வேறாகிய குணத்தன்மையே பொதுக்குணங்கட்கு இலக்கணமாக முடிந்தவாறறிக.

## ௩. கருமம்.

அ௬௬. கருமம் புடைபெயர்ச்சி. எழும்பல் மேலிடத்துக் கூடுதற்கு ஏது. வீழ்தல் கீழிடத்துக் கூடுதற்கு ஏது. வளைதல் உடல்வளைந்து கூடுதற்கு ஏது. நிமிர்தல் நிமிர்ந்து கூடுதற்கு ஏது. ஏனையவனைத்தும் நடத்தலெனப்படும்.

புடைபெயர்ச்சி எ-து. கருமத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. மேலிடத்து எ-து. எழும்பன்முதலியவற்றின் காரியவேறுபாடு கூறுகின்றது. உடல் எ-து. உடலின்கண் வக்கிரமாந்தன்மையை யுண்டாக்குவது வளைதல். நேர்மையாதலை யுண்டாக்குவது நிமிர்தல்.

நூலுட் கூறப்பட்டது எல்லாவற்றையுங் கவர்வதாகாமையின் வக்கிரமாந்தன்மையெனப்பட்டது.

## ௬. சாமானியம்.

எ0. சாமானியமாவது நித்தியமாய் ஒன்றாய்ப் பலவற்றி னொருங்கு சேறலையுடையது. திரவியத்தி னுங் குணத்தினுங் கருமத்தினுமுள்ளது. உண்மைத் தன்மை பரம்; திரவியத்தன்மைமுதலியன அபரம்.

நித்தியம் எ-து. சாமானியத்தி னிலக்கணங் கூறுகின் றது. சையோகத்தின்க ணதிவியாத்தி நீக்குதற்கு நித்தியம் எ-ம், பரமாணுவின் பரிமாணமுதலியவற்றி னதி வியாத்தி நீக்குதற்குப் பலவற்றின் எ-ம் கூறியவாறு. ஒரு ங்குசேறல் சமவேதமாதல். குடமுதலியவற்றின் முழுதும பாவம் குடமுதலியவற்றோ டொருங்கு செல்வதாயினும் சமவேதமாகாமையின் அபாவமுதலியவற்றின்க ணதிவியா த்தியின்மையுணர்க.

நித்தியம் எ-து. ஈண்டு நித்தியத்தன்மை முன்னபாவத் தின் பிரதியோகியாகாமை; அழிவுபாட்டபாவத்தின் பிரதியோகியாகாமையெனினுமாம். ஈண்டு ஒன்றாய் நித்தியமாயென வடைகொடுத்தலானுஞ் சையோகமு தலியவற்றி னீக்கமுளதாகலின் ஒன்றென்னும் பதஞ் சொரூபங் கூறியவாறெனக் காட்டற்பாற்று.

## ௫. விசேடம்.

எக. விசேடம் நித்தியப்பொருள்களிலிருப்பன வாய் அவை வேறு வேறாய் நிற்றலைத் தெரிப்பனவாம்.

நித்தியம் எ-து. விசேடத்தினிலக்கணங்கூறுகின்றது.

றாலுள் வேறு வேறாய் நிற்றலைத்தெரிப்பன எ-து. நித்தியப்பொருள்கள் தம்முளொன்றற்கொன்று வேறாதலைச் சாதிப்பன எ-று. இனி விசேடமென்னும் பதார்த்த மொன்றென்றற்குப் பிரமாணம் யாது, முழுவதுங் கலந்துநிற்கும் பரமாணுக்களுக்கு வேறு வேறாய் நிற்குமியல்பின்றி வேறுபாடு பெறப்படாதாகலின், விசேடங் கொள்ளற்பாற்றெனக் கூறற்க, ஒருமைமுதலிய வடிவாற்றானே வேறுபடுதலுளதாமாகலினெனின்;— அற்றன்று, என்னை? இப்பரமாணுவின்கண் அப்பரமாணுவின் வேறுபாடு சாதிக்கின்றுழி ஒருமைமுதலியன முறைபிறழுமாகலின் இவ்வொருமை முதலியனவற்றிற்கே காரணமாதல் கூறப்படும்; அப்பரமாணு விரண்டற்கும் பேதம் பெறப்படாதவழி ஒருமைமுதலியவற்றின்கண் இஃதாந்தன்மை நன்கு கவரப்படாது. இப்பரமாணுவோடு சமவேதமாதலே அதற்கு இதுவாந்தன்மையன்றோ? ஆதலின் நித்தியப்பொருள்கடோறும் விசேடமென்னும் பதார்த்தங் கொள்ளப்படும். அதுவே தன்னொடொருசாதிமையுடையனவற்றிற்கு ஒன்றற்கொன்று வேறுபாடாதலைச் சாதிப்பதாகலின் ஆண்டுந் தனக்கு வேறு விசேடத்தை யவாவுதலின்றேயாமாகலின் அநவத்தையின்றென்பது சம்பிரதாயம்.

## கா. சமவாயம்.

எஉ. சமவாயமாவது நித்தியமாயசம்பந்தம். அது நீக்கமின்றி இயல்பாக வுள்ளனவற்றின்கணுள்ளது. யாவை இரண்டனுள் ஒன்று அழிவின்றி நிற்பதாய் ஏனையதனைப்பற்றிநிற்கும், அவை நீக்கமின்றியிருப்பன. எங்ஙனம், சினையும் முதலும், குணமுங் குணி

யும், வினையும் வினைமுதலும், சாதியும் வடிவும், விசே டமும் நித்தியப்பொருள்களும் என்பன.

நித்தியம் எ-து. சமவாயத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. சையோகத்தின்கணதிவியாத்தி நீக்குதற்கு நித்தியம் எ-ம், ஆகாயமுதலியவற்றின்கணதிவியாத்தி நீக்குதற்குச் சம்பந்தம் எ-ம் கூறியவாறு. யாவை எ-து. நீக்கமின்றியிருப்பனவற்றி னிலக்கணங் கூறுகின்றது. 'கரியது குடமென்னும் விசேடிக்கப்பட்ட வுணர்வு விசேடணவிசேடியங்கட்குளதாகிய சம்பந்தமெனப்படும் விடயத்தினையுடையது; விசேடிக்கப்பட்டவுணர்வாகலின், குழையனென்னு முணர்வுபோல' வெனச் சமவாய முண்மைபெறப்படும். சினையும் முதலும் எ-து. திரவியத்தின் சமவாயிகாரணம் சினை; அதனுற் றோன்றற்பாலதாகிய திரவியம் முதல்.

கரியது எ-து. வைசேடிகமதப் பொதுமைபற்றிச் சமவாய முண்மைக்கு அநுமானங் கூறுகின்றது. சமவாயிகாரணமாதல் இறுதியாகிய சினையின்கணுண்மையின் திரவியம் எ-ம், பரமாணுவி னீக்குதற்குத் தோன்றற்பாலது எ-ம் கூறியவாறு. அழிவின்றி நிற்பது வேறொன்றனைப்பற்றியே நிற்கும்; மற்று அழிவோடு நிற்பது வேறொன்றனைப்பற்றாது கணப்பொழுதுமாத்திரையே நிற்கும்; நூல்முதலியன வழிந்தவழி ஆடைபோலவென்னுங்கருத்தால் நூலுள் அழிவின்றி எனப்பட்டது.

## ள. அபாவம்.

எஅ. முன்னபாவம் தோற்றமின்றி, அழிவுடையது; காரியத்தோற்றத்திற்கு முன்னுள்ளது. அழிவுபாட்டபாவம் தோற்றமுடைத்தாய் அழிவின்றி இருப்பது;

காரியத்தோற்றத்தின் பின்னுள்ளது. முழுதுமபாவம் முக்காலத்தினுமுளதாய சமுசர்க்கத்தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மை யுடையது. எங்ஙனம், 'பூதலத்திற் குடம்இல்லை' என்பது. ஒன்றினொன்றபாவம் தாதான்மிய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடையது. எங்ஙனம, 'குடம் ஆடையன்று' என்பது.

தோற்றமின்றி எ-து. முன்னபாவத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. ஆகாயமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு நாசமுடையது எ-ம், குடமுதலியவற்றினதிவியாத்தி நீக்குதற்குத் தோற்றமின்றி எ-ம் கூறியவாறு. பிரதியோகியின் சமவாயிகாரணத்துள்ளதாய்ப் பிரதியோகியைத் தோற்றுவிப்பதாய்த் தோன்றுமென்னும் வழக்கிற் கேதுவாயது முன்னபாவம்.

தோற்றமுடைத்தாய் எ-து. அழிவுபாட்டபாவத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. குடமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்கு நாசமின்றி எ-ம், ஆகாயமுதலியவற்றி னதிவியாத்தி நீக்குதற்குத் தோற்றமுடைத்தாய் எ-ம் கூறியவாறு. பிரதியோகியாற் றோன்றுவதாய் பிரதியோகியின் சமவாயிகாரணத்துளதாய் அழிந்தது என்னும் வழக்கிற் கேதுவாயுள்ளது அழிவுபாட்டபாவம்.

முக்காலத்தினும் எ-து. முழுதுமபாவத்தி னிலக்கணங் கூறுகின்றது. ஒன்றினொன்றபாவத்தி னதிவியாத்தி நீக்குதற்குச் சமுசர்க்கத்தான் வரைந்துகொள்ளப்பட்ட எ-ம், அழிவுபாட்டபாவம் முன்னபாவங்களி னதிவியாத்தி நீக்குதற்கு முக்காலத்தினும் எ-ம் கூறியவாறு.

தாதான்மியம் எ-து. ஒன்றினென்றபாவத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வதனை யாரோபிக்கப்படுஞ் சமுசர்க்க வேறுபாட்டால் பிரதியோகி யொன்றனையுடைய முழுதினபாவமும் ஒன்றினென்றபாவமும் பலவகைப்படும். தனித்துநிற்குஞ் சாத்தனது அபாவத்தாற் குழையையுடையோனது அபாவமென்னு முணர்ச்சியான் விசேடிக்கப்பட்ட அபாவமும் 'முன்னுளதாயினும் இரண்டில்லை' யென்னு முணர்ச்சியால் இரண்டாந்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதனபாவமும் சையோகசம்பந்தத்தானே குடமுடையதன்கட் சமவாயசம்பந்தத்தால்குடத்தினபாவமும்அவ்வக்குடங்களினபாவத்தாற் குடத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகியினையுடைய பொதுவபாவமும் வேறெனக் கொள்க. ஒன்றினென்றபாவமு மிவ்வாறே கொள்க.

தோன்றும் எ-து. முன்னபாவ முண்மைக்குப் பிரமாணங் கூறுகின்றது. சமுசர்க்கத்தான் எ-து. தாதான்மியத்தின்மேற்பட்டசமுசர்க்கம் எ-று. அழிவுபாட்டபாவமும் முன்னபாவமுமென்பனவற்றின் பிரதியோகித்தன்மையைவரைந்துகொள்வதன்சம்பந்தமுளதாமென்னு மதம்பற்றி முக்காலத்தினும் என விசேடிக்கப்பட்டது; அங்ஙனமன்றேல் ஒன்றினென்றபாவத்தி னீக்கத்தானே அவையிரண்டும் நீக்கப்படுமாகலின் அது நின்றுவற்றுமாகலினென்பது. சமுசர்க்கத்தான் வரைந்துகொள்ளப்பட்ட என்பது முதலியவற்றிற்கு ஒன்றினென்றபாவத்தின்வேறாகிய வபாவமென்பது பொருளாமெனின் முக்காலத்தினுமுளதாகிய வென்னுஞ் சிந்தாந்தத்தும் பொருளுண்டாம்; முக்காலத்தினு முளதாதல் ஈண்டு நித்தியத்தன்மையெனப்படும். நூலுள், பூதலத்

திற் குடமில்லை எ-து. ஈண்டுக் குடத்தினபாவமாகிய கூற்றின்கட் பூதலம் விசேடியமாதல் சம்பந்தம்; மற்றுக் 'குடத்தினபாவமுடையது பூதலம்' என்புழிப் பூதலமாகிய கூற்றின்கணபாவம் விசேடணமாதல் சமுசர்க்கமெனக் கூறும் பிராசீனர் கருத்து வருமாறு:—விசேடியத்தன்மையும் விசேடணத்தன்மையும் சொரூபசம்பந்த விசேடமேயாம், அறியற்பாற்றாகிய விடயத்தன்மை விசேடமன்று. விசேடணத்தன்மையெனப்படுஞ் சொரூபசம்பந்தமொன்றே யுளதாகுக; 'பூதலத்திற்குடமில்லை' யென்னுமுணர்ச்சிக்கண், பூதலங் குடத்தினபாவமுடையது என்னுமுணர்ச்சியால் இலக்கண வேறுபாடுடையதற்கு விசேடணத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட ஆதேயத்தன்மை விடயமாதல் கொள்ளுதலானே உறுதிப்படுமாகலினெனக் கூறற்க, அவ்வியல்பிற்றாகிய வுணர்ச்சிகளி னிலக்கண வேறுபாட்டிற்கு முதலாவதன்கண் விசேடணத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட ஆதேயத்தன்மையும் இரண்டாவதன்கண் விசேடணத்தன்மையும் சமுசர்க்கமென்பது பொருந்தும். அங்ஙனமன்றி முதலாவதன்கண் விசேடணத்தன்மையும் இரண்டாவதன்கண் விசேடணத் தன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட ஆதாரத்தன்மையு மென்புழி விட்டுவிலகுதல் பெறப்படாமையி னென்பது. அவ்வியல்பிற்றாகிய வுணர்ச்சியிரண்டன்கண்ணுஞ் சமுசர்க்கமாகிய கூற்றின்கண் இலக்கணவேறுபாடின்மையில்வழியும் விசேடிய விசேடணத்தன்மைகளது வேறுபாட்டால் இலக்கண வேறுபாடுடைமை பொருந்துதலின் ஈரிடத்தும் விசேடணத் தன்மையேசம்பந்தமாகுகவெனக் கூறற்க, அத்துணையா

ற்று னும் 'பூதலத்திற்குடமில்லை' 'பூதலத்தையுடையது குடத்தினபாவம்' என்பனவும், 'பூதலங்குடத்தினபாவமுடையது' 'குடத்தினபாவத்தின்கட்பூதலம்' என்பனவுமாகிய வுணர்ச்சிகட்கு இலக்கண வேறுபாடுடைமை உறுதிப்படாமையின். அதனால் விசேடியத்தன்மைவிசேடணத்தன்மையெனக் குறியிட்டாளப்படுவதாகிய சொரூப சம்பந்தவிசேடமிரண்டுஞ் சமுசர்க்கத்தன்மையென்ப்படும். ஆகவே பூதலத்தையுடையது குடத்தினபாவமென்புழிக்குடத்தினபாவமாகியகூற்றின்கட் பூதலத்திற்கு விசேடணத்தன்மைச் சமுசர்க்கமும் குடத்தினபாவத்தின்கட் பூதலமென்புழிப் பூதலமாகிய கூற்றின்கண் அபாவத்திற்கு விசேடியத்தன்மைச் சமுசர்க்கமும் விளங்கும். அஃதும் ஆண்டுப் பாதிதமென்பது பிறழ்ச்சியுணர்வானுறுதிப்படுவதெனச் சுருங்கக் கண்டு கொள்க.

அழிவுபாட்டபாவமும் முன்னபாவமும்போல வொரு பிரதியோகியினையுடைய முழுதுமபாவமு மொன்றினொன்றபாவமும் ஒருவகையினவாகாவென்னுங் கருத்தாற் பிரதியோகித்தன்மை யெனப்பட்டது. பிராசீனமதம் பற்றி யாரோபிக்கப்படுமெனப்பட்டது. ஈண்டுத் தகுதிக்கேற்றவாறே பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வதாகிய சமுசர்க்கத்தின் வேறுபாடு முழுதுமபாவம் பலவாதலைப் பயப்பதாமென்பதும் பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வதாகிய வியல்பின் வேறுபாடு ஒன்றினொன்றபாவம் பலவாதலைப் பயப்பதாமென்பதுங் காட்டற்பாலன. தனித்துநிற்குஞ்சாத்தன் எ-து. அதனையே காட்டுகின்றது. தனித்துநிற்குஞ் சாத்தனது அபாவத்தால் விசேடிக்கப்பட்ட அபாவம் வேறுமென வியையும், அங்ஙனமன்றேல் தனித்

துநிற்குஞ் சாத்தனையுடையதன்கட் குழையுடையன ன்று என்னுமுணர்ச்சி வாராமையானென்பது. ஒன் றாதாயினும் எ-து. இரண்டபாவமும் மேற்பட்டன வாதற்கு உணர்ச்சியைப் பிரமாணமாகக் காட்டுகின் றது. குடமும் படமும் இல்லையென்பது முதலியவ ற்றுள் குடமாதலும் படமாதலும் இரண்டொதலுமெ ன்னு மிம்மூன்றும் பிரதியோகித்தன்மையை வரைந்து கொள்வது, தனித்துநிற்குங் குடமுடையதன்கண்ணுந் தனித்துநிற்கும் படமுடையதன்கண்ணுஞ் சிறிதாயினு மிரண்டுமுடையதன்கண்ணு மவ்வாறுணரப்படுதலினெ ன்பது. சையோகத்தால் எ-து. பொதுவபாவத்திற் கும் விசேடாபாவத்திற்கும் வேறுபாடு காட்டுகின்றது. அவ்வக்குடம் எ-து. பொதுவபாவத்திற்கும் விசேடா பாவத்திற்கும் வேறுபாடு காட்டுகின்றது. வேறு எ-து. அங்ஙனமன்றேற் சிறிதாயினுங் குடமுடையதன் கட் குடமில்லையென்னு முணர்ச்சி வருமாகலினென் பது ஒன்றின் எ-து. வரைந்துகொள்வதன் வேறு பாட்டானும் அவ்வக்குடத்தின் வேறுபாட்டானும் இர ண்டன் வேறுபாடும் குடத்தின் வேறுபாடும் வேறுப ட்டனவா மென்றவாறு.

குடத்தன்மையான் ஆடையில்லையென வேற்றுநிலைக்க ளத்துளதாய வியல்பான் வரைந்துகொள்ளப்பட்ட அபாவங் கொள்ளற்பாற்றன்று, ஆடையில்லையென்பது அத ன்பொருளாகலினென்பது. அது வேருமெனிற் கேவலாந் நுவயியாம். சமவாயத்தானுளதாகிய வபாவமும் முழுதும பாவமே, சமயவிசேடத்துணரப்படுங் குடத்தினபாவமுடைய தன்கட் குடங் கொணர்ந்துழி முழுதுமபாவம் வேறிடத்துச் சேறலில்லாதவழியும் உணர்ச்சி நிகழாமையின் குடங் கொ

ண்டுபோய பின்னர் உணர்ச்சி நிகழ்தலின் நிலத்திற்குங்
குடத்திற்குமுள்ள சையோகத்தின் முன்னபாவமும் அழிவு
பாட்டபாவமும் குடத்தின் முழுதுமபாவத்தி னுணர்ச்சிக்கு
நியாமகமாமெனக் கொள்ளற்பாற்று. குடமுடையதன்கண்
அதன் சையோகத்தின் முன்னபாவமும் அழிவுபாட்டபாவ
மும் இன்மையின் முழுதுமபாவவுணர்ச்சி நிகழாதெனவும்
குடங்கொண்டுபோயவழிச் சையோகத்தி னழிவுபாடுண்மை
யின் அதனுணர்ச்சி நிகழுமெனவுங் கொள்க.

தொடர்வுபாடு நன்குபோதருதலிற் கூடத்தன்மையான்
எனப்பட்டது. கொள்ளற்பாற்றன்று எ-து. அபாவவ
றிவு விசேடிக்கப்பட்ட விசேடிக்கப்பட்டமையுடையத
னோடு அழுந்திநிற்கு மெல்லைப்பாட்டோ டடங்குதலிற்
குடத்தன்மையால் ஆடையில்லையென்பதுமுதலிய விசே
டிக்கப்பட்ட விசேடிக்கப்பட்டமையுடையதனோடு அழு
ந்தாது நிற்குமுணர்ச்சிக்குக் குடத்தன்மை முதலியவற்
றினது பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வதா
தலை நிலைநிறுத்துதலின்மையின் வேற்று நிலைக்களத்
துள்ளவியல்பான் வரைந்துகொள்ளப்பட்ட அபாவமு
ண்மைக்குப் பிரமாணமின்மையினென்பது கருத்து.
படம் எ-து. அற்றேல் அவ்வியல்பிற்றாகிய வுணர்ச்சிக்
குக் கதி யாதென்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது.
அற்றேல் குடத்தன்மையாற் படமில்லையென்னு முண
ர்ச்சி படமாகிய நிலைக்களத்தினையுடைய குடத்தன்மை
யினபாவத்தின்கண் அழுந்துவதாகாது, குற்றமில்ல
தன்கண் அவ்வச்சொல்லா னறியப்படு முணர்ச்சி அவ்
வச்சொல்லாற் கூறப்படும்பொருட்டு விடயமாதலை விடு
தல் பொருந்தாமையிற் படமாகிய நிலைக்களத்தினையு

டைய குடத்தன்மையினபாவம் குடத்தன்மையாற் படமில்லையென்னுஞ் சொல்லால் எங்ஙனமாயினும் உணரப்படாமையின். அல்லதூஉம் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மையுடைத்தாதலாகிய சம்பந்தத்தால் அபாவமாகியகூற்றின்கட் சுதந்திரத்தால் குடத்தன்மையின் ழுந்துவதேயாம். அபாவவறிவான் விசேடிக்கப்பட்ட விசேடிக்கப்பட்டமையுடையதன்கண் அழுந்துவதாதலாகிய வரம்பினைக்கடப்பதன்றென்னு நியமமுமின்றும். இங்ஙனமாகலின் வேற்றுநிலைக்களத்துள்ளவியல்பான் வரைந்துகொள்ளப்பட்ட அபாவம் பிரமாணமுடைத்தேயாமெனின்; அவ்வாறாயவழி அதுவேறாதலுடைத்தாமென்னுங் கருத்தால் வேறமேனில் எனப்பட்டது. அது எ-து. வேற்றுநிலைக்களத்துளதாகிய வியல்பான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகித்தன்மை யுடையது எ-று. கேவலாந்நுவயி எ-து. பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வதனான் வரைந்துகொள்ளப்பட்ட பிரதியோகியெனப்படும் விரோதமுடைய தின்மையினென்பது கருத்து.

அற்றேல் பூதலமுதலியவற்றின்கட் குடமுளதாயவழி அதனபாவவறிவு தோன்றாது; மற்று அல்லாக்காலத்து அது தோன்றும். ஆதலிற் சமயத்தானுளதாகிய அபாவம் வேறேயாமெனக் கொள்ளற்பாற்றெனக் கூறுவோனை மறுக்கும்பொருட்டுச் சமயத்தானுளதாகிய வெனப்பட்டது. பிரதியோகியில்லாத சமயத்துணரப்படு முழுதுமபாவமே சமயத்தானுணரப்படு மபாவமாம், மற்றுத் தோற்றமு மழிவுமுடைத்தாகிய வேறபாவமன்றென்பது போந்த பொருளாகக் கொள்க. குடத்தினபாவமுடையதன்கண் எ-து. அற்றேல் இங்ஙனமே பூதலத்

தின்கட் குடங் கொணருங்காலத்தும் அதனபாவம் நித்தியமாகலின் உளதாமாகலின் அவ்வுணர்ச்சி வரு மென்னும் வினவிற்கு விடைகூறுகின்றது. குடமுடை யதன்கண் எ-து. நியாமகமாதலையே பொருந்தக்காட் டுகின்றது. அவ்வக்காலத்தான் வரைந்துகொள்ளப்ப ட்ட பூதலமுதலியனவே குடமுதலியவற்றி னபாவத் தின் சமுசர்க்கமாதலிற் குடமுள்ளகாலத்தும் அஃதில் லாத காலத்தான் விசேடிக்கப்பட்ட பூதலமெனப்படுஞ் சமுசர்க்கமின்மையின் அக்காலத்து அதன் முழுதும பாவ வறிவின்றுமென்பதுங் காட்டற்பாற்று.

தனித்த நிலைக்களமாதலானே இல்லையென்னும் வழக் குப் பொருந்துமாகலின் அபாவம் வேறுபதார்த்தமன் றென்பது குருமதம்; அது பொருந்தாது; அபாவங் கொள் ளாதவழித் தனித்துநிற்பது இன்னதெனக் கூறுதல் கூடா மையினென்பது. அபாவத்தினபாவம் பாவமேயாம். வேற ன்று, அநவத்தை வருமாகலின். அழிவுபாட்டின் முன்னபா வமும் முன்னபாவத்தி னழிவுபாடுந் தத்தம் பிரதியோகியே யாமென்பர் பிராசீனர். அபாவத்தினபாவம் வேறேயாம், மூன்றுமபாவம் முதலபாவமேயாகலின் அநவத்தையின்றெ ன்பர் நவீனர்.

தனித்த எ-து. அற்றேல் வேறுபதார்த்தமன்றாகுக, எந் நிலைக்களத்துக் குடமில்லையென்பதுமுதலிய வுணர்ச்சி தோன்றும் அந்நிலைக்களத்துக் குடமுதலியவற்றி னபா வத்தன்மை கொள்ளுதலாற்றானே அங்ஙன முணரப் படுதல் கொள்ளப்படுதலின் வரைசெய்துணர்த்திய தரு மியின்கட் தருமங் கொள்ளுதலால் வரைசெய்துணர்த் தாத தருமிகோடலால் நொய்ம்மையாமாகலினெனக்

குருமதத்தினை யாசங்கித்து மறுக்கின்றது. அபாவங் கொள்ளாதவழி எ-து. பல நிலைக்களங்களுள் தருமங் கொள்ளுதலான் வேறாகிய ஒருதருமி கோடலே நொய்தாகலின் ஈண்டுக் கூறிய நியாயந் துணிவில்லதாம். அல்லதூஉம் அபாவம் நிலைக்களத்தின் சொரூபமாய வழி நீர்முதலியவற்றின்கண் அறியப்படு நாற்றத்தினபாவம் நீர்முதலிய வடிவிற்றாகலின் எனையிந்திரியத்தாற் கவரப்படுமெனல் வேண்டுமென்பதுமுதலிய குற்றங்களுளவாமாயினுந் தனித்த நிலைக்களத்தாற்றானே அக்கூற்று மறுக்கப்படுதலானே அதனொழிபுளதாகவும் இவை அபாவப்படுத லெற்றுக்கென்னுங் கருத்தால் அதனையே மறுக்கின்றது; வேறாகிய அபாவங் கொள்ளாதவழி எ-று. இனி இத்தனிமையென்பதுயாது? பூதலத்தின் சொரூபமாமெனிற் குடத்தினையுடையதாகிய பூதலமும் அதனபாவத்தின்சொரூபமாமெனல் வேண்டுதலின் அக்காலத்துங் குடத்தினபாவமுடைத்தாந்தன்மையறிவு தோன்றுமெனல்வேண்டும், குடத்தினபாவமுடைத்தாந்தன்மையெனின் வேறாகிய அபாவத்தாற் பெறப்பட்டதாம், ஆதலிற் தனித்துநிற்பது இன்னதெனக் கூறுதல் கூடாதென்னுங் கருத்தால் தனித்துநிற்பது எனப்பட்டது.

அற்றேல் அபாவம் வேறாயவழி அதனபாவமும் வேறாம், அதனபாவமு மிங்ஙனமேயென அநவத்தை வருமாகலின் அபாவத்தினபாவம் எனப்பட்டது. அழிவுபாட்டின் முன்னபாவம் எ-து. அழிவுபாட்டின் முன்னபாவம் பிரதியோகியின் சொரூபமும் அதன் முன்னபாவத்தி னுருவமுமாம். மற்று முன்னபாவத்தினழிவுபாடு பிரதியோகியி னுருவமும் அதனழிவுபாட்டி னுருவமு

மாமென்னும் பொருள் முடிந்தவாறறிக. அதனுற் பிர தியோகியின் முன்னபாவமுளதாயகாலத்தும் அழிவு பாடு தோன்றுமென்னு முணர்ச்சியும் பிரதியோகியின ழிவுபாட்டின்காலத்தும் முன்னபாவ மழிந்ததென்னு முணர்ச்சியுந் தோன்றுமென்க. அபாவத்திஞபாவம் எ-து. அற்றேல் காலத்தின்கட் திரவியத்தன்மையின் றென்னு முணர்ச்சிதோன்ருது. மற்றுத் திரவியத்தி னபாவமென்பது தோன்றும் எனமாறிக் கொள்ளும் பொருட்டு இல்லையென்னு முணர்ச்சிக்கண் தேயசம்ப ந்தமுடைத்தாகிய விசேடணத்தன்மைச் சம்பந்தத்தால் வரைந்துகொள்ளப்பட்ட ஆதேயத்தன்மை விளக்கங் கொள்ளற்பாற்று. இங்ஙனமே குடத்தினபாவத்தின பாவமுதலியன குடமுதலியவற்றினுருவமாயவழி ஈண் டுக் குடத்தினபாவமில்லையென்னு முணர்ச்சி மயக்கந் தாற் ரோன்றியதேயாம், பாவத்திற்கு விசேடணத்த ன்மைவிசேடத்தால் விருத்திகொள்ளப்படாமையினெ ன்பது. அபாவத்தினபாவம் வேறு, மற்றுப் பாவத்தின் சொரூபமன்றென்னு நவீனர் மதங் காட்டுகின்றது. மூன்றுமபாவம் எ-து. அங்ஙனமாயின் அநவத்தைவரு மென்னுஞ் சங்கை நீக்குகின்றது.

எச. எல்லாப்பதார்த்தங்களும் முறையானேகூறிய வற்றுள் அடங்குதலிற் பதார்த்தங்கள் ஏழே என்பது பெறப்பட்டது.

எல்லாம் எ-து. "பிரமாணம், பிரமேயம், ஐயம், பிர யோசனம், திருட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தருக்கம், நிண்ணயம், வாதம், செற்பம், விதண்டை, ஏதுப் போலி, சலம், சாதி, தோல்வித்தானம் என்பனவற்றினு

ண்மையறிவால் வீடடைதலுளதா"மெனா நியாயநூலிற் பதி றுறு பதார்த்தங் கூறப்பட்டமையின் ஏழென்ற லெங்ஙன மென்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது; எல்லாம் ஏழ னுளடங்கும் எ-று.

அந்நேரல் எ-து. துன்பமாகிய சேற்றி லழுந்திக்கிடக்கு முலகினைக் கரையேற்றும் வேட்கையுடையோராகிய பெருங்கருணையினையுடைய முனிவரால் பிரமாணம் பிரமேயமென்பது முதலாகவுடைய சூத்திரஞ்செய்யப் பட்டது, அதனோடு மாறுபடுதலைப் பரிகரிக்கும்பொரு ட்டு வினவுகின்றது.

ஆன்மா, சரீரம், இந்திரியம், அருத்தம், புத்தி, மனம், பிரவிருத்தி, தோடம், பிரேத்தியபாவம், பலம், துக்கம், அபவருக்கம் என்பன பிரமேயங்கள்; பிரவிருத்தி தன்மாதன்மங்கள்; தோடம், விருப்பு வெறுப்புமயக்கங்கள், விருப்பு, காமம்; வெறுப்பு வெகுளி; மயக்கம் சரீரமுதலியவற் றின்கண் ஆன்மாவென மருளுதல்; பிரேத்தியபாவம் மரணம்; பலம் போகம்; அபவருக்கம் வீடு; அது தன்னிலைக் களத்துளதாகிய துன்பத்தின் முன்னபாவத்தோடு ஒருகால த்து நில்லாத துன்பத்தி னழிவுபாடு; பிரயோசனம் சுகப் பேறுந் துக்கக்கேடும்; திருட்டாந்தம் அடுக்களைமுதலியன; சித்தாந்தம், பிரமாணமுடைமையா லுடன்பட்ட பொருள்; நிண்ணயம், நிச்சயம்; அதுதான் பிரமாணத்திற்குப் பலம்; வாதம் உண்மையுணர்தல் வேட்கையுடையோன் கதை. செற்பம் சாதனமிரண்டுள்ளதன்கண் வெல்லுதல்வேட்கையுடையோன் கதை. விதண்டை தன் பக்கத்தினை நிலைநிறுத்தாத கதை. கதையாவது கூறுவார் பலரையுடைத்தாய் பூருவபக்கமும் உத்தரபக்கமுங் கூறுவதாகிய தொடர்மொ

ழியின் கோவைப்பாடு. சலம் ஒருகருத்துப் பற்றிக்கூறிய மொழிக்கு வேறு பொருள் படைத்துக்கொண்டு பழித்தல். சாதி போலியுத்தரம்; அது பொதுவியல்பு, வேற்றியல்பு, உயர்ச்சி, தாழ்ச்சி, புகழ்ந்துரை, பழித்துரை, விகற்பம், சாத்தியம், அடைவு, அடையாமை, பிரசங்கம், வேறுதிருட்டாந்தம், உற்பத்தியின்மை, ஐயம், பிரகரணம், ஏதுவின்மை, அருத்தாபத்தி, விசேடமின்மை, உபலத்தி, அனுபலத்தி, நித்தியம், அநித்தியம், காரியம் சமமாதலென்க.

ஆன்மா எ-து. காட்சியளவை திரவியத்தினும் அனுமான முதலியன குணத்தினுமடங்குதல் வெளிப்படையாகலின் பிரமேயமுதலியன திரவியமுதலியவற்று ளடங்குமாறு கூறுகின்றது. ஆன்மா சரீரம் இந்திரியமென்பன திரவியத்தினும் பிருதிவி முதலியன வெனப்படும் பொருள் திரவிய முதலியவற்றுள்ளும் புத்தி குணத்தினும் அகவிந்திரியமாகிய மனம் திரவியத்தினும் அடங்கும். இவ்வாறு முன்னரும் ஏற்றவாறடங்குதல் காட்டற்பாற்று. தன்மாதன்மங்கள் எ-து. அவற்றைத் தோற்றுவிப்பன எ-று. இஃதும் ஆகரத்தின்கண் வெளிப்படை. விருப்பு இச்சைவிசேடம். மரணம் எ-து. சாக்காட்டின் பின்னர்த்தாகிய பிறப்பு எ-று. ஆகவே பிரேத்திய என்பதற்கு இறந்து எ-ம், பாவம் என்பதற்குப் பிறத்தல் எ-ம் பொருள்கொள்க. இறுதியாகிய பிராணனுக்குஞ் சரீரத்திற்குமுளதாகிய சையோகத்தினழிவுபாடு மரணம். சரீரத்திற்கும் பிராணனுக்கு முதற்கணுள்ள சையோகம் பிறப்பு. முத்தான்மாக்களின் சையோகத்தி னழிவுபாடுடைய குடத்திற்கு முத்தத்துவம் வராமனீக்குதற்குத் துக்கத்தினழிவு எ-ம், துக்கத்தினழிவுபாடுடைய நம்மனோரும் முத்த

ராவான் சேறலி னீக்குதற்கு விசேடணமும் பிறர்கண்ணதாகிய துக்கத்தின் முன்னபாவத்தோடு ஒருகாலத்துளதாகிய துக்கத்தி னழிவுபா டுடையோராகிய சுகர் முதலிய ஆன்மாக்கள் முத்தரல்லரென வேண்டுதலின் ஒருநிலைக்களத் துளதாகியவென முன்னபாவத்திற்கு விசேடணமுங் கூட்டியுரைக்கப்பட்டன. ஒருநிலைக்களத் துளதாகிய துக்கத்தோடொருகாலத்துளதாகியவென்னு மிதனுற்றானே சுழுத்திக்காலத்துளதாகிய துக்கத்தினழிவுபாடாகிய முன்னுள்ள துக்கங் கணப்பொழுதுநிற்றலு நீக்கப்படுமாகலின் முன்னபாவமென்றது நின்றுவற்றுமென்றலும் பொருந்தாது; முறையானே கூட்டியுரைக்கப்பட்டவழி நின்று வற்றுதலின்மையினென்பது. **பிரயோசனம்** எ-து. ஐயந்தெரித்துணர்த்தப்பட்டமையின் பிரயோசனத்தின் சொரூபங்காட்டுகின்றது. **சாதனமிரண்டுள்ளதன்கண்** எ-து. பரபக்கத்தை மறுப்பதாகிய சுபக்கத்தின் சாதனமுடையதன்கண் எ-று. இஃதும் விதண்டையின்க ணதிவியாத்தி நீக்குதற்குக் கூட்டப்பட்ட விசேடணமெனவறிக. **தன்பக்கம்** எ-து. ஈண்டு வெல்லுதல் வேட்கையுடையோன் கதையென்பது கூட்டப்படும். **கூறுவார்பலர்** எ-து. ஒருவனாற் பூருவபக்கஞ் செய்யப்படும்; மற்றையோனாற் சமாதானஞ் செய்யப்படும்; இம்முறையானே தொடர்மொழியின் கோவைப்பாட்டிற்குப் பலவினைமுதலுடைமை முடிக்கற்பாற்று. **சலம்** எ-து. எங்ஙனம், இச்சாத்தன் நவகம்பலமுடையோன் என்பது. புதிதென்னுங் கருத்தா னெடுத்தாளப்பட்ட நவமென்னுஞ் சொற்கு ஒன்பதென்னுந் தொகையான் விசேடிக்கப்பட்ட வேறுபொருள்கொண்டு இவனுக்கு நவகம்பலமின்று, வறியோனு

தலினென ஒருவன் பழிப்பதுபோல்வது. போலியுத்தரம் எ-து. உத்தரத்திற்குப் போலித்தன்மை தனக்குச் சாதகமாந்தன்மைப் பொதுமையால் பிறனுக்குச் சாதகமாந்தன்மைக்குச் சாதகமாதலால் தனக்குக்கேடு பயத்தல்; ஆகவே தனக்குக் கேடுபயக்கு முத்தரம் சாதியென்பது இலக்கணமாக முடியும்.

பொதுவியல்பு எ-து. சாதியி னவாந்தர வேறுபாடு காட்டுகின்றது. உம்மைத்தொகையி னிறுதியிற் கூறப்பட்டமையிற் சமமென்னுஞ் சொல் தனித்தனியே சென்று கூடும்; பொதுவியல்புச்சமம். வேற்றியல்புச்சமம் முதலியசாதி இருபத்துநான்கு வகைத்து. பொதுவியல்பானே நிலைநிறுத்து மேதுவைப் பழிக்கு முத்தரம் பொதுவியல்புச்சமம், எங்ஙனம், ஆன்மா வினையோடு கூடியது, வினைக்குக் காரணமாகிய குணமுடைமையால்,மண்ணுங்கட்டிபோல எனவரும். ஈண்டு வினைக்குக்காரணமாகிய குணம் வினையைத் தோற்றுவிக்கும்வாயுவின் சையோகமுதலியனவென நிலைநிறுத்துதற்கண் உத்தரம் வினையோடுகூடியதாகிய பொதுவியல்பானே வினையோடு கூடியதாயின் விபுவாதலெனப்படும் வினையின்மையாகிய பொதுவியல்பானே வினையில்லதேயாகாததென்னை? ஈண்டுச் சிறிதாயினும் விட்டுவிலகுதலுள்ளதுமன்றென்பது (க) வேற்றியல்பானே பழிக்கு முத்தரம் வேற்றியல்புச்சமம், எங்ஙனம், ஆன்மா வினையுடைத்தாகிய மண்ணுங்கட்டிக்குரியபொதுவியல்பானே ஆன்மாவினையுடைத்தாயின் விபுவாதலெனப்படும் வேற்றியல்புடைமையால் வினையில்லதேயாம்; அங்ஙனமாகாததென்னை? அப்பொதுவியல்பானே வினையுடையதனாலாகற்பாலது அவ்வேற்றியல்பான் வினையில்லத

னல் ஆகற்பாலதின்று எனபுழிச் சிறிதும் நியாமகமில்லையன்றேயென்பது. (உ) பிறனாற் கூறப்பட்ட சாதனத்தாற்றானே அது வியாபகமாகாத இயல்பு பக்கத்தின்கட்கொள்ளுதல் உயர்ச்சிச்சமம். எங்ஙனம், சத்தம் நித்தியம்,காரியப்பாட்டால்,குடம்போலவென்பது முதலியவற்றுள் காரியப்பாடாகிய ஏதுவாற் சத்தங் குடம்போல அநித்தியமாயின் அவ்வேதுவானே சத்தம் குடம்போல அவயவமுடையதாம் என ஒருவன் கூறுதல் போல்வது. (ஙா) பிறன்கூறிய திருட்டாந்தத்தின் பொதுவியல்பாற் பக்கத்தின்கட் பிறனுடன்பட்ட வேறேரியல்பின்மை சாதித்தல் தாழ்ச்சிச்சமம். எங்ஙனம், அவ்வனுமானத்தின்கண் காரியப்பாட்டாற் சத்தங் குடம்போல வநித்தியமாயின் அவ்வேதுவாற்றானே சத்தங் குடம்போலக் கேட்பதுமன்றேமென்பது. (ச) புகழ்ந்துரையை நிலைநிறுத்துவதாகிய திருட்டாந்தத்தினியல்பு பக்கத்தின்கட் சாதித்தல் புகழ்ந்துரைச்சமம். எஙஙனம், முற்கூறப்பட்ட வனுமானத்தின்கண் நூக்குதலெனப்படுஞ் சையோகமுடைமையால் மண்ணாங்கட்டி முதலியனவற்றிற்கு வினையுடைத்தாதலாகுக, மற்று ஆன்மாவிற்கு வினையுடைத்தாதற்கண் அதனைத் தோற்றுவிக்கும் நூக்குதலெனப்படுஞ் சையோகமுடைத்தாதலுமுளதாமென்பது. (ரு) துணிபொருட்கும் ஏதுவிற்குமுளதாகிய வியல்பிரண்டும் பக்கத்தின்கணொத்தலாதலைச்சாதிப்பது பழித்துரைச்சமம். எங்ஙனம், அவ்வனுமானத்தின்கண் மண்ணாங்கட்டிமுதலியனவற்றையடைந்தநூக்குதன்முதலியனவெனப்படும் வினைக்குக்காரணமாகியகுணமுடைத்தாதலான்மாவின்கட்பெறப்படாது; ஆகவே ஒத்ததாதலாற் பெறப்படாததாகிய வினைக்கே

துவாகிய குணத்தானே ஆன்மாவின்கண் வினையுடைத் தாத லெங்ஙனஞ் சாதிக்கப்பட்டது, அங்ஙனமே அவ் வியல்பிற்றாகிய வினையுடைத்தாதலானே யதனைத்தோ ற்றுவிக்குங் குணமுடைத்தாதலுஞ் சாதிக்கப்படாத தென்னை, நியாமகமின்மையினென்பது. (௬) திருட் டாந்த விகற்பத்தை யெடுத்துக்காட்டித் தாட்டாந்திக த்திற்கு விகற்பங்கூறுதல் விகற்பசமம். எங்ஙனம், அவ்வனுமானத்தின்கண் வினைக்கேதுவாகிய குணத் தோடுகூடியது சிறிதுவலிது, எங்ஙனம் மண்ணாங்கட்டி முதலியன சிறிதுநொய்தாம்,எங்ஙனம், வாயுவென்பது. இங்ஙனமே வினைக்கேதுவாகிய குணத்தோடுகூடியது யாதாயினும் வினையுடைத்தாம்; எங்ஙனம் மண்ணாங்கட் டிமுதலியன யாதாயினும் வினையில்லது ஆன்மா முன் னுள்ள விகற்பமுடைத்தாதல்போல மற்று இஃது அங் ஙனமாகாது என்புழி நியாமகமென்னையென்பது. (எ) திருட்டாந்தம் பக்கத்தின்கணுத்ததாதல் கூறுதல் சாத்தியச்சமம். ஈண்டுச் சாத்தியமென்னுஞ் சொல் பக்கத்தைக் காட்டுவது. எங்ஙனம், அவ்வனுமானத் தினே எங்ஙனம் மண்ணாங்கட்டி அங்ஙனம் ஆன்மா என அளப்படாதாயின் எங்ஙனம் ஆன்மா அங்ஙனம் மண்ணாங்கட்டி என்பதுங் கொள்ளப்படும். ஆகவே ஆன்மாவின்கண் வினையுடைத்தாதல் சாதிக்கப்படுமா யின் மண்ணாங்கட்டியின்கண்ணும் அது சாதிக்கற்பா லதன்றெனில் மண்ணாங்கட்டி எங்ஙனம் அங்ஙனம் ஆன்மாவெனக்கூறல் பொருந்தாது, மண்ணாங்கட்டி யினையொத்தது ஆன்மா ஆன்மாவை யொத்ததன்று மண்ணாங்கட்டி என்புழி நியாமகமின்மையி னென் பது. (அ) அடைதலால் துணிபொருள் பெறுதல்

**அடைவுச்சமம்.** அடைதல் துணிபொருளும் ஏதுவு மொருநிலைக்களத்துளதாதல் எங்ஙனம், அவ்வனுமான த்தின்கண் வினையாகிய ஏதுவினையுடைய குணமுடை யதாதலாற்றானே வினையுடைத்தாதல் சாதிக்கப்படுவ தென்னை வினையுடைத்தாதலாற்றானே அவ்வியல்பிற் றாகிய குணமுடைத்தாதல் சாதிக்கப்படுவதென்னை, இரண்டன்கண்ணும் விசேடமின்மையினென்பது. (௯) அடையாமையாற் றுணிபொருள் பெறுதல் **அடையா மைச்சமம்.** எங்ஙனம், அவ்வனுமானத்தின்கண் முற் கூறிய குற்றத்தா லடையப்படாத ஏது துணிபொரு ளினைச் சாதிப்பதாதல் கூறற்பாற்று. ஆகவே அடை யப்படாததாகிய விசேடமின்மையால் அவையெல் லாம் எல்லாவற்றையுஞ் சாதிப்பதாமென்பது. இவ்வே து துணிபொருளபாவத்தினைச் சாதிப்பதாகாத தெ ன்னையென்புழி விட்டுவிலகுவதின்மையானென்பது. (௧௦) ஏதுவின் பரம்பரை வினவுதல் **பிரசங்கசமம்.** எங்ஙனம், வினையுடைத்தாதல் வினைக்கேதுவாகிய குணமுடைத்தாதலைச் சாதிப்பதாம்; ஆண்டுச் சாதனம் யாது? சாதனமின்றிப் பெறப்படுவ தொன்றுமின்றன் றே. இங்ஙனமே ஆண்டும் சாதனமென்னையென்ப தமுதலியன. (௧௧) வேறு திருட்டாந்தத்தால் துணி பொருளினபாவத்தைச்சாதித்தல் **பிரதித்திருட்டாந்தசமம்** எங்ஙனம், அவ்வனுமானத்தின்கண் மண்ணாங்கட்டியெ ன்னுந்திருட்டாந்தத்தால் வினையுடைத்தாதல் சாதிக்கப் பட்டவழி வினையில்லதாகியஆகாயமென்னுந்திருட்டாந் தத்தால் ஆன்மாவினை யில்லதாகாததென்னை, மண்ணா ங்கட்டியென்னுந்திருட்டாந்தத்தால் வினையுடைத்தாம். ஆகாயமென்னுந்திருட்டாந்தத்தால் வினையில்லதாகாது

என்புழிநியாமகமின்மையினென்பது.(கஉ)உற்பத்தியின் மையால் துணிபொருள் பெறுதல் உற்பத்தியின்மைச் சமம். எங்ஙனம், குடம் நித்தியமன்று, தோற்றுவிக்கப் பட்ட ஒருமையுடைமையினென்பது முதலியவற்றுள் தோற்றுவிக்கப்பட்ட ஒருமையுடைமை அநித்தியமாதற் குப் பிரமாணமாயின் குடத்தின்க ணொருமைதோன்று தற்குமுன் அஃதின்மையின் நித்தியமாம். நித்தியமா யின் தோன்றாததே என்பது. (கங) பொதுவியல்பினை யெடுத்துக்காட்டி ஐயமாக்குதல் ஐயச்சமம். எங்ஙனம், சத்தம் அநித்தியம் காரியமாதலினென்பது முதலியவற் றுட் சத்தத்தினது அநித்தியத்தால் குடத்தோடு காரி யத்தன்மையெனப்படும் பொதுவியல்புளங்ஙனமுளதாம் அங்ஙனமே நித்தியத்தால் சத்தத்தன்மையோடு கேட் கப்படுங் காட்சிக்கு விடயமாதலெனப்படும் பொதுவி யல்புளதாகலின் பொது இயல்பு இரண்டுங் காணப்ப டுதலின் ஐயமாம், ஒன்று எஞ்சிநிற்றற்கு நியாமகமின் மையினென்பது. (கச) வாதியாற் கூறப்பட்ட வேது விற்குத் துணிபொருளின் விபரீதத்தைச் சாதிக்கும் வேற்றேதுவினைத்தோன்றுவித்தல் பிரகரணசமம். சற் பிரதிபக்கத்திற்குக் காட்டிய உதாரணமே ஈண்டுதார ணமென வறிந்து கொள்க. (கரு) முக்காலத்தும் ஏது வின்மையால், ஏதுவின்றெனக் கூறுதல் ஏதுவின் மைச்சமம். எங்ஙனம், காரியத்தன்மை முதலியனவெ னப்படும் ஏது சாத்தியத்தினு மநித்தியமாகலின் முற் காலத்துளதாமெனின், அநித்தியத்தன்மையெனப்படுஞ் சாத்தியம் அக்காலத்தின்மையின், எதன் சாதகம் பிற் காலத்துளதாயின் முற்காலத்துச் சாதனமின்மையின் எதன் சாதகம் நித்தியமாம் இரண்டு மொருகாலத்துள

தாயின் எது எதற்குச் சாதனமாம், எது எதற்குச் சாத்தியமாம், விட்டுவிலகுவதின்மையினென்பது. எதுச்சமம் என்பது பாடமாயின் முக்காலத்திலுமேதுவாதலின்மை கூறுதல் எதுச்சமமெனப் பொருள்கொள்க. (௧௬) அருத்தாபத்திமுன்னாகத் துணிபொருளினபாவத்தைத்தோற்றுவித்தல் அருத்தாபத்திச்சமம் எங்ஙனம், முற்கூறப்பட்ட அனுமானத்தின்கண் சத்தம் அநித்தியமாகிய பொதுவியல்பாற்றானே அநித்தியமாமாயின் அருத்தாபத்தியால் நித்தியமாகிய பொதுவியல்பாற்றானே நித்தியமாதலும்பெறப்பட்டதாம்; ஒன்றனைத்துணிதற்கு நியாமகமின்மையினென்பது. (௧௭) எல்லாம்விசேடமில்லையென்னும் பிரசங்கத்தினைத்தோற்றுவித்தல் விசேடமின்மைச்சமம். எங்ஙனம், அவ்வனுமானத்தின்கண் காரியப்பாடுமுதலிய அநித்தியமாகிய குடமுதலியவற்றின்பொதுவியல்பால் சத்த மநித்தியமாயின் பிரமேயத்தன்மைமுதலியனவெனப்படும் அவற்றின்பொதுவியல்பால்எல்லாம் அநித்தியமேயாம். எம்மாற் கூறப்பட்டபொதுவியல்பால் அது பெறப்படும்; மற்று நும்மாற் கூறப்பட்டதனாற் பெறப்படாது என்புழி நியாமகமின்மையினென்பது. (௧௮) பக்கமிரண்டினுமுள்ள பொதுவியல்பாற் சாதனம் பொருந்துமெனக் கூறுதல் உபபத்திச்சமம். அநித்தியத்தன்மைக்குச் சாதனமாய காரியத்தன்மை பொருந்துமாகலிற் சத்தமநித்தியமாமாயின் நித்தியத்தன்மைக்குச் சாதனமும் சிறிதுபொருந்துவதேயாம்; ஆகலின் நித்தியமாகாததென்னையென்பது. (௧௯) வாதியா னெடுத்துக்காட்டப்பட்ட சாதனமில்லாதவழியும் சாத்தியத்தினது உபலத்தி கூறுதல் உபலத்திசமம். எங்ஙனம், சத்த மநித்தியம், முயற்சியோடுளதாக

வின், குடம்போலவென்புழி முயற்சியின்றியும் வாயு வின் நூக்குதல்வசத்தால் மரக்கிளையின்முறிவாற் றோ ன்றிய சத்தம் உபலத்திப்படுதலின் முயற்சியாற் றோ னறற்பாலதாதல் சத்தத்தின்கணின்றென்பது. (உ0) வாதியால் அநுபலத்தியானே யாதாயினு மொரு பதார்த்தங் கொள்ளப்படாதவழி அநுபலத்தி வசத்தா ற்றானே வாதியாற் கொள்ளப்பட்ட யாதாயினு மொ ருபதார்த்தத்திற்குமபாவத்தினைச் சாதிப்பது அநுபல த்திச்சமம். எங்ஙனம், நீர்முதலியன அறியப்படுவனவா யினும் மறைப்பின்வசத்தால் உபலத்திப்படாது அது போல உச்சரிக்குமுன் சத்தம் அறியப்படுவதாயினும் மறைப்பின்வசத்தால் உபலத்திப்படாது என்னுமிம்ம தம் வாதியாற் பழிக்கப்பட்டவழி மறைப்பின்வசத்தாற் சத்த முபலத்திப்படாதாயின் நீர்முதலியவற்றின் மறை ப்புப்போலச் சத்தமுதலியவற்றின் மறைப்பும் உபலத் திப்படுவதாமென்பது. ஈண்டு உத்தரம் நும்மாலுணர ப்படாமையின் மறைப்பின் வசத்தால் சத்தம் புலப்ப டாதாயின் அநுபலத்தியும் அநுபலத்தியின்மை பெற ப்பட்டவழி அஃதின்மையின் மறைப்புப் பெறப்படுமெ ன்பது. (உக) தருமம் நித்தியமாதலும் அநித்தியமாதலு மாகிய விகற்பத்தால் தருமி நித்தியமாதல் சாதிப்பது நித்தியச்சமம் எங்ஙனம், சத்தத்திற்கு எந்நித்தியத்தன் மை நும்மாற் கூறப்படும் அது நித்தியமாயினும் அநித் தியமாயினுமாகுக நித்தியமாயின் சத்தத்தின்கணுள தாகலானே அஃதென்றுமுளதாகலின் சத்தமு மவ்வா றாதல் கொள்ளப்படும். இனி அநித்தியமெனின் சத் தத்தின்கண் என்றாயினும் அநித்தியத்தன்மை யின்மை யுளதாகலின் சத்தம் நித்தியமேயாம் என இருவகை

யார்னுஞ் சத்த மநித்தியமாமென்பது. (உஉ) அநித்திய மாகிய திருட்டாந்தத்தின் பொதுவியல்பால் எல்லா மநித்தியமாமென்னும் பிரசங்கத்தினைத் தோற்றுவித்தல் அநித்தியசமம். எங்ஙனம் அநித்தியமாகிய குடத்தோடொப்புமையுடைமையால் சத்த மநித்தியமெனக் கூறப்படுமாயின் யாதாயினு 'மோரியல்பால் எல்லா மதனை யொக்குமாகலின் எல்லா மநித்தியமெனல் வேண்டுமென்பது. (உங) வாதியாற் கூறப்பட்ட ஏது வேறு காரியத்தோடு முளதாதல் கூறுவது காரியசமம் எங்ஙனம், அவ்வனுமானத்தின்கண் முயற்சியோடுளதாகி நிற்றல் இருவகையானுமுளதாம், குடமுதலியனபோலச் சத்தத்தின் சொரூபந்தோன்றுழி நீர் முதலியனபோல மறைப்பு நீங்கியவழியும் ஈரிடத்தும் முயற்சியாற் றோன்றற்பாலதாதல் காணப்படுதலின்; ஆகவே அம்மறைப்பி னீக்கமெனப்படும் வேறுகாரியந் தோன்றுதலின் அநித்தியமாதல் நியதமின்றென்பது. (உச) காரணசமமெனவும் பாடம். அதற்கும் காரணத்திற்கும் முயற்சியாற் றோன்றற்பாலதாதல் ஈரிடத்துஞ் சத்தத்தினது தோற்றத்தின்கண்ணும் அதனது மறைப்பி னீக்கத்தின்கண்ணும் சமமாதல கூறுதலென்னுமுறைமையால் முற்கூறப்பட்டதே பொருளாக முடியுமென முடித்துக்கொள்க. இவற்றின் விரிவெல்லாம் விரிவஞ்சி யீண்டுரைக்கப்படாமையின் ஏனைநூல்களுட் கண்டு கொள்க.

வாதிகள் தோல்வியுறுதற் கேதுவாயது தோல்வித்தானம். அவை மேற்கோளழிவு, வேறு மேற்கோள், மேற்கோள்விரோதம், மேற்கோள்விடுதல், வேற்றேது, வே

ற்றுப்பொருள், பொருளின்மை, பொருளறியப்படாமை, பொருட்போலி, காலம்பெறுமை, குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியதுகூறல், பிற்கூற்றின்மை, அறியாமை, நாணுதல், தடுமாற்றம், பிறன்மதத்தினையுடன்படல், வினவற்பாலதனை வினவாமை, வினவற்பாலதல்லதனை வினவுதல், சித்தாந்தப்போலி, ஏதுப்போலியென்பன; ஏனையவை நன்குபோதரும்.

வாதிகள் எ-து. தோல்வித்தானத்திற்கு இலக்கணங் கூறுகின்றது. இஃதும் சலமுதலியவற்றினுளதாயினும் வேற்றுப்பொருள் முதலியனவெனப்படுந் தோல்வித்தானத்து ளடங்குமாகலிற் குற்றமின்று. சலமுதலியவற்றானும் ஞானத்திற்கு உபகாரமாகலின் வேறு கூறுதல் ஏதுப்போலி போலக் கொள்க. மேற்கோளழிவு எ-து. அதற்கு அந்தரங்க வேறுபாடு காட்டுகின்றது. அவற்றுள் மேற்கோளழிவு எ-து. மேற்கொள்ளப்பட்ட பொருட்கு மாறுபட்டதனையுடன்படுதல்; மேற்கொள்ளப்பட்ட பொருளை விடுதலெனினுமாம். எங்ஙனம், சத்தம் அநித்தியம் காட்சிக் குணமாகலினென்புழி அஃது இந்தக் ககரம் என்பதுமுதலிய முன்னறிந்தததுணர்வின்வலியால் பிறனாற் பாகந் தோற்றுவிக்கப்பட்டவழி அங்ஙனமாயின் சத்தம் நித்தியமாகுகவென நித்தியமாதலையுடன் பட்டு வாதி சத்த மநித்தியமாமென்னும் மேற்கோளை விடுவது போல்வது. (க) வேறுமேற்கோள் பிறனாற் கூறப்பட்ட குற்றத்தைக் கடக்கும் பொருட்கு முற்கூறப்படாத விசேடணத்தான் விசேடிக்கப்பட்டதாதலால் மேற்கொள்ளப்பட்ட பொருளைக்கூறுதல் எங்ஙனம், நிலமுதலியன குணத்தாற்

ற்றொன்றற்பாலது காரியமாகலினென்புழி ஊழிறுற் றொன்றற்பாலதாதலால் சித்தசாதனந் தோற்றுவிக்க ப்பட்டவழி விடயத்தோடு கூடியது எனக் குணத்தி ற்கு விசேடணங் கொடுத்தல் போல்வது. (உ) மேற் கோள்விரோதம் தன்னுற் கூறப்பட்ட துணிபொரு ளோடு மாறுபட்ட ஏதுவினையுரைத்தல். எங்ஙனம், திரவியங் குணத்தின் வேருயது, உருவமுதலியவற் ருல் வேருகப் புலப்படாமையினென்பது போல்வது. (௩) மேற்கோள்விடுதல் தன்னுற் கூறப்பட்டபொருள் பிறனுற் பழிக்கப்பட்டவழி யதனைவிடுதல் எங்ஙனம் சத்த மநித்தியம் இந்திரியத்திற்குப் புலனுகலின் என க்கூறப்பட்டவழி பிறனுல் சாமானியத்தின்கண் முறை பிறழ்தலை யெடுத்துக்காட்டிப் பழிக்கப்பட்டவழி சத்த மநித்தியமெனக் கூறியது யார் எனக் கூறித் தன் னுற் கூறப்பட்டதனை விடுதல் போல்வது. (௪) வே ற்றேது பிறனுற் கூறப்பட்ட குற்றத்தைக் கடக்கு ம்பொருட்டு முற்கூறப்பட்ட ஏதுவின்கண் வேறு விசேடணங் கொடுத்தல்; எங்ஙனம், சத்த மநித்தியம் காட்சிப்படுதலின் என்புழி சாமானியத்தின்கண் முறை பிறழ்தலையெடுத்துக்காட்டியவழி சாதியுடைத்தாயென விசேடணங் கொடுத்தல் போல்வது. (ரு) வேற்றுப் பொருள் முதற்கண் அளப்படாத பொருளையுரைத்தல்; எங்ஙனம், நித்தியம் சத்தம், தீண்டுதலுடைத்தன்மை யின் என்னும் ஏதுப்போல்வது. ஏதுவென்னுஞ் சொல் வினையடியதாகத் தோன்றியது; பதம் என்னுஞ்சொல் வேற்றுமையீறும் வினைவிகுதியீறும் என்பது முதலி யன. (௬)பொருளின்மை எ-து. ஒன்றனையுமுணர்த்தா தசொல்லினையெடுத்தாளுதல்; எங்ஙனம், சத்தமநித்தி

யம் கசடதபறவாதலின் என்பதுமுதலியன. (எ) பொருளா றியப்படாமை அவையகத்தோரால்எடுத்துக்கூறப்பட்ட ஞானத்தினைப் பயப்பனவாகிய பதங்களை யெடுத்தா ளுதல் அஃதும் அந்நுவயப்படுதலில்லது, பெருவ ழக்கிற்றல்லாத பொருளையுடையது, விரைவினுச்சரிக் கப்பட்டது என்பனமுதலியனவெனப்படும். (அ) பொ ருட்போலி ஒன்றோடொன்று அந்நுவயப்படாத பொ ருளினையுடைய பதங்களின் கூட்டம்; எங்ஙனம், சத் தமுங் குடமும் படமும் நித்தியமும் அநித்தியமும் பிர மேயமாகலினென்பது முதலியன. (௯) காலம்பெறா மை. உறுப்புக்களை மாறிக்கூறுவது; எங்ஙனம், சத்த மாகலிற் சத்தமநித்தியம் என்பதுமுதலியன. (௧௦) குன் றக்கூறல் யாதாயினு முறுப்பினைக் குறைத்து உறுப்பு க்களை யெடுத்துரைத்தல், இது வெளிப்படை. (௧௧) மிகைபடக்கூறல் அளவின்மேற்பட ஏதுமுதலியனவ ற்றையுரைத்தல்; எங்ஙனம், சத்த மநித்தியம் சத்தத்த ன்மையானுங் கேட்கப்படுந்தன்மையானு மென்பதுமு தலியன (௧௨) கூறியதுகூறல் அனுவாதமின்றிக் கூற ப்பட்டதனை மறித்துங் கூறுதல்; எங்ஙனம், சத்த மநி த்தியம் சத்தமநித்திம் என்பதுமுதலியன. (௧௩) பிற் கூற்றின்மை அவையகத்தோரால் மூக்கால் வெளிப்படுத் தப்பட்டதனையேனும் அனுவதியாதொழிதல். (௧௪) அறி யாமை அவையகத்தோரா லறியப்பட்டது வாதியால் மூக்கால் வெளியிடப்பட்டதாயினும் தொடர்மொழிப் பொருளறியாமை. (௧௫) நாணுதல் பிறனாற் கூறப்பட் டது உத்தரங் கூறத்தக்கதென வறிந்தும் உத்தரங்கூற வாராமையால் வாளாவிருத்தல். (௧௬) தடுமாற்றம் வேறுகாலத்திற்குரியதாய வொருகாரியம் அப்பொழு

து செய்யப்படற்பாற்றெனப் பொய்கூறிக் கதையை யொழிதல். (கஎ) பிறன்மதத்தினையுடன்படல். சுபக் கத்துக் குற்றநீக்காது பரபக்கத்துக் குற்றமெடுத்து ரைத்தல் (கஅ) வினவற்பாலதனைவினவாமை எடுத் துக்காட்டுந் தகுதியுடைத்தாகிய பிறினுக்குரிய தோல் வித்தானத்தை யெடுத்துக் காட்டாமை. (உ0) வின வற்பாலதல்லாததனைவினவுதல் தோல்வித்தானமில் வழித் தோல்வித்தான மெடுத்துக்காட்டுதல். (உக) சித்தாந்தப்போலி ஒருசித்தாந்தமதத்தினைப் பற்றிக் கதை நடக்கின்றுழி அதனோடு மாறுபட்ட சித்தாந்த மதத்தினைப்பற்றி யுத்தரங்கூறல். மேற்கோளழிவு, பிற கூற்றின்மை, அறியாமை, நாணுதல், தடுமாற்றம், வின வற்பாலதனைவினவாமை என்பன அபாவத்தின்கண் ணும் ஏதுப்போலியொழிந்த ஏனைத் தோல்வித்தானங் கள் குணத்தின்கண்ணும் ஏதுப்போலிகள் திரவியமுத லியவற்றின்கண்ணும் அடங்குமாறு தகுதிபற்றி யறிந் துகொள்க. ஈண்டுக் கூறப்படாத சூத்திரப்பொருள் நன்குபோதருமென்னுங் கருத்தால் ஏனையவை நன்கு போதரும் எனப்பட்டது.

அற்றேல் கையும் நெருப்புங் கூடியவழியுந் தடையு ள்ளவழி வெம்மை பொருந்தாமையின் ஆற்றல் வே றுபதார்த்தமாமெனின்; அற்றன்று தடையினபாவங் காரிய மெல்லாவற்றிற்குங் காரணமாகலின் ஆற்றல் பயன்படா மையின் காரணத்தன்மையே ஆற்றலென்னும் பதார்த்தமா மென்பது. அற்றேல் சாம்பர்முதலியவற்றால் வெண்கலமு தலியவற்றின்கண் தூய்மை காணப்படுதலின் சார்புபற்றிய ஆற்றல் கொள்ளற்பாற்றெனின்;— அற்றன்று, சாம்பர்முத லியவற்றின் கூட்டத்தோடு ஒருகாலத்துளதாய நீண்டற்

பாலதல்லதனைத் தீண்டுதலாகிய பிரதியோகியையுடைய அபாவமெல்லாவற்றோடுங் கூடிய சாம்பர்முதலியவற்றின் கூட்டத்தினழிவே தூய்மையென்னும் பதார்த்தமாகலினெ ன்பது. உடைய பொருண்மையும் வேறு பதார்த்தமன்று, வேண்டியவாறே ஏவப்படுந் தகுதியுடைமையே உடைய பொருண்மை யெனப்படுமாகலினென்பது; அதனை வரைந் துகொள்வது ஏற்றல் முதலியனவற்றாற் பெறப்படுந்தன்மை.

அற்றேல் எ-து. அற்றேல் நெருப்புக்கூடியவழியும் மணி முதலியன கூடியவழி வெம்மை தோன்றாதாகலின் மணிமுதலியன தடையாதல் கூறப்படும். அஃதும் தீயின்கண் வெம்மைக்கேற்ற வாற்றல் கொள்ளுத லே உறுதிப்படும். தடையாந்தன்மை காரியத்திற்கு ஏற்ற ஆற்றலி னீங்கியதெனப்படுமாகலினென்பது. இங்ஙனமாகலின் இஃதவ்வாறாகாதவழி பொருந்தா மை பெறப்பட்ட ஆற்றல் மேற்பட்டதாகலின் பதார்த் தங்கள் ஏழேயென்பது அசங்கதமாமெனப் பிரபாகரம தம்பற்றி ஆசங்கித்துரைக்கின்றது. தடையினபாவம் எ-து. அற்றேல் இங்ஙனம் ஆற்றல் பெறப்பட்டவழி யும் அது மேற்பட்டதாதல் பெறப்பட்டிலதாலோவெ னின்;— அற்றன்று, என்னை திரவியமெனப்படு மாற் றல் குணமுதலியன வுள்ளதல்லாமையின் இதனோனே குணங் கருமம் என்பனவற்றின் வேறாயதுமன்று, சா மானியமுதலியவற்று ளொன்றுமன்று தோற்றமுமழி வுமுடைமையின். இங்ஙனமே மேற்பட்டதாகிய பதா ர்த்தமாதல் பெறப்படுமென்பது. தடையாதல் காரிய த்திற்கேற்ற ஆற்றலி னீங்கியதாதலின்று, மற்றுக் காரணமாகிய அபாவத்திதனுப் பிரதியோகியாதல் அஃ

தும் மணியினபாவங் காரணமாகலானே பொருந்தும் மணி புணர்ந்துநின்ற காலத்து அதனபாவமெனப்ப டும் வேறு காரணமின்மையானே வெம்மை தோன்றா மையுளதாம். இங்ஙனமே மேற்பட்ட ஆற்றல்கொள் ளுதல் நன்றன்றென்னுங் கருத்தால் விடைகூறுகின் றது. காரணத்தன்மையே எ-து. அற்றேல் வெம்மை தோன்றியவழி தீ ஆற்றலுடைத்தாம் என்னும் வழக்கு அங்ஙனமல்லாதவழிப் பொருந்தாமையால் மேற்பட்ட தாகிய ஆற்றலென்பது இன்றாய்முடியுமென வாசங் கித்து அதன் காரணத்தன்மையாகிய வடிவத்தினும் வழக்குப் பொருந்துமாகலின் ஆற்றல் மேற்பட்டது அன்றென்கின்றது. அற்றேல் மணிமுதலியவற்றினது அபாவங் காரணமாயவழி மணிபுணர்ந்து நின்றுழியும் மாற்றுள்ளவழி வெம்மை தோன்றாது. அற்றேல் சா ம்பர்முதலியன எ-து. மற்று நம்மதத்து மணிமுதலி யன நீங்கியகாலத்துப்போல மாற்றுப் புணர்ந்துநின்ற காலத்தும் தீயின்கண் வெம்மைக்கு ஏற்புடைத்தாகிய வேறு ஆற்றல் வேண்டுதல் கொள்ளப்படுதலின் குற்ற மின்றாமெனின்;—அற்றன்று மாற்றின்மையான் விசே டிக்கப்பட்ட மணிமுதலியவற்றினின்மை காரணமாமெ னக்கோடலின் குற்றமின்றாமாகலினென்பது. மாற் றுத் தொடர்வுபாடுடையதாகலின் அவ்வம்மாற்றினபா வத்தான் விசேடிக்கப்பட்ட மணிமுதலியவற்றி னபாவ மே காரணமாமெனக்கொள்ளுதல் மிகையாமென்ன ற்க, வெம்மைக்கு ஏற்புடைத்தாகிய வாற்றற்கு இவ் வியல்பிற்றாகிய காரணம் நும்மதத்தும் ஒருதலையான் வேண்டப்படுதலின் அளவிறந்த வாற்றல் அதன் முன் னபாவமும் அழிவுபாட்டபாவமுங் கோடலால் பெரிய

தோர் மிகையாமாகலினென்பது. அற்றேல் இங்ஙன் மாயினும் வெண்கலம்முதலியன தீண்டற்பாலதல்லாத பொருளைத் தீண்டியவழி உண்டல் முதலியனவெனப் படுங் காரியத்திற்குத் தக்கதாதலின்று. ஆற்றலுடைத் தாகிய வெங்கலமுதலியனவே அதற்குத் தக்கதாகலின் தீண்டற்பாலதல்லாததனைத் தீண்டியவழி யீற்றலழி தலின் சாம்பர்கூடியவழிப் பின்னர் ஆற்றல் தோன்று தலின் அதற்குத் தக்கதாம். இங்ஙனமே வெண்கலமு தலியவற்றின் சார்புபற்றியவாற்றல் கொள்ளற்பாற்று. வெண்கலமுதலியவற்றின்கண் உண்டல் முதலியனவற் றிற்குத் தீண்டற்பாலதல்லதனைத் தீண்டுதல் தடையா தல் கொள்ளுதலாற்றானே அது பொருந்துதலின் அது கொள்ளற்கவெனக் கூறற்க, முதற்கண் தீண்டற் பாலதல்லாததனைத் தீண்டுதல் தீண்டற்பாலதல்லாத தன் கூட்டமெனப்படுமாகலின் அஃதழிந்தவழித் தடை யின்பாவமுளதாகலின் வெண்கலமுதலியவற்றின்கண் சாம்பர்முதலியவற்றின் கூட்டமின்றியும் உண்டல்முத லியவற்றிற்குத் தக்கதாமெனல் வேண்டுதலின் எனப் பின்னர் நிறுத்துகின்றது.

முதலாவதாகிய முதலியவென்றதனால் புளிமுதலியனவும் இரண்டாவதாகிய முதலியனவென்றதனால் செம்புமுத லியனவுங் கொள்ளப்படும். சாம்பர்முதலியன எ-து. வரைசெய்துணர்த்திய அழிவின் விசேடணத்தாற்று னே வெண்கலமுதலிய 'சுத்தமாதல்' பொருந்துமாத லின் மேற்பட்ட ஆற்றல் கொள்ளுதல் நன்றன்றெ விடைகூறுகின்றது. யாண்டு 'வெண்கலமுதலியவற்றி ன்கண் சாம்பர்முதலியவற்றின் கூட்டமழிந்த பின்னா பின்னும் தீண்டற்பாலதல்லாதனைத் தீண்டுதலுளதாம்

ஆண்டும் சாம்பர்முதலியவற்றின் கூட்டத்தி னழிவுபா டுண்மையின் அஃது தூய்மை யாகாமைப்பொருட்டு அழிவுபாடு விசேடிக்கப்பட்டது. கூடிநிற்றல் ஈண் டுச் சம்பந்த விசேடத்தால் நியமிக்கப்பட்ட ஒருநிலைக் களத்துளதாதல். பொருள்கள் தொடர்ந்துவருவதாதல் கூறுதலரிதாகலின் பொதுவியல்பான் வரைந்துகொள் ளப்பட்ட அபாவங்கூட்டி யுரைக்கப்படுதலுளதாகாமை யின் யாதாயினுந் தீண்டற்பாலதல்லாததனைத் தீண்டு தலாண்டுளதாகலின் அது வருதல் அதன்நிலையே யெ னப்படுமாகலின் எல்லாம் எனப்பட்டது. ஆகவே ஆண்டு அவ்வத் தீண்டற்பாலதல்லதனைத் தீண்டுதலி னபாவமெல்லாம் வரைந்துகொள்ளப்படாத விசேடண த்தன்மைச் சம்பந்தத்தாலிலவாமாகலின் கூறப்பட்ட குற்றமின்றென்பது கருத்து. யாண்டு சாம்பர்முதலி யவற்றின் கூட்டமுந் தீண்டற்பாலதல்லாத பொருளை த்தீண்டுதலும் ஒருங்கே தோன்றுதலும் அழிதலுமுள வாம் ஆண்டு அவ்வத் தீண்டற்பாலதல்லதனைத் தீண் டுதலி னபாவத்தோடு ஒருநிலைக்களத்துளதாதலான் விசேடிக்கப்பட்ட சாம்பர்முதலியவற்றின் கூட்டத்தி னழிவை யெடுத்துக்கொண்டு தூய்மையாதலி னீக்குத ற்கு சாம்பர்முதலியன கூடுங்காலத்தான் வரைந்து கோடலால் ஆண்டு அறியப்படும்பொருளினையுடைய சாம்பர்முதலியவற்றின் கூட்டத்தோடு ஒருகாலத்துள தாகியவென அபாவம் விசேடிக்கப்பட்டது. ஆகவே சாம்பர்முதலியன கூடுங்கணத்தான் வரைந்துகோட லான் அவ்வவ்வபாவங்களெல்லா மின்மையின் குற்ற மின்றென்பதுகருத்து. உடையபொருண்மையும் எ-து. இது சாத்தன் தனம் என்பதுமுதலியவற்றுள் உடைய

பொருண்மையாக வுணரப்படுவதியாது. அது வேறு பதார்த்தமென்னும் மதத்தினை மறுக்கின்றது. உம்மையால் கூறப்பட்ட கூட்டமாகலானே பிரதியோகியாதல் கொள்ளப்படும். வேண்டியவாறு எ-து. அற்றேல் உடைய பொருண்மைக்குச் சொரூபம் யாதென்னும் வினாவுக்கு விடைகூறுகின்றது. அதனைவரைந்துகோள்வது எ-து. அவ்வியல்பிற்றாகிய தகுதியைப் பயப்பது எ-று. பிரதியோகித்தன்மை பிரதியோகியெனப்படுவது பிரதியோகித்தன்மையை வரைந்துகொள்வது எனப்படுவது எனினுமாம். இவைமுதலியனவெல்லாம் பலவாறாக வூகித் துணர்ந்துகொள்க.

இனி விதியின்னதெனத் தெரித்துணர்த்தப்படும். விதியாவது முயற்சியைத் தோற்றுவிப்பதாகிய செய்தல்வேட்கையைத் தோற்றுவிக்கும் ஞானத்திற்கு விடயம். அதனைக்கூறுவது வியங்கோள்முதலியனவாயினுமாம். தொழின் முற்றுப்பெறுததன்கண் முயற்சி காணப்படாமையின் தொழின் முற்றுப்பெறுவதன்கண் முயற்சிகாணப்படுதலின் தொழின் முற்றுப்பெறுமென்னு முணர்வு முயற்சியைத் தோற்றுவிப்பது. நஞ்சுண்டல் முதலியவற்றினும் முயற்சி தோன்றுமென்னற்க, காமியவிதிக்கண் விரும்பப்பட்டதற்குக் கருவித்தன்மையாகிய லிங்கத்தினையுடைய தொழில் முற்றுப்பெறுமென்னு ஞானமும், நித்தியவிதிக்கண் விதித்த காலத்து வாழற்பாற்றென்னு ஞானத்தாற் றோன்றற்பாலதாகிய ஞானமும் நைமித்திகத்தின்கண் நிமித்தவுணர்வாற் றோன்றற்பாலதாகிய ஞானமுமே முயற்சியைத் தோற்றுவிப்பதாகலினென்பது. உடனிகழ்வதுமன்று, குருமதத்தார் தனது விசேடணமுடைத்தாந்தன்மையின் றொடர்வுபாற்றாற் றோன்றற்பாலதாந்தன்மை யுடனிகழுமாகலின் உடனிகழ்வதுண்டென்பர், அது பொருந்தாது, நொய்ம்மை

யாகத் தொழிலான் முற்றுப்பெறும் விரும்பப்பட்டதற்குக் கருவித்தன்மையையுணரும் ஞானமே செய்தல்வேட்கைவாயிலாக முயற்சியைத் தோற்றுவிப்பதாகலினென்பது. நித்தியவிதிக்கண் விரும்பப்பட்டதற்குக் கருவித்தன்மையின்மையின் ஆண்டு முயற்சிசெல்லாமைவருமென்றலும் பொருந்தாது, ஆண்டும் விதித்தன செய்யாமையான் வருங் குற்றங் களைதலாதல் பாவக்கேடாதல் பலமெனக் கொள்ளற்பாற்றாகலினென்க. ஆதலான் தொழிலான் முற்றுப்பெறும் விரும்பப்பட்டதற்குக் கருவியாந்தன்மையே வியங்கோள் முதலியவற்றிற்குப் பொருளெனக்கொள்க. அற்றேல் 'துறக்கம்விழைவோன் சோதிட்டோமத்தான் வேட்க' வென்புழிக் ககரவிகுதியாற் றுறக்கத்திற்கேதுவாகிய காரியநிகழ்ச்சியறியப்படும்; விரைவினழிவதாகிய வேள்வி வேறுகாலத்துளதாவதாகிய துறக்கத்திற்கேதுவாதல் கூடாமையின் அதற்குத்தகுதியாகிய நிலைபெற்ற காரியமெனப்படும் அபூர்வமே வியங்கோள் முதலியவற்றிற்குப் பொருளெனக்கொள்ளற்பாற்று. காரியந் தொழிலான்முற்றுப்பெறுவது. தொழில்விடயமுடைமையின் விடயம் யாது என அவாவியவழி வேள்வி விடயத்தன்மையான்வந்தியையும்; எவனுடையகாரியமென ஏவப்படுவோனையவாவியவழி துறக்கம் விழைவோனென்னும்பதம் ஏவப்படுவோன்மேற்றாய் வந்தியையும்; ஏவப்படுவோன் காரியம் புந்திசெய்வோன். அதனால் 'சோதிட்டோமமெனப்பெயரிய வேள்வியாகிய விடயம் துறக்கம் விழைவோனாற் செயற்பால' தென வாக்கியப்பொருள் பெறப்படும். இவ்விகுதி வேதத்தின்கணுண்மையின் 'வாழ்நாளுளதாங்காறும் எரியோம்புக' என்னும் நித்தியவிதி 'வாக்கியத்தினும் அபூர்வமே சொற்பொருளாகக் கொள்ளற்பாற்று. 'பிணியின்மை விழைவோன் மருந்து தின்னுக'வென்னும் உலகத்தின்கண்ணதாகிய வியங்

கோள்விகுதிக்கு இலக்கணையாற் றொழிற்காரியமே கொள்ளற்பாற்றெனின்;— அற்றன்று, யாகத்தின்கண்ணுந் தகுதியின்றெனத் தெளிவுபெறுமையின் எதுவே விகுதிப்பொருளாக வுணர்ந்தபின்னர் உறுதிப்பொருட்டு அவாந்தர வியாபாரமாக அபூர்வங் கொள்ளற்பாற்றாகலினென்பது. புகழ்ச்சிமுதலியவற்றா னழிவுகூறுஞ் சுருதியால் வேள்வியினழிவுபாடு வியாபாரமன்று. உலகின்கட் சொற்பொருளுணர்ச்சிவலியால் வினைமுற்றின்கண்ணே தொழிலான் முற்றுப்பெறுவதாய் விரும்பப்பட்டதற்கு ஏதுவாந்தன்மையே வியங்கோள்விகுதியா னுணர்த்தப்படுவதாகலின் வியங்கோட்டன்மையான் விதிப்பொருண்மையும் விகுதித்தன்மையான் முயற்சிப்பொருண்மையுமுளவாம், 'அடுகின்றான் அடுதலைச் செய்கின்றா'னென்னும் விவரணங்காணப்படுதலானும், யாது செய்கின்றானென வினவியவழி அடுகின்றானென விடை நிகழ்தலானும் முயற்சியே விகுதிப்பொருளாதல் துணியப்பட்டமையானுமென்பது. 'தேர் இயங்குகின்றது' என்பது முதலியவற்றின்கண் இலக்கணையாலதற்கு ஏற்புடைத்தாகிய வியாபாரம் பொருள். 'சாத்தன் அடுகின்றான்' 'சாத்தனால் அரிசி அடப்பட்டது' எனபன முதலியவற்றின்கண் வினைமுதலுஞ் செயப்படுபொருளும் விகுதிக்குப் பொருளல்ல, மற்று அதனோற்போந்த ஒருமைமுதலியனவேயாம். வினைமுதலுஞ் செயப்படுபொருளும் ஆசங்கித்தலாற் பெறப்படும்.

இனி எ-து. எல்லாப் பதார்த்தங்களும் கூறப்பட்ட பதார்த்தங்களுள் முறையானே யடங்குமாறு தெரித்துணர்த்தி நூற்குவருங் குற்றம் பரிகரிக்கும்பொருட்டு விதியைத் தெரித்துணர்த்துவான் றொடங்கி மாணாக்கனு

ணர்ந்துகொள்ளும்பொருட்டு அதனைத் தெரித்துணர்த் துதலை மேற்கொண்டுரைக்கின்றது. முயற்சியை எ-து. தன்மதம் பிறர்மதம் என்னு மிரண்டற்கும் பொதுவாக விதிக்கு நிருத்தி கூறுகின்றது. முயற்சியைத் தோற் றுவிக்கும் செய்தல்வேட்கை யாது, அதனைத் தோற்று விக்கும் ஞானம் யாது, அதற்கு விடயம் எ-று. குரு மதத்தின்கண் தொழிலான் முற்றுப்பெறுவதாந்தன்மை யறிவும் தன்மதத்தின்கண் தொழிலான் முற்றுப்பெறு வதாந்தன்மையான்விசேடிக்கப்பட்ட விரும்பப்பட்டதற் குக் கருவித்தன்மையறிவும் செய்தல்வேட்கைவாயிலாக முயற்சியைத்தோற்றுவிப்பனவாமாகலினென்பது. அம் மதத்தின்கண் தொழிலான் முற்றுப்பெறுவதாந்தன்மை யினும் தன்மதத்தின்கண்தொழிலான்முற்றுப்பெறுவதா ந்தன்மையான் விசேடிக்கப்பட்ட விரும்பப்பட்டதற்குக் கருவியாந்தன்மையினும் இலக்கணம்நன்குபோதருமாற றிக. பொருளைக்கூறுவது விதியென்னும்மதக்கருத்துப்ப ற்றி அதனைக்கூறுவது எனப்பட்டது. அவ்வியல்பிற்முகி யஞானத்திற்கு விடயமாகிய காரியத்தன்மை முதலிய னவற்றை யெடுத்துக் கூறுவதாகிய வியங்கோள் முத லியன எ-று. முதலியன என்றதனுல் வேண்டும், தரும், படும் முதலியன கொள்ளப்படும். ஆயினும் எ-து. விகற்பத்தின்கண் வந்தது. தொழின்முற்றுப்பே றுதன்கண் எ-து. குருமதத்தினை யாசங்கித்துரைக் கின்றது; தொழின் முற்றுப்பெறுமையா லறியப்பட்ட எ-று. முயற்சியைத்தோற்றுவிப்பது எ-து. செய்தல் வேட்கைவாயிலாக முயற்சியைத்தோற்றுவிப்பது எ-று தொழிலான் முற்றுப்பெறுதென்னு ஞானத்தினபாவ மே முயற்சியைத் தோற்றுவிப்பதாகுகவெனச் சங்கித்

தலும் பொருந்தாது, தொழிலான் முற்றுப்பெறுமென்னும் ஞானத்தினபாவமாதலானே அதுகொள்ளுதல் மிகையாதலானும் தொழிலான் முற்றுப்பெறுந்தன்மையின் அபாவமுந் தொழிலான் முற்றுப்பெறுதலின் வேறுபாடும் அதனதன் வியாப்பியமும் முதலியவற்றின் காட்சிகள் முயற்சிக்குத் தடையாதல் கொள்ளுதலானே பெரியதோர் மிகையாமாகலானும் என்பது. நஞ்சுண்டல் முதலியவற்றின் எ-து. அற்றேல் நஞ்சுண்டல் முதலியவற்றின்கண் தொழிலான் முயற்சிவரும், தொழிலான் முற்றுப்பெறுந்தன்மையறிவு ஆண்டு முண்மையினென்னு மாசங்கை நீக்குகின்றது. காமியவிதிக்கண் எ-து. முயறலைத் தோற்றுவிப்பதாகலினென்பதனோடியையும்; சோதிட்டோமம்முதலியவற்றின்கண் எ-று. விரும்பப்பட்டதற்கு எ-து. 'இது எனதுதொழிலான் முற்றுப்பெறுவது, என் தொழிலையின்றிப்பொருந்தாததாய் விரும்பப்பட்டதற்குக்கருவியாதலின்' என்னுமனுமானத்தினையுடையது எ-று. விதித்தகாலத்து எ-து. விதித்தகாலத்துத் தூய்மையாகவாழ்தலின் அறிவின் வயத்ததாகிய தொழிலான் முற்றுப்பெறுவதாந்தன்மையறிவு நித்தியமாகிய சந்தியாவந்தன முதலியவற்றின்கண்ணும் ஆசௌசமுதலியவெனப்படும் நிமித்தஞானத்தின் வயத்ததாகிய அது நைமித்திகமாகிய நீராடல் முதலியவற்றினும் முயற்சியைத் தோற்றுவிப்பதாகலின் எ-று. 'யான் இக்காலத்துள்ள தொழிலான் முற்றுப்பெறுவதாகிய சந்தியாவந்தனத்தையுடையேன், இக்காலத்துளதாகிய தூய்மையாக வாழ்தலையுடையேனாகலின்' என்னுமிம்முறைமையால் தொழிலான் முற்றுப்பெறுமென்னு ஞானம் விதித்தகாலத்துத் தூய்மையாக வாழ்தன் முத

வியன ஞானத்தாற் றோன்றற்பாலதாதல் முடிக்கப்பம்
டும். உடனிகழ்வது எ-து. முயற்சிப்பொதுமையைப்
பயப்பதாகிய ஒன்றின்மையின் என்பது கருத்து. தன
து விசேடண முடைத்தார்தன்மை எ-து. தான் என்
றது முயலும் புருடன், அவனது விசேடணம் அவன்
கண்ணதாகிய இயல்பெனப்படும் வேட்கை முதலியன,
அஃதுடைத்தார் தன்மையாகிய தனது விடயத்திற்குக்
கருவித்தன்மை முதலியனவெனப்படும் அதன் சம்பந்த
த்தோடு தொடர்ந்துவருவது அறிவு; அதனுற்றோன்றற்
பாலதாயது எ-று. நோய்ம்மையாக எ-து. காரணத்
தன்மையை வரைந்துகொள்வது நொய்ம்மையாகலின்
எ-று. அம்மதத்தின்கண் காரணத்தன்மையை வரைந்
துகொள்வது தோன்றற்பாலதாதன் முதலியவற்றோடு
கூடிநிற்றலின் மிகையாமென்பது கருத்து. தொழி
லான்முற்றுப்பேறும் எ-து. ஈண்டு வலியுடைத்தாகிய
விரும்பாததனோடு தொடர்வுபடாததும் அடக்கியுரைக்
கற்பாற்று. அதனுல் தொழிலான் முற்றுப்பெறுவதா
தலும் திருத்தியெனப்படும் விரும்பப்பட்டதற்குக் கரு
வியாதலும் அறியப்பட்டவழி நஞ்சுகலந்த உணவுமுத
லியவற்றின்கண் முயற்சி தோன்றுமெனல் வாராது.
விசேடிக்கப்பட்ட ஞானமாதலான் வரைந்துகொள்ளப்
பட்டது காரணமென்றல் பிராசீனமதம்பற்றியேயாம்,
நவீனமதத்தின்கண் தொழிலான் முற்றுப்பெறுந்தன்
மை முதலியவற்றினறிவு வேருகவே தண்டசக்கராதி
நியாயத்தால் காரணமாகலி னென்பது. முயற்சியை
எ-து. தொழிற்பாட்டினை எ-று. விதித்தன்செய்யா
மை எ-து. விதித்தன செய்யாமையான் வருங் குற்ற
ங்களைதல் முன்னபாவம் அது துக்கத்தினைத் தோற்று

விப்பதன்மையின் அதனழிவே விரும்பப்பட்டதாயவழிச் சம்பந்தமெனப்படும் பலமாமென்பது கருத்து. அதன் முன்னபாவம் பலமாதலெங்ஙனம், அது தோற்றுவிக் கப்படுவதன்றாகலினெனக் கூறற்க, யாது உள்ளவழி யாது உளதாம் என்னும் வழக்காற் பெறப்படுவதாய் சொரூபசம்பந்தமெனப்படுவதாய் சந்தியாவந்தனமாகிய பயனைத்தருவதாய் உள்ளது ஆண்டுண்மையின் பலமா தற்குக் கேடின்றென முடித்துக் கொள்ளற்பாற்றாகலி னென்பது. அற்றேல் எ-து. அற்றேல் வியங்கோள் முதலியனவற்றிற்குக் காரியத்தின்கண்ணே யாற்றலெ னக் குருமதத்தினை யாசங்கித்துரைக்கின்றது. வே ள்வி எ-து. இச்சை விசேடமாகிய வேள்வி விரைவி னழிவதாகலின் துறக்கத்திற்குக் கருவியாந்தன்மையா னே விளங்குதலுளதாகாது. தகுதியில்லதாகலின் என அபூர்வமெனப்படுவதே காரியத்தின்க ணாற்றலாகக் கொள்ளற்பாற்று என்கின்றது. விரைவினழிவது மூன் றாங்கணத்துளதாகிய அழிவுபாட்டின் பிரதியோகி. நிலைபெறுதல் பலமெய்துங்காறும் நிற்றல். காரியந் தொழிலான்முற்றுப்பெறுவது எ-து. அந்நுவயத்தினி யல்பு காட்டுகின்றது. வேள்விக்கண் தொழிலான் முற்றுப்பெறுந்தன்மை நேரே எ-ம், மற்று அபூர்வத்தி ன்கண் வேள்வி வாயிலாக எ-ம், அறிந்துகொள்க. கா ரியம் புத்திசெய்வோன் எ-து. இது என்செயலான் முற்றுப்பெறுமென்னும் ஞானமுடையோன் எ-று. அத ஞல் எ-து. விதிப்பொருளினது சிறப்பு விசேடிய மாகிய சாத்தஞானத்தினைக் காட்டுகின்றது. துற க்கம் விழைவோனுக்கு வியங்கோட் பொருளாகிய காரியத்தின்கண்ணும் அதனேகதேசத்தின்கண்ணும்

வேள்வி வந்தியைதலான் எ-று. மற்று நியாய மதத்தின்கண் ஆண்டுத் தொழிலான் முற்றுப்பெறுவதாகிய வலியினையுடைத்தாய் விழையப்பெறாததைத் தோற்றுவியாததாய் விழையப்பட்டதற்குக் கருவியாகிய வேள்விக்கு ஏற்புடைத்தாய தொழிலையுடையோன் துறக்கம் வேட்போன் என வாக்கியப்பொருளறியப்படும். அற்றேல் அபூர்வம் முன்னரணிமைப்படாமையின் ஆண்டு ஆற்றல் கவர்தலெங்ஙனமெனின்; ஈண்டு அறிஞர் கூறுமாறு, அம்மதத்தின்கண் அதனியல்பான்வரைந்துகொள்ளப்பட்ட விடயத்தினையுடைய சாத்தஞானத்திற்கு அதனியல்பான் வரைந்துகொள்ளப்பட்ட விடயத்தினையுடைய ஆற்றல்கவர்தலும் அவ்வியல்பிற்றாகிய அணிமைப்பாடுங் காரணமாம், மற்று ஒருவிடயத்தினையுடைத்தாந்தன்மையானே காரணமுங் காரணமுடைத்தாந்தன்மையின்று. இங்ஙனமே காரியத்தன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதன்கண் யாண்டாயினு மாற்றல் கவரப்படும். தகுதியின்வலியால் அபூர்வமெனப்படுங் காரியம் சாத்தஞானத்தின்கண் விளங்கும், வேள்வியாகிய விடயத்தினை வேறுகாரியந் தோன்றுதெனக்கூறுப. **வாழ்நாளுளதாங்காறும்** எ-து. அற்றேல் நித்தியவிதிக்கண் பலமின்மையின் ஆண்டு அபூர்வமுணருமா றெங்ஙனமென்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது. **அபூர்வமே** எ-து. காரியத்தன்மையானென்பூதுமுதவியன; * **பண்டாபூர்வம்** எ-று. உலக சம்பந்தமுடைத்தாயவிடத்து அபூர்வம் விளங்குதலின்மையின் பிணியின்மை எனப்பட்டது. **தொழிற்காரியம்** எ-து. வினைமுதனிலைப் பொருளின்கண்ணதாகிய

* பண்டாபூர்வம்=பாவத்தினழிவைத்தோற்றுவிக்கு மபூர்வம்.

காரியத்தன்மை எ-று. யாகத்தின்கண்ணும் எ-து. உலகசம்பந்தமுடையதற்கும் உலகசம்பந்தமில்லதற்கும்பொதுவாதலானே காரியத்தன்மை முதலியவற்றின்கண்ணே வியங்கோள் முதலியவற்றிற்கு ஆற்றல் கொள்ளப்படுமென்னுங்கருத்தால்விடைகூறுகின்றது. தகுதியின்று எ-து. தகுதியின்மையால் வேள்வி துறக்கத்திற்குக் கருவியாகலானே புலப்படுதலுளதாகாதெனக்கூறப்பட்ட குற்றநீக்குகின்றது. தகுதியின்றென்பதும் ஐயமுள்ளவழியும் அஃது கூடாதுநிற்றலின்மையின் சாத்தஞானந்தோன்றுவதேயாமென்பது கருத்து. உறுதிப்பொருட்டு எ-து. வாக்கியத்தால் விரும்பப்பட்டதற்குக்கருவியாகிய வேள்வியுணரப்பட்டவழி விரைவினழிவதாகிய அதன்வியாபாரமின்றிப்பலத்தினைத்தோற்றுவிப்பதாகாமையின் அஃதுறுதிப்படும்பொருட்டு அபூர்வங் கொள்ளப்படுமென்கின்றது. புகழ்ச்சிமுதலியவற்றன் எ-து. அற்றேல் வேள்வியினழிவுபாடே வியாபாரமாகுக. அபூர்வங்கோடலானுவதென்னையென்னும் வினவிற்கு விடைகூறுகின்றது. முதலியன என்றதனால் 'கருமத்தினழிவானும் நீரினைத் தீண்டாமையானும் கையால் நீருண்ணுமை' யானும் தோளின்கண் முட்டரித்தலானும் புகழ்ச்சியானும் தருமமழியும்' என்புழிக் கூறப்பட்ட தருமத்தினழிவு நீரினைத்தீண்டாமைமுதலியனகொள்ளப்படும். அழிவுபாடு வியாபாரமாயின் அடுத்தடுத்துத் துறக்கம் வருமெனல் வேண்டுதலுங் குற்றமாதலறிக. உலகின்கட் சொற்பொருளுணர்ச்சி எ-து. உலகவழக்கு எ-று. அஃதாவது எவன் யாண்டு முயலும் அவன் தொழிலான் முற்றுப்பெறுவதாந்தன்மையானும் விழையப்பட்டதற்குக் கருவியாந்தன்மையானும் அதனையறியும் எனப்

படுவது. மற்றுச் சிலர், எதன்வேட்கையால் யாண்டும் முயற்சிதோன்றும் அஃது அதற்குக் கருவியாமெனப் படும் உலகவழக்கெனக் கூறுப. இனி நவீனர் உலகத்தின்கண் அடுக என்பதுமுதலிய வியங்கோள் முதலியவற்றால் வழங்கப்படுமிடத்துத் தொழிலான் முற்றுப்பெறுவதாந்தன்மையான் விசேடிக்கப்பட்ட கருவித்தன்மையறிவு வினைக்கண்ணேயாமென்னு நியமத்தின் வலியால் என்பது பொருள் எ-ம், யாண்டும் என்பது எஞ்சிநின்றது எ-ம் உரைப்ப. விருதித்தன்மை எ-து. அஃதும் சங்கேத சம்பந்தத்தால் கூறப்பட்ட பதமுடைத்தாந்தன்மை; மற்று நவீனர் 'அன்' முதலியனவே ஆற்றலுடைத்தாகற்பாலதாந்தன்மையை வரைந்துகொள்வது என்பர். முயற்சிப்பொருண்மையும் எ-து. தொழிற்றன்மையான் வரைந்துகொள்ளப்பட்ட சொல்லாதல். யாது செய்கின்றான் எ-து. தொழிற்றன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதன்கண் அறிதல் வேட்கையுடைத்தாகிய சம்பந்தத்தையுணர்த்துவது அவ்வினா வாக்கியம்; விடை வாக்கியம் தொழிற்றன்மையான் வரைந்துகொள்ளப்பட்டதன்கண் அடுதற்சம்பந்தத்தை யுணர்த்துவதாயவழியே அதனை நீக்குவதாம், வேறோராற்றானன்று. தேர் இயங்குகின்றது எ-து. அற்றேல் தேர் இயங்குகின்றது என்பதுமுதலியவற்றுள் கூறப்பட்டதற்குத் தொழிலையுணர்த்துவதாதலின்மையின் அதனுடைப்பாட்டால் வியாபாரமே ஆற்றலெனக் கூறற்பாற்றென்னுஞ் சங்கைநீக்குகின்றது. மற்று வியாபாரத்தின்கண் ஏற்புடைத்தாத லெடுத்துரைத்தல் அச்சம்பந்தத்தால் வியாபாரத்தின்கண் இயங்குதல் அந்நுவயப்படுமென்பது பெறுதற்பொருட்டு. இனி நவீனர்

இயங்குகின்றது எனக்கூறப்பட்டதற்கு அறிகின்றான் என்பது முதலியவற்றிற்போலப் பற்றுக்கோடாதற் கண் காரணமின்றி வருமிலக்கணையாற்கொள்ளப்படும். பற்றுற்கோடாந்தன்மைச் சம்பந்தத்தாற்றானே எழு வாய்வேற்றுமையீற்றினையுடைய பொருட்கண் இயங்கு தல்முதலியன அந்நுவயப்படுதலாற் கொள்வழிப் பற் றுக்கோடாதற்கண் காரணமின்றி வருமிலக்கணையாற் கொள்ளுதல் நின்றுபயனின்மைப்பாற் படுமென்ற லும் பொருந்தாது. பெயர்க்கும் பொருட்கும்போல வினைமுதனிலையின் பொருட்கும் பெயர்ப்பொருட்கும் வேறுபாடின்மையாகிய மேற்பட்ட சம்பந்தத்தால் அந் நுவயப்படும் பொருளென வறியப்படாமையின் ஆண்டு அங்ஙனம் அந்நுவயமிலதர்மாகலினென்பது. சிறிது அடுகின்றான் என்பது முதலியவற்றுள் சிறிது முதலி யவற்றிற்கு வினைமுதனிலைப்பொருளாகிய அடுதற்கண் அந்நுவயமுளதாகலின் வேறுபாடின்மை மேற்பட்டதா மென வறிந்துகொள்க. சாத்தன் எ-து. வையாகரண மதத்தினை மறுக்கின்றது. கூறப்பட்ட பொருளன்று எ-து. கூறப்பட்டதற்கு வினைமுதல் முதலியவற்றின் கண் ஆற்றலெனக் கொள்ளும்வழி அளவிறந்த தொ ழில்முதலியன ஆற்றலுடைத்தாகற்பாலதாந்தன்மை வரைந்துகொள்ளற்பாலன. மற்றுத் தொழின்முதலி யவற்றின்கண் ஆற்றல் கொள்ளும்வழித் தொழிற்றன் மைமுதலிய சாதி ஆற்றலுடைத்தாகற்பாலதாந்தன் மையை வரைந்துகொள்வதாகலின் நொய்ம்மையாமெ ன்பது கருத்து. அதனுற்போந்த ஒருமை எ-து. கூற ப்பட்ட பொருண்மையென்னும் முன்னதனோடியை யும். முதலியன என்றதனாற் செயல்முதலியன கொள்

னப்படும். வினைமுதலுஞ் செயப்படுபொருளும் எ-து. அற்றேல் அங்ஙனமாயின் வினைமுதலுஞ் செயப்படு பொருளும் எங்ஙனம் பெறப்படுமென்னும் வினவிற்கு விடைகூறுகின்றது. ஆசங்கித்தலான் எ-து. இது பிறன்மதம்பற்றி யுரைக்கப்பட்டது. மற்றுத் தன்மதத்தின்கண் எழுவாய் வேற்றுமையீற்றுச்சொல்லானே அது பெறப்படுமென்பது. 'சாத்தனரிசியை அடுகின்றா' னென்புழி அரிசியாகிய செயப்படுபொருளினையுடைய அடுதற்கு ஏற்றதொழிலினையுடையோன் சாத்தனென அந்நுவயம் அறியப்படும். மற்றுச் சாத்தனு லடப்படு கின்றது அரிசி என்புழிச் சாத்தன்கட் சமவேதமாகிய தொழிலாற்றோன்றிய அடுதற்குச் செயப்படுபொருளாகிய அரிசியெனச் சாத்தனான மறியப்படும். 'சாத்தனடுகின்றா' னென்புழி மூன்றாம்வேற்றுமையும், 'அரிசி அடப்படுகின்றது' என்புழி இரண்டாம்வேற்றுமையும் இலவாம், ஆண்டு வினைமுதலுஞ் செயப்படுபொருளுங் கூறப்பட்டமையான் எடுத்துக் கூறப்படாமையின் என்றலும் பொருந்தாது. வெளிப்படக்கூறாத வினைமுதற்கண் மூன்றாம்வேற்றுமையும் வெளிப்படக்கூறாத செயப்படுபொருட்கண் இரண்டாம்வேற்றுமையும் விதிக்கப்பட்டமையின் குற்றமின்மையினென்பது.

௬௫ கண்டேனென்பது முதலியவற்றுள் தெளிவின் கண் பகுதிக்கே ஆற்றல் உபசர்க்கங்கள் அவற்றை விளக்குவதேயாம். மற்று அவற்றின்கண் ஆற்றலின்று.

௬௫ கண்டேன் எ-து. உபசர்க்கம் சொல்லாமென்னு மதத்தினை மறுக்கின்றது. உபசர்க்கம் எ-து. அற்றேல் வினைமுதனிலையாற்றானே தெளிவுமுதலியன அறியப்

படுதலின் கைமுதலிய சொற்கள் நின்றுபயனின்மைப் பாற்படுமென்னுஞ் சங்கை நீக்குகின்றது. விரைந்து வெது தாற்பரியத்தினைக் கவர்வது. இதனால் ஏனையவ ற்றோடு கூடியது சொல்லாமென்பது கருதப்பட்டது. அங்ஙனமன்றே, ஏகாரத்திற்குப் பிறிதினியையின்மை நீக்குதலாகிய பொருள் 'சங்கம் வெண்ணிறமுடையதே' யென்பது முதலியவற்றுள்ளும், பிறிதினியைபு நீக்குத லாகிய பொருள் 'பார்த்தனேவிற்பிடித்தோன்' என்ப துமுதலியவற்றுள்ளும் வருதல் முதலியனவெல்லாம் பலவாறாக ஊகித்துணர்ந்துகொள்க.

பதார்த்த உணர்விற்கு மேலாகிய பயன் வீடுபேறு; "முந்தியவொருமையாலே மொழிந்தவைகேட்டல் கே ட்ட - சிந்தனைசெய்தலுண்மைதெளிந்திடலதுதானாக - வந் தவாறெய்தல்நிட்டைமருவுதலென்றுநான்கா - மிந்தவாற டைந்தோர் முத்தியெய்தியவியல்பினரே." என்னுஞ் சுருதி யால் கேள்வி முதலியன மெய்யுணர்ச்சிக்கு ஏதுவாத லறியப்படுதலானென்க. கேள்வியால் உடம்புமுதலியவற்றின் இலக்கணவேறுபாடுடைய ஆன்மா அறியப்பட்டவழியும் ஐய நீங்குதல் உத்தியாற் பலகாற் பயிறலெனப்படுஞ் சிந்தனை யாற் பெறற்பாலதாகலின், சிந்தனையைத் தோற்றுவிப்ப தாகிய பதார்த்தத்தைத் தெரித்துணர்த்துதல் வாயிலாக நூ லும் முத்தியைத் தோற்றுவிப்பதாம். அதன்பின்னர் சுருதி யானுபதேசிக்கப்பட்ட யோகவிதியால் தெளிதல் செய்யப் பட்டவழி அதன்பின்னர் உடம்புமுதலியவற்றி னிலக்கண வேறுபாடுடைய ஆன்மாவினைப் புலப்படக்கண்டவழி உடம் புமுதலியவற்றின்கண் யான் என நினைத்தலெனப்படும் பொ ய்யுணர்ச்சி யழிந்தவழி குற்றமின்றாகலின் முயற்சியொழி

யும், அஃதொழிந்தவழி அறம் பாவங்களின்மையிற் பிறவி யொழியும், பிறவியொழிந்தவழி முன்னுள்ளதாகிய அறம் பாவங்கள் அனுபவத்தானழியும். அஃதழிய இறுதித் துன் பத்தி னழிவுபாடெனப்படும் முத்திதோன்றும். ஞானமே முத்திக்குக் கருவி. பொய்யுணர்ச்சியழிந்தவழி ஞானமாத் திரையாற் சாதிக்கப்படுவதாகலானும் 'அவனையே யறிந்து வீட்டினையடைகின்றான் வேறுவழிச் செல்வோன் அடையு நெறியறியான்' என வேறுகருவி விலக்கப்படுதலானுமென் பது. அற்றேல் 'அதனை யடைதற்கேது ஞானமுங் கருமமு மெனக் கூறப்பட்டது முனிவனே' எனக் கருமமும் முத்தி க்குக் கருவியென்றலின் ஞானமுங் கருமமுமென்னு மிரண் டன்கூட்டமே முத்திக்குக் கருவியாமெனின்;— அற்றன்று, 'கிரியையெனமருவுமவையாவுஞானங்கிடைத்தற்குநிமித்தம்' என்பது முதலியவற்றால் கருமம் ஞானத்திற்குக் கருவியெ ன்றலின் ஞானம் வாயிலாகவே கருமம் முத்திக்குக் கருவி யாம், நேரே கருவியன்று. ஆதலின் பதார்த்த உணர்விற்கு முத்தியே மேலாகிய பயனென்பதே கொள்ளப்படும்.

**பதார்த்த உணர்விற்கு** எ-து. இந்நூல்கேட்பார்க்கு முய ற்சி சேறற்பொருட்டு யாவரானும் விரும்பப்படும் விட யுமெனப்படும் வீடுபேறென்னும் பயனுடைமை காட் டுகின்றது, பதார்த்தங்களது மெய்யுணர்ச்சி எ-று. அவாந்தரப்பயன்பலவும் வேறாகவுண்மையின் மேலா கிய எனப்பட்டது. சுருதிக்குப் பொருள்வருமாறு:— வீடுபேற்றி னிச்சையுடையோனுக்கு ஆன்மாவினைக்கா ண்டல் விழையப்பட்டதற்குக் கருவியாம் எனவும், கேள் விமுதலியன ஆன்மாவினைக் காண்டற்கு உபாயமாமெ னவுமுரைக்க. அதனால் பொருள் முறைமையானே

சொன்முறைமை பெறப்படும். 'அக்கினிகோத்திரஞ் வேட்கின்ருன்' 'யவாகுவையடுகின்ருன்' என்பது முத லியனபோல, **ஐயம்நீங்குதல்** எ-து. பிரமாணமாவத ன்று என்னும் அறிவு நீங்குதல். **உத்தியாற்பலகாற் பயிறல்** எ-து. இதன்கருத்து வருமாறு:—உத்திகளால் அடுத்தடுத்து நினைதல் சிந்தனை எனப்படும் அஃதும் ஆன்மாவிற்கு ஏனையவற்றின் வேருதலானே அனுமா னமாம். அஃதும் வேறுபாட்டின் பிரதியோகியாகிய ஏனையவற்றி னறிவாற் சாதிக்கப்படுவது. அதன்பொ ருட்டு எல்லாப் பதார்த்தங்களும் தெரித்துணர்த்தப்ப ட்டனவென்பது. **அதன்பின்னர்** எ-து. முத்தியைத் தோற்றுவிப்பதாதல் காட்டுகின்றது, சிந்தனையின்பி ன்னர் எ-று. **யோகவிதியால்** எ-து, கேட்டபொரு ளினை இடையீடின்றிப் பயிறலெனப்படுந் தெளிவிற்கு உபாயங் கூறுகின்றது. இந்திரியங்களை விடயங்களி னின்றும் மீட்டும் இந்திரியங்களினின்றும் மனத்தினை மீட்டும் புலப்படக்காணும் பொருட்கண் மனத்தினை நிறுத்துதல் யோகம். **அதன்பின்னர்** எ-து. தெளிவின் பின்னர் எ-று. **பொய்யுணர்ச்சியழிந்தவழி** எ-து. வா சனையோடுகூடிய பொய்யுணர்ச்சி யழிந்தவழி எ-று. **குற்றம்** இராகம்முதலியன. ஏகாரத்தாற் கருமம் நீக் கப்பட்டது. **பொய்யுணர்ச்சி** எ-து. இப்பிமுதலியவ ற்றின்கண் வெள்ளியென்னும் பிறழ்ச்சியுணர்வு விசே டக்காட்சியாற்ருனே எங்ஙனமொழியுக் அங்ஙனமே முதற்கண்ணதினு மொழியுமென்பது கருத்து. **கிரமபா யெனமருவுமவை** எ-து, 'இவன் கருமமழியும் அவனைக் கண்டு மறைப்புநீங்கியவழி' என்பதுமுதலிய சுருதியும் 'ஞானத்தீ எல்லாக் கருமங்களையும் நீறுக்கும்' என்

பதுமுதலிய மிருதியும் சுருக்கி யுரைக்கப்பட்டன. ஞானம்வாயிலாகவே எ-து. ஒன்றனையும் விரும்பாது இறைவன் மகிழ்ச்சிப்பொருட்டுச் செய்யப்படுங் கருமங்களால் பாவக்கேடெனப்படும் ஆன்மசுத்தி தோன்றும். அதன்பின் கேள்விக்கண் முயற்சி தோன்றும், அதன்பின் கேள்விமுதலிய முறையானே மெய்யுணர்ச்சி தோன்றியவழி முற்கூறப்பட்ட பொய்யுணர்ச்சியினழிவுமுதலிய முறையானே வீடுபேறுளதாம். இவற்றின் விரிவெல்லாம் சிந்தாமணி யுரையுட் கூறினும் ஆண்டுக் கண்டுகொள்க.

மங்குருக் கௌண்டின் னியர்குடித் தோன்றும்
மறையவன் பலகலை வல்லோன்
றங்கிடு நீல கண்டனும் பெயரோன்
றருமுறை மங்கலந் தழைப்பக்
கங்கைவெண் டிரைநீ ரெறியும்வெள் ளிப்பி
கதிர்த்தெனச் சிறுபிறை கவினும்
பொங்கெழிற் சடையார் திருவடி யிணைக்கீழ்ப்
பொருந்தவைத் தவனருள் பூண்டான்.

திருக்கிளர் நியாயத் திறமுநல் லறிஞர்
தெளியும்வை சேடிகத் திறமுஞ்
சுருக்கமா விளங்க முறைப்பட நிறுவித்
தொகுத்தன்னம் பட்டனுந் தூயோ
னொருக்கிய வுள்ளத் திளைஞர்கற் றெளிதி
னுளங்கொண்டு பயின்று நன்குய்யத்

தருக்கசங் கிரகமெனப்பெயர் புனைந்து
தந்தனன் றரணியோர் தமக்கே.

தருக்க சங்கிரக

மூலமும்,

தருக்கசங்கிரகதீபிகை

எனப்பெயரிய

அதனுரையும்,

நீலகண்டீயம்

எனப்பெயரிய

அவ்வுரையினுரையும்

முடிந்தன.

---

# விஷயசூசி.



## அ.



## அ.

விஷயசூசி.

## நி.



## நொ.



## ப.



## பா.



## பி.



## பு.

## வா.



## வி.



## வி.



## வெ.



## வே.

# அநுபந்தம்.



## நியாயபோதினி ௬அ-ம் பக்கம்

## பூருவபக்கவியாத்தி.

'தீயுடைத்துப்புகையால்' என்பது முதலியவற்றுள் சமவாயத்தால் தீயினபாவத்தினை எடுத்துக்கொண்டு அவ்வியாத்தி நீக்குதற்குப் பிரதியோகித்தன்மைக்கு முதலாவதாகிய 'வரைந்துகொள்ளப்பட்டது' என்னும் விசேடணமும்; ஆண்டே அடுக்களையின்கணுள்ள தீ முதலியவற்றினபாவத்தினை எடுத்துக்கொண்டு அவ்வியாத்தி நீக்குதற்கு இரண்டாவதாகிய 'வரைந்துகொள்ளப்பட்டது' என்பது இறுதியாகிய விசேடணமும்; 'குரங்கின் கூட்டமுடையது இது மரமாதலின்' என்பது முதலியவற்றின்கண் அவ்வியாத்தி நீக்குதற்கு 'வேற்றுநிலைக்களத்துளதாதலான் வரைந்துகொள்ளப்பட்டது' என்னுமபாவத்தின் விசேடணமும்; 'தீயுடைத்துப் புகையால்' என்பது முதலியவற்றுள் அவ்வியல்பிற்றாகிய துணிபொருளினபாவத்தின் நிலைக்களமெனப்படுந் தன்னுறுப்பின்கண் புகை சமவாயத்தாலுளதாமாதலின் அவ்வியாத்திவரும்; அது நீக்குதற்கு 'எதுத்தன்மையாகிய வரைந்துகொள்வதன் சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்டது' என்பதிறுதியாகிய உண்மைத்தன்மையின் விசேடணமும்; 'புகையுடைத்துத் தீயால்' என்பது முதலியவற்றுள் மடுமுதலியனவெனப்படுந் துணிபொருளினபாவத்தின் நிலைக்களமெதன்கண்ணு முளதாதலின்மை தீயின்கணுளதாமாகலின் அதிவியாத்திவரும் அது நீக்குதற்கு உளதாதற்பொதுமையினபாவமும் வேண்டப்பட்டன.

# வடசொல்லகராதி.



அசமவாயி - சமவாயியல்லாதது.

அசம்பவம்-பொய்; சம்பவமல்லாதது; முடியாதது.

அசித்தம்-பெறப்படாதது.

அதிப்பிரசங்கம்-மற்றொன்று விரித்தல்.

அதிவியாத்தி-மேல் வியாபித்தல்.

அநவத்தை - வரம்பின்றியோடுதல்.

அநேகாந்திகம் - பலமுடிபுடையது.

அந்நுவயம் - உடம்பாடு; கொண்டுகூட்டு.

அந்நுவயி - அந்நுவயமுடையது.

அபரத்துவம் - பின்மை.

அபரம் - கீழ்; பின்; சாமானியவகையுளொன்று.

அபவருக்கம்-வீடுபேறு.

அபாவம்-இன்மை.

அபிதேயம் - அபிதைக்குவிடயம்.

அபிதை-செஞ்சொல்.

அப்பு-நீர்.

அருத்தம்-பொருள்.

அருத்தாபத்தி - பொருள்பெறுதல்.

அவயவம்-சினை.

அவயவி-முதல்.

அவாந்தரம்-இடை.

அவ்வியாத்தி - வியாத்தியின்மை.

அனுபலத்தி-புலப்படாமை.

அனுமானம்-வழியளவை.

அனுயோகி - பிரதியோகியென்பதனெதிர்மறை.

ஆகரம்-சுரங்கம்.

ஆசங்கை-வினா.

ஆதேயம் - ஆதாரமுடையது.

ஆத்தன்-உள்ளதுகூறுவோன்.

ஆமம்-பரிபக்குவமின்மை.

இச்சை-விருப்பு.

இந்தனம்-விறகுமுதலியன.

இரசனம்- சுவையையுக்கவருங் கருவி.

இரதம் - சுவை.

இலக்கணம் - இலக்கியத்தின் மறுதலை; சிறப்பியல்பு.

இலக்கியம்- இலக்கணத்தின் மறுதலை.

இலிங்கம்-குறி.

உத்தேசம் - பெயராற்பொருளையுரைத்தல்.

உபலத்தி-புலப்படுதல்.
உபாதானம்-முதற்காரணம்.
உபாதி-குற்றம்.
உற்பூதம் - காட்சியைப்பயக் குந் தருமம்.
கதம்பம் - கடம்பு.
கந்தம்-நாற்றம்.
கபாலம்-குடத்தினுப்பு.
கரகம் - கமண்டலம்.
கரணம் - கருவி; பலத்தையா க்குவது.
கருமம்-தொழில்.
கலசம் - குடத்தினுஞ்சிறிதா கியபாத்திரம்.
காதம்பரி-ஓர் நூல்.
காரணம் - செய்தற்கருவி.
காரியம்-செய்யப்பட்டது.
கிரணுவளி-ஓர்வடநூல்.
கிராணம் - நாற்றத்தைக்கவ ருங்கருவி.
குணம் - பண்பு.
குருத்துவம் - திண்மை; கடி னம்.
கேவலம் - தனிமை.
சங்கிரகம் - சுருக்கம்.
சங்கை-தொகை; எண்; ஐயம்.
சட்சு - உருவத்தைக்கவருங்க ருவி.
சதுரணுகம்- நான்கணுவுடை யது.
சத்தம்-ஒலி.
சபக்கம்-ஒத்தபக்கம்.
சம்பாவனை - எண்ணம்.
சமவாயம்-ஒற்றுமை.
சமவேதம்-சமவாயப்பட்டது.
சமுசர்க்கம் - விசேடணவிசே டியங்கள்பிரிந்துதோன்று மை; சேர்ந்தது.
சமுதாயம் - தொகுதி.
சம்பவம் - உண்மை.
சவ்வியபிசாரம்-முறைபிறழ்ச் சியுடையது.
சற்பிரதிபக்கம் - பிரதிபக்கமு ள்ளது.
சாதகம் - சாதிப்பது.
சாதி-போலியுத்தரம்.
சாத்தியம்-துணிபொருள்.
சாமானியம் - பொதுமை.
சாலினி-சுளகு.
சித்தம்-பெறப்பட்டது.
சித்தாந்தம்-முடிந்தமுடிபு.
சித்திரம்-கலப்பு.
சீவான்மா - உயிர்.
சுத்தம்-பிரமம்.
சுருதி-கேட்கப்பட்டது.
சையோகம்-கூட்டம்.
சையுத்தம் - சையோகப்பட்ட து.
சொரூபம் - இலக்கணத்தின் மறுதலை.
சோத்திரம்-சத்தத்தினைக்கவ ருங்கருவி.
ஞானம் - அறிவு.
தரங்கம்-பாய்தல்.
தருமம்-இயல்பு.
தருமி-தருமமுடையது.

தாற்பரியம்-கருத்து.
திரவத்துவம் - நெகிழ்ச்சி.
திரவியம் - பொருள்.
திரியணுகம்-மூன்றணுவுடையது.
திருட்டாந்தம் - காணப்பட்ட முடிபு.
துவக்கு - தோல்.
துவியணுகம் - இரண்டணுவுடையது.
தேயு-நெருப்பு.
தோடம் - குற்றம்.
நவீனர்-புதியோர்.
நாத்திகர்-கடவுளில்லையென்போர்.
நியாமகம் - காரணம்.
நிருத்தி - இன்னதெனக்கூறுதல்.
நைமித்திகம் - நிமித்தத்தாற்றோன்றுவது.
பக்கம்-சார்பு.
படம் - ஆடை.
பதார்த்தம்-பொருள்.
பரத்துவம்-முன்மை.
பரமாணு-நுண்ணியஅணு.
பரமான்மா - கடவுள்.
பரம்-மேல்; முன்; சாமானியவகையுளொன்று.
பராமரிசம் - ஆராய்ச்சி.
பரிணமம்-திரிவு.
பரிமாணம் - அளத்தல்.
பலம்-காரணத்தானாக்கப்படுவது; போகம்.
பாகம் - பக்குவம்.
பாடியம் - உரைவகையுளொன்று.
பாதம்-உணர்ச்சியின் றடைப்பாடு; இது வாதையெனப்படும்.
பாதிதம் - பாதமுடையது.
பாவம் - குணம்.
பிடரம் - கபாலம்.
பிரகரணம் - முடித்தல்.
பிரசங்கம்-நினைந்தது வெறுக்கப்படாமை.
பிரதிஞ்ஞை-மேற்கோள்.
பிரதியோகி - மறுதலை.
பிரமாணம்-அளவை.
பிரமேயம்- அளக்கப்பட்டது.
பிரமை - மெய்யனுபவம்; அளத்தல்.
பிரயோசனம்-பயன்.
பிரவிருத்தி-முயற்சி.
பிரளயம்-ஒடுக்கம்.
பிராசீனர் - பழையோர்.
பிராமணியம் - பிரமாணமாவது.
பிருதிவி-மண்.
பிரேத்தியபாவம்-மறுபிறப்பு.
பீதத்துவம் - பொன்னிறமுடைமை.
பீலு - அணு.
மதம்-கொள்கை.
மணி - தியானம்.
முகுளம் - அரும்பு.
மூர்த்தம் - வடிவு.
யவம் - வாற்கோதுமை.

## அநுபந்தம்.

வாக்கியம் - தொடர்மொழி.
வாசனை-பழக்கம்.
விசேடணம் - அடை.
விபக்கம் - வேறுபட்டபக்கம்.
விபாகம் - பிரிதல்; பாகுபாடு.
விபு - வியாபகமுடையது.
வியபிசாரம்-முறைபிறழ்ச்சி.
வியாத்தி-வியாபித்தல்.
வியாபகம்-மிகுதி.
வியாபித்தல்-கலத்தல்.
வியாப்பியம் - குறைவு.
விருத்தம-மாறுபட்டது.
விலக்கணம்-இலக்கண வேறுபாடு.
வீசி-திரை.
வெதிரேகம்-எதிர்மறை.
வெதிரேகி-வெதிரேக முடையது.

# பிழை திருத்தம்.



| பக்கம் | வரி | பிழை திருத்தம். |
|---|---|---|
| ௪ | ௨ | ‘இடையூற்றின்’ என்றது இடையூற்றினும் எனவும், |
| ,, | ௧௭ | நவீனருளொருசாரார் எ-து மணிகாரமதத்தோர் எ-ம், |
| ௮ | ௨௩ | திவியம் எ-து திரவியம் எ-ம், |
| ௧௯ | ௮ | யின்மையின்மையின் எ-து யின்மையின் எ-ம், |
| ௨௦ | ௨௫ | தியும் அந்நுவய எ-து திக்கண் அந்நுவய எ-ம், |
| ௨௫ | ௪ | ஆசிரியரெல்லாங் எ-து பட்டாசிரியர் எ-ம், |
| ௬௨ | ௧௯ | இதனே எ-து இதனுனே எனவும் திருத்துக. |
| ௫௯ | ௧௭ | ‘எ-று’ என்பதன்பின்னர் ‘இவ்வாறுமுன்னருமூகித்துணர்ந்துகொள்க’ என்பதனைக் கூட்டுக. |
| ,, | ,, | மூலத்துள் நீரையே எ-து முதலிய வாக்கியத்தை பின்வருந் தேயுவாவது என்பத னுரையோடு சேர்த்து வாசிக்க. |
| ௬௯ | ௧௧ | இஃது அந்தக்குடம் எ-து அஃது இந்தக்குடம் எ-ம், |
| ௯௦ | ௨௩ | குறுமையும் நெடுமையும் எ-து நெடுமையுங் குறுமையும் எ-ம், |
| ௯௧ | ௪ | நெடிதாதலும் நுண்ணிதாதலும் பெரிதாதலும் குறிதாதலும் எ-து நுண்ணிதாதலும் பெரிதாதலும் நெடிதாதலும் குறிதாதலும் எ-ம் திரு-க. |

| பக்கம் | வரி | பிழை திருத்தம். |
|---|---|---|
| ௬௨ | ௫ | 'தனதுமுழுதும்' என்னும்நீலகண்டீயத்தின்முன் 'சிறப்பு எ-து காலமுதலியன பொதுக்காரணமாகலின் ஆண்டதிவியாத்தியின்றென்பது கருத்து' என்பதனைக் கூட்டுக. |
| ௬௩ | ௨௪ | தென்றதற்கு எ-து தென்பதற்கு எ-ம், |
| ௬௪ | ௬ | நீக்குதக்கு எ-து நீக்குதற்கு எ-ம், |
| ,, | ௮ | துளவாகிய எ-து துளதாகிய எ-ம், |
| ௬௮ | ௨௩ | விசேடியத்தினை எ-து விசேடணத்தினை எ-ம், |
| ௬௯ | ௨௬ | விசேடியத்தன்மை எ-து விசேடணத்தன்மைஎ-ம் |
| ௭௦ | ௧௨ | அதன் எ-து அசசம்பந்தத்தால் எ-ம் திருத்துக. |
| ,, | ௨௦ | 'குடமாகிய விசேடியமுடைத்தாகலான்வரைந்து கொள்ளப்பட்ட' என்பதனை நீக்குக. |
| ௭௧ | ௧௭ | அதன்சம்பந் எ-து அசசம்பந் எ-ம், |
| ௭௨ | ௧௬ | முடைத்தாலும் எ-து முடைத்தாதலும் எ-ம், |
| ௭௩ | ௪ | உளவாமாகலிற் எ-து உளதாமாகலிற் எ-ம், |
| ௭௬ | ௧௨ | முடைத்தாகிய எ-து முடையதனால் எ-ம், |
| ௭௮ | ௧௮ | இங்ஙமே எ-து இங்ஙனமே எ-ம், |
| ௮௬ | ௧௪ | ஞானந் தோன்றுதலின் எ-து ஞானம்பொருந்துமாகலின் எ-ம் திருத்துக. |
| ௮௭ | ௫ | றென என்பதனை நீக்குக. |
| ,, | ௧௭ | வருவிப்பதென்பது எ-து வருவிக்கப்படாதென்பது எ-ம், |
| ௮௮ | ௧௨ | காரண எ-து கரண எ-ம், |
| ௧௦௦ | ௫ | னெனலும் எ-து னென்னலும் எ-ம் திருத்துக. |
| ௧௧௨ | ௧௭ | துணிபொருளறிவின்மையின் என்பதனை நீக்குக. |
| ௧௧௫ | ௬ | அதிவியாத்தி எ-து அவ்வியாத்தி எ-ம் திருத்துக. |

| பக்கம் | வரி | பிழை திருத்தம். |
|---|---|---|
| ௧௧௬ | ௧௭ | அநுமிதி எ-து என்பதுமுதலிய உரையை ௧௧௭-ம் பக்கம் ௩-ம் வரிக்குமுன்னே சேர்த்துவாசிக்க. |
| ௧௧௭ | உ௪ | தேசத்தின்கண் எ-து தேசமாகிய எ-ம், |
| ,, | ௨௮ | மென்றுங் எ-து மென்னும் எ-ம் திருத்துக. |
| ௧௨௩ | ௩ | பக்க என்பதனை நீக்குக. |
| ,, | ௧௮ | காமையின் எ-து காமையான் எ-ம், |
| ௧௩௫ | உஉ | உவமிதியும் ஞானமுஞ் எ-து உவமிதிஞானம்எ-ம் |
| ௧௩௬ | ௬ | காரணமாகிய எ-து கரணமாகிய எ-ம், |
| ,, | ௭ | காரணத்தின் எ-து கரணத்தின் எ-ம், |
| ௧௩௯ | உ0 | கணுளதாகலிற் எ-து கணிலதாகலிற் எ-ம், |
| ௧௪௫ | உ | விட்டும்விடா எ-து விட்டுவிடா எ-ம், (மேலும்இவ்வாறு வருவனவற்றைத் திருத்திக் கொள்க.) |
| ௧௪௬ | உ௩ | படுமனவும் எ-து படுமெனவுங் எ-ம், |
| ௧௪௭ | ௧உ | குடம்நித்தியம் எ-து குடமநித்தியம் எ-ம், |
| ௧௫௩ | ௧உ | மரபும், எ-து மரபு. எ-ம், |
| ௧௬௧ | ௭ | விசேடியத்தை எ-து விசேடணத்தை எ-ம், |
| ௧௭0 | ௧௩ | கருவியாற்றோ எ-து கருவிகளானுந்தோ எ-ம், |
| ௧௭உ | ௧௭ | குட்த்தன் எ-து குடத்தன் எ-ம், |
| ௧௭௩ | ௧௩ | எதாரத்தா எ-து எகாரத்தா எ-ம், |
| ௧௭௧ | ௩ | தினையுங் எ-து தினையும் எ-ம், |
| ௧௯௬ | ௪ | முழுதினபாவ எ-து முழுதுமபாவ எ-ம், |
| ,, | ௮ | மூன்னுளதாயினும் எ-து ஒன்றுளதாயினும் எ-ம், |
| ௧௯௧ | ௩உ | ஆடையில்லை எ-து ஆடையின்கட் குடத்தன்மையில்லை எ-ம், |
| உ0௮ | உ௬ | வினைவில்ல எ-து வினையில்ல எ-ம் திருத்துக. |
| உ0௧ | ௧௭ | வினையைத்தோற்றுவிக்கும் நூக்குதலெனப்படும் எனக் கூட்டி வாசிக்க. |

பக்கம் வரி பிழை திருத்தம்.

௨௧௬ ௨௦ பாகர் எ-து பாதர் எ-ம்,
,, ௨௫ பொருட்கு எ-து பொருட்டு எ-ம்,
௨௧௭ ௨௫ யடியதாகத் எ-து யடியாகத் எ-ம்,
௨௨௦ ௨௭ அபாவத்திதகுப் எ-து அபாவத்திற்குப் எ-ம்,
௨௨௨ ௨௮ தல்லாதனைத எ-து தல்லாததனைத் எ-ம்,
௨௨௪ ௨௭ பாற்றுற் எ-து பாட்டாற் எ-ம்,
௨௩௨ ௨௦ முட்டறித்த எ-து முட்கிழித்த எ-ம்,
௨௩௭ ௨௦ விடுபெற எ-து வீடுபேற எ-ம் திருத்துக.

நியாயபோதினி.

௩ ௧௬ தேயுவின்பாவ எ-து தேயு அபாவ எ-ம்,
௧௪ ௨௮ புன்முதல்ய எ-து புன்முதலியன எ-ம்,
௧௬ ௧௧ யழிபதா எ-து யழிப்பதா எ-ம்,
௪௧ ௧ முகிள எ-து முகுள எ-ம்,
௪௦ ௫ இலிங்காராய்ச்சியே எ-து இலிங்கவாராய்ச்சியே எ-ம்,
௪௭ ௨௫ தாதாவின் எ-து தாதலின் எ-ம்,
௫௩ ௪ விடையமா எ-து விடயமா எ-ம்,
௬௩ ௪ வடிவு எ-து வடிவானும் எ-ம்,
,, ௯ கொள்வதும் எ-து கொள்வது எ-ம் திருத்துக.

பதகிருத்தியம்.

௭௦ ௮ பாலராவார் எ-து இளைஞராவார் எ-ம்,
௭௩ ௨௪ வேபாட்டால் எ-து வேறுபாட்டால் எ-ம்,
௧௦௮ ௩ வெதிரேகம், கூறியவாறு எ-து வெதிரேகம் எ-ம் கூறியவாறு எ-ம்,
௧௪௭ ௨௦ அர்தக்குதிரை எ-து இர்தக்குதிரை எ-ம்,
௧௧௮ ௬ பொருட்கு எ-ம் எ-து பொருட்கு என எ-ம்,
௧௨௦ ௧௪ சேறலேக்கு எ-து சேறலின்க்கு எ-ம்,
௨௩ ஷை ஷை ஷை ஷை
[illegible] [illegible] லிலக்கண எ-து இலக்கண எ-ம் திருத்துக.